கழக வெளியீடு : ௬௪0

# சீவக சிந்தாமணி

## (வசனம்)

திரு. புலவர் 'அரசு' அவர்கள்
எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தன்னேரில்லாத் தனிமொழியாம் நந்தமிழ்மொழிக்கு அணி யாய்த் திகழ்வன ஐம்பெருங் காப்பியங்கள். இக் காப்பியங்களுள் சொன்னலமும் பொருணலமும் பாநலமும் கவினி, இன்சுவைத் தேனென நாவகத்தும் நெஞ்சகத்தும் இனிப்பது சீவக சிந்தாமணி யென்னும் சீரிய காப்பியம்.

இக் காப்பியம் தன் பெயருக்கேற்ப மக்கட்கு வேண்டும் எல்லாப் பயன்களையும் ஒருங்கே தருவதாய்த் தமிழரின் அரும்பெருங் கருவூலமாய்த் திகழ்கின்றது.

இதனை உரைநடையில் ஆக்கினல் எல்லா மக்களும் கற்றுக் காவியப்பயனைப் பெறுதலோடு நம் தமிழர் வீரம், அறம், அன்பு, பண்பு முதலிய யாவும் ஒருங்கே அடைய ஏதுவாகுமென்று கருதினோம். அக் கருத்துக்கேற்ப இதனைச் செவ்விய நறுந்தமிழ் உரை நடையில் பாவின் நலம்போற் பண்பு மிளிரத் **திரு. புலவர் அரசு** அவர்கள் ஆக்கி உதவினார்கள்.

இக் காப்பிய உரைநடையை அச்சிட்டு நல்லமைப்புடன் **சீவக சிந்தாமணி வசனம்** என்னும் பெயருடன் வெளியிட்டுள்ளோம்.

தமிழ்ப்பெரு மக்கள் விரும்பி வரவேற்பர் என நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

# முன்னுரை

நன்னூலாசிரியர் நூற்குப் பெயர் எய்தும் வகையில், தன்மை யாற் பெயர்பெறும் என்றற்கு மயிலைநாதர் சிந்தாமணியை மேற் கோளாகக் காட்டுவர். பிற்காலப் புலவர்கட்குச் சிந்தையில் நினைத்த வற்றை யெல்லாந் தரும் மணியாக இந்நூல் விளங்கலால் அவர் கூறுவது பொருந்தும்.

இந்நூலின் தலைவனை சீவகன் பிறந்தவுடன் அவனைச், 'சிந்தாமணியே!' என அவன் அன்னை விசையை பாராட்டியதனாற் சீவகனுக்குச் சிந்தாமணியென்னும் பெயருண்டென்று தெரிகிறது. ஆகவே, சிந்தாமணியின் கதையும் சிந்தாமணியென்றே பெயர் பெற்றது. சிந்தாமணியென்னும் பெயராற் பல நூல்கள் தமிழில் இருத்தலின் அவற்றினின்றும் வேறு பிரிக்கச் '**சீவக சிந்தாமணி**' என்று பெயரமைத்தனர்.

தமிழன்னையின் சிறந்த அணிகலன்களுள் ஒன்றாகிய இந் நூலைப் பிற்காலத்தவர் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றென்பர். காப்பியமென்னும் பெயர் பொருந்ாதெனவும் தொடர்நிலைச் செய்யுள் என்பதே பொருந்தும் எனவும் நச்சினார்க்கினியர் இந் நூலின் முதற் செய்யுளுரையிற் கூறுவர். அவர், 'முந்து நூல்களிற் காப்பியமென்னும் வடமொழியால் தொடர்நிலைச் செய்யுட்குப் பெய ரின்மையும், இதற்குப் பின்பு கூறிய நூல்கள் இதற்கு விதியன்மை யும் உணர்க!' எனக் கூறுவது பொருத்தமானது. மற்றும் இந் நூலைப் பாவினத்தால் இயன்றதெனப் பிற்காலப் புலவர் கூறுவதை யும், 'தொல்காப்பியர் பாவினங் கூறாமையின் தொல்காப்பிய விதியையே மேற்கொண்ட இந்நூல் கொச்சகக் கலியால் இயன்றதே' எனப் பல ஆதாரங்கள் காட்டி நிறுவுவர்.

"**சிந்தா மணியுந்** திருக்கோவையும் எழுதிக்கொளினும் — நந்தா வுரையை எழுதல் எவ்வாறு?" என வெங்கைக் கோவை

யாசிரியரும், "வந்தென்றுஞ் சிந்தா மணியாய் இருந்த வுனைச் சிந்தென்று சொன்னநாச் சிந்துமே" எனத் தமிழ்விடுதூது ஆசிரிய ரும் மற்றும் பலவாறுகப் பல நூலாசிரியர்களும் உரையாசிரியர் களும் பாராட்டும் இந்நூல் எல்லா வகையானும் தமிழ்க்கருவூலமா யிருக்கின்றதென்பது மிகையாகாது.

வடமொழியில் க்ஷத்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஜீவந் தர நாடகம், ஜீவந்தர சம்பு என்னும் நூல்கள் சீவகன் கதையைக் கூறுகின்றனவாம். மற்றும் வடமொழி மகாபுராணத்தின் ஒரு பகுதியிலும், சீபுராணத்தின் ஒரு பகுதியிலும் சீவகன் கதை கூறப் பட்டுளதாம். எனவே, அவற்றுள் ஒன்றனைப் பின்பற்றிய வழி நூலாகவே இந்நூல் எழுதப்பட்டிருத்தல் வேண்டுமெனவும் க்ஷத்திர சூடாமணியைப் பின்பற்றியே எழுதப்பட்டதென்று சைனர் கூறு வதாகவும் சீவக சிந்தாமணியின் முதற் பதிப்புரையிலே டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் கூறுகின்றனர்.

இந்நூல் சீவகன் என்னும் ஓரரசன் பிறந்ததுமுதல் வீடு பெற்றது வரையில் உள்ள கதையைக் கூறுகிறது. இந்நூலிற் பல நீதிகள் கிடைக்கின்றன :

'எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால், வேறுகும் மாந்தர் பலர்' என வள்ளுவர் கூறுவதற்குக் கட்டியங்காரன் சான்று கின்றனன்.

சச்சந்தன் என்னும் அரசன் 'காமமே கன்றி நின்று' தன் ஆட்சியைப் புறக்கணித்ததால் ஆட்சியையும் உயிரையும் இழந்தான்.

சீவகன் அணைகடவா வெள்ளம்போல ஆசிரியன் ஆணையை மேற்கொண்டு, 'கொக்கொக்க' ஓராண்டுவரை தன் பகைவனை எதிர்க்காமலும் தன்னைப் பிறர் அறியாமலும் 'காலங் கருதியிருப்பர் கலங்காது—ஞாலங் கருதுபவர்' என்பதற்கிணங்க அடங்கியிருந் தான். தன் பகைவரல்லாத — ஆநிரை கவர்ந்த — வேடர்களைக் கொல்லாமல் அச்சுறுத்தி ஓட்டினுன். அந்தணர்க்காக்கிய சோற்றுக் குவியலிலே வாய்வைத்ததனால், அந்தணர்களால் இரக்கமின்றித் தாக்கிக் குற்றுயிராக்கப்பட்ட ஒரு நாய்க்கிரங்கி, அதன் காதிலே நற்கதிபெறும் மறையை ஓதி அதற்கு நலம்புரிந்தான். காட்டுத்தீயில் அகப்பட்ட யானைகளை' விடுவித்தான். தன் வளர்ப்புத் தந்தையின்

மகனாகிய நந்தட்டனைப் பலபடப் பாராட்டி உடன்பிறப்பின் சிறப்பை அறிவிக்கின்றனன். இத்தகைய சிறந்த நீதிகள் அவனிட மிருந்து கிடைக்கின்றன.

மேலும், சீவகன் சிறந்த வீரன்; யாழிசைப்பதினும் பாடுவதி னும் மகளிரைப் புனைவதினும் ஓவியத்தினும் இன்னோரன்ன பல கலைகளினும் வல்லவன்.

இதனை மணநூல் என்றும் உரைப்பர். இந்நூலாசிரியர் திருத்தக்கதேவர். 'முந்நீர் வலம்புரி' (3143) என்னும் இந்நூற் செய்யுளின் உரையில், 'சோழகுலமாகிய கடலிலே பிறந்த வலம்புரி' என்று நச்சினார்க்கினியர் எழுதுகிறார். இவருக்குச் சங்க இலக்கியங்களினும் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களினும் நல்ல பயிற்சியுண்டு. வடமொழிப் பயிற்சியும் சமணநூற் புலமையும் பெற்ற இவர் துறவுபூண்டொழுகி வருங் காலத்தில் இந்நூல் எழுதப்பெற்றதென்கின்றனர். சிலர் இவர் துறவியாகையாற் காமச்சுவை கெழுமிய நூல் எழுதும் ஆற்றலிலர் போலும் என்றதனை மறுத்தற்கு இந்நூலையெழுதினரென்பர். அதற் கேற்ப இந்நூல் காமச்சுவை சிறந்ததாயுள்ளதைக் காணலாம்.

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய இதனை உரைநடைப் படுத்தித் தருமாறு கேட்டுக்கொண்ட **சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு** என் நன்றி எப்பொழுதும் உரியது.

'தமிழகம்'
பூவிருந்தவல்லி,
5—1—1952

—**நூலாசிரியன்.**

# உள்ளுறை

| | | | பக்கம் |
|---|---|---|---|
| | காதைச் சுருக்கம் | ... | 1 |
| க. | ஏமாங்கத நாடு | ... | 5 |
| உ. | இராசமாபுரம் | ... | 12 |
| ௩. | சச்சந்தன் | ... | 23 |
| ௪. | சீவகன் பிறப்பு | ... | 48 |
| ௫. | கோவிந்தை திருமணம் | ... | 63 |
| ௬. | காந்தருவதத்தை திருமணம் | ... | 82 |
| ௭. | குணமாலை திருமணம் | ... | 138 |
| ௮. | பதுமை திருமணம் | ... | 186 |
| ௯. | கேமசரி திருமணம் | ... | 224 |
| க0. | கனகமாலை திருமணம் | ... | 248 |
| கக. | விமலை திருமணம் | ... | 304 |
| கஉ. | சுரமஞ்சரி திருமணம் | ... | 320 |
| க௩. | மண்மகள் திருமணம் | ... | 338 |
| க௪. | பூமகள் திருமணம் | ... | 378 |
| க௫. | இலக்கணை திருமணம் | ... | 386 |
| க௬. | வீடு பேறு | ... | 419 |
| | செய்யுள் முதற்குறிப்பு | ... | 521 |
| | பிழை திருத்தம் | ... | 523 |

# சீவகசிந்தாமணி

## காதைச் சுருக்கம்

### இறை வணக்கம்

மூவா முதலா உலகம்ஒரு மூன்றும் ஏத்தத்
தாவாத இன்பம் தலையாயது தன்னின் எய்தி
ஓவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வன் என்ப
தேவாதி தேவன்அவன் சேவடி சேர்தும் அன்றே.

சீவகன் என்பான் மீனக்கொடியனான காமனைவென்ற கட்டழகன்; ஆண்சிங்கம் போன்ற ஆற்றலுடையவன்; வானுற் பரவிய புகழையுடையவன்; அவன் வரலாறு கேட்போருள்ளத்தே தேனென இனிக்கும். அவ்வினிய வரலாற்றைத், தெளிந்த அறிவினையுடையோர்முன் கூறத் தொடங்குகின்றேன்.

சச்சந்தன் என்னும் மன்னன் வளைவில்லாத செங்கோலினன்; குளிர்ந்த வெண்கொற்றக் குடையினன்; ஒளி பொருந்திய வேலினன்; புறங்கொடாத் படையினன்; இடியென முழங்குங் களிற்றினன்; வாடாத வென்றியினன். அவன் காதல்மனையாள் அழிவற்ற கற்பினையுடைய விசயையெனும் பெயரினள்; அவள் இணையாக மலர்ந்த செந்தாமரை மலரனைய ஒளிவீசுங் கண்களையும், மலர்க்கொத்துற்ற பொற்கொடி போன்ற அழகினையும், இனிய அமுதம்போன்ற தோற்றத்தினையும் உடையவள். எனவே, சச்சந்தன் அவளைப் பிரியாது, மிக்க காமத்தால் கருத்தழிந்து, அமைச்சர் சொற்கேளாமல் கட்டியங் காரனுடைய மகிழ்வுமிக்க சூழ்ச்சியினாலே ஆட்சியை

யிழுந்தழிந்தான். அவன் மனைவி மயிற்பொறியிலே தப்பிச் சென்றவள் வழிதவறிச் சுடுகாட்டை யடைந்தாள். அங்கே, பத்துத் திசையும் வாழ, நம்பியாகிய சீவகன் பிறந்தான். அவளுக்குத் துணையாக ஒரு தெய்வம் வந்து துயர் தீர்த்தது. கொல்லப்பட்ட சச்சந்தன் வளர்க்குமாறுபோலக் கந்துக்கடன் என்பான் சீவகனைக் கொண்டு வளர்த்தான். விசயை, தன் மகன் வாழ்கவெனத் தவப்பள்ளி யொன்றை யடைந்து தவம்புரிந்தாள்.

சீவகன் தன் உள்ளமே தெப்பமாகக் கலைக்கடலைக் கடந்தான்; வேடர் கொண்ட ஆநிரைகளை மீட்டான்; காந்தருவதத்தையை வீணையால் வென்று மணந்து, காதலன்பிலே முழுகி நாகரைப்போல இன்பம் நுகர்ந்தான்.

கடற்சங்கும் முரசும் முழங்க நடைபெற்ற புதுநீர் விழாவில், நீண்ட கரிய கண்களையுடைய இரு மங்கையர் நறுமணங் கமழும் சுண்ணத்தினால் மாறுபட்டுத், தோற்றவர் புதுநீராடுவதில்லையென்று போட்டியிட்டனர். அவர்களிற் சுரமஞ்சரி தோற்றுக் குணமாலையொடு பிணங்கிப், புண்பட்ட நெஞ்சொடு சினந்து, ஆணுரு நோக்காளாய்க் காவல்மனை யொன்றில் வாழ்ந்தாள். நீர்விளையாட்டிடையே, துன்பமுற்று உயிர்விடும் நிலையிலுள்ள நாயொன்றினைக்கண்ட, திருவிழையும் மார்பினனான சீவகன் இரக்கமுற்றுப் 'பஞ்ச நமஸ்காரம்' என்னும் மந்திரத்தை அதன் காதிலோதித் தெய்வ வாழ்வளித்தான். மற்றும், அன்றே குணமாலையை அச்சமூட்டிய வெற்றியையுடைய களிற்றை வென்று குணமாலையைக் காத்து, அவளை மணம் புரிந்தான்.

கட்டியங்காரன் சீவகனுக்குக் கெடுதிசெய்யச் சிறைப்படுத்தினன். அக்காலை வானிலிருந்து முகிலிடையே மின்னலென வந்து, சுதஞ்சணன் என்னுந் தேவன் சீவகனை யெடுத்துச்சென்று, தன் நகரினை அடைந்து, சிறைப்படுத்திய கட்டை யவிழ்த்து, அணிபல அணிந்து, விஞ்சை கற்பித்து, 'நீங்காத அன்புடையாய்! நினைக்க,' என்று விடுத்தான்.

அங்கிருந்து நீங்கிய சீவகன், படத்தினையுடைய பாம்பணையிலே துயிலும் திருமாலைப்போல, நறுமணங் கமழுங் காந்தள்படுக்கையிலே களிறுகள் உறங்கும் சாரலைக் கடந்து, முகிலுறங்கும் மலையை வேலியாகக் கொண்ட பல்லவநாட்டை அடைந்து, சுரபுன்னைப் பொழிலையுடைய சந்திராபதம் என்னும் நகரைச் சேர்ந்தான். அங்கு மலையனைய களிறுடைய அந்நகர் மன்னனின் மகள் பதுமையின் முகத்தைத் திங்களென்று நினைத்துப் போலும் படம் விரித்த பாம்பொன்று அவள் கையிலே தீண்டியது. அவள் தமயன் உலோகபாலன் வருந்துவதால் அதனை அறிந்து, அவனை வருந்தற்கவெனத் தேற்றிய சீவகன் பதுமையின் நஞ்சைப்போக்கி மணந்தான். அங்கே இரு திங்கள் இருந்தான். பிறகு, உலம் என்னுங் கல்லின் திண்மையைவென்ற, பருத்த மணித்தூண் போன்ற தோளையுடைய சீவகன் வெளிப்பட்டு மலைபல கடந்து விரைந்து சென்றான்.

நீங்காத ஆரவாரத்தையுடைய அழகிய தக்க நாட்டையடைந்தான். அந்நாட்டிற் கேமமாபுரம் என்னும் நகரிற் புகலற்கரிய புகழ்மிக்க வணிகன் சுபத்திரன் என்பான் மகள் கேமசரி யென்பவளின் வேலனைய கண்வலைப்பட்டு, அவளை மணந்து உயிரொன்றாகக் கூடியிருந்தான். பிறகு, தேன்மணங்கமழுங் கோதையாளைப் பிரிந்து, இனிய அமுதம்போன்ற அவள் கண்கள் மழைபொழிந்து பயிலுமாறு விட்டு விட்டு, மழைபெய்யும் முகிலுறங்குங் காடு பல கடந்து மத்திம நாட்டை யடைந்தான்.

அந்நாட்டு மன்னன் தடமித்தன் அச்சந்தரும் கொடிய வில்லேந்திய தழும்பைச் சீவகனிடங் கண்டு வரவேற்றான். தடமித்தன் மக்களின் படைப்பயிற்சியைக் கண்ட சீவகன் அங்கே தங்கினான். அவனை அங்கே காவலிட்டுக் காக்கவெண்ணிய தடமித்தன் தன் மகள் கனகமாலையை மணம் புரிவித்தான்.

திங்களைப் பிரிந்த உரோகிணியெனச் சீவகனைப் பிரிந்து மயங்கிய காந்தருவதத்தையின் கட்டளைப்படி

நந்தட்டன் சீவகனைக் கண்டு மகிழ்ந்தான். சீவகனுடைய பிறதோழரும் பொருள் தேடுவார்போல வந்து சேர்ந்தனர். சீவகன் அவர்களுடன் தன் இருப்பிடம்விட்டு வரும் நெறியில், தன் அன்னையைக் கண்டு வணங்கினான்.

கண்கவரும் நறுமணமாலை யணிந்த சீவகன் அன்னையொடும் ஆராய்ந்து, இராசமாபுரத்தை அடைந்தான். அந்நகரின் தெருவிலே செல்லும்பொழுது, நிலத்திற்கு விளக்காக வரத்திற் பிறந்த விமலையென்னுங் கன்னியொருத்தியை மணந்து அவளின்பக் கடலிலே முழுகினான். பிறகு, ஒளிவிடும் மணிக்கலன் அணிந்த சுரமஞ்சரியென்னும் பெயரையுடைய—அழகிய தோற்றமுடைய—இன்பக் கொடி யொருத்தியைக் கவர்ந்து மணந்தான். பின்னர், திரிபன்றியை வீழ்த்தினான். பகையையும் அச்சமறக் கொன்றான்.

பகைவனை வீழ்த்திய பிறகு, புண்ணில் தோய்ந்த வேலெனச் சிவந்து நீண்ட கண்களையுடைய, கண்ணனைய மாமன்மகள் கோவிந்தையை மணந்து, அவளளித்த இன்ப அமுதிலே திளைத்தான்; செங்கோல் பொலிவு பெறத் தண்ணிய திங்களனைய குடைநிழலை உலகிற் பரப்பினான்; மன்னர் திறைசெலுத்தினர்; செங்கோல் தடையின்றி நடந்தது; செல்வ மோங்கியது; வெற்றி உயர்ந்தது; பகைவர் பணிந்தனர்; இவ்வாறு ஆட்சிசெலுத்தினான்.

ஒருநாள் அறங்கேட்டான். இடியொலிகேட்ட அரவு போல நடுங்கி, வர்த்தமானரின் திருவடியில் வணங்கித் துறவுபூண்டான். பின்னர், நால்வகைப் படையையுமுடைய அவன் தம்பியும் தோழரும் மாதரும் துறக்கம் புக்கனர். வீணைக் கிழவனான இவனும் வீடுபெற்றான்.

இவற்றையெல்லாம் இங்குக் கூறியவாறே விளக்கியுரைப்பேன்.

# க. ஏமாங்கத நாடு

செந்நாப் புலவர்களின் பாவிலே சிறப்புற்றிருந்த கலைகளைத் தடையின்றிக் கடந்த கேள்விச் செல்வனாகிய சச்சந்தன், நாமகளும் திருமகளும் நாடோறும் புதுமையுடன் தழுவ வீறுடன் அரசாண்ட திசையெங்கும் புகழ் பெற்ற ஏமாங்கத நாட்டின் அழகைக் கூறுகின்றேன்.

**மழை வளம்**

கடலிலே மடங்கிமோதும் அலைகளிலிருந்து, சச்சந்த மன்னனுடைய களிற்றுக்கூட்டம்போல எழுந்த முகில்கள், மலைகளை யடைந்தன. பிறகு, வானிலே பரவிச் சிவபிரானுடைய பொன்னிறச் சடைபோல மின்னி வாய் விட்டுக் குமுறின; அடுக்கடுக்காகக் கூடின; தேனிறால் நிரைந்து உயர்ந்த மலைகளின் உச்சியிலே, வானிலிருந்து வெண்மையான வெள்ளிக்கம்பிகளை நிரைத்தாற்போல நீர்த்தாரைகளை நிரைத்து மழைபெய்தன.

**அருவி**

அவ்வாறு பெய்த மழையினால், தேனிறால்களிலிருந்து வழியுந் தேனருவியுடன் கலந்து முழவென ஒலித்திழியும் அருவித்திரள்கள் கூட்டமான மாளிகைகளிற் காணப் பெறுந் துகிற்கொடிகள் போன்றன; இந்திரன் மார்பின் மேல் தாமே விலங்கி வீழும் முத்தாரமும் போன்றன. மற்றும் பொன்னும் மணியுஞ் சிந்தலால் இந்திரனின் அணிகலன் பெய்துவைத்த பேழையைக் கவிழ்த்தாற் போலவுந் தோன்றின.

**வெள்ளம்**

மழைவெள்ளம் யானைகளின் மும்மதங்களை யருந்தித், தேனைப் பூசி, வியக்கத்தகும் பொன்துளிகளை யளைந்து வந்து நறுமணச் சந்தனம் இனிய பழம் முதலியவற்றை இழந்துவிட்டோமென்று காடுகள் வருந்துமாறு வாரிக் கொண்டு, பெருவளத்துடன் நடந்தது. இவ்வாறு குடி

நீங்க லறியாக் கோநகரைக் கொள்ளைகொண்ட வேந்தனைப் போல, அலைக்கைகளாற் காட்டை யரித்துக் கவர்ந்து கொண்டு, மிக்க நீரையுடைய கடல்வளைத்ததோ வென்னு மாறு நாட்டை யடைந்தது அவ்வெள்ளம். அவ்வெள்ளத் தின் தோற்றம், ஒரு கன்னி கடலாகிய கணவனுக்குப் பல பொருள்களையும் அணிய, நுரையாகிய மாலையினை யும் எடுத்துச் செல்வதுபோற் காணப்பெற்றது.

காய்த்த தென்னையோலைகளைப்போல நெருங்க நீர் செல்லுமாறு முன் இயற்றிய வாய்க்கால்களில் அவ்வெள் ளம் புகுந்து மோதுதலால், வாய்க்கால்களின் வரம்புகள் முரிந்தன. உடனே, இனிமையாக ஒலிக்கும் பறையின் வாயிலாகக் கரைகாவற்காரர்கள் நாட்டிலுள்ளார்க்கு அறிவித்தனர். கேட்ட மக்கள் வாய்க்காலின் கரையிலே மொய்த்துப் படல்களையிட்டு நீரின் மோதலைத் தடுத்தனர். அதனால், முன்னரே வேலற்கரியதான களிறுவேட்டை யிலே கிடைத்தவுடன் ஆங்காங்கே அதன் மதத்தைத் தவிர்த்தலால் அது அடங்கிச் செல்லுமாறுபோல வெள் ளந் தன் சீற்றம் அடங்கிச்சென்று, நற்குல மங்கையர் கற் புப்போல நீர்நிலைதொறும் நிலைகொள்ளாமல் நிறைந்தது.

படலிட்டுத் தடுத்தும் அடங்காமற் குதித்து வழிந்து செல்லும் நீரின் ஆரவாரமும், கரைகாப்பாரின் கவ்வையும், பறையோசையும் எத்திசையினும் பரவிக் கடலும் முகிலும் ஓயாமல் முழங்குவது போன்றிசைத்தன.

**வயல் வளம்**

அங்ஙனம் நிறைந்த நீரை உழவர்கள் கழனியிற் பாய்ச்சினர். மாமனும் மருகனும் போலும் அன்பையும், காமனுஞ் சாமனுங் கலந்தாற்போன்ற தோற்றத்தினையும், குவளை கழுநீர் முதலிய மலர்களையும், மத்தங்காய்ப்புல் முதலியவற்றையும் நிறைத்த வயிற்றினையும், நெறிமருப் பினையும் உடைய எருமைக்கடாக்களையும், திண்ணிய கொம்புகளையுடைய ஆனேறுகளையும், அவைகள் முழங்கு மாறு கொண்டுவந்து ஏரிற்பூட்டி, பொறிவரி வராலின்

இனம் ஓடக் கழனியிற் புகுந்து, குழுக்குழுவாக உழவர்கள் உழுதனர்.

உழுதசேற்றிலே, சிறப்புற விளைகவென்று நிலமகளைத் தொழுது செந்நெலின் வெண்முளையை விதைப்பர் (நாற்று விடுவர்). நன்னாளறிந்து நாற்றைப் பறித்து வைப்பர். அந் நாற்றுக்களை அளவின்படி உழத்தியர் குழுக்குழுவாக எடுத்துச்சென்று நடுவர். கழனியிலே உழைத்த உழவர்கட்கு உழத்தியர் தம் வளையணிந்த கையினால் மதுவை வார்ப்பர். சிந்திய தேறல் மிகுந்திருக்கும் இடத்திலே அதனைப் பருகிய இளவன்னம் கன்னித்தன்மையுடைய நாரையைப் புல்லும். அதனைக் கண்ட மயில் தன் பெடைக்குக் காட்டிக் கள்ளுண்பவர்நிலை யீதாமெனத் தெளிவுறுத்தும்.*

உழவர்கள் தம் காதலியரின் கண்ணென எண்ணிக் குவளையைப் பறியாது விடுவர்; காதலியரின் அழகிய ஒளி பொருந்திய முகமென நினைத்துத் தாமரை மலரிடைச் செல்லார்.

முத்துப் பந்துபோலும் முட்டைகளைச் சேர ஈன்று, தன் நாவினைப் போன்ற பாதிரிப் பூவினைக் கெடுத்த நாவினையுடைய நத்தையைத் தத்தும்நீர் நாரையின் மேலே எறியும். அந்நிலையில் நாரை அலைபோல மெல்ல வெழுந்தசையும்.

இங்ஙனம் நீர்வளம் மிகுந்த கழனியிலே, நட்ட நெற்பயிர்கள் வளமுற வளர்ந்து, அரிய சூல்கொண்ட பச்சைப் பாம்பின் தோற்றம்போலக் கருவினைப் பெற்றன; செல்வம் பெற்ற கீழ்மக்களைப் போலக் கதிர்விட்டுத் தலைநிமிர்ந்தன; நெல் முற்றினவுடன் தெளிந்த நூலைக் கற்ற பெரியோர்களைப் போலத் தலைவணங்கின.

மீன் கண்ணளவேனும் வெற்றிடமின்றிக் களிற்றை மறைக்கும் நெல் வளர்ந்த கழனியும், தேனிறால் பொதிந்த

* மயிலைக் கண்டாற் கள்ளின் மயக்கந்தீரும் என்னுங் கருத்துண்மையின் அன்னம் அடைந்த மயக்கத்தை மயில் தெளிவிக்கும் எனவும் பொருள் கொள்ளலாம்.

கருப்பந்தோட்டமும் எப்போதும் ஒல்லெனும் ஒலியுடன் வளமுறும்.

நெல் முதிர்ந்தவுடன் உழவர்கள் மதுவை வண்டுகட்கு விருந்தூட்டித் தாமும் பருகித் தேன்பொழியுங் குவளை மலரைச் சூடித் தேய்பிறையனைய அரிவாளைக் கையிலேந்தி நெல்லரியத் தொடங்கினர். அங்ஙனம் அரியும்பொழுது, முன் பறியாமல் விட்ட குவளையையுந் தாமரையையும் விடாமல், —கள் மயக்கத்தால்—நெல்லுடன் சேர்த்துப் பிடித்தரிந்தனர். அரிந்த அரிகளைக்கட்டி திண்ணிய நெற்சுமைகளை, வாளைமீன்களின் இனம் ஓடவும் வண்டு பருக மலர்ந்த தாமரை கிழியவும் இளைஞர்களான உழவர்கள் சுமந்து செல்லும்போது, நெற்சுமை தாக்கிக் கமுகம் பாளையிலிருந்து பாகின் பழங்கள் சிந்தும். இளைஞர் கொண்டு சேர்த்த நெற்சுமைகள் நிலமகள் மார்பு நெக்கு விட்டு நரலுமாறு மலைபோன்ற போர்களாக அமைந்தன.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே."

பெருமை மிக்க அப்போர்களை அழித்து, எருமைக் கடாக்களினல் அருகே மிதிப்பித்து, வையைக் களைந்து, காற்றில் தூற்றிக் குவித்த செந்நெற் குவியல்கள் கொடு முடியையுடைய குன்றுகளைப் போன்றன.

கரும்பைச் சாறுபிழியும் ஆலையையுடைய இடங்களில் எல்லாம், விரும்பி வந்தவர் பருகி மிகுந்த சாற்றைக் காய்ச்சும் பொழுதெழுந்த இனிய புகை, வானிற் பரவிக் கதிரவனைச் சிவப்பித்தது.

கிணைப்பொருநருடைய வறுமை தீரக் கொடுத்து மிகுந்த நெல்லை விற்கும் பண்டியும், கரும்பினின்றுங் கிடைத்த பாகு முதலியவற்றைக் கொண்டுபோகும் பண்டியும், நறுமண மலர்களைப் பெய்து செல்லும் பண்டியும், வளவிய இளநீர் சுமந்த பண்டியும், மெல்லிலைப் (வெற்

றிலைப்) பண்டியும், கமுகம் பழக்குலையுடைய பண்டியும், இன்சுவைப்பண்டப் பண்டியும், கரிய கடல் வளங்கொணரும் பண்டியும், பல்வகைப் பயறுகள் நிறைந்த பண்டியும், இவைபோன்ற வளந்தரும் பண்டிகள் பிறவும் மிகுந்து எத் திசைகளினும் நெருங்கின.

**ஊர்வளம்**

ஓரிடத்தில் வண்டுகள் முரலும் பூங்கொம்பினிடத்தே அன்னச் சேவலொன்று, கூடு எடுப்பதற்குத் தாமரை மலரைக் கவ்விக்கொண்டிருந்தது. அவ்வன்னம் விளக் காகவும் குயிலோசை முழவமாகவுங் கொண்டு கலவமயில் தன் பெடையொடு பொதும்பரிற் புகுந்து மணம்புரிந்து கொள்ளும்.

ஓரிடத்தில், தம் காதலரொடு கலந்த பெண்களின் கண்போல், குவளை மலர்ந்த நீரோடையில் நீர் குறைதலாற் சிறிது வாடிய வள்ளைக்கொடிமேல் வாளையேறிப் பாய்வது, கழைக்கூத்தி யொருத்தி கழையினின்றும் இழிந்து, அருகி லுள்ள கயிற்றிலே குதித்துப் பல்கலனும் ஒலிப்ப ஆடுவ தைப் போலிருந்தது. கரையிலிருந்த நாரைகள் காண்பன போலிருந்தன. (கழை போலிருப்பவை வள்ளைக் கொடி படர நீரில் நட்டிருக்கும் மூங்கில்கள்.)

எருமைகள் மணங்கமழும் மடுக்களிலே மலர்களை மேய்ந்து, பெரிய மடிநிறைந்த பால், நிலம் நனைய வழியச் சென்று, வீடுகளில் உள்ள கன்றுகளுக்கும் ஊட்டிப், பெண்களின் கலம் நிறைதரப் பொழியும். இத்தகைய வளம் மனைதொறும் காணப்பெறும்.

அவ்வீடுகளிலே வெள்ளித் தகட்டை விலக்கி வைத்தா லன்ன அலகினையும், அழகிய தலையினையும், ஒள்ளிய அகிற் புகை திரண்டது போன்ற நிறத்தினையும் உடைய மணிப் புறாக்கள், அறுத்துக்கொண்ட பவளத்துண்டுகளைக் கோத்தாலனைய கால்களையுடையவைகளாய்க், குன்றிமணி போலுஞ் சிவந்த கண்களையுடையவைகளாய்ப், பூவை கள் பாடிக்கொண்டிருக்கக் கிளிகளுடன் பாலுண்ணும்.

சில மனைகளிற் கஞ்சியுண்ட அழகிய ஆடைகளிற் கலக்குமாறு ஊட்டப்பெறும் புகை, அம்மனைகளின் மேல் மாடியிலே அமர்ந்திருக்கும் மடமங்கையரின் விரிந்த கூந்தலினுந் தோய்தல், உயர்ந்த முடியையுடைய குன்றின் மேற் கூடிய மயில்கள் தம் சிறகை அவ்விடத்து உலாவும் முகிலினுள்ளே விரித்து வைத்தாலன்ன தகையதா யிருக்கும்.

சில இடங்களிற் செல்வச் செருக்கினையுடைய மக்கள் மருப்பினையுடைய இளந்தகர்களையும், கொய்த தோன்றி மலரனைய சூட்டினையுடைய சேவல்களையும், தோணியில் வந்த பிறநாட்டுக் கோழிகளையும், காடை முதலியவற்றின் சேவல்களையும் அவை முன்பொருத புண்ணை நினையாமற் போரிடச் செய்து, அவை பொருந்திறனைக்காட்டி ஆர வாரித்தலும், போரை விலக்கி ஆரவாரித்தலும் கேட்கப் பெறும்.

நுண்ணிடை மங்கையர் ஏந்திய கிண்ணத்திலுள்ள தேறலைக் கொப்புளித் துமிழ்தலாலே இளம்புன்னைகள் மாடத்தூடெலாம் வான்மீனென மலர்ந்தன. மற்றும், அவர்கள் கொப்புளித்த நறவினாலே வாழைகள் அரும்பின.

அந்நாட்டிலுள்ள ஊர்களில் எவரையும் விலக்காத உணவுச்சாலை முதலியனவும், வெப்பமில்லாத, கழுவும் நெல்லியும் தான்றியும் எனும் முப்பழங் கலந்த, சுனையிற் காலையிலெடுத்த நீருடன், அணிய மலரும் பூசச் சந்தனமும் வைத்துள்ள தண்ணீர்ப் பந்தரும், கொலைபுரியும் வேலனைய கண்ணார் கூத்தாடுமிடமும், இவைகளேயன்றி ஐம்பொறி களுக்கும் உரிய நுகரும் பொருளெலாம் நிறைந்து ததும்பும்.

அவ்வூர்களில், நாடொறும் காணப்பெறும் நிலையான அடிசிற்சாலைகள் ஆயிரம்; அறத்திற்கு விட்ட இறையிலி நிலங்களும் ஆயிரம்; பூங்கொடியனைய மகளிர் கோலஞ் செய்யுமிடமும் ஆயிரம்; தொழிலில் மடிவில்லாத கம்மியர் களும் ஆயிரவர்; ஆங்காங்கே நிகழும் மங்கலங்களும்

ஆயிரம்; இவ்வாறே வேறு வேறான ஆயிரக்கணக்கான நிகழ்ச்சிகள் பாதுகாப்பாராற் காக்கப்படுதலாற் குறைவின்றி நடைபெறும்.

ஆகவே, அந்த ஏமாங்கதநாடு நல்ல தவம்புரிவார்க்கும் இடம்; இல்லறத்தார்க்கும் இடம்; கல்வியாகிய நிலையான பொருளைத் தேடுவார்க்கும் இடம்; செல்வப் பொருளைத் தேடுவார்க்கும் அந்நாடு வெற்றியையுடைய இடம்; தனதின்பத்தை உலகு விரும்பியேற்குமாறு வானுலகு விரும்பி மகிழ்ந்து வீழ்ந்ததென்னும்படி பிறநாடுகள் எல்லையாக நிலைத்திருக்கும்.

"நற்ற வஞ்செய் வார்க்கிடந் தவம்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொ ருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்
வெற்ற வின்பம் விழைவிப்பான் விண்ணு வந்து வீழ்ந்தென
மற்ற நாடு வட்டமாக வைகு மற்ற நாடரோ."

---

## உ. இராசமாபுரம்

*புடைநகர்

கண்ணாகிய வலையாலே காமுகர் என்னும் விலங்கைப் பற்றிச் செல்வமாகிய தசையைக் கைக்கொண்டு உடலைக் கைவிடும் பரத்தையரின் சூழ்ச்சியிலே அகப்படாதவரின் பெருமையைப் போலச் செல்வமோங்கியது இராசமாபுரம்.

அந்நகரத்தின் புறம்பணையிலே வானளாவிய பெரிய கிளைகள் மெலியுமாறு மலர்ந்த சண்பகமலர்களைத் தாதுகள் சிந்தக் குடைந்த குயில்கள், மயில்களோடு மாறு பட்டுக் கூவி, நோக்கினவர்களின் கண்களைச் சிறைப்படுத் தும் நிழலையுடைய மலர்ப்பொழில்கள் சூழ்ந்திருந்தன.

அங்குள்ள பொய்கைகளில் ஆடவரும் பெண்டிரும் நீராடுவதால், செப்பஞ் செய்யப்பெற்ற சந்தனமும் மண மிகு மலர்மாலைகளும் மெய்யிலணிந்த நறுமணப் பொடியும் புழுகுங் குங்குமமும் புகையும் நிறைந்து, பொய்கையாகிய மங்கை, நாணத்தாலே பூவாகிய ஆடையைப் போர்த் தனளோ என்னும்படி காணப்பெறும்.

நல்லவையென்று ஆராய்ந்தெடுக்கப் பெற்ற கரும்பு களையும் விளைந்த நெற்கதிர்க்கற்றைகளையும் பிடிகளுக் காகக் கொண்டுவரும், தரையில் தோயும் நீண்ட துதிக் கைகளையுடைய களிறுகள் நிறைந்த யானைக்கூடங்கள் கணைய மரங்களையுடைய கதவுகளையும் கல் மதில்களையும் உடையவாய் அந்நகரைச் சூழ இருந்தன. சலசலவென மும்மதங்களும் பெருகவும் கொலைசெயும் தந்தங்கள் மெய் களிற் பதியப் பாயவும் மலைகளிரண்டு தம்மிற் பொருவன போலக் களிறுகள் பயிற்சிப் போர்செயும் போர்க்களங் களும் அழகுற நிறைந்திருந்தன. முத்துக்களையுடை வெண்மருப்பை அரிந்து, வன்மைபெற ஒழுங்குறப் பல் வினைத்தொழிலமையச் செய்த அழகிய கிம்புரிகளை இடு வார் தம்மிற் கூடிவாழுந் தெருக்கள் அங்கு எண்ணிக்கை யில்லனவாய் அமைந்துள்ளன.

---

* புடைநகர் என்பது நகரத்தின் புறமாயுள்ள இடம். இதனைப் புறம்பணையென்றுங் கூறுவர்.

தேர்களைச் செலுத்திப் பழகுமிடங்களும், ஆடக மென்னும் பொன்மாலையணிந்த குதிரைகளைப் பழக்கும் வட்டங்களும், கேடகமேந்தி வாட்பயிற்சி செய்யுங் கூடங் களும், குற்றமற்ற வளைந்த விற்பயிற்சி செய்யும் நிலையங் களும் ஒருங்கே இருந்தன.

**இடைநகர்**

புறம்பணையெனும் புடைநகரைக் கடந்துசென்றாற் காணப்படுவது அகழிக்கும் புடைநகருக்குமிடையே உள்ள இடைநகராகும். இடைநகரிற் பிறக்குமோசை புடை நகரிலே கடலொலியெனக் கலக்குந்தன்மையது. அங்குள்ள தெருக்களிற் செந்நிறப் பொடிகளையும் உயர்ந்த பொற் றுகள்களையும் சந்தன நீருடன் கலந்து மட்டத்துருத்தி நெடுந்துருத்தியென்னுங் கருவிகளாற் சிதறுவதால் நில மிசை இந்திரவில் கிடந்தாலெனக் காணப்படும்.

மாற்றற்ற பொன்மாடங்களின் உச்சியிலே நீலநிற மணிக்குடங்கள் நிரை நிரையாகக் காணப்படுதல், நிறைய மலர்ந்த வேங்கை மரங்களின்மேலே முகிலே நினைந்து மயிற் கூட்டங்கள் அமர்ந்திருத்தல் போன்றிருக்கும்.

தெருக்களில் நெல்லைப் பார்த்திருக்கும் பெண்கள் கோழிமேல் எறிந்த ஒளிபொருந்திய குழைகள் அத் தெருக்களிற் பொன்னாலான சிறு தேர்களின்மேற் செய்து வைக்கப்பெற்ற பொன்யானைகளின்மேற் சிறுவர்கள் ஊர்ந்துசெல்லும்போது தடுக்குந்தகையனவான செல்வம் நிறைந்தது இடைநகர்.

இட்டஎள் நிலத்தில் விழாமல் அத்துணை நெருக்க மாகக் குறைவற்ற பதினெண்மொழி மக்களும் நிறைந்து பறவைகள் குழுமிய பழுமரம்போல, அழகுறக் காணப் படும் இடைநகரின் வளம் இத்தகையது.

**அகழி**

இடைநகரைக் கடந்தாற் காணப்பெறுவது அகழி. அவ்வகழியில் ஆட்களைக் காணுமல் அலைந்துகொண்டிருக்

கும் ஆற்றல்மிக்க சுறுமீன்களின் இனங்களுக்கும், முதலைக் கூட்டங்களுக்கும் அஞ்சிய பெரிய இருல் மீன்கள் துள்ளு வதால், ஈட்டமாகப் பறவைக்கூட்டங்கள் எழுந்து கூக்குர லிடும். அன்னச் சேவலொன்று தன் பெடையுடன் ஊடிச் சென்று, அறுகாற் சிறுபறவைகளாம் வரிவண்டுகள் முரல ஒரு தாமரை மலரில் அமர்வது, உறவினை விடுத்துப் பற்றறத் தவம்புரியும் முனிவரை நினைவுறுத்தும்.

தன்னிடம் வந்தவரை அகப்படுத்தலால் அவ்வகழியை உருகி ஒளிவிடும் செவ்வரக்கினைப்போன்ற இதழ்களை யுடைய கணிகையெனலாம்; மணமுடன் நிறைந்த மலரி னுற் குலமகளென்னவுங் கூறலாம்; கட்டுடன் நகரைக் காப்ப தால் அழகிய கொற்றவையெனலாம்.

அகழியோரங்களில் ஒளிவிடும் முத்துக்களை நிரலே கோத்துவைத்தாற்போலக் கமுகமரந்தொறும் விரிந்த பாளைகளும் வண்டுகள் முரலுமாறு அகழியிற்பூத்த குவளை களும் நாற்றிசையினும் நெடுந்தொலை வரையிற் பரந்து மணங்கமழும்.

மதில்

இனி, யாம் கூறப்புகுவது தாய்முலை தழுவிய குழவி போன்றும், பெருமலை தவழும் முகில்போன்றும் முகில் படர்ந்து நீர்த்துளியறுத உச்சியையுடைய மதிலின் இயல் பாகும். மதிலை வேற்றரசர் மறப்படையான் மலைந்து பற்றுதவாறு பல்வகைப்பொறிகள் அமைக்கப்பட்டுள்ளன. அவை: நூற்றுவரைக்கொல்லி, தள்ளித்தாக்கும் பொறி, கண்ணுற் காணப்பெறும் பேயும் களிறும் பெரும் பாம்பும் கூற்றம்போன்ற கழுகும் சங்கிலியும் குந்தமும் கொலைத் தொழிலையுடைய விலங்குகளும் வில்லும் குதிரையும் வேலும் வாளும்போலச் செய்யப்பெற்ற பொறிகள், இடங் கணி முதலிய பொறிகள், பாவையும் அன்னமும் மாடமும் போன்ற பொறிகள், கொல்லுலையிலே தீயுடன் விளங்கும் இரும்புக்கொள்ளிகள், கொக்கும் அழகிய கோட்டானும் போன்ற பொறிகள், பன்றிப்பொறிகள், பாம்புப்பொறி

கள், வண்டிப்பொறிகள், குரங்குப்பொறிகள், தகர்ப்பொறிகள் மற்றும், தலைகளைத் திருகிக்கொள்ளும் வலியுடனே நெருக்கும் மரமான ஐயவித்துலாமும் அரிகயிறுகளும் இருக்கும்.

மேலே கூறப்பெற்ற பொறிகள் எங்கும் சுழன்று உருகிய செம்புக்குழம்பை யுமிழும்; எஃகுருண்டைகளை உமிழும்; வெப்பமான நெய்யை முகந்து உமிழும்; அம்பு, வேல், கல் முதலியவற்றை உமிழும். இத்தன்மையவாக யவனர் முயற்சியால் ஆக்கப்பெற்றன இவை.

இப்பொறிகளுடன் பகைவர்களின் தலைநடுங்கும்படி மதில் திருந்திக் காணப்பெறும்.

"பட்டவர்த் தப்பலிற் பரவை யேந்தல்குல்
அட்டொளி அரத்தவாய்க் கணிகை; அல்லது
மட்டுடை மணமகள் மலர்ந்த போதினால்
கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே."

முகில் தவழும் அம்மதில் மலை கண்விழிப்பது போன்ற வயிரக்கதவுகளையுடைய வாயிலாகிய முகத்தினையும், ஞாயிலாகிய முலையினையும், வானுலவும் பொற்கொடிகளாகிய கூந்தலினையும், அகழியாகிய ஆடையினையும் உடைய கன்னியாகக் கவின்செய்யும்.

**அகநகர்**

அகழியையும் மதிலையுங் கடந்துசென்றாற் காணப்பெறுவது அகநகராகும்.

அகநகரில் முதலிற் காணப்பெறுவது பரத்தையர் சேரி. பரத்தையர் பவழத்தையும் கொவ்வைக்கனியையும் போன்ற இதழ்களையுடைய தோழியர்களைக் காமத்தூதாகக் கொண்டு ஒன்றுமுதல் ஆயிரத்தெண் கழஞ்சு ஈறாக, வந்தவனுக்கு ஒப்பவிலை கூறித் தம் நலத்தை விற்கும் வெறுப்பில்லாத காமநுகர்ச்சியை யுடையவர்கள். அவர்களுடைய வீடுகளிலே சுவர்கடோறும் காமக்குறிப்பினையுண்டாக்கும் நாடகமெழுதியிருக்கும். மலர்பெய்த சேக்கையும் மலர்

மாலைகள் தூக்கப்பெற்றுத் தூறக்கமெனப் பொலிந்திருக்கும். அஞ்சிலம்பொலியும், மேகலையொலியும், அழகிய செம்பஞ்சணிந்த விரலாலெழுப்பப்பெற்ற யாழொலியும், பவழவாய் தனது மென்மையால் முதலில் தீண்டுதற்கஞ்சினும் தீண்டிய பின்னர்த் தன்தொழில் முடித்தற்கு நேர்ந்தூதும் தேனிசை தவழுங் குழலொலியும், முழவின் ஓசையும் ஒழியாமல் ஒலிப்பதால் வானகரும் ஒவ்வாதெனலாம்.

பரத்தையர் சேரியைக் கடந்தாற் காணப்பெறுவது கடைத்தெருக்களாகும். அவை பிடித்த நூலொழுங்கு தவறாமல் நீண்டு, மதுவைத் துளிக்கும் மாலைகள் வேய்ந்து, நாற்சந்திகளிலே மிக்க ஒலியுடன் காணப்பெறும். அங்குள்ள வணிகர் பட்டமும் பைம்பொற்கலனும் தந்தரத்திற்கேற்ப அணிந்தவர்கள். அவர்கள் பொன்சொரியுங் கதவைத் தாளால் திறந்து, பொன்னாற் செய்யப்பெற்ற யவனப்பேழையிலிருந்து மணியும் முத்தும் வயிரமுங் குவித்திடுவர். மற்றும், பவழத்தையும் அணிகலக் கூறுகளையும் பகலையும் இரவாக்கும் நீலமணிக்கலன்களையும் குவியல் குவியலாக அமைத்திடுவர். சிறந்த கலன்களைப் பெய்யும்பொழுது சிந்தினாற் சிந்தினவற்றையும் எடுத்துக் கொள்ளாச் செல்வச்செருக்கினராகிய அவர்களைப்பற்றி எங்ஙனம் இயம்பவியலும்? கடைதோறும் பழுக்குலைக் கமுகும் தெங்கும் வாழையும் பொன்னாலும் மணியாலும் அமைத்திருந்தனர். கடைத்தெருக்களிற் பெருந்திரளான மக்கள் தேன்இறாலின் மொய்க்கும் தேனீக்களைப்போல அளவற்று நெருங்கிச் செல்வர். அப்போது ஒருவர் மார்பிற் பூசிய கலவைச் சந்தனம் எழுவர் மார்புறும்படியாக அத்துணை நெருக்கமிருக்கும். அங்குப் பல பொருள்களையும் வாங்குவோர் ஒலியும் விற்போர் ஒலியும் கடலொலியெனக் கேட்குமேயல்லது எழுத்துவடிவு உணரவியலாமல் இருக்கும்.

**பிற தெருக்கள்**

இராசமாபுரத் தெருக்கள் ஆடவரும் பெண்டிரும் அணிந்து மிகுந்த நறுமணச்சுண்ணம் கத்தூரியினும் பனி

நீரினுங்கலந்து யானைகளின் மதத்தொடு சிந்தப்பெற்றிருக்கும். அணிகலன்களும் நறுமண மாலைகளும் சிதறிக்கிடக்கும். ஒருபால் உள்ள கோயில்களில் முழவும் முரசும் சங்கும் ஒலிக்கத் திருவிழாக்கள் நடைபெறும். ஆங்குச் செல்லும் அழகிய மகளிரணிந்த கலன்கள் ஒளிவிடும். நறுமணப்புகை முகிலென இருளைச்செய்யும். ஒருபால் களிற்றொடு களிறுங் குடையொடு குடையும் நெரிதர அரசனைக் காணவரும் சிற்றரசர்களின் முடியும் முடியும் மிடையும்.

ஒருபால் தோன்றிப் பூவனைய சூட்டையுடைய கோழிச் சேவல்களின் போரில் ஈடுபட்ட இளைஞருடைய நாவை மடித்தெழும் சீழ்க்கைக் கூத்துக்கள் நிறைந்திருக்கும். ஒருபால், "சங்கினை நுண்ணிதாக அறுத்தாற்போன்ற வெள்ளிய அரிசியாலமைத்த சோற்றையும், நறுநெய்யால் சுட்டகறியையும், முதிர்ந்த தயிராலமைக்கப்பெற்ற துவையலையும் உண்பீராக! அணிகலனும் அளிக்கப்பெறும்," எனும் உரையொலி கேட்கப்பெறும். ஒருபால் யாற்றினிலே மலையிலிருந்து நிரை நிரையாக இழிதரும் அருவிபோல மதத்தினைச் சொரிதரும் யானைகளின்மீதும் மணிகளாலிழைக்கப்பெற்ற தேர்களின்மீதும் குதிரைகளின்மீதும் இளைஞர்கள் விரவிக் குதூகலிக்கும் ஆரவாரம் மிகுந்திருக்கும்.

**மனைகள்**

மனைகளில் இசைவளருங் குழலொலியுடன் வரிவளையொலியும் முழவொலியும் செவ்வரி பரவிய விழிகளையுடைய மங்கையரின் அணிகலவொலியும் எப்போதும் பொலிவுற்றிருக்கும். பாவையனைய மகளிர் ஆடும் பந்தொலிக்கு வெருவிய அன்னப்பறவைகள் மாடங்களின் மிசையிலே வைகும். மனைகளின்மிசை அழகிய கொடிகள் நுடங்கும். முத்தணிந்த மார்பிலே பூசிய கலவையின் ஈரத்தையுலர்த்த நறும்புகையூட்டும் மெல்லியலாரின் குழையணிந்த ஒள்ளிய முகம், அப்புகையூடு மயங்கலாற் குளிர்ந்த

முழுமதி முகிலிலே முழுகியதைப்போல் விளங்குறும். மனை தொறும் இடையறாத விருந்து நிகழும்.

கமுகம்பாளையிலிருந்து கொணர்ந்த மென்பழத்தையும் மெல்லிலையையும் அழகிய மங்கையர் ஆளிமொய்ம்பராகிய காதலர்க்களித்து, அழகிய சண்பகமாலையை அணிந்த முடியிலே அக்காலத்திற்குரிய மலர்களைச் சூடுவர். மை தீட்டிய ஒளிபொருந்திய கண்களையுடைய அழகிய மகளிர் தங் கணவருடைய குங்குமக்கலவையுடைய மார்பிலே தம் மார்புகொண்டுழுது மலர்க்கோதையையுஞ் சந்தனத்தையும் விதைத்துக் கலவியின்பத்திலே தாம் விழைந்த யாவற்றையும் விளைவிப்பார்கள். அனிச்சமலரைக் கவரும் மகளிரின் சீறடிகள் தம் காதலரின் முடிமேலும் பூம் பஞ்சின்மேலும் நடுங்கும். நறுமணப் புகைகளே கமழும், துகிலணிந்த மலர்ச்சேக்கையின்மேற் காமமே நுகருங் காதலரின் பிணைந்த அன்பினாலே இரவும் பகலும் அறியாமையால் அந்நகர் பொன்னகரேயாயது. (பொன்னுலகில் இரவும் பகலும் இல்லை).

அந்நகர் மக்கள் இரவலருக்கும் பொன்னும் மணியும் முத்தும் நல்கும் பெருஞ்செல்வர். முல்லை மலரணிந்த அழகிய குழலையுடைய மங்கையர் நல்கும் இன்பச் செல்வத்தையும், வளம்பொருந்திய இராசமாபுரத்தின் பொருட் செல்வத்தையும், வார்கழலினராம் வீரர்களின் வீரச்செல்வத்தையும் காணவிழைந்தே வானவர் இமையா நாட்டம் பெற்றனர் எனலாம்.

மனைகளின் வாயில்தோறும் முழவும் சங்கமும் முழங்கும் விழவும் வேள்வியும் இடைவிடாது நிகழும். கடலன்னதோர் ஆரவாரத்தினையுடைய அந்நகர் நம்மாற் புகழலாம் படித்தன்று. அரசனுடைய கோயில் அந்நகரில் அங்கங்கேயிருத்தலான் அழகிய இடமுடைய பெரிய நகர் ஆக்கம் நீங்காமல் தழைத்துள்ளது. எனவே, அரசனைச் சங்க நிதியெனச் சாற்றலாம்.

இவ்வாறு சிறப்பிக்கப் பெற்ற இராசமாபுரம் தேனைத் தலைக்கொண்ட மலர்மாலை புதிய துகில் செம்பொன் ஆகியவற்றைப் பூத்து, வயிரமாலை முத்துமாலை முதலியவற்றை யீன்று, அமுதத்தை யேந்தி நின்று கற்பகச் சோலையென்னும் பெயரைப் பெற்று, யாவர்க்கும் அருளைச் சுரக்கும் செல்வமுடையதாயிற்று. (கற்பகச்சோலையென இராசமாபுரத்திற்கு ஒரு பெயருண்டு.)

**மன்னர்பிரான் அரண்மனை**

விரைந்து செல்லும் நால்வகைப் படைகளையும், வியக்கத்தக்க குற்றமற்ற தனியாட்சியையும், வானவர் புகழும் குல நன்மை பொருந்திய முடியையும், மாரியனைய வண்கையையும், வெண்கொற்றக் குடையையும் உடைய சிறந்த வேலேந்திய சச்சந்த மன்னன் வீற்றிருக்கும் அரண்மனையின் அழகை யினிக் கூறுவோம்.

நகரின் புறத்தேயுள்ள அகழியிலிருந்து ஒழுங்காக நீர் வந்து பாயும்படி, நீணிலத்தை வெட்டி யியற்றப்பெற்ற அழகிய சுருங்கையையுடைய அகழி தன்னிடம் வந்தோரை யகப்படுத்திக் கொல்லத்தக்க வெய்ய சுறுமீன்களுடன் பரப்புடையதாய் நிலமகட்குப் பூணிட்டதோர் அழகுபோலப் பொலிவுற்றது.

அரண்மனையைச் சூழ்ந்த மதில், வானையூடுருவிச் சென்று அதன் எல்லை காணச் சென்றதால், முகிலானது அம்மதிலின் காலைச் சூழ்ந்துகொண்டு, நீண்ட வானுலகு நினக்கு அஞ்சுகின்றதென்று வேண்டித் தடைசெய்ததற்கிரங்கித் தான் முகில்மண்டலத் தளவிலே நின்று, தன் தலையில் நீண்ட கொடிக்கையாலே நம்மை வந்து காண்கவென்று வானகரை அழைப்பதுபோலக் காணப்பட்டது.

அம்மதிலின் நாற்புறத்தினும் சிறந்த மாமணிக் கதவையுடைய தம்மில் ஒத்த நீலமணிக் கோபுரங்கள் நான்கிலும் நின்று ஒளிவிடும் சூலங்களின் நெற்றியில் அணிந்த முப்புரியாகிய முத்துமாலைகள், ஒளியையுடைய

உலகளந்த மாயோன் முடியில் அசையும் மாலைகள் போன்றன.

அரண்மனையைச் சார்ந்த பூம்பொழிலிற் சங்குக ளீன்ற முத்துமாலைகளையும் சந்தனத்தையும் அணிந்த முலை யினையும், மணங்கமழும் மலர்மாலை யணிந்த கூந்தலையும், அழகிய தோற்றத்தினையும் உடைய பெண்கள் காமக் குறிப் புடன் கூடிய மகிழ்ச்சியாற் சென்று விளையாடுவது அமரா வதியிற் கற்பகச்சோலையில் வானமங்கையர் விளையாடுவது போன்றது.

அப்பொழிலில் அரசனுக்குரிய ஒரு மண்டபம் உள்ளது. அதிலுள்ள பள்ளிமாடத்தில் வெள்ளியாற் செய்த களிறும் பிடியும், செம்பொன்னாற் செய்த கலை மானும் பிணையும் ஒன்றையொன்று காமத்துடன் நோக்கி நிற்பது அரசனுடைய உள்ளத்தே காமத்தை மிகுவித்துப் பவணம் எனும் நாகருலகை நினைவூட்டும்.

ஓரிடத்திற் பொன்னாற் செய்த பழத்தினையும், மரகத மணியாற் செய்த குலையினையும், வெள்ளியாற் செய்த பாளை யினையும், ஏந்திய கொழுவிய அரையினையும், நீலமணியா லான மடலினையும் உடைய கூந்தற் கமுகின் உச்சியிலிருந்து முத்துவடங்களையிட்டு ஊசல் அமைத்திருக்கும்.

நீலநிறக் களிற்றையுடைய சச்சந்த மன்னன் தழும் பேறிய காமத்தாலே விரும்பிய பொழிலில் ஓரிடத்திற் செய்குன்றொன்றுள்ளது. அக்குன்றில் மென்மையான தினைப்பயிரும், விளங்கி வீழும் அருவியும் அருகில் மானும் பிணையும் ஒன்றையொன்று நோக்குமாறும், மணிநீரினை யுடைய சுனையிற் காப்பார் கண்போல மலர்ந்த குவளையும் அழகுறக் காணப்பெறும்.

இனிய குரலையுடைய குயில் காளமாக ஒலிக்கத் தேனெனும் ஒருவகை வண்டு யாழிசைக்கப் பிறவண்டுகள் பாணரைப்போலப் பாட அவற்றிற்குப் பரிசிலாக வேங்கை பொன்னைச் சொரியும். முற்கூறிய செய்குன்றைச் சூழச்

சந்தனமும் உயர்ந்த பிண்டியும் சண்பகமும் முறையாக அலர்ந்து மணங்கமழும் சுரபுன்னையும் தழைத்துள்ளன. இக்குன்றையும் மலர்ப்பொழிலையும் நீங்கினல் உயிர் நீங்கும்! நினைப்பின் உயிர் தளிர்க்கும்!

இளமங்கையர் பந்தாடுமிடம், முத்தினலே விளிம்பும் மணி குயிற்றிய பொன்னலே நிலமும் ஆக ஓவியத்திலே அமைத்தாற் போன்ற அழகினையுடையது. அங்குப் பந்தாடும் பெண்கள் பந்தைக் கையாலே தொடாமற் காலாலே தட்டியெடுத்தலும், மாலையில் மறைத்தலும், கையிலெடுத்துச் செல்ல ஒட்டுதலும், கண்ணியையுடைய நெற்றியிலே தீட்டுதலும், ஒருகாலைக்கொருகால் மிக ஒழுங்காக அடித்தலும், தாம் நின்ற நிலையிலே பாம்புபோலப் பரந்து உலாவுதலுண்டாம்படிப் பந்தாடுதலும் ஆகிய இவ்வகைகளிலே அப்பந்தாடுதலினுண்டாம் இன்பம் எல்லையற்றதாக இருக்கும்.

ஒருசார்பிற் கூரிய நுனியையுடைய குருதி தோய்ந்த மருப்பினலே அரசன் வெகுண்ட மன்னரின் தலையைப் பந்தாடும் மும்மத மூற்றும் யானையும் பெருமை மிக்கவாகிய காற்றின் இயலுடைய குதிரையுந் தேருங்கூடி ஆரவார மிகுந்திருக்கும்.

மற்றும், பகைவர்க்குத் துன்பமியற்றும் படைக்கலங்கள் நிறைந்து கண்ணைக் கவரும் கூடமும், பகைவர் தந்த மிகு செல்வம் நிறைந்த சரக்கறையும், முல்லைக்குழலார் மாணிக்கக் கலன்கள் பெய்துவைத்த மாடமும், இவை போன்று கூறுதொழிந்த பிற மாடங்களும் அளவற்றுள்ளன.

மலர்ந்த கோங்கும் வேங்கையும் பொன்போன்ற பூங்கொத்துக்களையுடைய கொன்றையும் என இவைகளை இடையிடையே கொண்டு, அழகிய மலர்க்கொடியைப் போன்று, இளைஞர் மெய்யை வெதுப்பி அவர் நெஞ்சிலே நின்று சுடும் பெண்கள் கூத்து நீங்காத கூத்து மண்டபமும், பகைவர் மனைவியராய் வெற்றியாற் கொணர்ந்து காவலில் வைத்திருக்கப்பெற்ற மங்கையர் அரசற்கு

வெற்றிநிலை பெறும்படி யேத்தும் திருக்கோயிலும் விளங்கும்.

இனி, அரசன் வீற்றிருக்கும் அரண்மனை மாமணித் திரளைத் தூணைக் கடையப்பெற்றும், செம்பொன்னலான நீண்ட சுவர்களிலே சந்தனத்தை அறுத்துப் பண்ணிவைத்த நெடுங்கையின்மேல் வெள்ளியால் வேயப்பெற்றும் இந்திரன் அரண்மனை யிங்கு வந்த தன்மையே போலிருக்கும். அங்கே ஆடலொலியும், அங்கையர்களால் தாளமிட்டு நெஞ்சுண்ணும் பாடலொலியும், பருத்த முழவொலியும், பிற கருவிகளுடன் கூடும் அழகையும் சுவை நரம்புமுடைய யாழொலியும் வாடாத இன்னொலியால் ஒவ்வொரு நாளும் கழியும்

---

## ௩. சச்சந்தன்

### சச்சந்தன் சிறப்பு

சச்சந்தன் எனப் பெயரிய, தாமரை மலரனைய செவ்விய கண்களையுடைய மன்னன் அச்சமுற்றடைந்தார்க்கு அமிழ்தம்போன்றவன்; அடையாதார்க்கு நஞ்சுடைய நாகம்போன்று சீற்றமுடையவன்; திருமகளின் கண்களுக்கு இடமான விளக்கமான மார்பினன்; பெண்களுக்கு விருப்பத்தையூட்டுபவன்: கலைக்கு இடமானவன். அவன் தன் வண்மையாற் கலியை மாற்றினான்; கூரிய வேலினால் திண்ணிய வலிய பகைவரின் தேர்த்தொகுதியை மாற்றினான். மலர்க்கோதையும் முத்தும் சூழ்ந்த குளிர்ந்த வெண்குடையாலே கடல்சூழ்ந்த உலகிற்கு ஒப்பநிழலைச் செய்தலால் அவன் உலகிற்குத் தந்தையாவான். ஆகையால், அவன் தாள்நிழலிலே தங்கவிரும்பி, அவன்மேல் வைத்த காதலால் இவ்வுலகம் களிக்கின்றது.

அம்மன்னன் அமிழ்தத்தையொத்தலும் உலகிற்கு நிழல்செய்தலும் ஆகிய தண்ணளியால் தருமன்: கலியை மாற்றின ஈகையால் வருணன்: தேர்த்தொகையை மாற்றும்போது அழலும் சீற்றத்தனாகி உயிரை மாற்றுதலிற் கூற்றுவன்; கலைக்கிடனாகிய அருமையால் வாமன்; மகளிர்க்கு அணங்காகிய அழகாற் காமன் என உவமை கூறப்பட்டவன். அவன் பிற பகைவருயிரைச்செற்ற வேலேந்திய தன் மரபினரிற் செருக்கினால் இமிலேறுபோன்றவன். மொழியால் தேன்மாரி யனையானாகி வான்மலிந்த புகழிலே தோய்ந்தவனானான்.

### விசயை வனப்பு

சச்சந்தனுக்கு இத்தகைய சிறப்புடைய நல்வினை சேர்தலினால், இதற்குத்தக நீர்வளமிக்க விதையநாட்டரசன் மகள் அமைந்தாள். அவள் தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகளுக்கும் ஒரு திருவன்னவள்; இவ்வுலகப்பெண்ணால் விரும்புதற்கரிய வானவரும் போற்றும் நீர்மையள். வில்லனைய புருவமும் வேலனைய கண்ணுமுடைய அவள் உருவ

மும் சாயலும் ஒப்பவுரைப்பதற்கரிய ஆயினும், ஒருவாறு அழகிய அவ்வளைத்தோளியின் பேரழகைக் கூறுவேன்.

எண்ணெயும் கத்தூரியுமாகிய இவற்றிலே முழுகி நுனிசுருண்ட கரியகுழல் இருளைப்பிடித்து, நீளமுறுக்கி, அறலுறப் பிடித்து, உறையிலே பொதிந்துவைத்துப் பிறகு உறையை நீக்கினதுபோல நோக்கினர் கண் இருளும் படிச் சேடியர் மலர்கொண்டு வழிபடினும் வருந்துந் தகையதாயிருந்தது.

குழவிப்பருவமுடைய வளைந்த இளம்பிறையும் தண்ணிய முழுமதியும் ஒன்றுசேர்ந்திருப்பனபோல அழகிய சிறுநெற்றியும், வட்டமாக மதிக்கத்தக்க முகமும், கலவிக் காலத்தே தன்னைத் தொழுங் கணவனுக்கு வரமளிக்குங் கொவ்வைக் கனிபோன்ற வாயும், தூயமுறுவலும் வளரும் அழகினையுடைய நீண்ட மூக்கும் உருப்பசியையும் (அத்தகைய அழகு தனக்கில்லாமைபற்றி) உருக்கும்.

நுண்ணிதாக வரைவதற்குத் துகிலிகைக்கோலை உதறிக் கைவல்லானொருவன் எழுதியவைபோல், தமக்குரிய இயல்நிறைந்த புருவங்கள் வண்மையுடைய வில்லின் அழகைக் கெடுத்துத், தாம் செல்லுமளவுஞ் சென்று, இடமின்மையால் வளைந்து, கூரிய கருமைகொண்டு, நெற்றியிலுந் தாம் செல்லுமளவும் மேற்சென்று பரந்து, தம்மிற் கூடாமற் புகழ்தற்குரிய அளவினின்றும் மேம்பட்டவை.

சேல் கயல் எனுங் கெண்டைமீன்களைப் போன்றனவும் சில செவ்வரி பரந்தனவுமான கண்கள் கடை சிவந்து திருமாலையும் பாற்கடலையும் முகத்தே வைத்தாற்போன்ற தன்மையுடன், கன்னியாதலின் துறவிகளையும் மயக்கவும் கணவனை மகிழ்விக்கவும்கூடிய ஆற்றலால் நஞ்சையும் அமுதையும்போன்ற பண்பினவாய்ச் செவியளவும் நீண்டு அகன்றிருந்தன.

கத்தரிகை போன்றனவாய் வாடிய வள்ளையின் வனப்பை மாற்றிப், பின்னே மறியாமல் முன்னே பொருந்தி

அழகமைந்த மகரகுண்டலமுந் தோடும் அசைந்துகொண்டிருக்கும் நீண்ட காதுகள் வயிரத்தினொளியைக்கொண்டு அழகுடனிருந்தன.

குலைதள்ளாத இளங்கமுகின் மரகத நிறம்பெற்ற கணுவும், இருளை அறவே விழுங்கும் *அரிய மாணிக்கத்தைக் கடைந்துதவும் தானாகி, இருளையும் தாமரை மலரையும் சுமந்தன்ன மணமுறு கழுத்து வனப்பைச் சிறைப்படுத்தியதுபோலிருந்தது. (இருள் கூந்தல். தாமரைமலர் முகம்.)

மூங்கிலனைய தோள்கள் மகரமீன் வாய்திறந்து தன்னிடமுள்ள முத்துக்களைச் சொரிந்தாற்போன்று முத்துவடஞ்சூழப்பெற்றுச் செம்பஞ்சணையைப் போன்றிருந்தன. ஒளிபொருந்திய வளையணிந்த முன்கையில் தொக்க விரல்கள் செங்காந்தளின் அழகிய அரும்பைப்போன்றன. தாமரைமலரனைய அகங்கைகள் இங்குலிகம் நிறைந்த அழகின.

மாலையணிந்த இரு செப்புகளின் முடியிற் குளிர்ந்த ஒளியைவீசும் நீலமாமணிகளைப் பதித்தாற்போன்ற கருங்கண்களையுடைய முலைகள் அடிபரந்து, இளம்பிறை வடஞ்சூடி, தம்மேல் உறையும் அழகுத்தெய்வம் குடிகொண்டு அழகிய தேமல் பரந்திருந்தன.

அகங்கை போன்ற வயிற்றை அழகுறுத்தும் நந்தியாவட்ட மலர்போன்ற கொப்பூழ் கங்கையின் சுழியைத் துன்புறுத்தும். கண்ணுக்குத் தெரியாத ஒசியும் இடையை உறவினர் உண்டென்று மதிப்பர். மற்றவர்கள் நோக்கின் உண்டென்றும் இல்லையென்றும் ஐயமுறுதலல்லது உண்மையைத் துணிய வியலாது.

பெருமை மிக்க நாகப்பாம்பின் (இருபுறமும் ஒத்த) படத்தையும் தேர்த்தட்டையும் மயக்கிப் பொன்னாலான

* 'உதயகிரியிற் சிந்தூர அருவி வீழ்ந்த சிந்து சாகரத்திற் பதினாறு சதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக் கெடுக்கும்' என நச்சினார்க்கினியர் நவில்வர்.

ஆலவட்டம் போன்ற, மேகலையொளிரும் அல்குல் காலையிள ஞாயிறும் குருதியும் போலச் சிவந்து கண்ணுக்கினிமை செய்யும் பட்டணிந்து, இந்திரனாலும் புகழ்தற் கியலாததா யிருக்கும்.

திரட்சியால் வெள்ளையானையின் துதிக்கையை வென்ற துடைகள் ஈனாத இளவாழைத் தண்டெனத் திரண்டு, தூய அரக்கு நிறம் பொருந்திய செம்பஞ்சினைத் தோழமை கொண்டாலனைய மென்மையுடன் ஒளிமிக்க பொன்னாலான மகரமீன் வடிவமான 'குறங்குசெறி' என்னும் அணி பொருந்தியிருந்தன.

மேற்பக்கத்திற் கவிழ்ந்தனவாய்ப் பிறழாத வட்டமாக உள்ளே பொருந்தின மூட்டுவாயுடையனவாய் நெகிழ்ந்து பின்போகாமல் ஒப்பிலாத முழங்கால்கள் மற்றோர்க்கில் லாத சிறப்புடன் உள்ளன.

ஆடுதசை பேராமலும் வற்றாமலும் மயிரகன்று நீளா மலுங் குறுகாமலும் இரண்டும் ஒப்ப அமைந்த அளவுடன் பெருமை மிக்க அம்பறாத்தூணிபோலத் திரண்டு இனிய நெய் பெய்த வாடாத மூங்கிலேபோல் இனிய வனப்புடன் கணைக்கால்கள் இருந்தன.

முத்தாலான அரிபெய்யப்பெற்றுப் பைம்பொற் கிண் கிணியும் பாடகமும் தாங்கிக் கிடந்த இடத்தை வருத்துத லாலே, சிலம்பு சிறிதே நகைக்க, அழகமைந்த ஆமைப் பார்ப்பின் வளைந்த முதுகைப்போலுள்ள அடியிணைகளைப் புகழப் புகுவார்க்கு உணர்வு கலங்கிக் கெடும்.

திருமகளின் விரலழகைக் கொண்ட விரல்கள் நுனி பரப்பின்றிக் காணப்பெற்றுக், குற்றமறத் திரண்டு நீண்டு, சேர நெருங்கி, ஒளிபொருந்திய பொன் மோதிரமணிந்து, அரக்கினியல்பைக் கொண்ட செங்கழுநீரின் அகவிதழ் போலும் உகிருடையனவாய், மலரெனவெண்ணித் தேன் வண்டுகள் ஆரவாரிக்கும் இயல்பின.

என்பும் நரம்பும் இன்றி இலவிதழைவென்று கண்ணுக்கினிய புறவெல்லை உயர்ந்து, நிலமுறப் பொருந்தி, ஒன்பது சாண் (ஏழடி) நடப்பினும் ஒரு காதம் என்று கலங்கும் மெல்லிய பஞ்சனைய சிற்றடிகள் பெருமை மிக்க விழைவைத் தருவன.

**சச்சந்தன் வேட்கையும் திருமணமும்**

இத்தகைய உருவை ஒன்றுபட்ட வுளத்துடனமர்ந்து, உள்ளமாகிய படத்திலே குறித்து, நினைவென்னும் எழுதுகோலாலே உறுப்பு விளங்க எழுதித், தான் மேற்கொண்ட கவ்விய நோக்கத்தாற் கண்திறந்து, (மாமன் மகளென்னும் உரிமையாலே) காதல் நீரால் முழுக்காட்டிக் காமப்பூவிட்டு வழிபட்டான். எழுத்துக்களின் உருவம்பெற்றுத் தோன்றும் மழலைமொழியையும் இனிய முறுவலையுமுடைய தையலாளின் அழகுவலையிலே அகப்பட்ட, போர்த்தொழிலுறுத கடகளிற்றையுடைய, வண்டுகள் முரலும் மலர்மாலையணிந்த சச்சந்தன் அவளுடைய கால் நிலந்தோய்தல் முதலிய செயல் கண்டும் நிலமகளென்று கருதாமல், தெய்வப்பெண்ணென்றே உட்கொண்டிருந்தான்.

மதத்தை யுண்ணும்பொருட்டு மொய்க்கும் வண்டினங்களை முகபடாமென அணிந்த களிற்றுழவனும் விதையத்தரசன் மகளாகிய கோதைக்குப் பெண்களின் அழகை வென்று மேம்பட்டதனாற் பெற்றபெயர் விசயை என்பதாகும். இமவான் என்னும் மலையில் மரகதப் பாறையிற் பதுமையென்னுங் குளத்தில் தோன்றிய பொற்றாமரையில் விளங்குந் திருமகளைப்போல மேலான வெண்குடையையுடைய விதையத்தரசன் அரண்மனையிலே விசயை விளங்கினாள். ஐவகைத் தாயரும் அவர் மக்களாய்த் தனக்கு மூத்த பெண்களும் தன் சிலம்பணிந்த அடிகளைப் பரவத் தன்குலம் புரிந்த தவமான பொற்கொடியாக விளங்கும் விசயை வலம்புரிசூழும் சலஞ்சலம் போன்றனள்.

விசயை பெதும்பைப் பருவங்கடந்து மங்கைப்பருவம் அடைந்து அழகு கனிந்தவுடன், வலிய படைத்திரளையும்

கடகளிற்றையுமுடைய சச்சந்தன் தன் மாமனும் விதையத் தரசனிடம் அவளைத் தனக்கு மணம்புரிந்து கொடுக்க வேண்டுமென வினவினான். அவன் விருப்பத்தையும் மகளின் காதலையும் சிறந்த சூழ்ச்சியையுடைய அமைச்சரின் கருத்தையும் தந்தையும் தாயும் அறிந்து, மைத்துன முறைமைப்படி மான்பிணைபோன்ற விசயையைப் பெருமகனாஞ் சச்சந்தனுக்கு மணம் புணர்த்தினர்.

**சச்சந்தனின் கழிகாமம்**

பொற்கொடியாகிய அமிர்தம்போன்றவளும் நெடிய பொற்குன்று போன்றவனும் அழகிய ஒப்பற்ற இருவரும் காமனுக்கிலக்காகி, மலர்க்கணை அழுந்தப்பதிதலால், முக்கண்களையும் சினவிடையையுமுடைய சிவபிரானும் இமயச் செல்வியும் சேர்ந்தாற்போலப் பிரிவிலராய் ஒருடம்பாயினர். அவ்விருவரும் மகிழ்ச்சியையுடைய சேர்க்கையால் மாசுணத்தைப்போன்றனர். ஒருவர்பாலொருவர் ஆதரவுடன் பெருகுகின்ற அன்பினால் அன்னம்போன்றனர். கண் முதலிய உறுப்புக்களின் நுகர்ச்சியால் ஆமானைப் போன்றனர். (ஆமான் நக்குதல் முதலில் இனிமையாயிருந்து பிறகு கொல்லத்தகும் நச்சுத்தன்மையுடையது). குற்றமற்ற இவர்களின் சேர்க்கைக்குமுந்திப் போகபூமியிலுள்ளாரைச் செல்வத்தில் மட்டுமே உவமைகொண்டிருந்தனர். இப்போது காதலாலும் ஒப்பாயினர்.

தன்னை விரும்பிய காதலனும் காதலியும் கூடிய போது பொன்னனாளை அமுதமாகக்கொண்டு புகழ்விரும்பிய சச்சந்தன் பருகினான். ஒளிவிடும் பூணணிந்த அவனை வேற்கண் மாதருக்கெனச் சமைக்கப்பெற்ற உயர்ந்த மதுவைப்போலக் கொண்டு விசயையும் அருந்தினாள். அந்நிலையில் விசயை கரும்பைப்போன்றாள்; சச்சந்தன் களிறு போன்றான். விசயை தாமரைமலர் போன்றாள்; ஒளிவிடும் வேலேந்திய சச்சந்தன் தாமரை மலரின் செவ்வி கெடாமல் தேனைப்பருகும் மணிவண்டு போன்றான். பளிக்கறையில் உள்ள பவழப்பாவை அதனைத் தன்நிறமாக்குவதுபோன்று, அரசனைத் தன்வயமாக்கிய சாயலையும் களிப்

பையுடைய கயல்கள் தம்மிற் பொருவ போன்ற கடை சிவந்தகன்ற கண்களையும் உடைய விசயை கதிர்த்த கவின் கொண்ட காமத்திலே முதிர்ந்த கனியைப் போன்றாள்; அவளை அளிசெய்து நுகரும் அரசன் (வடுப்பட நுகர்தலால்) அழகிய சிறகையுடைய வௌவாலைப்போன்றான்.

பெருங்காதலராகிய இருவரையும் நெருங்கிய மலர் மாலையும் நெற்றிச்சூட்டும், முடியிலணியுங் கண்ணியும், நறுமணப்பொடியும் சந்தனமும் ஆறுகாலத்திலும் பருகுங் குடிவகையும், அகிற்புகையும், கத்தூரியும் பிணித்திட இடைவிடாது வைகினர். ஏலமெனும் மயிர்ச்சாந்தணிந்த, வண்டு முரலுங் கூந்தலையுடைய விசயையின் மலர்க்கண்கள் ஊடலையுங் கூடலையும் விளைத்தன. ஊடலின்போது அவனுடைய முடிமேல் அவளுடைய சிற்றடி தாக்குதலாற் சிலம்பொலியும், கூடலின்போது அவளுடைய மேகலையொலியும் மாறி மாறிக்கேட்கும். இவ்வாறு அவர்களுடைய தாமநுகர்ச்சி முடிவின்றி நிகழ்ந்தது. இங்ஙனம் எழுதத் யுக்க நுண்ணிடையையும் தேன்துளிக்கும் மலர்க்கூந்தலை கம் குழையணிந்த முகத்தினையும் உடைய பூங்கொடியுடன் குருதிதோய்ந்த வேலினன் மழைக்காலத்து முகில்போல இடைவிடாமல் விசயைக்கு இன்பம் நல்கினன். மற்றும், திரையில் தோன்றும் பவழம்போலும் வாயின் அமுதம் பருகியும் கொடியெழுதிய குவிமுலைகளிடையே வைகியும் மாவிடிபோல உணர்வு மயங்கியும் நாழிற்கொடிபோல உடல் மயங்கியும் அவனுடைய காமம் கடலினும் மிக்கதாயிற்று.

ஏவற்பெண்கள் கருப்பூர முதலிய முகவாசங்கலந்த வெற்றிலைச்சுருளைச் செப்புடன் ஏந்த, அதனை நுகர்ந்து ஐம்பொறிகட்குமினிய நுகர்ச்சிகளைக் கணவனுக்களித்துக் கலவியிலே வேட்கைகொண்ட விசயை அவனுக்குக் *கொல்லிப்பாவைபோல விளங்கினாள்.

---

* கொல்லிப்பாவை: கொல்லிமலையிலுள்ள பாவை; தீண்டினாரை வருத்துந் தெய்வத்தன்மையது.

இவ்வாறு சச்சந்தன் தனக்குரிய நாடு காவலிலிருந்து தவறிப் பெண்களிற் சிறந்த அணிகலமான விசயையுடன் பிணைந்த நல்லருளானது, விளக்கமான தண்மதி வானக மிருளச்செய்து உரோகிணியுடன் ஒளித்ததன்மையைப் போலாயிற்று.

இனி, முழுமதிபோன்ற தண்ணிய குடையையுடைய சச்சந்தனுக்கு அம் முழுமதிக்கு நேருங் குறைபோலத் திரு இழுக்குற்ற தன்மையைக் கூறுவேன்.

**சச்சந்தன் வீழ்ச்சி : கட்டியங்காரனுக்குச் சிறப்பு**

மதச்செருக்காற் பாகனுடைய தோட்டியையுங் கடந்து செல்லும் களிறுபோன்ற அரசன் தன் அமைச்சர்களில் அறிவிற்சிறந்த கேள்வியையுடைய நிமித்திகனை வேறு படுத்திக்கொண்டு, கட்டியங்காரனைத் தனக்குயிர்போலக் கொண்டு வாழும் நாளிலே, அக்கட்டியங்காரனுக்கு முடி யுங் குடையுமொழிந்த பிற சிறப்புக்களைத் தன்னைப்போல் அளித்தான். அதனை முரசறைந்து குடிகளுக்கெல்லாம் அறிவித்தான். ஒருநாள் அவன் கட்டியங்காரனைப் பார்த் துக் கூறுகிறான் :

“தோல்வியில்லாத புரவிவெள்ளத்தையுடைய அரிஞ் சயன் மரபில் தோன்றிய குற்றமற்றவளும் வரத்தினாற் பிறந்தவளும் வானுலகமிர்தம் போன்றவளும் ஆகிய விசயையைப் பிரிதற்கியலேன். எனவே, நீ அரசனாகி நாட்டைப் புகழ்பெறக் காத்தல்வேண்டும்.”

அரசன் இவ்வாறு கூறியதைக்கேட்ட கட்டியங்காரன், “அடுகளிற்றின் முதுகிலிடும் அழகிய பூந்தவிசினை நாயின் மேலிட்டதொக்கும் இவ்வுலகுகாவ லெனக்களித்தல்,” என்று பணிவுடன் கூறினான். மணங்கமழுந் தாரணிந்த தோளில் உலகுவளரக் காக்கும் அரசன், “நீ மறுத்து மொழியாதே,” என்று வற்புறுத்தினான்.

சச்சந்தன் தன் கருத்தைத் தெளிவாக உரைத்த வுடன், அவனடி வணங்கிய கட்டியங்காரன், “பகைவரை

யட்ட வேலனே! மிகப்பெருங் காதலாளுடன் சிறந்த இன்பத்தை நீ நுகர்க! அடியேன் நாட்டிலே பழிச்சொல் லுண்டாகாதவாறு காவல் நுகத்தைப் பூண்பேன்,'' என்றான்.

பிறகு, வலம்புரி யெழுதிய வண்கையையுடைய மத வலியாகிய சச்சந்தனின் ஆணைபெற்ற கட்டியங்காரன் படை முதலியவற்றின் காவலைப் பூண்டனன்.

அப்போது ஒப்பற்ற நிமித்திகனென்னும் அமைச்சன், "திண்ணிய கல்லனை தோளையுடைய அரசனே! நீ உன் ஆட்சியுரிமையை மற்றொருவன்மேல் ஏற்றினால் நிலமும் திருவும் நீங்கும் இதனை ஆராய்ந்துபார்,'' என்று தன் கடமையை மறவாது கூறினான்.

அவனுக்கு விடையாக அரசன், "கட்டியங்காரன் எனக்கு உயிர்போன்றவன். என்னையல்லாமற் பிறரை யறியாதவன். முன்னே பல பெரும் போர்களிலும் திறமை யுடன் போர்செய்து வெற்றிபெற்றவன். எனவே, யான் அவனுக்குச் செய்யத்தகும் சிறப்புச் செய்தேன். அவன் செய்வன செய்யட்டும். நீ சிறிதும் மனத்துக்கின்னாவைத் தரும் மொழிகளைக் கூறற்க. நின்னிலையிலிருந்து வாழ்க!'' என்று கூறினான்.

**நிமித்திகன் அறிவுரை**

நிமித்திகன் மனஅமைதியின்றி மேலுங் கூறுகிறான்:

அரசனே! மதியமைச்சரின் சொல்லைக் கேட்பார்க்கு நன்றேயன்றித் தீது வராது. ஆதலால், நின் திருவுளத்து மாறாயினும் அருள்கூர்ந்து கேட்பாயாக! மலர்ந்த கொடி யனைய பெண்களிடம் இன்பத்தையே விரும்பி முற்காலத் தும் பற்பலர் பாவமும் பழியுமுற்றார்கள். அதனைக் கேட்டருள்க.

தவத்தினாற் பெரும் பெயர்பெற்ற தன்மையனான பிரமன் திலோத்தமையின் பொருட்டு நான்குமுகங்களை

யும் படைத்துக்கொண்டு, அவளை விரும்பி நோக்கி அடைய முடியாமல், தன்னிலையாகிய விண்ணகத்தையிழந்து, பிறகு தவத்தினாலேயே பாவம் நீங்கினான் எனினும், இன்றளவும் அது சிறு சொல்லாய் நிலைபெற்றது.

அங்கைபோல மலருங் காந்தள்வேலியையுடைய மலையரையன் மகள் கரிய மலர்க்கூந்தலையுடைய பார்வதியைப் பாகமாகக்கொண்டதே மறுவாகக் கொன்றைமாலையையும் பிறைமதிக் கண்ணியையும் உடைய சிவனுக்குப் பெரும் பழியாயிற்று.

முற்காலத்தில் நீலநிறத்தவனான கண்ணன் இடைப் பெண்களின் நீண்ட ஆடைகளைக் கவர்ந்து, தன் முன்னவனான பால்வண்ணன் அறிந்தாற் பழியாமென்று, தொழுனையாற்றிலே நீராடிக்கொண்டிருந்த சங்கு வளையலணிந்த மங்கையர்பால் ஆடைகள் விழும்படிக் குருந்தொசித்து நின்றான்.

ஒரு கழுதை காமமேகன்றி நின்றதைக் கண்டு அருளினால் இரங்கிப் பெண்கழுதையாகச் சென்று தணித்து, 'இக்காமத்தால் வருந்தினீரே' என்று புத்தர் கூற அது சமத்திலே இட்ட மாலைபோல இழிவாகக் கூறப்படுவதைக் கேட்டிரல்லவோ?

காமத்தாற் பிறந்த பழியை மறைக்க இயலுமோ? ஐவர் ஒருத்தியை மனைவியாக்கலிற் பெற்ற வடுவுரையைப் போக்குவார் யாவர்? அது தூற்றியிடுதலேயன்றி மறுமையிலும் நரக முதலியவற்றைத்தரும் குற்றமுடையது. ஆதலாற் சமநிலையிலே நின்று உலகங்காப்பதே நல்லது போலும்.

இவ்வாறு நிமித்திகன் கூறியபின் உருத்திரதத்தன், "பெரியோராற் புகழப்படும் பேரறிவுடைய இந்திரனும் அமைச்சர் கூறும் மொழிகொண்டு செல்வான். அவனைப் போலவே பேரறிவுடைய நீயும் இவன் மொழிகேட்டல் வேண்டும். இன்றேல் உன்னால் விரும்பப்பெற்ற பிணை

யன்னவட்குத் துன்பஞ்செயும் ஓரறிவுடைமை யாவாய்,” என்றான்.

### அரசனுடைய மாற்றம்

இருவரையுங்கேட்ட ஒளிபொருந்திய மணிகளழுத்திச் சுடர்விடும் அணிகலனணிந்த அரசன், “வரைந்து காத்த தவமுடையார்க்கும் கருவிற் பதிகின்றபோதே போக மெல்லாம் அளந்தன. அவ்வாறே அவரவர்க்கு வாழும் நாளும் அளந்தன. எனவே, இவ்வறிவுரை எனக்கு வேண்டா,” என்றான்.

### நிமித்திகன் துறவு

அரசனுடைய போக்கறிந்த நிமித்திகன், “பெருமை மிக்க தேன்துளிக்கும் தாரிணாய்! அறநூல் வழக்காதலின் உன் நலங்கருதி இத்துணையும் விரிவாகக் கூறினேன். நீ அதனை உட்கொள்ளவில்லை. இனி, நீ நின் திருவுளம் உவந்தவாறு செய்க. நான் நின் தவறு காணாமல் துறவு பூண்பேன்,” என்று கூறிச்சென்றான்.

### அரசனும் அரசியும்

பூங்குழலாள் மனம்சென்ற வழியே செல்லும் அரசன் ஊழ்வினைப்பயன் முளைத்துத் தோன்றுதலால், அமைச்சர்கள் இது தீவினையின் இனமென்றடித்துக் கூறினும் தனக்கு வருந்தீங்கை எண்ணாதவனான். அவளுடன் நுகரும் இன்பக்கடலிலே வெறுப்பின்றிப் படிந்து வேறு மனக்கவலையின்றி மகிழ்ந்தான். ஒளிவிரியும் மணிகளிமைக்கும் மார்பினனும் ஏந்திழையுமாக மார்பணிகளும் தலையிலணியும் தெய்வவுத்தியென்னும் அணியும் சிந்துமாறு நாகரைப்போல் ஒன்றியின்புற்றனர்.

### அரசி கருவுறலுங் கனவும்

இவ்வாறு நாகரைப்போல இன்புற்ற காலத்தில், தேன்நிறைந்த புதிய தாமரை மலரிடத்தில் வீழ்ந்த ஒப்

பற்ற ஒளிவிடும் முத்துப்போல விசயையின் கருவிலே சீவகன் அமர்ந்தனன். அன்றைய இரவிலே கறைபடிந்த வேல்போன்ற கண்ணினுள் மூன்று கனவுகண்டு நடுங்கினள். அப்போது கதிரவன் தோன்றி விடிந்தது.

"அளந்து தாங் கொண்டுகாத்த அருந்தவ முடைய நீரார்க்
களந்தன போக மெல்லாம்; அவரவர்க் கற்றை நாளே
அளந்தன வாழு நாளும்; அதுவெனக் குரைய லென்றான்
விளங்கொளி மணிகள் வேய்ந்து விடுசுட ரிமைக்கும் பூணான்"

பணைபோன்ற தோளினள் யாழொடு பயின்ற விரலால் தன் கண்களைக் கழுவிக்கொண்டு, நல்லாடை புனைந்து, வானவர் பொழியும் மலர்மழையையுடைய, தீவினையை வெல்லும் அறவாழி யேந்திய அருகன்கோயில் புகுந்து வழிபாடு செய்தாள். இவ்வுலகில் நிகரற்ற மலரையும் சாந்தையுங்கொண்டு, 'எம்பெருமானே! நின்னடிக்கு இவை பொருந்துவனவாக' என இட்டு வாழ்த்தினாள். பிறகு, தன் கணவனடியை வணங்கினாள்.

வணங்கிய காதலியைத்தழுவி வானவர்போல மாவலி யுடைய அரசன் மகிழ்வுற்றான். அப்போது மணமலர்க் கோதை தேனும் பாலும் அமுதும்போல மூவகைப் பயனை யுந்தரும் மூன்று கனவையுங் கூறினாள். தேன் பருகும் போது இனிதாயினுந் தீமை தரும். பால் தூயது. அமிர்து ஆக்கம்.

"ஓர் அசோகு தான் அணிந்த பூங்கொத்துக்கள் சிதறக்கெட்டுத் தானும் வீழ்ந்தது. அதன் வழியிலே ஒருமுளை அந்த அசோகைப்போலவே தோன்றி, எட்டு மாலையையுடையதொரு முடிக்கு இருப்பிடமாக நட்டு வைத்தாற்போலே ஓங்கி வளர்ந்தது."

இங்ஙனம் அரசி கூறிய கனவைக்கேட்ட சலியாத குன்றனையான் கனவின் இயல்பைக் கனுநூலின் வழியே அறிந்து, முடியை அசைத்து, அவற்றில் நல்லவற்றை எடுத்து, அரசியின் மனம் வருந்தாமற் கூறினான்.

"நல்லமுளை நின்மகன் ஆகும். நறுமண மலர்மாலைகள் அவனால் விரும்பி மணக்கப்பெறும் அரசியர். நல்லமுடி நின்மகனின் ஆக்கமாகும்."

என மூவகைப்படுத்திக் கூறிப் பிறகு, இற்றதனால் உள்ள பயனைப் பேசாமல் விட்டான். எனினும், அரசி விடாமல், 'இற்றதனாற் பயன் என்?' என, அரசன் துணிந்து, 'ஏந்திழையே! அதனால் இப்போது எனக்கு இடையூறுண்டாம்' என்றான். இவ்வுரை கேட்டதும் அரசி உரையுமின்றி மணிநிலத்தே தங்கிய பூங்கோதைபோல வீழ்ந்தாள். இவ்வாறு, குவளையைவென்ற கண்களிலிருந்து பெருகும் நீருடன் ஆவியிழந்தவள்போல அழகு வாடி வீழ்தலைக் கண்டு, ஆண்டகை விரைந்து சென்றெடுத்துத் தழுவிப், 'பாவியாகிய என் உயிரை வருத்துதியோ?' என்று தெளிவித்தான். சிறிது கழித்து அவள் தெளிவுற்றவுடன், 'மடமையுடையவளே! கனவின் பயன் மெய்யென்று நம்பும் பெண்ணியல்பு பெரிதும் ஆராய்ச்சியில்லாதது' என்று புனைந்துகூறி, இன்னுரையால் துயர்தீர்த்தான்.

காதலனுடைய காதல்மொழியால் தேறிக் களித்த அரசி, சேடியர் பரவச்சென்று, மலர்மாலைகள் தூக்கி அகிற்புகை விம்மும் மலரணையிலே சேர்ந்தாள். செவிமகிழக் கனிந்த இன்சுவைக்கேட்டும், கண்களிக்க நாடகங் கண்டு நுகர்ந்தும் இருவரும் மகிழ்வுடன் சிலநாட்கள் கழித்தனர்.

அந்நாட்களில் விசயை கருவளருந்தோறும் தளர்வுற்றாள்; கரும்பனைய தோள்மெலிந்தாள்; செவ்வாய் விளர்த்தாள்; கண்களிற் பசலைகொண்டாள்; முலைக்கண் கருகிப் பால்பரந்து இடையும் தெரியும் நிலையடைந்தாள். கரு முதிர முதிர அனிச்சமலரும் பாரமாகி நங்கையின் அழகு தொலைந்தது.

**மயிற்பொறி**

வேழம் என்னும் நோய்கொண்ட விளாம்பழம் போலத் தேன்மணக்கும் மலர்மார்பனைத் தனியேவிட்டு, ஆதரவொன்றுங் கூறாமல் திருமகள் மறைந்துபோனாள்.

அப்போது, அறிவெனும் அமைச்சன் ஆகும்வகையறிந்து அரசற்குக் கூறினன்.

"வேலேந்திய அரசர்கள் கண்ணெனத் துணிந்து வைக்கப்பெற்ற அறநெறியே செல்ல அறியாய். நெறியலா நெறியிற்சென்று குற்றம் பொருந்திய காமமென்னுங் கள்ளிலே குளித்த அன்றே நல்வினையை யிழந்தாய். இனி ஓர் அரும்பொறி அமைத்திடுக!"

எனவே, அரசன், வானவர்தந் தச்சனேவென ஐயுறு மாறு தொழில்நூலைக் கரைகண்ட பேராற்றலுடைய தச்ச னொருவனைக் கூப்பிட்டுப் பொறியூர்தியொன்று செய்க வென்று பணித்தான்.

தச்சனும் உடனே நலஞ்சான்ற பல்வகைத் துணி களும் பயினும் வெள்ளிய நூலும் அரக்கும் மெழுகும் பிற வும் அமைத்துக்கொண்டு ஏழுநாளில் வானிலுலவும் மயி லொன்றைச் செய்துமுடித்தான். பிறகு, உயிரோடுலவும் பீலியொடுகூடிய அழகிய மயிலையும் தான் சமைத்த மயிலை யும் கொண்டுசென்று, உலகுடையான் திருவடிகளை வணங்கி, 'இம்மயில்களில் உயிருடைய மயிலைக் கண் டருள்க,' என்றான்.

"கொல்லுத்தொழிலில் வல்லவனே! நன்று! நன்று! இம்மயில் நூன்முறைப்படி அமைந்துள்ளது," என வியந்து கூறி ஒளிவிடும் பல்கலனும் மிகவும் பெய்ததோர் பொன் னறையைக் காட்டிக் கவர்ந்துகொள்க என்று அரசன் அவனைக் களிப்பித்தான்.

பிறகு, ஆடுதலியன்ற அம்மயிலூர்தியை மாடமிசை யும் காவினும் பாட்டுப் பழகுமாறு மெல்ல மெல்லச் சில நாள்வரை விடுத்துப் பழகிய அரசியை ஒருநாள் விரைந்து செலுத்துமாறும் பழக்கிவைத்தான் அரசன்.

அம்மயிற்பொறியைப் பாவையானவள் தன் பண்ணைத் தெரிக்கும் விரலாலே வலப்பக்கந்திரித்த அளவிலே கண் டவர் மருளுமாறு பொங்கி வானில் தவழும் முகிலூடே

சென்று பறக்கும். பிறகு, வேற்கண்ணுள் இடந்திரிப்பின் கால் குவித்திறங்கி யிருக்கும்.

**கட்டியங்காரன் சூழ்ச்சி**

இஃதிங்ஙனமாக, அமரிற் போர்செய்து வெல்வதில் வல்லவனான கட்டியங்காரன், அரசனளிக்கத் தான் நிலங் கொண்ட பிறகு, அறநூல் ஓதிய அமைச்சர்களைத் தனியே இருத்திச் சாரமற்ற பண்பினும் கோதாகிய குணக்குற்ற முடைய அவன் கூறினதாவது :

"அரசனுக்குப் பகையாயதொரு பெரிய தெய்வம் என்னை யிருப்பிடமாகக் கொண்டுவந்து, இரவும் பகலும் நெருங்கி நின்று, 'அரசனை ஒழித்திடுக' என்று கூறுகின்றது. அதற்கு யான் செய்யத்தகுவன யாவை? கூறுமின்."

மாணிக்கம் அழியும்படி நாகத்தின்மேலே இடிவீழ்ந் தாற்போல அம்மொழியைக்கேட்ட அமைச்சர்கள் நடுங்கினர். அவர்களில் தருமதத்தன் என்பவன் அரசனைக் கட்டியங்காரன் கொல்லத் துணிந்ததை அறிந்து பலருமறியக் கூறுகிறான் :

"தவளைக் குரல்போல ஒலிக்கும் கிண்கிணியணிந்த தாமரைமலரனைய சிற்றடியையும் குவளையைப்போன்ற கண்ணினையும் உடைய அவளையே அமுதாகக்கொண்டு, அந்தப்புரம் ஒன்றுமே இடமாக, ஒழிந்தவற்றிற் கருத்தின்றி ஒடுங்கினான். 'பெண்ணின்பம் விண்ணும் அமிர்தும் விலைகொள்ளுமாறு சிறந்ததே. எனினும், அரசின்பம் அதனினுஞ் சிறந்தது' என அரசனுக்கு அறவுரை கூறியதனால், உன்னினுந் தாழ்ந்த நிமித்திகன் துறவை மேற்கொண்டான். அதனால், தடையொன்றுமின்றி இவ்வையகம் திருமகளுடன் நின்னிடத்தே தங்கியது. இனி நினக்குக் கவலையில்லை.

"எனினும், யான் கூறுவதைக் கேள். தன்னை உயர் நிலைக்குக்கொணர்ந்த அரசனை ஒருவன் பிறகு கொல்வானாயின், அவன் குலமும் திருவும் மாறிவிடும். அங்ஙன

யின்றி, அரசன்வழிச் சென்றால் இவ்வுலகிற் பிறகு தன் குலத்தையும் திருவையும் மாற்றுவாரில்லை.

"மேலான நீண்ட முடியையுடைய தேவரையும் மன்ன ரையும் உலகமக்கள் சமமாகக் கூறுவர். யான் தேவரினும் அரசர் பலவகையினும் மேம்பட்டவர் என்பேன். அம் மன்னர்க்குரிய சிறப்பைக் கூறுகிறேன் கேட்பாயாக.

"அரசன் எனுந் தெய்வம் அருள்செய்யுமேல் அரசை யும் தரும். காயுமேல் அஞ்சுமாறு சுட்டுவிடும். மயக்க முடைய அத்தெய்வங்களோ தம்மை யொருவன் வாழ்த்தி னல் அவனுக்கு உடனே அருள்செய்து ஆக்கம் நல்கலும், வைதால் உடனே அவனை அழித்தலும் ஆகிய ஆற்ற லுடையவையல்ல. (அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்றுகொல்லும்).

"மேலும், அரசன் உறங்குவானெனினும் அவன் ஒளி, ஒலிக்கும் கடல்சூழ்ந்த உலகைக் காக்கும். இங்ஙனமிருக்க, இமையா நாட்டம்பெற்றவராயினும் வானவர் தம்மை நோக்கி உலகினர் செய்யும் அறங்களை அசுரர் பற்றவும் அதனைக் காக்கமாட்டாதவராயினர்.

"மற்றும், யாவராயிருப்பினும் நால்வர் பின்வரின் அவரைத் தேவரென்று இவ்வுலகம் நம்பிவிடும். அரசர் களால் வரும் தீமைக்கு அஞ்சுவோர் அவர் வெறுப்பவற்றை உவமையாகவுங் கூறமாட்டார்; நினைக்கவும்மாட்டார்.

"தீயானது தீண்டினரை மட்டுமே சுடும். ஆனல், அரச ராகிய தீ தீண்டியவரை அவர் உறவுடனே அழித்துவிடும். அரசன் விரும்பினல் விரும்புவோர்க்கு அமுதுபோல நலம் பயப்பான். அவன் வெறுப்பு அவனை விரும்பாதார்க்கு நஞ்சுபோல் மறைந்து நின்றுங் கொல்லும். ஆகையால், நின்வாயினற் கூறப்பட்ட தெய்வம் அரசனைவிட அத்துணை மாண்புடையதன்று. 'அரசனுக்கு வேலினல் விண்ணகத்தை நல்கி இவ்வுலகாள்வது எனக்கு நலம்,' என்று கூறினை யேல் அது நினக்கு நன்றன்று."

இவ்வாறு வாள்வலியாலே கூற்றுவனுக்கும் ஓலை விடுக்கும் திறல்மிக்க தருமதத்தன் கூறி மேலும் விளம்புகிறான்:

"குழல் முடியிலே மலர்மாலை யணிந்துகொண்ட கணவன் இருக்க, வேறொரு நிழலிடும் வேலினனை விரும்பிய நீண்ட விழியினளும், குற்றமற்ற மனைவியை ஆதரியாமல் விடுத்தவனும், ஐங்குரவரையும் ஆதரியாமல் தவறினவனும் ஆகிய இவர்கள் துன்பந்தரும் நோய்கட்கு இரையாவார்.

"இவர்களினுங் கொடியோர் யாவரெனில் நட்பிடை வஞ்சகம் புரிந்தவனும், பிறர்மனையாளின் நலத்தை நுகர்ந்தவனும், கட்டழல்போலுங் காமத்தீயாற் கன்னியைக் கெடுத்துப் பின்னர் அவளை மணம்புரியாது விட்டவனும், ஒருயிரைக்கொன்று அதன் உடலைத்தின்றவனும், அமைச்சனாக இருந்து அரசனைக் கொன்றவனும் ஆகிய இவர்களாவர். இவர்கள் குட்டநோயை இம்மையிற்பெற்று; மறுமையில் நரகத்தினும் அழுந்துவர்.

"பிறைவளரத் தானும் உடன்வளர்ந்து பெருத்துப், பின்பு மதி தேயும்போது தானுந் தேயும் (மதியிலுள்ள) முயல்போலத் தன்னை இறைவனாக ஆக்கியவன் நெறியிலே அவனொடும் பெருகி, அவனொடுந் தேய்ந்து நடத்தல் செய்வானாயின், அவ்வொழுக்கம் இருளையோட்டும் திங்கள்போலப் பழியையோட்டும்; புகழையும் விளைவிக்கும்.

"மற்றும், அரசன் தன் முறைமையிற் பிறழ்வானாயின் இவ்வுலகு, கோள் நிற்கும்நிலை தவறி, இரவு நாழிகை குறைந்து, பகற்பொழுது மிகுந்து, மழைபெய்யாமல் நிலம் விளைவு குறைந்து, பசிமிகுந்து, மகளிர் கற்பழிந்து, அறச்சாலைகளுமின்றிக் கெடும். எனவே, அரசன் ஆணை தவறலாகாது."

**மதனன் வெம்மொழி**

இங்ஙனம் அரசர்க்கும் அமைச்சர்க்கும் பொருந்துமாறு கூறினன். இதனைக்கேட்ட, குன்றிலே கார்த்திகை

யில் விளக்கிட்டாற்போன்ற மணங்கமழுங் குவளை மாலை யணிந்த மார்பினனாகிய மதனன் (கட்டியங்காரன் மைத்துனன்) தன் மார்பெலாம் வியர்த்து, மனம் பொங்கி மகர மீனைப்போலத் தன் பெரிய வாயைத்திறந்து இதனைக் கூறுவான்:

"தோளினால் வலியராகிக் கூடிய பகைவர்களின் தலைகள்வீழ வாளினாற் பேசுதலன்றி வாயினாற்பேச யான் அறியேன். காளமேகங்களைப்போல வாய்முழக்கங்கூறுந் தங்களுடைய கைகள் பொரிக்கறியுடன் சோற்றைத் திரட்டுதலாலே, அமர்க்கடலை நீந்தும்போது மிகவும் வாள் வழுக்கும்."

**கட்டியங்காரன் கழறல்**

இங்ஙனம் மதனன் இரைந்தவுடன், கட்டியங்காரன் மெய்யெலாம் முத்துக்களைப் பதித்தாற்போல விரைவின் வியர்த்தது. அவ்வாறு வியர்த்த நெற்றியிலே புருவத்தை யேற்றிக் கண்களில் அனல்தவழக் கடகஞ் சிதறுமாறு கையொடு கையைத்தாக்கி, வெடியென நகைத்து, வெகுண்டு தருமதத்தனை நோக்கிக் கழறலுற்றான்.

"என்னையல்லாமல் வேறெவரும் இக்கொடுமொழிகளைப் பொறுப்பாரோ? நின்னையன்றி வேறெவரும் தம்மைச் சேர்ந்தவர்க்கு நலமல்லாதவற்றைக் கூறுவரோ? இனி, அரசன் சென்று வானுலகிறைவனாக அதனையாள, யான் இவ்வுலகெலாம் பொன்விளைந்து பொலியுமாறு காப்பேன்."

**தருமதத்தன் மாற்றம்**

"நீ கூறியவாறே நிலமெலாம் விளைந்து பெருகுக! பொன்னும் விளங்குக! நீ நினைந்தவாறே கூறிற்றிலேமென்று வெகுளல் வேண்டா. இப்போதே அரசனைக்களைய எழுவேம்! காவலனைக் கொல்லுங்கூற்றம் நிலமகளாய்க் கொல்லும்; தான்செய்த தவறாய்க் கொல்லும்; அளவற்ற செல்வமாய்க் கொல்லும்; அருளாய்க்கொல்லும். ஆதலால், அவனுக்கு அக்கொலை அமைவுடையதே."

**கட்டியங்காரன் துணிவு**

தருமதத்தன் இவ்வாறு கூறி அமர்ந்தான். இத்துணை யிடித்துரைத்துங் கட்டியங்காரன் கருத்து மாறவில்லை. நிலவுலகில் வாழுந் திருமகளைப் போன்றவள்பால் தணி விலாத காதல் மிகுதலால், அவளின்பத்திலே முழுகி, வெல்லற்கியலாத படைகளையிழந்த நிலவு வீசும் முடி யணிந்த அரசனைத் தனித்த நிலைகண்டு, குலத்தொடுங் கொல்ல நினைத்துக் கொடியவன் விரைந்தான். மற்றும், மன்னவன் சுற்றம் விலங்கில் அழுந்திச் சிறையிலே தாழ்ச்சி யுறத் தன்கீழுள்ளவர்கட்கெல்லாம் மிகு செல்வத்தை வாரிக்கொடுத்து, நாட்டையெல்லாம் தன் ஆட்சியிற் கொணர்தற்குக் குன்றினுச்சியில் இட்ட விளக்குப்போலப் பழியைப்பரப்பப் புறப்பட்டான்.

**அரண்மனை முற்றுகை**

கட்டியங்காரன் படையானது அணிசெய்த களிற்றை யும் புரவியையும் பரவிச்செல்லுந் தேரையுங்கொண்டு, ஒளிவிடும் வாள் வில் வேல் முதலியன ஏந்திப், பெருநகரின் தெருத்தொறும் நிறைந்து, போர்த்தொழிலிற் சிறந்த வேலேந்திய சச்சந்தனின் அரண்மனையை வளைந்தது. என்னே சச்சந்தன் நிலை! வாயில் காவலன் கண்டான், கட்டியங்காரன் படைசூழ்ந்ததை. அரசன்நிலைக் கிரங்கி னான். அரசனிடங் கூறவும் அஞ்சினான். துணிந்துசென்று, "நீள் நிலமன்ன! போற்றி! நெடுமுடிக் குரிசில்! போற்றி! பூண்அணிமார்ப! போற்றி! புண்ணிய வேந்தே போற்றி!" என்று போற்றுதல் செய்து நெடுநிலத்துறப் பணிந்தான். வாய்குழறக், 'கட்டியங்காரன் நின்னைக் கொல்லுதற்கு வந்தான்,' என்றான்.

**சச்சந்தன் தறுகண்மை**

இந்நிலையை எதிர்பார்த்தேயிருந்தும் இம்மொழியைக் கேட்டவுடன், தாக்கப்பெற்ற வயப்புலியென வெகுண்டான். இடியென வெடிபட முழங்குஞ் சொல்லால், "திண்ணிலையை யுடைய மதிற்கதவுகளை யெல்லாம் நன்றாகத் தாழிடுக!

விரைந்து பைம்பொற்றேரையுங் களிற்றையுங் குதிரையையும் அணிசெய்க! பெரிய மதிலைக்காக்குங் காவலரெல்லோரும் வருக!'' என்று சீறினான்.

எவ்வகைத் துணையும் இல்லாதிருந்தும் அரசனாக இருந்த பழக்கத்தால் இவ்வாறு ஆணை பிறப்பித்த சச்சந்தன் உடனே தன்னிலை உணர்ந்தான். எனினும் அஞ்சவில்லை. விரைந்து சென்று புள்ளியையுடைய புலித்தோல் உறை கொண்டிருந்த வாளை அவ்வுறையினின்றும் நீக்கினான். பொன்னால் அணிசெய்யப்பெற்று, வீரக்கழலணிந்த மன்னரெல்லோரும் அஞ்சும் அழகிய ஒளிமிகும் அவ்வாளை நோக்கி, 'இழிகுணத் தலைமைபூண்ட வுள்ளத்தனான கட்டியங்காரன் நம்மேற் பொருதலைப் பார்ப்போம்,' என்று ஒளிபொருந்திய பற்கள் தோன்ற வீரநகை நகைத்தான்.

**விசயை வெளிப்படல்**

பின்னர், அரசியிருக்குமிடஞ்சென்று, 'நங்கையே! நீ அன்றிரவு கண்ட கனவெல்லாம் பயனளித்தன! இனி நீ யிதற்கிரங்கல் வேண்டா. உடனே நம் மகன் பிழைத்தல் வேண்டி வெளியேறுவாயாக!' என்று படபடப்புடன் கூறினான். கேட்ட கயற்கண்ணி, மயங்கி மணமலர்க் கோதைபோல குழையணிந்த முகத்தே மோதிக்கொண்டு வீழ்ந்து தன் திருமகனுக்குத் துன்பமிழைத்தாள்.

மல்லர்களையெல்லாம் வருத்தி எழுந்து நீண்ட மலை திரண்டாலனைய தோளானாகிய கழற்காலினான், அங்ஙனந் துன்பமுற்றுச் சோர்ந்து வீழ்ந்த அமிர்தம் போன்றவளை எடுத்துத் தழுவிச் சோர்வைப் போக்கினான். பிறகு, முன்பு அன்புடன் பிரிவிலா மொழிகளைக் கூறுகின்ற அவன் இப்பொழுது பிரிவுமொழிகளைக் கூறுகின்றான்:

"பெய்வளைத் தோளியே! பேதையே! சாதலும் பிறத்தலும் ஆதலும் அழிவும் யாவும் தத்தம் வினைப்பயனாலுண்டாம். இவை பொருள்களின் இயல்பு. இவைகட்காக வருந்துதலும் மகிழ்தலும் நுண்ணுணர்வில்லாமையா

லுண்டாவன. எனவே, நீயும் பெரிதும் அறிவிலியாய் விட்டாய்போலும்! மற்றும், நம் மக்கட்பிறப்பை யெண்ணின் தொடுகடலின் வெண்மணலும் உறையிடப் போதாவாம். அவற்றுளெல்லாம் நாம் அன்புடையராய்ச் சேர்ந் திருந்தோமென்று கூறமுடியுமோ? அன்றி, இனிவரும் பிறவிகளிலும் சேர்ந்திருப்போமென்றுதான் செப்ப வியலுமோ? ஆதலின், இப்போது சேர்ந்துநின்ற இந்த இல்லத்துள் இரண்டு நாளைய உறவை உறவாக எண்ணி வருந்துதல் வேண்டா. யாழினும் இனிய மொழியாய்! புகழ்பெற்ற அரசர்கள் தம் உரிமை மகளிரை முன்னே போக்கியல்லது தாம் போகார். இதோ நீ ஏறிச்செல்ல மயிலூர்தி சமைந்துள்ளது. இனி நீ செல்வதே செய்ய வேண்டுவது. கவலைவேண்டா," என்று இவ்வாறு அவளைத் தேற்றிய, அனல் பரக்கும் விளக்கமான வாளேந்திய சிங்க வேறு போன்ற மன்னன், என்பு நெகிழ உருகி, உள்ளங் கலங்கிச் சோரப்பிணித்த காதலால் மிகவும் அழுது, பிரிவாற்றாது கலங்கும் ஆருயிர்க்காதலியை, இன்பமிகும் புகழ் பெற்ற அருகப்பெருமானின் (ஓம் நமோ அரஹந்தாணம் என்னும்) ஆணையைக் கூறித் துன்பமற்ற மயிலூர்தியிலே சேர்த்தான். அவளும் சேர்ந்தாள். அவள் துயர் உரைத்தற் கியலுமோ?

### சச்சந்தன் வீரப்போர்

நீருறுத குவளைபோன்ற நெடுங் கண்களிலிருந்து நீர் சொரிதரத் தன் காதலி சென்ற பிறகு, சிறப்புமிக்க அரசன் கண்கள் சிவந்து நெஞ்சழன்று சீறி ஊழித் தீத்திரள் பனிக்கடலைச் சுடுவதுபோல முழங்கினான். மலை முழையிலுள்ள இடியனைய சிங்கத்தை வளைத்த யானைகள்போல அந்தப்புரத்திலிருந்த அரசன் அகப்படும்படி வேலையும் வாளையுமுடைய வீரர்களாகிய கடலிடையிற் களிறுகளும் வளைத்தன.

அரசன் அப்படைகளைக் கண்டு நெஞ்சழன்று, கூரிய வாளை உருவி, பெரிய மணிகளழுத்திக் கரடித்தோலாற்

செய்யப்பட்ட கேடகத்தை ஞாயிறு சுழல்வதுபோலச் சுழற்றி, விண்ணிலிருந்து வழுக்கிவீழ்ந்த முத்துவட மணிந்த கதிரவனைப்போல முழங்கினான்.

மள்ளர்கள் மாரியனைய கடுங்கணைகளைச் சொரிந்து ஆரவாரித்தனர். அக்கணைகளை வீரமிக்க அரசன் விலக்கிக் கொண்டு வெளியில் நின்று மேலும் கணைமழையைச் சொரிந்து நாற்படைகளையும் ஒருசேர வெருட்டினான். உடனே பேரணியிலிருந்து பெரும் புகழ்பெற்ற களிறுகள் நெருங்கிவந்து சூழ்ந்தன. அங்ஙனம் வளைந்த களிறுகளின் நெற்றியிலே கூற்றுவனைப்போன்ற குருதிதோய்ந்த தன் வாளை நீரூற்றுடைய நெடுவரையில் இடிமோதினாற்போல அழுத்தியதால் அவற்றின் மத்தகங்கள் பிளந்தன.

இவ்வாறு யானைப்படையைக் கெடுத்தபின், மேலும் வந்து மோதிய வேலேந்திய வீரரின் வேலியைப் பிளந்து, கேடகத்தால் இடித்து வாள்வீரரின் வலையைக் கிழித்து, ஊனும் குருதியும் நிறைந்த போர்க்களத்தை அகப்படுத்திச் சிறப்புடன் அரசன் திரிந்தான்.

**கட்டியங்காரனுடன் போர்**

உவர்க்கடல் பொங்கி மோதிக் கரையை அழிப்பது போலத், தன்மேல் உடன்றுவந்த படையிற்புகுந்து தனியே பொரும் அரசன் பெருங்களிறுகளைப் பிளக்கக்கண்ட கட்டியங்காரன் அழன்று களிற்றைச் செலுத்திக்கொண்டு வந்து, நீண்டநாள் வரையிற் போர்முகமறியாத ஒளிவிடும் ஆழியைக்கொண்டு அரசன் கேடகத்தைப் பிளந்தான். கேடகம் அரவுசேர்ந்து நடுவற்ற கதிர்வட்டம்போல வீழ்ந்தது. கண்ட அரசன் காட்டிடப்பற்றிய தீயைப்போல ஆரவாரித்துக் கட்டியங்காரனின் மிகை நினைந்து சீறினான்.

பிறகு, நெய்யணிந்து ஒளிவீசி அழல்கக்கும் கூரிய வாளை வீசிக் கட்டியங்காரனூர்ந்து வந்த மதயானை வீழுமாறு துதிக்கையை வீழ்த்தினான் அரசன். கட்டியங்காரன் அது பொறாமல், முகிலிடை மின்னென விளங்கும் வேலை

யேந்தி அரசன் மார்பில் அணிந்த மாலை அழகழியும்படி எறிந்தான். தன் மார்பிலே தைத்து வளைந்த வேலை அரசன் பறித்து, அங்கே வீழ்ந்துகிடக்கும் களிற்றின் மருப்பிடைக் கொடுத்து வளைவை நிமிர்த்திக்கொண்டு கட்டியங்காரன் படையிலே பாய்ந்தான். அவன் புகுவது கண்ட யானைகள் பிளிறிக்கொண்டோடின. வாள்வீரர் கூற்றுவனைக் கண்டாற் போல நடுங்கிச் சாய்ந்தனர். இந்நிலையிலே கட்டியங்காரன் மற்றொரு வேழத்தின்மேலேறிக் கடுகச்செலுத்திக் கப் பணங்களை அரசன்மேற் சிதறினான். சச்சந்தன் சினந்து, வெள்ளிய வேலையேந்திக் குன்றத்தைப் பிளந்து மயிலூர்ந்து நின்ற முருகன்போலப் புருவத்தை வளைத்துக் கட்டியங் காரன் ஊர்ந்துவந்த அவ்வேழத்தையும் வீழ்த்தினான். கட்டியங்காரன் உடனே மற்றொரு களிற்றிற்பாய்ந்தான். உடனே வீரர்களெல்லாரும் சச்சந்தனைச் சூழ்ந்தனர்.

**சச்சந்தன் வீழ்ச்சி**

நஞ்சைத் தன்னிடத்தே பதியக்கொண்ட பெரிய நாகணையினனை திருமாலைப்போன்ற சச்சந்தனின் மார்பிலே வீரர்களின் படைகள் மூழ்கின. அப்போதும் சலிப்பின்றிக் களிறுகளைத் துதிக்கைவீழ வெட்டி வாளும் ஒடிந்து நின்றான். அப்போரில் ஆண்டகையின்மேல் வீரர் எறிபடைகள் வந்து வீழ்ந்தவண்ணமிருந்தும், இமையாதவ னாகி, முற்காலத்திற் கன்னனொடு பொருது பேராத பெரும் போரிடை நின்ற அபிமன்னுவைப்போல விளங்கினான். பின்னர்த், தன் மெய்யிலே ஒளிவிடும் ஆழியும் வேலும் பிளந்து அழுந்துதலால், மெய்வலி குறைந்து, அஞ்சாத கண்களில் தீயெழ விழித்து நோக்கியவாறு, நிலமகளின் வெம்முலைகள் அழுந்த வீழ்ந்து, மாலையில் மறையும் வெங் கதிர்போல, ஆண்டகையாகிய சச்சந்தன் அவிந்தான்.

மக்கள் பொருந்தி வாழும் வானவர் நாடென்று புகழப் பெறும் ஏமாங்கதநாட்டுப் பெரியோர்கள் மயங்க, மகளி ரெல்லாம் வாய்விட்டரற்றக், கொடுங்கோலாகிய இருள் பரவ, ஆன்றோர் புகழும் குருகுலமாகிய பெருங்கடலில்

தோன்றி, அறச்செங்கோல் செலுத்தும் ஞாயிற்றினை, அரசர்பெருமானைச், சச்சந்தனை அமைச்சனாகிய பெரிய நாகம் விழுங்கியதே! ஐயோ! பாவம்!

பாலருவிபொழியும் திங்களைப்போல முத்துமாலை தூங்கும் குற்றமற்ற பெருங்குடையின்கீழ்த், தாவுங் குதிரைபூட்டிய தேர்மீதிருந்து அம்பை இடையறாமல் வழங்கும் வில்வீரனாகிய வேந்தன், கூர்வாளுங் கேடகமும் மறமுமே துணையாகப் பகைவரோடு பொருது, அவற்றையும் நீக்கி, அருகப்பெருமானுடைய தூய நினைவாகிய அருவியிலே முழுகி, மந்திரமென்னும்இனிய சாந்தைத் திமிர்ந்து அப்பெருமான் திருவடிமலரைச்சூடிச் சென்று, வேலனைய கண்ணாராகிய அரம்பையர் மெய்காப்பாளராய்ச்சூழ, வானவர் வழிபட அவர்கட்கு விருந்தாயினான்.

செந்தீயாற் கருந்துளைகொண்ட இன்னிசைக்குழலும், யாழும், தேந்தேம் என்னும் மணிமுழவமும், தாந்தாம் என்னும் தண்ணுமையும் ஆகியவற்றை ஈமத்திற்குக் கொண்டுவந்து இளநங்கையர் மெல்விரல்களால் தீண்டி வாசிக்க, அகப்பரிவாரமாகிய இன்மொழி மங்கையர் ஐஞ்ஞூற்றுவரும் ஆடல்புரியும் அரம்பையன்னாரும், 'எந்தாய்! வெறுநிலத்துக் கிடந்தனையே,' என்று புலம்பி, ஈமப்பள்ளியிலே கிடத்தினர்.

பெரிய முத்துக்களையுடைய மழலைபோல் ஒலிக்குங் கிண்கிணியணிந்த உரிமை மகளிர் மணிச்செப்பைக் கடையுங் கருவிகள் அதனுள் முழுகுவதுபோலப் போர்க்களத்தில் மூட்டுக்கழன்று கிடக்கும் வேலும் அம்பும் தம் முலைகளினுள்ளே தைத்தழுந்துமாறு புரண்டு, காமன் படையை வென்ற கண்களிலிருந்து பனிநீர் வழிய விம்மி யழுதனர். பின்பு, மழைபெய்யும் முகிலிடையே மின்னல் தோன்றுமாறுபோலக் கூந்தல் அவிழ்ந்து மெய்யை மறைத்து நிலத்திற் பரவிக்கிடக்க, அதனுள்ளிருந்து புலம்பினார்கள்.

மயிலினம் சூழ்ந்துகிடப்ப ஒரு சிங்கம் அணைமேற் கிடந்தாற்போல, உரிமைமகளிர் சூழ்ந்துகிடப்ப அணைமேற்

கிடந்த வேந்தனைக் கரிந்த இயல்பையுடைய நெஞ்சினன் ஆகிய கட்டியங்காரன் கண்டான். கண்டு கண்ணீர்வார விம்மிக் கைதொழுதான். பின்பு, திரண்ட வளையலணிந்த பெண்கள் ஈமத்தின்மேல் நெய்க்குடங்கள் பல சொரிந்து, 'எம்பெருமானே! மறைந்தனையோ?' என்று கண்ணீர் சொரிந்தலறுவார். அவர்கள் கையிலுள்ள வளையலை உடைத்தழுவார்; மார்பின் மாலைகளைப் பிய்த்தெறிந் தலறுவார்; கரிய கூந்தலிலிருந்த பூமாலைகளை யெடுத்தெறிவார்; காதணிகளைக் களைந்து வீசுவார்; கையால் வயிற்றிலடித்துக் கொள்வார்; ஐயோ! என்றிரங்குவார்; 'வேந்தன் செய்த கொடுமை கொடிது,' என்றேங்குவார்.

தேனையுடைய மலர்ச்சோலை பொருந்திய செவ்வரையின்மேல் வெள்ளிய பிறைபோன்ற மருப்பினையுடைய சிறுகண்களையுடைய வேழத்தைப் பெரிய வாயையும் படத்தையும் உடைய நாகம் வீழ்த்தியதால், சிறு பிடிகள் துயருறுவதுபோல அம்மகளிர் துயருற்றழுதும் அமையாமல், "எம் இறைவனுர் பறிப்ப நலம்மலர்ந்த இக்கொடிகள் பிறர்பறிப்ப மலரா. அவ்வுலகில் நின்னடி யடைவோம்," என்றுயிர்விட்டனர்.

**கட்டியங்காரன் அரசுரிமை**

சிவந்த கண்களையுடைய குறுநரியொன்று சிங்க வேற்றைக்கொன்று, அதற்குரிய இடத்தை அடைந்தால், அதன் தொழிலை நடத்தாமல் தன் தொழிலை நடத்துமாறுபோல, இருண்ட மனத்தானுகிய வெற்றியாளன் அரசனை எரியினிடத்தே வீழ்த்திவிட்டுச்சென்று நிலமகளை யடைந்தான். மற்றும், பைங்கட் களிற்றின்மேல் தனது பெயரினாலே பறையறைந்தான். அதனைக்கேட்ட எல்லோரும் வேல்மழை பெய்தால் வருந்துமாறுபோல வருந்தினர்.

---

## ௪. சீவகன் பிறப்பு

இஃதிங்ஙனமாகச், சீற்றமிகு முகமுடைய களிறு போன்ற சச்சந்தன் கூறிய மொழியின் பயனை மனத்துட் கொண்டு, வண்டுகள் களிப்புடன் தேனைப்பருகும் மல ரணிந்த கூந்தல் அணிகலனணிந்த கழுத்தின்மீது விழுந்து புரளக், காற்றின்முன் நின்ற விளக்குப்போல ஒருநிலையில் நில்லாத வுள்ளத்துடன் மயங்கிச்சென்ற கிளிமொழியாள் விசயைக்குற்றதை நோக்குவோம்.

கூரியவாளனைய கண்களையுடைய அமுதம்போன்ற வள், கணவன் பிரிவாற் குறைந்த வலிமையுடன் மயி லூர்ந்து செல்லும்போது, புகழை விரும்பிய கட்டியங் காரனின் வெற்றி முரசொலிகேட்க, வேலால் தாக்கப்பெற்ற மான்பிணையென வருந்தி மெய்ம்மயங்கிச் சோர்ந்தாள். அந்நிலையில் வலத்திலே முறுக்கின விசை கைநெகிழ்ந்து, இடத்திலே தானே திரிவுற்ற மயிலூர்தி, பெருமைமிக்க நகரிலிருந்து நீங்கி, முதிய மரங்கள் நெருங்கி அஞ்சா நெஞ்சினரும் அஞ்சுமாறு பிணங்கள் பல எங்கும் மிகுந்து, தன் எல்லையெங்கும் கழுகுகள் இருந்து உறங்கும் சுடுகாட் டிலே விசைகுறைந்த மயில் மெல்ல மெல்ல வீழத்தொடங் கியது. அங்ஙனம் வீழும் மயில், முகில் சூழ்வதுபோலப் பிணப்புகை நிறைந்து, பேயும் அஞ்சும் அந்த மயானத் திலே, அகிலைத் தன்னிடத்தேகொண்ட மலர்மாலை பஞ்சின் மேல் வீழ்வதேபோல மெல்ல வீழ்ந்து கால் குவித்திருந்தது.

அழகிய மயிலனைய சாயலாள் சோருந்துகிலையுந் திருத்தும் நினைவிலளாய்க் கடலெனப்பரவிய காட்டிற் சேர்ந்தவுடன் சிறிது உணர்வுபெற்று அரசனுக்காக வருந்தி, நீண்ட கண்களிலிருந்து வாரும் நீர் தன் மார்பகம் நனைப்ப ஏங்கி, அச்சம் சிறிதுமின்றித், தன் துணையைப் பிரிந்த மகன்றில் போன்றாள். அவ்விளங்கிழையாள், வானுற வுயர்ந்த அரண்மனையிலே விண்ணவர் மகள்போல நல் வினையின் வடிவமாய் வாழ்ந்தவள் இப்பொழுது, 'பல்லுயி ரும் நுகரும் பாவம் உண்டு,' என நூல்களிலே கேட்பார்

யாவரும் 'இனி என்னைக் கண்டு தெளிந்துகொள்க,' என்று உலகிற்கு விளக்கிக்காட்டுவாள் போலத் தீவினையின் வடிவமாய்க் காட்டிலே தனித்துக் கிடந்தாள்.

அப்போது, இருள்கெடஓட்டி யெங்கும் மாணிக்க விளக்குகள் எரியுமாறு ஏந்திய அருளுள்ளத்துடன் அணங்குகளெல்லாம் வணங்கிப் பெருங்கடலிலே ஞாயிறு முளைத்ததேபோலப் பொன்னனைய சீவகன் பிறந்தான். அவன் பிறந்த அப்போதே மயக்கமுடைய விசயை உற்ற மயக்கநோய் மறைந்தது. அவள் தன் கணவன் ஆணைப்படி வராதிருந்தாற் குலத்தொடுங் கொல்லவெண்ணிய கட்டியங் காரனிடம் இவளும் குழந்தையும் அகப்பட்டிருப்பர். எனவே, சீவகன் விசயையின் கையிற் கிடைக்கச்செய்தது சச்சந்தன் சொற்படி நடந்துகொண்ட தன்மைதான். இங்ஙனம், பூங்கழலணிந்த அரசன் தந்த திருமகனை விசயை விருப்பத்துடன் பார்த்தாள். பிறகு, திங்கள் வெண் கதிரைப் பொழிவதுபோல் தன் முலைகள் விம்மித் தாமே பால்சொரியும் வரையிற் பொறுமல், தானே பாலைக் கறந்தெடுத்துத் திருமகன் முகத்திலே திருந்தப் பொட்டிட்டுத் தன்குல திலகனை அவனை அத்தேன்கமழ் கூந்தலாள் நிலத்திலே கிடத்தினாள்.

**விசயை அரற்றல்**

பின்னர் விசயை தன் நிலையையும், திக்கற்ற நிலையிலே பிறந்த செல்வ மகனையும் நினைந்து அரற்றினாள் :

"வேந்தே! அரசர்பெருமான் அரிய பொற்பூணும் மாலைகளும் ஒளிவிட அரண்மனையிலே கணிகள் முதலியோரைக் கூட்டிச் சாதகம் எழுதி, அரசர்க்கெல்லாம் தூதுவர்மூலம் தெரிவித்துப், பெருங் கைக்களிற்றையும் கம்பலங்களையும் காசுகளையும் கவிகள் கொள்ளுமாறு வாரி வழங்குவார். பிறகு, 'பன்னிரண்டாண்டு வரிநீக்கஞ் செய்க! அழகிய அறச்சாலைகளும் கோயில்களும் எழுப்புக! பகை மன்னர் சிறைப்பட்ட சிங்கம்போலச் சினத்தாற் புழுங்கிக் கிடக்குஞ் சிறைச்சாலைகளைத் திறந்துவிடுத்து, அச்சிறைச்

சாலைகளையும் இடித்துத் தூய்மை செய்க! ஒளிதவழும் பொற்குவியல்களைத் திறந்துவிட்டு, 'அரசர்பெருமானுக்குத் திருமகன் பிறந்தான்,' என்று ஊரெங்குங் கொண்டு சென்று இரப்பார்க்கு வழங்குக! வளம்பொருந்திய மாடங்கள் ஓங்கிய அரண்மனையில் அளவற்ற பொருள்களிருக்கும் அறைகளைத் திறந்துவைத்து ஆடையுஞ் செம்பொன்னும் அணிகலன்களுமாக யாவற்றையும் யாருங் கவர்ந்துசெல்லுமாறு விடுக! மற்றும், 'விரும்பியவர்க்கு மூன்றரைக் கோடிச் செம்பொன்னை அரசர் நல்குவார். எல்லோருக்குங் கிடைக்கும். ஒருவரையுந் தடைசெய்யாது விடுக! என்று பறைசாற்றுக!' என்று அரசர்பெருமான் முதல் யாவரும் விரும்பப் பிறப்பாய். அத்தகைய நீ கொடியவாய் ஓரி முழவாகவும், இறந்தோரைச் சுடும் ஈமஎரி விளக்காகவும், பிறப்பவர்க்குத் தகாத சுடுகாட்டின் உயரமான மேடைகளிலே நிழல்போல் அசைந்து பேய்கள் ஆடவும், எம்மருங்கினும் இருந்து கதறிக் கூகைகள் குழறிப் பாராட்டவும் இவ்வாறுகப் பிறப்பதோ? இதுவோ மன்னர் பிறக்கும் இயல்? கூறுக.

"இவ்வுலகுடைய நீ கிடக்கின்ற இவ்விடம் பகையரசனுடைய நகரின்புறம்! நினது படுக்கையோ சுடுகாடு! யானும் உரையாடுதற்கொருவருமில்லாமல் தனியேயுளேன்! நின்னையெடுத்துக்கொண்டு வேறிடஞ்செல்ல எண்ணினும் பெயரவொண்ணாத பேரிருளாயுள்ளது! மற்றும், நீ வளரும் முறையும் அறியேன்," என்று இவ்வாறு புலம்பி, "இந்நிலையறிந்தும் இச்செய்தி கண்டும் என் கொடிய உயிரே! நீ போகாதிருக்கக் காரணம் என்ன?" என்று தன் உயிரை நோக்கி வெறுத்துரைத்தாள்.

பிறகு, தன் திருமகனை நோக்கிச், "சிந்தாமணியே! நீ ஒன்றும் உரையாமற் கிடக்கின்றாய். இனி, என் துயர்களையப் பிறந்த நீயும் பொலிவுற்ற அசோகின் கீழமர்ந்த பெருமானடிகளின் பேரறமும் ஆதரவுசெய்து, எனக்கு நேர்ந்த துயர்க்கடலை நீந்தும் புணையாகாதபோது, வேறு சிறந்தார் உளரேல் உரைப்பாயாக! ஒன்றும் உரையாமற்

கிடக்கின்றனே. உங்கள் பெருமான் மொழிந்தவாறு செய்த யான் மயக்கத்தால் வருந்துவேனே?'' என்று கதறினாள்.

'அகங்கை புறங்கையாகமாறிய விரைவுபோலக் கட்டுத்தறியிற் பொருந்திய களிற்றையுடைய தன் அரசன் பட்டவும், விசயை ஒரு மயில் மற்றொரு மயிலூர்ந்து வந்தது போலப் புறங்காட்டிற்குத் தனியே வந்தாள்,' என அவள் பட்ட தீங்குகளை நினைத்து, 'அந்தோ!' என இரங்கி அழுவனபோல அங்குள்ள மரங்கள் 'பனிசேர் *கண்ணீர்' சொரிந்தன.

உலகிற் குற்றமற்ற அரசன் இறக்க, அரும்பெறன் மகனைப்பெற்றிருந்த, இடர்கொண்ட நெஞ்சமுடைய இறைவி, சிறிது இடர்தீர்ந்ததனால், பேரிடமுடைய இருள் பருகிக் கதிரவன் மறைய, ஒளிவிடும் குழவிமதியைப் பெற்றுச் சிறிது மகிழ்ந்த துன்பம் நீங்கிய அந்திமாலையைப் போன்றாள்.

**சுடுகாட்டுத் தெய்வம்**

மதுக்கமழுங் கூந்தலாள் தன் திருமகனுக்குறும் நல்வினையை யறியாதவளாக, 'யான் யாதுசெய்வேன்' என்று கலங்கியிருந்தபோது, ஒரு தெய்வம் அரசியைவிட்டு நீங்காத சண்பகமாலை யென்னுங் கூனியின் உருவங் கொண்டு வந்தது. இங்ஙனம் அரசியின் விம்மலைத்தருங் கொடிய துயரைக் கண்டிரங்கிவந்த தெய்வத்தைக் கண்டு, பொள்ளெனப் பெருமூச்செறிந்து உள்ளக்கவலை நீங்கினாள் அரசி. போலிச் சண்பகமாலை, "எம் அன்னையே! திருவனைய பாவையே! நீ தனித்து இத்துயருற்றதெல்லாம் யான்செய்த தீவினை. இனி வருத்தம் நீங்குக! காவியனைய கண்ணினாய்! தாமரைமலரில் தோன்றிய முருகனைப்போன்ற இந்நம்பியின் மொழிகேட்டு உலகம் நடக்கும். அதற்கு மாறாய்நின்ற கட்டியங்காரனைக் கொல்லவேண்டி, இப்

* கள் + நீர் = கண்ணீர்: சிலேடை.

போது ஒருவன் வந்து கொண்டுபோவான். ஆதலால், யாம் மறைந்து நிற்பது தக்கது,'' என்றாள்.

பிறகு, கூனி, நம்பியைப் பன்மணி விளக்கின் நீழலிலே கிடத்தித், 'தீதிலவாக' என வாழ்த்தி, விசையையின் முலைப் பாலையூட்டிச், சச்சந்தன் பெயர்தாங்கிய ஆழியை யணிந் தாள். அரசியோ, கிண்கிணியுஞ் சிலம்பும் அரற்ற, அணி கலன் ஒளிர, நன்முத்தையீன்ற சலஞ்சலம் அதனைவிட்டுக் கடலிடைப் புகுவதேபோல மெல்லென ஒருசார் ஒதுங்கி னாள். அவளைக் கூனி அழைத்துச்சென்று மறைய நின்றாள்.

அப்பொழுது, அரசி, 'நின்னைப் பெறுவதற்கு மட்டும் நல்வினை செய்து, வளர்த்தற்கு நல்வினை செய்யாத என் னுடைய நம்பியே! நீ தனித்துக் கொடிய விலங்குகள்சூழக் கிடப்பாயோ!' என்று விம்மி அழுது, கொம்பைத்தழுவிய கருவிளை ஒரு பூவைப் பூத்ததுபோல, ஒரு கொம்பைப் பற்றி மறைந்துநின்று ஒரு கண்ணாலே பார்த்துக்கொண்டு நின்றாள்.

**கந்துக்கடனிடம் சீவகன்**

இவர்கள்நிலை இங்ஙனமாக, நாண்மீன்களோடு செல் லுந் திங்கள் தவறி மின்னலுடன்கூடிய முகிலுடன் வந்து நிலத்தில் வீழ்ந்ததுபோலக், கரிய உடையுடனும் வாளுட னும் அப்பேரிருளிலே கந்துகடன் வந்து தோன்றினான். அவன் அணங்குகள் ஆளைக்கடிந்து வருத்தும் அக்காட்டில், பேரொளியையுடைய ஆழியிலுள்ள மாணிக்கம் இருளைப் போக்குதலாற் குழந்தையை நோக்கினான். விடியலில் தோன்றும் இளஞாயிறு கிடந்ததெனக்கிடந்த நம்பியிடம் விருப்புடைய மனக்களிப்பாலே கடிதின் அடைந்தான். பிறகு, அழகிய கதிரைப்பொழியும் திருமணியிழைத்த பொன்னாழியை மறைத்துவைத்துக்கொண்டு, தன் வண்மை மிக்க கைகளால் செறிந்த கதிரை வாருவதுபோல எடுக்க, அத்திருமகன் தும்மினான். அப்போது, அத்தெய்வம் கிளையிலே மறைந்துநின்று 'சீவ' என்றது. அரசியும்

அச்சத்தால் தன்னுள்ளே வாழ்த்தலின் அவ்வாழ்த்துக் கேளாதாயிற்று.

கந்துகடன் தன் திருமகனை யெடுத்ததைக்கண்ட அரசி, இயற்கையாக வளர்ந்த அன்பு தோன்றி, அரசனுக்குத் தன் மகன் முகங்காணும் பேறில்லையேயென்று கலங்கினாள். பிறகு, தெய்வத்தை வணங்கி மகனை நோக்கியவாறு, 'நின் பழம்பகை கெடப் பிளப்பாயாக,' எனத் தன் இனியமொழி யால் வாழ்த்தினாள்.

இனி, ஒழுக்கத்தாலே அமைந்த, நீங்கரிய தவத்தி னாலே இவ்வுடம்பை யீங்குவிட்டவர் மேலான உடம்பைப் பெற்றாற்போலத், தன் இறந்த புதல்வனைச் சுடுகாட்டிலே வீழ்த்திவிட்டு, மாமணிபோலச் சிறப்புற்ற அரசன் மகனைக் கொண்டு விரைந்து சென்றான்.

ஒளியை மறைக்கும் பேரிருளினை நீந்திச்சென்று, மேன்மைதங்கிய செல்வம் நிறைந்த நகரம் அழகுறப் புகுந்த கந்துக்கடன், பெண்ணறிவினாலே வாடித் தளரும் தன் மனைவியை நோக்கி, இனிமைமிக்க அருள்மொழி யொன்றை நயம்படக் கூறுகிறான் :

"உலகிற் புகழ்பெற்ற அருந்ததியினும் மேம்பட்ட குற்றமற்ற கற்புடைய என் காதலியே! நல்வினைபெற்ற நின்மகன் இறப்பினின்றும் தப்பினான். இனி நீ வருந்தற்க! இங்கே வருக."

இம்மொழிகேட்டுக் களிப்புற்ற கோதையாள், தன் உள்ளத்திற் கிளர்ந்தெழுதரும் உவகைமிக, வள்ளலாகிய கந்துக்கடனை விரைந்தடைய, வெள்ளிய வேலினான் நம்பி யைச் சூழ்ச்சியுடன் கொடுத்தான்.

இங்ஙனம், சீவகனை இருவரும் மகவாகக்கொண்ட வுடன் சுழித்த முகமுடைய வலம்புரிகள் முழங்கின. பல்லியங்களும் விரிவான விண்ணிலே ஒலித்தன. மங்கையர் இரவலர்க்குப் பொன்னைவாரி வழங்கினர்.

இங்ஙனம், கந்துகடன் மனையிலே இனியவிழா நடத் தலையறிந்த கட்டியங்காரன், “சச்சந்தன் வீழ்ச்சியால் அழு குரல் மயங்கிய துன்பம்மிகும் வணிக வீதியிலே, நம்மிடம் பேரன்புடைய கந்துகடன் தன் எழுகிளையுடன் மகிழ்தலால், எம் அரசை வேண்டினனவான்,” என்று அவன் மகிழப் பெருநிதி நல்கினன்.

செம்பொற்குன்றனைய பெருவளமிக்க அச்செல்வத் திரளைத் திருமகனைப்பெற்ற மகிழ்ச்சியாலே, இரவலர் மகிழ வாரிவழங்கினன். இங்ஙனம் சீவகன் தன் பகையை வெல்லவேண்டி மேலும் மேலும் கொடைக்கடன் பூண் டொழுகினன் கந்துக்கடன்.

**விசயை சுடுகாடு நீங்கிச் செல்லுதல்**

நல்லுயிராகிய கணவனை நீங்கியதனால், நற்சிறப்புடைய ஒரு புல்லுயிராகிய மகனொடு நின்றவிடத்து; அப்புல்லுயி ரும் கல்நிறைந்த காட்டிலே ஊழினால் மறைய, கலங் கவிழ்ந்ததனாற் றுன்பமுற்றவரைப்போன்று துன்பமுற்ற விசயையின் நிலையை இனிப் பார்ப்போம்.

தேமலர்க்கோதையாள் பொங்கி விம்மிப் பொறியற்ற பாவைபோல வெறுநிலத்தே சோர்ந்து வீழ்ந்தாள். முதலி லும் இறுதியிலும் வரக்கூடிய எல்லாவற்றையுங் கூனி முறைப்படிகூறித் தெளிவித்தாள். அதனால், அரசி வருத் தம் அகன்றாள்.

கூனியின் மொழியினால் தன் பெருமைமிக்க மகனுக் குறும் ஆக்கத்தைத் தெளிவாகக்கேட்ட திருமகளனைய விசயை, ‘ஒன்றிய உளமுடைய அன்னையே! இனி யான் செய்யவேண்டுவனதையெல்லாம் உரைப்பாயாக!’ என்றாள். விசயையை அவள் திருமகனினின்றும் பிரிக்கவேண்டிய தற்கு வருந்திய தெய்வம் செப்புகின்றது :

“நீலமணியிலே அறலை யழுத்தினாற்போன்ற ஐம் பாலினையும் உலகம் நின்பணிகேட்க வருதற்குரிய கற்பினை யும் உடையாய்! நாம் இனி இருளாகிய போர்வையிலேயே

மறைந்துசென்று அழகிய மணலையுடைய அமரிகையென்னும் பேரியாற்றை அடைவோம். அமரிகையிலிருந்து ஐம்பது யோசனை சென்றால், அழியாத கொடியையுடைய மதிலையும் கோபுரத்தையும் உடையதும், உறவினைக் காக்கும் இயல்புடையதுமான தரணிதிலகம் என்னும் மூதூர் காணப்பெறும். நாம் அதனைச் சாராமல், வண்டுமுரலும் குவளை நிறைந்த குளமும் பொய்கையும், பார்த்தவர் உளத்தைப் பிணிக்கும் மலர்க்காவும் தழைத்த தண்டகாரணியத்தில் ஒரு தவப்பள்ளியுள்ளது. அதனையடைந்து தங்கியிருப்போம்.''

**வழிச்செலவு**

பொருள் பொதிந்து வாய்மையை அத்தெய்வம் கூறி, மருளுடைய மனத்தினளான விசயை அம்மொழியை மதித்து, (தமரிருக்குந் தரணிதிலகம் சென்றால் துன்பம் மிகுமென்றறிந்து) அருளுடைய முனிவர் வாழும் அவ்வனமிருக்குந் திசைநோக்கித் தெய்வத்துடன் சென்றாள்.

அழகிய முழுமதிபோலும் ஒளிபொருந்திய முகத்திலேயுள்ள கண்களும் இருகாதினும் அணிந்த மகரக்குழைகளின் பன்னிறவொளியும் அம்மாதர்கட்கு வெம்மைமிக்க இருண்ட அவ்வழியைக் கடக்கத் துணைபுரிந்தன. சிலம்புகள் இரங்கிப் போற்றுக்கூறவும், கிண்கிணியும் மேகலையும் அரற்றவும், காதணிகளின் ஒளி மெய்காப்பவும், வேற்கண் கலுழவும், மாணிக்கம்பூத்த பவளக்கொடியொன்று முழுவதும் சிலம்பி நூலாற் போர்த்ததுபோல விசயை போர்வையொன்று போர்த்துச் சென்றாள். பஞ்சியும் நெருங்கிய அனிச்சமலரும் நெருஞ்சிப் பழமென அஞ்சும் மலரடிகள், அரம்போன்ற கற்கள் நிறைந்த அரிய காட்டுவழியிலே, இரத்தங் கொப்புளிக்கக் குந்திக் குந்தி அசைந்தசைந்து, வெப்பமான பெருமூச்செறிந்தவாறு, வஞ்சிக்கொடி போலும் இடையசைய மயில்போன்ற அவள் கைவீசி நடந்துசென்றாள். அவள், மகவுபெற்று மெலிந்த மெய்யளாதலின் அவள்நிலைக் கிரங்கிய தெய்வம் தன் ஆற்றலால் அவள் வருந்தாமல் மின்னென அழைத்துச் சென்றது.

இங்ஙனம் அத்தெய்வமும், தாமரைமலரில் வாழும் திருவனைய விசையையும் கூரிய பரல்நிறைந்த வழிகளும் மலையுங்கடந்து, புனல்நிறைந்த அமரிகையென்னும் ஆற்றை யடைந்தனர்.

**ஞாயிறு தோற்றம்**

அப்போது ஆயிரஞ்செங்கதிர்கொண்ட ஞாயிறு வளவிய பெருங்கடலிலே தோன்றலும் நிலைபெற்றிருந்த இருளானது, பழைய நல்வினை வந்தடைதலால், முன்னிருந்த துன்பந்தரும் வெவ்வினை நீங்குவதுபோல நீங்கியது.

நிணந்தங்கிய கூரிய நுனியையுடைய வேல்போன்ற கண்ணையுடைய அணங்கனையாள் அந்த ஆற்றின் அரங்கத்தில் ஒரு பொழிலையடைந்து, ஒரு முகிலின்மிசை அசையும் நுண்ணிய மின்னற்கொடி வந்து கிடந்தாற்போல, ஒரு மெல்லிய ஆடைமேற் கிடந்தாள். அவ்வாறு கிடந்தவளைத் தெய்வம் நெருங்கி, 'எம் அன்னையே! வாழ்க! பொழுதுவிடிந்தது,' என்று கூறி அடியைத்தடவக் கண் விழித்து, 'ஐயையோ!' என்று, திங்கள் நிலத்திலே முளைத்ததுபோல் எழுந்தாள்.

ஞாயிறு தோன்றுதலாலே தூவி அஞ்சிறை அன்னமும் மயிலும், மானினம் முதலியவைகளும் கொட்டாவி விட்டு ஆரவாரித்தது, விசையையின் கத்தூரி கமழும் மெய்யின் சோர்வைக்கண்டு ஆற்றாமல் வாய்விட்டழுதது போலிருந்தது.

தாமரையில் திருவனையாள் முன்னைத்தீவினை யுண்மையால் இத்துயரை யடைந்தாள். அத்தீவினை யிப்போது நீங்கியதாற் செவ்விய தவம்புரியும் மாதவரின் இருப்பிடத்தைச்சென்று சேர்ந்தாள்.

**தவக்கோலம்**

வந்த விசையையைத் தவப்பள்ளியிலிருந்த மாதவ மகளிர் கண்டு, அன்புடன் வரவேற்று, உசாவி, வழிநடந்த

இளைப்புத்தீர்த்துத் தழுவிக்கொண்டு தவநெறிப்படுத்த லுற்றனர். அவர்கள் நன்னாள் கண்டு, வளர்பிறை நாளிலே அவளணிந்த அணிகலன்களை நீக்குவித்தனர். செல்வச் செருக்கினிற் பழகிய காதல் வளர்க்கும் அணிகலன்கள் துறவுக்குத் தகாவல்லவோ!

மணமிருந்த தகர விறகாலமைந்த நெருப்பிலே தேனைத்தோய்த்து இனிமைகொள்ளக் கமழும் அகிற்புகை யிலே தோய்ந்து துயிலுங் கோதையாள் தன் அழகிய மணமிகு குழலிலிருந்து தேனும் வண்டுந் துயருறப், பொன் னரிமாலையும் நெற்றிமாலையும் தலைக்கோலமாகிய முத்தும் வாட்டமுற அகற்றினாள். திங்களை நகத்தால் நீக்குவது போல நெற்றிப்பொட்டை விரலால் எடுத்தாள். பசும் பொன்னாலான மகரகுண்டலமும் கழுத்தணிகளும், அரச னுக்கமுதமாகித் தனக்குப் பகையாகவுள்ள அழகிய முலை மீதணிந்த அழகிய முத்துக்களும் அரும்பொற்பூண்களும் ஆகியவற்றை விலக்கினாள். பஞ்சனைய மென்மையான வேய்த்தோளிலே திறந்தவாயையுடைய மகரமீனையும் அவ் வாயிலிருந்து உமிழுமாறு அமைத்த முத்துக்கோவையை யும் கும்பிட்டு நீக்கினாள். கையிலிருந்து வளையல்களைக் கழற்றவியலாமையால் உடைத்தாள். அழகிய காந்தள் போன்ற விரல்களிலிருந்து பொன்னாழியை அகற்றினாள். இடையில் மின்னும் மேகலை முதலிய அணிகளை நோக்கி, "இனி இறைவன் அரம்பையரை நோக்கச் சென்றுவிட் டான்; நும்மை நோக்கான்,' எனக் கூறித் துறந்தாள். பிடியின் துதிக்கைபோன்ற திரண்ட துடையில் அணிந்த 'குறங்கு செறி'யைக் களைந்தாள். பிணையனையாள் அடிகளி லணிந்த கிண்கிணி சிலம்பு ஆகியவற்றையும் விரலாழிகளை யும் போக்கினாள்.

இங்ஙனம் மலர்ந்து உதிர்ந்த கொடிபோல இருந்த விசயையைக் கண்டு உடன்வந்த தெய்வம் அலறியது. பிறகு, விசயை தன் மகன் உயர்கவென்று நினைத்துக் காவி தோய்ந்த மெல்லாடையை உடுத்தாள்.

பாற்சோற்றைப் பைம்பொற் கலத்திற் பாவையனைய மகளிர் ஏந்தினும் விரும்பி நோக்காக் கயற்கண்ணாள், தன் காந்தளனைய கையால் தூய இலைக்கறிகளைச் சமைத்துண்டு வனத்துறை தெய்வமானாள். இங்ஙனம் வாழும்போது தன் மெல்விரல் மெலியக்கொய்த அல்லியும் நெல்லும் காயும் முன்றிலில், அணில் அஞ்சியோடும்படி அணைந்த ஆமான் கன்றுக்குக் கதிர்க்குப்பை பொழிவதுபோன்ற கவரியையுடைய கவரிமான் பாலூட்டக் கண்டு, விசயை தன் மகனும் பிறர்பாலூட்ட வளர்வதை நினைப்பாள்.

'நினைப்பின் பெண்மையும் நாணும் வனப்பும், சாயலும் ஒருங்குகூடிச் சிறப்புற்றாலனைய உருவுகொண்ட நங்கை நுங்கட்கெல்லாம் அடைக்கலம்,' என்று தன் குலத்தையும் பெயரையும் நாட்டையும் மறைத்துக்கூறி அத்தெய்வம் புறப்பட்டது.

அப்போது அத்தெய்வத்தின் நினைவின் போக்கிலே தன் நெஞ்சம் மாறிய விசயை அத்தெய்வத்தை யின்னுஞ் சண்பகமாலை என்றே யெண்ணியிருத்தலான், 'நீ சென்று நம் திருமகன் செய்தியை அறிந்து விரைவில் வந்து கூறுக,' என்று போக்கினாள். அத்தெய்வம் விசயையின் தூய தன்மையையும் இரங்கத்தக்க நிலையையுங் கண்டு, 'இத்தகையாளை வஞ்சித்தேனே,' என வருந்தியவாறு சென்று இராசமாபுரத்தில் தன் இடத்தையடைந்தது.

விசயை, மானின் நோக்கத்தாளாய சண்பகமாலை 'வருவாள் வருவாள்,' என்று பல இரவும் பகலும் ஆசையோடு காத்திருந்து தானும் தன்னுணர்வும் தளர்ந்திருந்தாள். இங்ஙனம் விசயை தவக்கோலத்துடன் தன் மகனுடையநிலை உயருமாறு தவஞ்செய்திருக்கும்போது, சீவகன் நிலையைக் காண்போம்.

**குழவிப் பருவம்**

காலனும் அஞ்சுங் கதிர்வேலேந்திய கந்துக்கடனும், மொழியும் அஞ்சும் பொருந்திய கற்பினையுடைய சுநந்தை

யும் விரும்பிப்போற்றி யழைத்துவந்த பெரியோருங்கூடிப் புகழ்பெறத்தக்க நம்பிக்குச் (சுடுகாட்டில் தெய்வம் சீவக என்றதனால்) சீவகன் என்று பெயரிட்டனர். முகில் ஈன்ற மின்னனையாளாம் சுநந்தையின் முலைப்பாலருந்திப், பல வுலகையுங் காத்து நல்லின்பம் அருளும் சிவபிரானுக்குக் கணையாக இருந்த திருமால் கண்ணபிரானாக நந்தகோபன் மனையில் வளர்வதுபோன்று, அப்பிறைமதியன்னான் வளர்ந்துவந்தான். அழகிய பொற்கொடியனைய செவிலித் தாயர் ஐவர், சீவகனை நன்கு ஓம்பிவர, ஒளிவிடும் சிறு தேரும், வண்டியும், வேழமும் ஊர்ந்தும், அப்பருவத்தி லேயே கொடையாகப் பொன்னைமுகந்து நல்கியும் நாடோறும் நலம்பல மிகுந்துவந்தான். அந்த நம்பி, பல் மலர்நிறைந்த பொய்கையிலே தாமரைபோன்றும், குளிர்ந்த வானத்திலே யாவர்கண்ணும் இன்புற உலவும் முழுமதி போன்றும், கொல்லுஞ் சிங்கக்குருளை போன்றும் குழவிப் பருவத்தில் வருந் தெய்வப் பகையேதுமின்றி வளர்ந்தான்.

நம்பியை வளர்க்கும் மகிழ்ச்சியினால் மணியும் பொன்னும், பவழமும் பல்கலனும் ஏற்பார்க்கு மாரி போல நல்கி, அளவின்றி நல்குங் கற்பகம்போன்றான் கந்துக்கடன். இணைவேல் இரண்டனைய கண்களையுடைய சுநந்தை அக்கற்பகத்திற் படருங் காமவல்லி போன்றாள். உயர்ந்த மாற்றுப் பைம்பொன்னின் நிறத்தைக் கைக் கொண்டு, தகைசான்ற செல்வத்தை (செள்ளம் முதலிய வற்றைப் பெற்று) முறையே நீந்திக் கடந்து (கல்விக்குரிய பருவம்) நிறைந்து, ஞானச் செல்வமுடையோர் போற்றும் பொலிவினாற் சீவகன் முற்காலத்திலே இடபதேவர் மகனான பரதராச சக்கரவர்த்தி போன்றான்.

### நாமகள் திருமணம்

சீவகனுக்குக் கல்விப்பருவம் வந்தவுடன் பொற்கொடி யாகிய சுநந்தை, (வெற்றிமடந்தையும் புகழ்மடந்தையும் தாங்கள் சீவகனைப் பெறவில்லையேயென்ற வருத்தம் நீங்கு மாறு) காமனுக்குக் கலக்கத்தையுண்டாக்கும் நம்பியை

'மையோலை பிடிக்க'ச் செய்தல் (எழுத்துக் கற்பித்தல்) வேண்டும் என்றாள். அங்ஙனமே குரவரிருவரும் இனிய யாழை வெல்லும் தீஞ்சொல்லையுடைய சீவகனுக்குக் 'குழைமுக ஞானம்' என்னும் நங்கையைத் திருமணம் புரிவிக்கத் தொடங்கினார்கள்.

அரிய பொன்னும் மணியும் முத்தும் - பொற்காசும் குறுணியென்னும் அளவிற் பரப்பிப் பிரப்பரிசியையும் வைக்க, ஆசிரியரும் பிறபெரியோரும் தவிசின்மீதிருந்து, பொற்கண்ணியணிந்த நம்பிக்குக் கலைமங்கையைப் பொன் ஞோலையிலே அவள் பொருந்துமாறு எழுத்தாணியாலே எழுதிச் சேர்த்தினர்.

அம்முறையே திருமகள் தங்கிய மார்பனாஞ் சீவகன், நாமகளின் நலத்தையெல்லாம் விரும்பி முற்றும் நுகர்ந்து, படைக்கலநூலிற் கூறியவாறு அம்பு முதலிய படைக்கலப் பயிற்சிகளையெல்லாம் முற்றுறப் பெற்றுக் காமனும் உருகுமாறு புலத்துறை நூல்களிற் கூறிய பாகலமுங் கரைகண்டு நிலமிசைத் திலகம்போலச் சிறந்தான்.

அவ்வாறு சிறந்த குன்றனைய தோளினையுடைய சீவகனைக் கண்ட நற்குல மகளிரான மின்னிடையார் பலரும் தம் பொன்மேனியிலே பசலை நிறையக் கன்றை மறைத்ததனாற் பிரிந்துநின்ற கறவையைப்போலத் தாய்மையிலே கனிந்து நின்றார். மற்றைப் பொதுமகளிரான கலைநிறைந்த இனிய சொல்லார் பலரும் இரவும் பகலுமான எப்போதினும் கல்லினுந் திண்ணியதோளனான சீவகனைத்தழுவ விழைந்து அரற்றி ஆற்றாராயினர்.

**ஆசிரியன் அறிவுரை**

இங்ஙனம், வானவருண்ணுஞ் சுவைமிக்க அமுதம் வந்து இங்கே திரண்டதுபோலத், தான் சுவைத்தறிந்த எல்லாக் கலையறிவினையும் குறைவின்றிக் கற்பித்த பிறகு, ஆசிரியன் வண்டு நுகர்ந்து முரலும் மலர்மாலையணிந்த சீவககுமரனாகிய ஒளிபொருந்திய வேலேந்திய காளைக்கு உறுதியைத்தரும் ஒன்றைக் கூறுகிறான் :

"நூல்கள் கூறிய நெறிகளின் கூறுபாட்டாலே நன்மை தீமைகளை ஆராய்ந்து, கூறிய பொருளிடத்தே உளம் பதிந்து, தீநெறி பலவும் நீக்கி, ஞாயிறுபோல, அருகன் கூறிய நெறியினைப் பொருந்திநின்ற நற்பண்பிலே சென்றால், நரகர் விலங்கு மக்கள் தேவர் என்ற நானெறியினும் நின்ற நல்லுயிர்கட்கு ஆக்கமாகும்.

அறிவினாற் பெரிய பண்பினர் தீவினைநீங்க நின்ற நன்னெறியை யடைந்து, நிறைந்த இன்பக்கடலிலே திளைப்பர். ஐம்பொறியெனும் பெயரையுடைய ஐந்தலையரவின் வாயிலே களிப்பைச் செய்கின்ற புலன்களிலே அடிப்பட்டு நின்றவர்கள் துன்பக்கடலிலே மூழ்கினவராவர்.

காலன் என்பவன் கொடியனாகி ஐவளிபித்தெனுங் கொலைத்தொழிற் கருவிகளை ஆய்ந்தெடுத்து, வாழ்நாளாகிய வலையை வைத்தான். அவன் வைத்த திறனை நாமும் அறிந்து, நன்னெறியிலே நோற்று, அவன் வலையிற்படாமல், இதுவரை நாம் நுகராத இன்பமுடைய வீட்டுலகத்தை நோக்கி, வழிப்படச் செல்ல அறியோம். எனவே, அளியராகிய நாம் ஒஒ பெரியம்!

பெருந்துன்பமாகிய இடும்பையையெல்லாம் நீக்குதற்குக் காரணமான—பிறப்பினை மாற்றும்—மக்கள் யாக்கையாகிய சிறந்த அமிர்தத்தை அரிதிற் பெற்றோம். எனினும், அதன் பயனைப்பெற அறியோம். ஆராயும் ஐம்பொறிகளையும் ஐம்புலன்களாலே ஆதரவுசெய்து, நமக்குக் குறித்த நாட்கள் கழிந்த பிறகு, நம்முடலை ஈமவெரி கவரும்போது நாம் நினைத்த அறமெல்லாம் இயற்றவியலுமோ?

"கூற்றுவன் கொடிய னாகிக் கொலைத்தொழிற் கருவிசூழ்ந்து
மாற்றரும் வலையை வைத்தான்; வைத்ததை யறிந்து நாமும்
நோற்றவன் வலையை நீக்கி நுகர்ச்சியில் உலகம் நோக்கி
ஆற்றுறப் போதல் தேற்றேம்! அளியம்ஒஒ பெரிய மோகாண்!"

'செழுங்களியாளர்' (*எழுவகைத் தரிசன மோக னீயப் பிரகிருதியாளர்) முன்னே நம் திருந்திய குரலாகிய முரசினால் மயக்கமறச் செப்பினாலும், அதனை யேற்றுக் கொள்ளாமல் முழங்கும் அழல்கொளுந்தும் நரகிலே முழு கும் தீவினையை முன்னே உடையராகி நின்ற உணர்வினா ருக்குப் பண்பினைத்தரும் நோன்புகளை அறிவித்தல் இயலுமோ?

உழவர்களே! பவழவாயாகிய கழனியிலே முத்தினை விதைத்தலால், முளைதோன்றிக் காளையாகிய கொழுங் கதிரையீன்று, பின்னேதான் மூப்பை விளைவிக்கும். அப் பயிரை நோயைச்செய்யும் தீவினைகளாகிய விலங்குகள் மேயும். அவை மேயாத வழியைக் கேட்பீராயின் ஒழுக்க மாகிய வேலியை யிடுவீர்களாக."

இங்ஙனம் ஆசிரியன் கூறிய அறிவுரையைக்கேட்ட கலைநிறைந்த திங்களனைய சீவகன், தான் நரகிலே வீழ்தற் குக் காரணமான தீவழியிலிருந்து விலகி, ஒளிவிடும் †பொன்னெயில் வட்டத்திற் செலுத்தும் நல்வினை உய்த்த லானும், உணர்வு மீண்டும் அந் நல்வினையிலே சென்று பரவியதாலும் பிறவிக்கடலினை நீந்துதற்குத் தெப்பமான (வர்த்தமானரென்னும்) அறிவனைச் சரணாகக்கொண் டான்.

நறுமண மலர்மாலையணிந்த சீவகன் நற்காட்சியென் னும் நிலையிலே, ஞானமாகிய கதவைச் சேர்த்துப், பெருமை மிக்க ஒழுக்கமென்னும் வயிரத்தாழிட்டுத், தீய இழிந்த கதிகளையெல்லாம் அடைந்த பிறகு, எல்லையற்ற பேரின்ப மாகிய—இதுவரை யறியாத—மேலுலகத்தே செல்ல வழி திறந்தான்.

---

* அநந்தானு பந்திக் குரோதம், அநந்தானு பந்திமானம், அநந் தானு பந்திமாயை, அனந்தானு பந்திலோபம், மித்தியாத்துவம் ஸம் மியக் மித்தியாத்துவம், ஸம்மியக் துவப்பிரகிருதி—இவை நரக கதியிற் செலுத்துவன.

† பொன்னெயில் வட்டம் - பொன்மதில் சூழ்ந்த சமவசரணம் என்னும் சினாலயம்.

மற்றும், ஆசிரியன் வீரக்கழலணிந்த சீவகனுக்கு—நல்லறத்துக்குரியவனாகி நால்வகைச் சரணத்தையும் (அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தன்ம சரணம்) அடைந்து, தன் குலத்திற்குரிய அறமெல்லாம் மேற்கொண்ட அரசிளங்குமரனுக்கு—புன்மையான நெறியில் நின்று உலகம் வீடுபேறடையாமல் தவறியதையும் நல்லோர் நடத்தும் அறத்தையும், பிறவற்றையும் மயக்கமறக் கூறிமுடித்தான்.

**சீவகன் பிறப்பை ஆசிரியன் உணர்த்துதல்**

சுடர்விட்டு விளங்கும் கூரிய வேலேந்திய இளைஞரின் குழுவினின்றும் விலகித், திருமகள் தழுவும் மலர்மாலையணிந்த மார்பனாகிய சீவகனைத் தனியே அழைத்துக்கொண்டு, விரிமலர்க் கண்ணிகளால் விரும்புமாறு வேய்ந்ததைப்போன்ற மலர்ப்பொழிலை யடைந்தான். பிறகு, பகையரசர் ஒற்றாகவிடும் பூவை கிளிபோன்ற இனமும் அப்பொழிலில் இல்லாதபடியை நன்கு ஆராய்ந்து, ஓர் அசோகின் நீழலில் இடப்பட்டிருந்த தவிசின்மேலிருந்து, சீவகன் பிறப்பை அவனுக்கு விளக்கத் துணிந்து, இக்கதையைக் கேட்பாயாக என்று கூறத் தொடங்கினான்:

"உலகாளும் மன்னன் சச்சந்தன் என்பான்; அவனுக்கு மனைவி விசயையென்னும் பைந்தொடியாவாள். சச்சந்தன் தனக்கு வருங்கேட்டை முன்னரே உணர்ந்து, விசயையை மயிற்பொறியிலே வெளிப்படுத்திவிட்டு, மயக்கங்கொண்ட மந்திரியாலே கொல்லப்பட்டான்.

"அரசி வருத்தத்துடன் சென்று, பிறராணுகற்கரிய சுடுகாட்டை யடைந்து, வலம்புரிச் சங்கொன்று உலகையும் விற்கக்கூடிய பெரிய முத்தையீன்றாற்போலத் திருமகனைப் பெற்றாள். அவனை அச் சுடுகாட்டுத் தெய்வம் ஒரு தவிசின் மேல் வைத்தது. அரசி, 'யான் மேற்செய்யும் அறம் நின்னைக் காப்பதாக,' என்று நினைத்தாள். குற்றமற்ற சீர்த்தியையுடைய உத்தரட்டாதி நாளிற் பிறந்த, கடலாற் சூழ்ந்த நிலமுடைய நம்பி, திங்கட்கொழுந்து வானத்தி

னின்றும் வழுக்கி மீன்குழுவுடன் சுடுகாட்டிற் கிடந்தது போல, அச்சுடுகாட்டிலுள்ள மணிகளூந் தானும் வேறு பட்டுத் தெரியக் கிடந்தான்.

"அருந்தவ முனியொருவன் முன்னரே கூறியிருந்த வாறு, மாலையணிந்த வேலேந்திய வணிகன் கந்துக்கடன் சென்று, திருமகனுடைய மெய்யொளியால் அறிந்து எடுக்க, அந்நம்பி தும்மினான்; தெய்வம் வாழ்த்தியது. நாயகன் நன்னிமித்தம் பெற்றேன் என்று எடுத்துவந்து, 'அரும்பொன் போன்றவளே! கொள்க,' என்று மனைவி யிடம் கொடுத்தான். அவள் பொங்குங் கடலெனப் பெரு மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டாள்."

**சீவகன் கலக்கமும் ஆசிரியன் ஆதரவும்**

இங்ஙனம் திருமால் கன்னன் பிறப்பை அவனுக்குத் தெளிவித்ததுபோல ஆசிரியன் சீவகனுக்கு அவன் பிறப் பைக் கதைமுகத்தால் விளக்கினான். ஐயுற்ற சீவகன், 'அவன் யாவன்!' என்று படபடப்புடன் வினவ, 'நீயே,' என்று ஆசிரியன் மொழிந்தான். அப்போது தானணிந்த மலர்த்தாரும் பூணாரமும் குழையும் சோர்ந்துவிழ மனங் கலங்கி மூர்ச்சித்து விழுந்தான் சீவகன்.

கற்பகங் கலங்கிவீழ்ந்ததேபோலக் காளை வீழ்ந்ததைக் கண்ட, சொலல்வல்ல புலவனும் ஆசிரியன் விரைந்தெடுத் துத் தழுவிச் சந்தனம் முதலியவற்றால் ஆன குழம்பினாலே தெளிவித்தான். கல்லனைய உறுதிவாய்ந்த தோளான் மூர்ச்சை தெளிந்து கவலைக்கடலில் வீழ்ந்தான். அவனை, 'நம்பியே! நீ இந்நிலையை அடைந்ததெல்லாம் எம்மனோர் செய்த பாவம். நின் பகைவன் ஆக்கமுற்றிருக்கின்றான். ஆதலால், அழகிய கலன் அணிந்த மகளிர்போலப் புலம்பற்க!' என்று கண்ணீர் துடைத்து, மெய்யினைத் தழுவிக் கலக்கத்தைத் தெளிவித்தான்.

ஆசிரியன் தெளிவிப்பத் தெளிந்த சீவகன் மலையிடிபட முழங்குஞ் சிங்கக்குட்டிபோல முழங்கிப், பெருநீர்ப்பரப்

பான அலைகடல்போற் சீறி, மாற்றான் உயிர்பருக விழைந்து அம்பும் வில்லும் ஏந்திக் காலனைப்போற் கனன்று நின்றான். அவனை அமைதிசெய்து, 'நம்பியே! யான் ஒரு விழுப் பொருள் வேண்டுவேன்,' என்று ஆசிரியன் வினவினான். 'ஆண்டகை யாசிரியரே! நீவிர் கருதியது கொள்வீராக! யாது வேண்டும்?' என, 'மாற்றான் குலத்தளவில் ஓரியாண்டு வரை அழலாதிருத்தலை விரும்புகிறேன்,' என்றார். சீவக னும் நேர்வரிய அதனை அரிதின் ஏற்றுக்கொண்டான்.

ஆசிரியன் சீவகனுக்குற்ற வெஞ்சினத்தை இவ்வாறு நீக்கி, அவனுக்கு வெய்யவினை வெகுண்டடையாத சிறந்த செல்வம் ஆகிய அமிர்தம் இரும்புண்ட நீர்போல நின்ற நிலைமையை நோக்கி, 'ஒருவனுக்கு வந்த துன்பம் இது,' என்று தன் வரலாற்றைக் கூறத் தொடங்கினான்.

**உலோகபாலன் வரலாறு**

"முகிலுறங்கும் வெள்ளிமலையில் வாரணவாசி யரசன், ஊன் இலங்கும் கதிரவனேபோன்று பகையிருளை வாட்டும் வெள்ளிய வேலணிந்த உலோகபாலன் என்பவன், தன் மகனிடம் அரசை வழங்கி, அன்னம் பாலைப் பிரித்துண்ணு வதுபோல நல்லவற்றை ஆராய்ந்து, தவக்கோலங் கொண் டான். கொடியசினங் குறைந்தொழியச் சிறந்த தவத்தைத் தொடங்கி நோற்கும் பொய்யில்லா நெறியையுடைய அவ னுக்கு முன்னைய வினைவந்து மூண்டதாக, யானைத்தீ யென் னுங் கொடிய நோயாலே வருந்தி மெலிந்து இப்பெருநகரிற் பெரிய குன்றமனைய இம் மாடவீட்டினை யடைந்தான்.

இங்ஙனம் ஆசிரியன் கூறிவரும்போது இடைமறித்து, 'ஐயனே! அங்ஙனம் வந்தவன் யார்? அவன் வாழ்வானாக!' என்று சீவகன் மகிழ்வுடன் வினவ, 'மணங்கமழ் மலர் மார்பனே! அவன் யானே,' என்று ஆசிரியன் கூறினான். சீவகன் விரும்பிக்கேட்டு, 'ஆழ்கடல் விளையும் அமிர்த மன்ன இக்கட்டுரையைத் தொடர்ந்து கூறுக,' என வேண்டி னான். ஆசிரியன் கூறுகிறான்:

"சேதாவான்து மலரைத்தின்று மகிழ்ந்து பொழிந்த இனிய பாலில் இட்ட அரிசி வேகுமாறு சமைத்த பால்டிசிலைக் கந்துக்கடன் தன் தோழரோடு உண்பதற்குப் பசிய பொற்கலம் புரப்பிய இடத்தில் இருக்கையில் இனிதமர்ந்தான். இருபுறமும் பொற்குழை ஒளிவிட மகளிர் ஏந்திய இனிய அவ்வுணவை உண்ணத்தொடங்கிய அளவிலே, இடைகழியில் வந்து நின்ற என்னைப் பார்த்து, என்னையும் அருகிருத்திக் கதிரவன் ஒளிகொண்ட பொற்கலத்திலே உணவிட்டான்.

'போதுமென்னுமளவில் நறுநெய்யும் சருக்கரைக் குடங்களையும் சேர்த்துப் பெய்க! பெய்க!' என்று கந்துக்கடன் கூறினன். யானும் பெருங்கடலிலே வெள்ளிமலையைப் பெய்து தூர்ப்பதைப்போல, விலாப்பக்கம் பெரிதும் வீங்குமாறு விழுங்கி, அன்று கந்துக்கடன் அருளால் அந்தணர்போல உணவை விரும்பியுண்டேன்.

இன்பக்கடலில் உலவும் சுறுமீனைக் கொடியாகக் கொண்ட உயர்ந்த காமவேளனைய காளையே! நின்வலைப் பட்டு இம்மனை புகுந்த யான், வண்டுமுரலும் மாலையணிந்த கந்துக்கடனும் சுநந்தையும் விரும்பி யெதிர்கொண்டு இங்ஙனம் ஓம்பியதனால், யானைத்தீயினின்றும் நீங்கியிருந்தேன்.

திண்ணிய எஃகினைவென்ற தோளனே! நிலங் கொளாத வளமிகு செம்பொன் நிறைந்த நின்தந்தையில்லத்தை, நலமிகும் அசோகின் நீழலிலே எழுந்தருளிய அருகப்பெருமான் அடியவர்களெல்லாம் தம்மில்லமாகக் கொள்வதுபற்றி யான் இவ்வில்லத்திலே நுழைந்தேன். இங்கே, நிறைகலனணிந்த அழகிய மங்கையரிடத்திலே சிறுவனாகிய நின்னைக் கண்டேன். கண்ட அளவிலே மருந்தைக்கண்ட நாக நஞ்சுபோலக் கெட்டது. யான் அஞ்சித் தெய்வமோ என்று ஆராயப் புகுந்தபோது, அமிழ்து உலாவி நிமிர்ந்ததுபோல, முரசம் நாணும்மொழி அம்மகளிரிடம் முழங்க அம்மொழி வாயிலாக நின்னியலுணர்ந்தேன்.

இருகோட் டிளந்திங்கள்போல முத்துமாலை சூழ்ந்து மணமலருந் தாரணிந்த தோளனே! அங்ஙனம் கேட்ட அளப்பரிய மொழியும், ஒளிவிடும் அழகும் சிங்கம்போன்ற நின்னை எனக்கு அறிமுகப்படுத்தின.''

புலியனைய, வில்லுழவனை சீவகன் ஆசிரியன் வரலாற்றை இங்ஙனம் உணர்ந்தவுடன், "முயற்சியாற் பிறந்த தவங்கள் தாயாகவும், தாங்கள் தந்தையாகவும் என்னைப் படைத்தீர்கள்,'' என்று நன்றியறிதலுடன் வணங்கினன். அப்போது ஆசிரியன், 'சிறந்த களிறுபோன்றவனே! யான் மெய்ந்நெறி நிற்கச் செல்வேன்,' என்றான்.

கண்ணனைப்போன்ற காளை, 'அறிஞர் இல்லறத்தினின்றும் நீங்கிக் குற்றமறத் தவஞ்செய்வேன் என்றால் உலகினர் வேறு கூறார். ஆதலால், துறவறத்திற்குச் செல்க,' என்று தொழுது நின்றான்.

ஒழுக்கத்திற்கன்றி வேறொன்றுக்கும் அஞ்சாத வெஞ்சினச் சிங்கவேறுபோன்ற சீவகன், தன் பகைவரை வெல்வதற்குரிய சூழ்ச்சிகளை உளத்தே பதியுமாறு கொள்ளத் தெளிவித்த ஆசிரியன், சுநந்தைக்கும் கந்துக்கடனுக்கும் மனங்கொளத் தேறுதல் கூறினன்.

சுநந்தை, அழலுறு வெண்ணெய்போல உளங்குழைந்துருகி, ஆற்றாமை கொண்டு, சொல் குழற, 'ஐயனே! நம்பியைத் தனியேவிட்டுச் செல்லுதியோ?' என்று வேண்டவும் நில்லாமற் பழவினை நீங்கத் தவஞ்செய்ய வேண்டி உலகபாலன் சென்றான். துறவுநிலையில் அச்சணந்தியென்னும் பெயரையுடைய அச்சான்றோன் அவர் வின் வேரைக் களைந்து, அருகன் மலரடிநீழலிலே விளங்கியிருக்குமாறு நோற்ற பிறகு, அக்கொள்கையால் வானுலகு வழுத்த, மாரி மொக்குளின் மாய்ந்து பிறவி நீங்கினன்.

---

## ரு. கோவிந்தை திருமணம்

**சீவகன் சிறப்பு**

இனி, நம்பியாகிய சீவகன் இவ்வுலகில் நாகருலகமனைய இராசமாபுரத்தே பசும்பொன்னலாம் முகபடாமணிந்த யானையும், நீள்கொடி யணிந்த செம்பொற்றேரும் குதிரையும் ஊர்ந்து, வேனிலானாகிய காமனேபோலக் கண்டார் விரும்பவும் மகளிர்வேட்கை கொள்வும் உலவினன். மற்றும், கலையின் பரப்புக்கும், காட்சிக்கினிமை பயத்தற்கும், படைக்கலப் பயிற்சிக்கும், யாழிசைத்துப் பாடும் வீணைச் செல்வத்திற்கும் இவ்வுலகில் மலையெனப் பரந்த மார்பனை சீவகனல்லது வேறொருவரில்லரென யாவரும் உரைக்க ஒப்பற்றவனானன்.

**ஆநிரையை வேடர் கைக்கொளல்**

இங்ஙனமிருக்க இளவேனில் வந்தது. காடெங்கும் வண்டுகள் முரலும்படி முல்லைகள் மலர்ந்தன. நெருங்கிய ஆநிரைகள் வயிறுநிறையப் புல்லை மேய்ந்து, கன்றை நினைந்து பால்சொரியும் ஆரவாரம் மிக்கது. அக்காலத்தே சிங்கவேறுகள் போன்ற வேடர்கள் தங்கள் மலைமீது கூடினார்கள்.

அங்ஙனங் கூடியவர்கள், 'இவ்விளவேனிலிலே நிலைபெற்ற மிகுதியான ஆநிரைகள் வந்து சேரும். அவற்றை நாம் கைக்கொள்ள வேண்டும்,' என்று கூறினர். அப்பொழுதே பறவையொன்று கூவிய குரலின் குறிப்பை அறிந்து நிமித்தம் வல்லானொருவன் கூறினதாவது :

"நாம் ஆநிரையைக் கைப்பற்றுவோம். அந்நிலையே அரசன்படை வந்து பொருது, குடையும் பிச்சமும் ஒழிய உடைந்துபோம். பின்னர், ஒற்றைத்தேரில் வரும் ஒருவனால் சுடுதலுக்குடையும் தேன்வண்டுகள்போல நாம் தோற்றோடுவோம்."

இம்மொழிகேட்ட வேடுவர், 'ஏழை வேடர்களே தேர் ஒன்று. அவ்வொருவன் கூற்றுவனேயெனினும் நம்மை யென்செயவல்லான்? எனவே, அச்சமின்றி நிரை கொள்வோம்,' என்று முடிவுசெய்தனர்.

வண்டுகள் மொய்க்கும் மதுவை யருந்தினர். தொண்டகம் துடி முதலியவற்றை முழக்கினர். மலைத்தெய்வமாகிய முருகனை வழிபட்டனர். 'வெல்க' என வேண்டினர். ஆநிரை நிற்குமிடம் விரைந்து சென்று மொய்த்தனர்.

இனி, இடைச்சியர் நலம் நுகர்தற்கு ஆதீண்டு குற்றியனைய திரண்ட தோளையுடைய நந்தகோபனுடைய ஆநிரையிலே இருக்கும் நிமித்திகன், 'காரியென்னும் பறவை நம் நிரையிற் புகுந்தழித்ததனால் நீங்கள் இகழாமற் காத்தல் வேண்டும்,' என்றான். அம்மொழிகேட்ட வெள்ளியாலான வளையலணிந்த காதலிகளைப் பிரியாத புதுமணவாளப் பிள்ளைகளும் ஆநிரை காத்தற்குப் படைக்கலங்களுடன் சென்றனர்.

வானத்திலே விளங்கும் மீன்களேபோலக் காடெங்குப் பரவிய ஆநிரை மேய்ந்துகொண்டிருந்தது. வெந்தொழில் வேடர் ஆரவாரித்துப் பரவிப்பெய்யும் மழைபோல அம்புகளைப் பொழிந்தனர். ஆயர் மத்தாலடிபட்ட தயிரேபோல உடைந்தோடினர்.

வேய்ங்குழலும் கோடரியுஞ் சிதறக் காட்டைவிட்டோடிச்சென்று, கன்றுகள் கயிற்றை அறுத்துக்கொண்டு தடைமரங்களில் மோதி யுலாவும் இடைச்சேரியை அடைந்து, 'மத்தைத்தழுவிய கயிற்றைப்போல ஒரு தலை நெகிழப் பிறிதொருதலை நெகிழாமல் இருதலையுஞ் சூழ்ந்த வேடர்கள் நம் ஆநிரையைக்கொண்டு சென்றனர்,' என வாய்விட்டுக் கூவினர். மழலைத் தீஞ்சொலார் ஆகிய மகளிர் உடையினுந் தோளினுந் தயிர்ப்புள்ளிகள் நிறைய வந்து கூடினர்.

வேடர் வலைப்பட்ட மான்போன்றும் மயில்போன்றும் மார்பிலணிந்த முத்துமாலையுடன் கூந்தலிலணிந்த மலர்

மாலே பின்னுமாறு கூந்தலவிழ்ந்து புரள இடைச்சியர் வயிற்றிலடித்துக்கொண்டு கதறினர். கன்றுகளைத் தழுவிக் கொண்டு, 'எம் அன்னையரே! நம் அன்னையரை வேட்டுவர் கொண்டு சென்றனர். இனி, நீர் எங்ஙனம் வாழ்வீர்?' என்று புலம்பினர். இவ்வாறாகப் பாறைபோல் தோய்ந்த தயிரும் பாலும் நெய்யும் சிதறிக்கலந்து ஆறுண்டாகுமாறு இடைச்சேரி கலங்கி யரற்றியது.

இனி, ஆயர்கள் ஓடிவந்த பிறகு, ஆயர்படை, வேடர் படையுடன் பொருது தோற்றது. கலங்கிய அப்படை தேன்ஒழுகும் மலர்மாலே சிந்த விரைந்து சென்று முல்லை நிலங் கடந்து, மருதநிலத்தை நீந்திச்சென்று, அகழியும் மதிலுஞ்சூழ்ந்த பெருநகர் கேட்குமாறு முறையிட்டனர்.

**ஆயர் முறையீடு—அரசன் ஆணை**

"வில்லேந்திய வேடுவர் குழுமி வந்து, கூரிய கொம்பு களையும் இமிலையுமுடைய ஏறுசூழ்ந்த, மணியொலிக்கும் நிரையைக் கவர்ந்து, அருவி வீழும் உச்சியையுடைய மலை நெறியை அடைந்துவிட்டனர்," என்று நெய்படிந்த குடுமி யிலே மலரையுடைய ஆயர் வளநகரெங்கும் பரப்பினர்.

இனி, அரண்மனையிலே குற்றமற்ற உயர்ந்த மணிக் கவரியை ஏந்திக் கன்னியர் இரட்ட, மகரக்குழை ஒளிவீச, அழகிய செங்கழுநீர் மலரைக் கையிலே பிடித்துக் கட்டியங் காரன் அரியணைமீது அடலேறுபோல அமர்ந்திருந்தான். அவனை, வாளும் பிரம்பும் ஏந்திய கையுடன் மிலேச்சனாகிய வாயில் காவலன் வந்து வணங்கி, 'நகரெங்கும் ஓர் அலருண் டாகியுள்ளது,' என்றான். 'அது யாது?' என்ற அரசனை நோக்கித், 'திருவுளங் கொள்ளவேண்டும். ஆநிரையை வேடர் கொண்டனர்,' என்றான்.

அவ்வாறு கூறிய, சிவந்த கண்களையும் தோல் சுருங் கிய சிவந்த முகத்தையும் உடைய சட்டையணிந்த மிலேச் சனைத் தீயெழ நோக்கிக் கையில் ஏந்திய செங்கழுநீர் மலரைப் பிசைந்தவாறு கூற்றனைய கட்டியங்காரன் சீறி

ளுன்! நேர்ந்த துன்பத்தைக்கூறிய காவலனைச் சினந்த அரசன் வீரத்தை யென்சொல்வது?

பிறகு, சீற்றம் சிறிது தணிந்த மன்னன், கோவலரை யழைத்து, அவர் வாய்மொழி யுணர்ந்து, வீரம்மிக்கதாகிய கடலைப்போன்ற படையை விளித்துக், 'காற்றைப்போலக் கடிதுசென்று நிரைமீட்டு வருக!' என்று ஆண்சிங்கம் போல முழங்கினன்.

## அரசன்படை பொருது தோற்றல்

உடனே, கார்கால முகில்போலக் கவுள்மறைந்த மத முடைய களிறும், போர்த்தொழிலறிந்த குதிரைபூட்டிய தேரும்; அழகாகக் கத்தரிக்கப்பெற்ற பிடரிமயிரையுடைய குதிரையும், காலாளும் என நால்வகைப் படையும், போர் முரசொலிக்கவும் சங்கு முழங்கவும் வானிலே முகில் உலா வருதல்போல நிலம் நெளியப் பரவிச்சென்று வேடர் படையை வளைந்தன. காற்று உள்ளே புகுந்து கலக்குத லாலே கடல் பொங்கியதுபோலக் கிளர்ந்து அரசனுடைய வேல்நெருங்கிய படைவீரரும் வெஞ்சின வேடரும் வெள் ளிய சங்கு அலறவும், இரலையென்னும் ஊதுகொம்பும் துடியும் வாய்விட்டாரவாரிக்கவும் ஒருபக்கத்திலே வந்து வளைந்து இரவும் பகலும் பொருவதேபோற் பொருதனர்.

அப்போது, வேடருடைய வில் பழுத்துமிழ்ந்த கொடிய முனையையுடைய அம்புகள் அரசன் படைஞரின் மல்லிற்சிறந்த மார்பிலே அழுந்தின. அதனால், அரச னுடைய கொல்வினையிலே பழகிய ஒளிவிடும் வேலேந்திய வீரர்கள் சொல்வல்ல புலவர்க்கும் கூறற்கியலாத வீரத் துடன் வேடர் வில்லை முறித்தனர். வேடர் சிறிதும் அஞ்சாமற்சீறி வேறு வில்லை வளைத்துப் புலியினம்போலே மேற்சென்று அரசன்படை முறியும்படி அம்பினாலே அடித்தனர். அவ்வளவிலே குதிரைகள் இறந்தன. திண் ணிய தேர்கள் கவிழ்ந்தன. பனிவரைபோலப் பெருங் களிறுகள் வீழ்ந்தன. கண்ட வேல்வீரர்கள், 'வேடரை வெளியிலே வரச்செய்து நாம் வென்றிகொள்வோம்,' என்

றெண்ணிச் 'இறிது பின்வாங்குவீர்களாக,' என்று தம் படைக்குக்கூற, இதுவரை படாதிருந்த களிறும் மாவும் மயிற்குஞ்சி, பிச்சம், கொடி ஆகியவற்றை எறிந்துவிட்டுக் கடலுடைந்ததுபோல், தோற்றுப் பின்வாங்கியோடின.

அரசன்படை யோடுவதைக் கண்ட ஆயர்கள், பல்லி னாற் கிழித்த நாரிலே குளிர்ந்த மலர்களைத் தொடுத்து பிணைந்த கண்ணி சிந்தக் கால்விசை முறுக ஓடி அரசனிடம், "நம் படை உடைந்தது. பூங்கொம்பனைய நல்லாரின் கொழுங் கயற்கண்போலும் அம்பைக்கொண்டு அரசர் மீண்டார். ஆநிரையைக்கொண்டு மறவர் போனார். செம்புகொண் டன்ன மதில்சூழ்ந்த திருநகர்ச் செல்வனே!" என்றனர்.

**நந்தகோபன் அறிக்கை**

இங்ஙனம் ஆயர் கூறியதைக்கேட்ட கட்டியங்காரன் கவலைக்கடலுள் ஆழ்ந்து, செய்வதறியாமல் இருந்தான். இனி அரசனை எதிர்பார்க்க வியலாதென்றுணர்ந்த நந்த கோபன், 'பெரிய ஆநிரையை மீட்டுவந்தவர் வாளனைய கண்ணும் பொன்னணி யொளிவிடும் மேனியும் பூங்கொடி யனைய அழகும்கொண்ட என் மகளைக் கொள்க. யான் மணமுவந்து தருவேன்,' என்று நகரின் மறுகுதோறும் கடிமுரசறைவித்தான்.

முரசொலிகேட்ட மைந்தர் பலரும், 'மூங்கிற்குதை பிணையுடைய வில் வழங்கிய கொடிய முனையையுடைய அம்புகள் மூழ்கியதனால் அரசன்படை உதிர்ந்தது. காலனை வெல்லுங் கருந்தடங் கண்ணியேயன்றி, வான்வழியே செல்லும் பெறற்கரிய தெய்வமங்கையே யாகுக! வேட ரொடு பொருவார் இலர்,' என்று தொழுது விலகினர்.

**சீவகன் கன்னிப் போர்**

அக்காலையிற், சீவகன் முகிலிடை யொளிரும் மின் னனைய நங்கையர் மேற்செல்லும் காமுகர் உள்ளம்போல ஓடும்படி தேரைச்செலுத்திப் பிறகு, குதிரைகளை வட்

டத்தே செல்லுமாறு பயிற்சி கொடுத்துக்கொண்டிருந் தான். அவன் ஏவியவாறு சென்று வந்த ஆளொருவன் ஊரடைந்த துயரை உணர்த்தினன்.

கேட்ட சீவகன் சீற்றங்கொண்டு, * 'நல்லொழுக்கம் பசு, துறவிகள், பெண்டிர், குழந்தைகள், அந்தணர் என்பாரை ஓம்பேன் எனின், தன் வீரமங்கை தன்னைவிட்டு மாற்றானிடத்தே செல்லக் கண்டும் வீரமின்றிப் பேடியைப் போலப் பொறுத்துக்கொண்டும் இனிய பாற்சோற்றை உண்ணவும் விரும்புகின்ற இழிதொழிலையுடைய கட்டியங் காரன் ஆவேன்,' என்று தனக்குள் வஞ்சினம் புகன்றான்.

பிறகு, புரவியை அணிசெய்து நுகத்திற்பூட்டித் தேரை அணிசெய்து, தானும் போர்க்கோலங்கொண்டு, வில்லையும் அம்பையும் தெரிந்தெடுத்து முகிலிடை மின் போலத் தேரைச் செலுத்தினன். அப்போது, கனைக்குங் குதிரைகளின் குளம்பாலெழுந்த புழுதி ஞாயிற்றை மறைத் துப் பகலை யிரவாக்கியது.

அப்போது, வேடர் படையிலிருந்த நிமித்திகன், 'மகளிரின் நெய்பூசிய வாளனைய கண்கள் காமுகரிடத்துத் தப்பாமற் பதிவதுபோலப் பகைவரைத் தப்பாது தாக்கும் அம்புத்தொழில்வல்ல காளை திண்தேரில் வருகின்றான். அவனுடன் போர்செய்ய இது காலமன்று. நாம் சென்று விடுவோம்,'' என்று கூறினன். அதுகேட்ட வேடர் குழு, 'ஆழ்ந்த நீர்நிலையிலே பெரிய முதலையை வெல்லத்தக்க வலியதொன்று உண்டாயின், வேடராகிய நமக்கும் காட்டில் நம்மினும் வலியவர் இருப்பர்,' என்று கூறி, வேட்கை மிகும் பசியுடன் இரையைக் கவ்விய நாகம் அதனை விடாத வாறுபோலத் தம்மிடம் கிடைத்த நிரையைக் கைவிட்டுச் செல்ல இசையாராயினர்.

---

* "நன்டால் மனையாள் அயலான் றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின் றகைப் பேடி போலாம்
நன்பாற் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பேன் எனின் யானவன் ஆக வென்றான்."

பிறகு, 'கடல்போன்ற அரசன் படை கெடும்படி வென்ற வேடரென்னும் கூற்றுவனிடம் அகப்படாமல் ஓடிப்போமின்,' என்று வீரமொழி விளம்பித் துத்தரி யென்னுங் கொம்பையூதிக் கொக்கரித்துச் சீழ்க்கை யெழுப்பினர் வேடர். அதற்கு எதிராகச் சீவகனுடைய சங்கும் பறையுங் கொம்பும் காட்டிலே முழங்கின. இரண்டு படைகளின் ஆரவாரமும் முகிலையுங் கடலையும் ஒப்ப எதிர்ந்தன.

இங்ஙனம் எதிர்ந்தவுடனே, வீரக்கழலணிந்த நம்பி யின் வலிய தேர், கைவிசைகொண்டு முறுக்கி வீசுங் கொள்ளி வட்டத்தையுங் காற்றுடியையும்போலத் திசைக ளெங்கும் சுழன்று வேடர் குழுவை வளைத்தது. அது கண்டு சீவகன் படைவீரர் ஆரவாரித்தனர். வேடரும் ஆரவாரித்தனர். அன்றுதான் சீவகன் மொய்ம்மருக்குநாள் கொண்டு முதல் விளையாட்டினை ஆடினன்.

அப்போது ஆழியேந்திய திருமாலின் ஊர்தியாகிய கருடன் சிறகொலியினால் நாகக்கூட்டம் மயங்கிப் பட மொடுங்கிச் சோர்ந்தாற்போல, வள்ளலாகிய சீவகனுடைய தேர்முழக்காலும் சூழ்ந்த புழுதி மயக்கினாலும் வேடர் மனக்கிளர்ச்சி யொடுங்கி, வலைப்பட்ட கோழிபோல நடுங் கித் தம் உள்ளத்தில் முன்னரே அறம் நுழையாமற் கை விட்டதுபோல இப்போது மறத்தையுங் கைவிட்டனர்.

அவர்கள், "இந்நிமித்திகன் ஆந்தை ஒரு தேரே வரு மென்று கூறியதாக நமக்குப் பொய் கூறினன். எதிரியின் படையோ வெள்ளமாக நம்மை வளைந்தது. ஆகையால், இனி நிரைகோடலியலாது. நாம் போர்செய்துகொண்டே ஒருவருள்ளம்போலப் பின்வாங்கிச் செல்வதே செய்யத் தக்கது," என்று கூறியவாறு சென்று சீவகன்மேல் அம்பு மழை பெய்தனர்.

பெரிய மலையிலிருந்து தொடர்ச்சியாகப் பெய்யும் கருநிற முகிலைக் காற்றுச் சீறியெழுந்து வீசித் தாக்கிச் சிதறவடித்ததுபோலத் தன்மேல் ஒழுங்காக வளைந்

தெதிர்ந்த வேடர்விட்ட கொடிய அம்புகளைத் தன் வில்லி லிருந்து உமிழப்படும் அளவற்ற கணைகளாற் சீவகன் விலக்கினான். இவன் வேடர்கள்மேற் போர்தொடுத்த வுடனே ஆனிரைகள் பெயர்ந்தன. ஆயர் ஆரவாரித்தனர். பிறகு, வேடர்கள் ஓடுமாறு சீவகனின் தோள்களில் ஒன்று முடங்கிற்று; ஒன்று நிமிர்ந்தது. அவ்வளவே வேடர்கள் மேல் அம்புமாரி தாரை தாரையாய்ப் பெய்யத் தொடங் கியது.

ஆனிரை கொள்ளவந்த வேடர் ஐம்பத்தாறுயிரவர். ஒவ்வொருவர் மெய்க்கும் நூறு நூறாகக் கூரிய கணைகளைத் தூவினான் சீவகன். அதனால், அவர்களுடைய கையிலிருந்த வில்லும் அம்பும் அற்றன. ஒரே நொடியில் வேடர்களும் மைதீட்டிய கண்களையுடைய பரத்தையரின் மனம்போல உறுதிகெட்டுக் காட்டில் மறைந்தனர்.

இராகுவென்னும் பாம்பாற் பற்றப்பட்ட திங்களைத் திருமால் விடுவித்ததுபோல வாள்தழும்பும் கூரிய கொடிய அம்பின் வடுவும் படாமலே, சீவகன் தன் தோளில் ஏந்திய வில்லின் ஒலியினாலேயே ஆனிரையை மீட்டுக்கொண்டு முழு தும் வளர்ந்த ஒளிவிடும் வெண்மதிபோலச் சீவகன் சென் றான். மற்றும், வேடர்கள் இவன் பொருதற்கேற்ற வீர ரன்மையின் வடுவொன்றும் படாமலும் உயிர்க்கொலையின்றி யும் நிரையை மீட்டான்.

'மலர்மாலையணிந்த சீவகன் தன் தோழரோடு சென்று, ஆட்குறைவின்றி வேடராற் கொள்ளப்பட்ட நந்த கோனுடைய ஆநிரையை மீட்டுவந்தான்,' என்று காவலர் கூறக்கேட்டு, வாளால் உண்டாகிய புண்ணிற் கூரிய வேலை யெறிந்து, அதுவும் முறிவுற்றாற்போலக் கேட்ட வாழ்நாள் முடிந்த கட்டியங்காரன் (மகிழாமல்) வெகுண்டான். ஆனால், நகரமோ மகிழ்ச்சியால் ஆரவாரித்தது.

**சீவகனை நகரம் வரவேற்றல்**

வானளாவுங் கொடிகள் நிரைத்த மாடங்களிலே நறும் புகை கமழச் சுண்ணப்பொடி கலந்த மாலைகளை வரிசை

யாகத் தொங்கவிட்டு, எங்கும் நறுநீர் தெளித்து அணி செய்த மகளிர் தாமும் அணிகலன் பூண்டு வந்து, நாகக் கொடியனுை துரியோதனன்படை கெடவென்ற அருச்சுன னைப்போன்ற சீவகக்காளையை, "வாழ்க! வாழ்க!" என்று வாழ்த்தினர்.

இனிய அமுதமனைய செவ்வாயையும் இளங்கிளியனைய மழலைத் தீஞ்சொற்களையுமுடைய சில பெண்கள், மின் னனைய இடை வருந்த விடலையைக்காண ஓடிவந்து அன்ன மும் மயிலும்போலத் தெருவெலாம் அடைத்து நின்றனர். அங்ஙனம் மேனிலையிலே நின்ற மகளிர் விண்ணவர் மகளிர் போலவும், தம் மெய்யிலே பாகமே மறைய நின்ற சில தடங்கண் நல்லார் நாகர் மகளிர்போலவுங் காணப்பெற்றனர்.

வாளரத்தினலே தீட்டப்பெற்ற கூரிய வேல் இரண்டு தம்மில் மலைந்தனபோல, ஆடவர் வரவையொழித்த அழகிய மலர்க்கண்களெல்லாம் கதிர்செலும் நெறியை நோக்கும் நிரையிதழ்களையுடைய நெருஞ்சி மலர்போல், சீவகன் தேர் செல்லும் தெருவிலே கலந்து குழுமின. மாடமெங்கும் வடகமென்னும் மேற்போர்வையும் துகிலும் தோடும் மாலை யும் மணியும் முத்தும் கடகமும் குழையும் பூணுமாகிய இவற்றின் கதிரொளி கலந்து பெருநகரின் தெருவுஞ் சந்து மாகிய எங்கும் மின்னலை நிரைத்தாற்போல மகளிரைப் பெற்றன.

மயிலனைய மங்கையர் மங்கல வாழ்த்துக்கூறி 'நம்பியே! போதுக!' என்பார்; 'நிலமகளை அடைக!' என்பார்; நறு மணப் பொடியையும் சந்தனத்தையும் வாரிச் சீவகன்மேற் சொரிவார்; மலர்மாலையை எறிவார். 'கொடையுளும் ஒருவன் கொடுப்பான்; கூற்றினுங் கொடிய வாட்போர்ப் படையுளும் ஒருவன் கொடுப்பான்,' என்று 'நுண்ணூ லுணர்ந்தார் கூறியவற்றையெல்லாம் இப்போது நம்பி யொருவனிடமே கண்டோம்,' என்று கூறிக் கைதொழுது நிற்பார். 'சீவகனைப்பெற்ற நற்றாய் செய்தவம் மிகவுடை யள்,' என்பார். 'அவள் எம்மலையிலே தவஞ்செய்தாளோ, யாமும் அங்கே சென்று தவஞ்செய்வோம்,' என்பார்.

அம்மங்கையரிற் சில பொதுமகளிர் சீவகனை மனம் விரும்பிக் கூர்ந்துநோக்கித் தமக்குண்டான காமநோயைத் தோழியரிடம் கூறுவர். சிலர், 'செம்மலே! நீ நாளைக் கனவிலே வந்து நின்மார்பினைக் காட்டியருள்க!' என்பார். சிலர் ஒருவரும் வினவாதிருக்கும்போதும் தாமே மயங்கி வேண்டுங்காதல்மொழிகளைக் கூறிநிற்பர். சிலர், 'இவ் வெற்றிவேற் காளை விண்ணகத்தவனோ? மண்ணகத்திலே எவரும் ஒவ்வாத இம்மழகளிற்றை மங்கையரின் நலம் பருகவேண்டித் தந்த தவத்தினர் யாரோ? அவர் யாவ ராலும் போற்றத்தக்கவர்,' என்பார்.

காமங்கொண்ட பரத்தையர் சிலர் வள்ளலைப் பார்த்த போதே இடையணியாகிய காஞ்சி முதலியன கழன்று சிலம்பணிந்த அடியிலே விழவும், செவ்விதழ் கன்றிக் கருக வும் கைவளை கழலவும் காமத்தழல் நின்றனர். சிலர் சீவக னைத் தொழத் தூக்கிய கைகளைத் தொங்கவிட்டவுடனே கைவளைகளெல்லாம் கழலநின்றனர். இங்ஙனம் நம்பியின் தேர்செலச் செல்லுந் தெருவெலாம் மகளிர் பீர்பரந்து செல்லுந் தகைபதாயிற்று.

இங்ஙனம் ஒளியையுடைய முகத்தே மலர்ந்த மலர் போலுங் குளிர்ச்சியான நோக்கமுடைய கண்களாற் பருகு வார்போலப் பார்த்து நடுங்கினவராய் நாணமாகிய தளையால் தடையுற்று நிற்கத் தான்மட்டும் நில்லாமற் புலியனைய சீவகன் தன் அரண்மனை மதிலினுள்ளே புகுந்தான். பிறகு, குதிரைகள் நுகத்திலிருந்து பூட்டுநீங்கிப் பந்தியிலே சேர்ந் தன. 'வென்றி மன்னுக!' என அழகிய கிண்ணம் நிறைய மதுவை வார்த்து மலரும் சாந்தும் விளக்கும் ஏந்தி வாழ்த் திய பிறகு தேர் தனது கொட்டிலை யடைந்தது.

பிறகு, ஆயிரத்தெண்மர் அழகிய மலர்க்கோதையர் பட்டமும் குழையும் ஒளிவிடப், பல்கலனும் ஒலிசெய, மேலாடை இடையையும் பிடரையும் வருத்த அசைந்து, சாமரை, விளக்கு, பொற்குடம், இணைக்கயல், கண்ணடி, அங்குசம், கொடி, முரசு என்னும் எண்வகை மங்கலங்களை

யும் ஏந்தி யெதிர்கொண்டு சீவகனை உள்ளே அழைத்துச் சென்றனர். அங்ஙனே, தாயும் தந்தையும் வந்து வேலேந்திய காளையை அழைத்துச்சென்று, கண்ணெச்சில் கழித்து, இந்திரன் வாழும் அமராவதியை அடைந்தனர்போல மகிழ்ந்தனர்.

**நந்தகோன் வேண்டுகோள்**

அப்பொழுது, தொகைமிக்க ஆநிரையையாளும் நந்தகோன் அங்கு வந்து, திங்களின் எழிலைவாட்டுந் தாமரை மலரில் வாழும் திருமகள் தழுவும் வரைமார்பனை சீவகனைக் கண்டு கூறுவான் :

"நம்பியே! விசையையென்னும் மலர்க்கொடியனையாளை மணந்து, தனக்கும் நாட்டிற்குங் கேடுசூழ்ந்த அரசன் தன் ஆட்சிப்பொறுப்பைக் கட்டியங்காரன்மீது ஏற்றி, அவனாலே முதன்மைபெற்ற உயிரை யிழந்தான். அங்ஙனம் அரசன் இறந்தபோதே கொடுமுடியையுடைய மலையொன்றின்மீதேறி வீழ்ந்து, கால்தவறி வீழ்ந்தேன்போல தலை சிதறி உயிர்துறக்க விரும்பினேன். ஏனெனில், யான் அரசனோடு இறப்பதனால் 'இவன் அரசனுக்குரியவன்,' எனக் கட்டியங்காரன் எண்ணி என் குடும்பத்தை யழிப்பான் என்று கருதி அவ்வாறு செய்யக் கருதினேன். எனினும், அரசன் வழிமுதல் ஆலம்வித்துப்போலத் தெறித்துப்போய் மறைந்தது என அறிந்த யான், அவ் வழிமுதல் பிறகு தோன்றுமற் போயினதெனின் வாழ்வை முடித்துக்கொள்ள எண்ணி யிறவாமல் வருந்தியிருக்கிறேன். இதைக் கூறியதற்குக் காரணம் பழைய அரசனைச்சார்ந்த குடிகளில் ஒருவன் யான் என விளக்குவதற்கேயன்றிப் பிறிதில்லை. இனி இதனை மறந்துவிடுக.

"நின் உளத்திற் கொள்ளவேண்டிய பிறிதொன்றைக் கேட்பாயாக! நான் இடைச்சேரியிலுள்ளேன்; கோவிந்தன் என்றழைக்கப்படுவேன். கோதாவரியெனும் நல்லியல் அமைந்த நங்கையாகிய என் மனைவி வயிற்றிற்பிறந்த

கோவிந்தை என்னும் திருமகளையுடையேன். அழகிய அம் மடநல்லாளின் மதர்த்த நோக்கம் அம்புபோலத் தம் உள் ளத்தே ஆழ்ப்பதிதலின் நம் ஆயர்குல இளைஞர் பலர் அவளை யடைய என்னைக் குறையிரந்தனர். எனினும், அவர்களில் ஒருவரேனும் அவளுக்கேற்றவராக இலாமையின் மறுத்து விட்டேன்.

"ஐயனே! பாடகஞ்சுமந்த சிவந்த அழகிய சிற்றடியை யும் வளையலணிந்த கையையும் உடைய அவளை அவள் போன்ற ஆடகப் பொற்பாவை பேழுடன் தருவேன். குறை வற்ற திருமணம்பெற்று மணமகனாகுக!

"அவள் வெண்ணெய்போலத் தொடுதற் கினியாள்; உயர்ந்த பால்போல இன்மொழியுடையாள்; உண்ண உருக்கிய ஆவின் நெய்போல மேனியையுடையாள்; கருவிள மலர் இரண்டிணைந்தாற்போன்ற அழகிய கண்களை யுடையாள்.

"அவள் இடைக்குல மடந்தையென எண்ணாதே. கொழுவிய கயற்கண்ணளாம் வள்ளியின் நலத்தை முருகன் நுகர்ந்ததை அறியாயோ? நிலமகள் கொழுநனை திரு மால் எங்குல மடந்தை நப்பின்னையின் இலவிதழ்வாயின் இன்னமிர்தம் பருகினனல்லனோ? சேதாவின் நறுநெய்யும் இனிய பாலும் மிகுதயிருமாகப் பாதலமெல்லாங் கொணர்ந்து நிறைத்திடுவேன். இவற்றையெல்லாம் ஆராய்ந்து நினக்குப் பணிபுரிய விரும்பும் கோவிந்தைக்கு அழகிய மணமாலையைச் சூட்டுக."

**சீவகனுடைய மறுமொழி**

கோவிந்தனுடைய வேண்டுகோளைக்கேட்ட சீவகன், "நாம் அரசகுடும்பத்திற் பிறந்ததனால் முதலில் நம் குலத் திற்பிறந்த அழகிற்சிறந்த மங்கையரை மணந்தன்றி, ஆய்க் குல மடந்தையரை மணத்தல் மரபாகாது. இதுதான் மாநில மக்கட்குரிய ஒழுக்கம்," என மனத்தில் ஆய்ந்து முடிவு செய்தான்.

பிறகு, கோவிந்தனை நோக்கி, 'மாமான்! நின் மடமகள் எனக்குச் *'சூட்டொடு கண்ணி'யாவாள். இனி, இவற்றைக் கூறிக் காலம் போக்குதலிற் பயனில்லை. இது பண்பன்று,'' எனக் கனிவொடு கூறினான்.

நந்தகோன் மகிழ்ந்து, ஆயர்பாடியை அடைந்து, 'முல்லையும் இருள்வாசியும் படர்ந்த பந்தரிலே திருமண வினை நடத்துக,' என்று ஆயர்கட்குப் பணித்தான்.

**கோவிந்தை திருமணம்**

"கனிமொழியாளின் அழகிய சிறு புருவங்கள் காமனுடைய வில்லைக் கொன்றன. குவளைக்கண் காமன்கொடியாகிய கயலைக் கொன்றன. இவளுடைய இத்தகைய பருவ நிலை காணின் ஆயர் உயிர்தரியார்,'' எனச் சிலம்புகள் ஆரற்றுமாறு கோவிந்தையை மாதர்கள் அழைத்துவந்து அமர்த்தினர்கள். பிறகு, 'ஊழியெலாம் ஆவுந்தொழுவும் போன்று நீயும் நின் கணவனும் ஒன்றுகூடி வாழ்வீராக,' என வாழ்த்தி, நாழியுள் இருந்த நெய்யை இளம்பசுங் கன்று தின்று கழித்த புல்லையிட்டுக் கோவிந்தையின் தலையிலே பெய்து, †மூழையாலே நீரைச்சொரிந்து நீராட்டினர்.

"நாழியுள் இழுது நாகான் கன்றுதின் றொழித்த புல்தோய்த்து
ஊழிதோ றாவுந் தோழும் போன்றுடன் மூக்க வென்று
தாழிருங் குழலி னாளை நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொள் ஆய்த்தியர் ஆட்டினாரே."

நீராட்டிய பிறகு, நெய்விற்று வாங்கிய பசும்பொற் றோட்டையும், ஒளிவிடும் மணிக்குழையையும் அவள் காதினின்றும் நீக்கி, மங்கலக் கடிப்பிணையை இட்டனர். பிணையல் மாலையை அணிவித்தனர். ஒரிலையிலே கொணர்ந்த சந்தனத்தைப் பூசினர். இவ்வாறு சிறுகோலஞ் செய்த

* சூடுங்கண்ணி ஆடவர்க்குரியதன்று; மார்பிலணியும் மாலையே சிறந்தது. இங்ஙனம் குறிப்பாகத் தான் மணக்கவியலாதென்று கூறினான்.

† மூழை - அகப்பை.

அளவிலேயே அழகுபொலிய நிற்கும் அவளைக் கண்டு ஆய்ச்சியர் திகைத்து நின்றனர்.

திருமணக்கோலம் முடிந்த பிறகு, ஏறுகோட்பறை முழங்க, அவளை எடுத்துக்கொண்டு, ஆய்ச்சேரியெங்கும் திருவிழாக்கொண்டாடச் சென்று கந்துகன் அரண்மனையை அடைந்தனர். அங்கே நந்தகோன் நீரைச்சொரியப் பதுமுகன் என்னும் தன் தோழனுக்கெனச் சீவகன் கோவிந்தையை ஏற்றான். நந்தகோன் கோவிந்தைக்கு இரண்டாயிரம் *நாகான்களையும் ஏழு பொற்பாவைகளையும் அளித்தான். காமன்கணையால் தாக்கப்பட்ட பதுமுகன் கோவிந்தையின் மார்பிலணிந்த முத்துக்கள் சிந்தத் தழுவி யின்புற்றான்.

மாலையணிந்த வேலனாகிய பதுமுகன் தேன்பொதிந்து மலர்ந்த கழுநீர்மலர்களிணைந்தன போலிருந்து இன்பமூட்டியும், வெள்வேல்போல் மிளிர்ந்து துன்புறுத்தியும் வருங் கண்களையுடைய கோவிந்தையின் முள்வாய் எயிற்றின் அமுதத்தை வெறுது பருகிக் கரைபுரண்ட இன்பக்கடலிலே அழுந்தினான். அவளைத், 'தீம்பாற்கடலைக் கடைந்து வானவர் எடுத்த அமிர்தோ? மாலையணிந்த வேய்த்தோளாளாகிய ஆய்ச்சியர் மகளோ?' எனப் பாராட்டிப் புகழ்ந்து, இன்ப நுகர்ச்சியிலே அவளுந் தானும் மயங்கியிருந்தனர்.

---

* நாகுஆன் - இளம் பசு.

## ௬. காந்தருவதத்தை திருமணம்

### திரைகடலில் சீதத்தன்

இங்ஙனம் இது நிகழா நிற்க, மற்றோரிடத்தில் நிகழ்ந்ததைக் காண்பாம்.

இராசமாபுரத்தில் யவதத்தன் என்னும் வணிகன் மரபிற் சீதத்தன் என்பவன் அழகும் வீரமும் அமைந்தவனாக வாழ்ந்து வந்தான். அவன் வாழ்க்கைத்துணைவி பதுமை யென்பாள். இவர்களிருவரும் தங்கள் இல்லறத்தைச் செவ்வனே இயற்றிவரும் நாட்களில், ஒருமுறை வளமிகு செல்வம் சுருங்கியது கண்ட வணிகன் கருத்துக் கலங்கினான்.

"வணிகரேயன்றித் தொழிலாளிகளும் இம்மியளவு சிறுபொருள்களாக ஈட்டிப், பெரும் பொருளாக்கிக், களிற்றின் நுதலிலே ஓடையணிந்து அதன்மேலே ஊர்வர். இங்ஙனமிருக்க, அம்மி மிதந்து சுரையாழ்வதேபோல, 'உலகில் ஊழ்வினையால், உயர்ந்தோர் தாழத் தாழ்ந்தோர் உயர்ந்தனர்,' என ஊழ்வினையை நொந்து பிணங்குதல் அறிவுடைமையாகாது.

ஊக்கமுடையான் முயற்சி செய்யின் ஒருநாளே வெள்ளமனைய விழுச்செல்வம் சேரும். முயற்சியால் வினையாதது ஒன்றுமில்லை. ஓட்டையறிவினவர் கூறும் ஊழ்வினையை உன்னிச் சோம்பியிருப்பின் நகைப்புக் கிடனவர்.

எனவே, யாவராயினும் பொருளீட்டுக! பகைவரை வெல்லும் கூரிய படைக்கலம் பொருளேயாகும். வேறில்லை. தான் பகைவரிடமிருப்பினும் பகையை மாய்க்குங்கருவி அதுவே. ஐயுறவேண்டா. அறனும் இன்பமும் ஆக்குவது பொருளே. பொய்யில் பொருள் அஃதே.

வௌவால்கள் தூங்கும் ஆலமரங்கள் நைதலுறின் அவற்றின் விழுதுகள் தாங்குதல்போல, ஒரு குலம் வாட

னுறின் அக்குலத்திற் பிறந்த வீரர்கள் அதனைத் தாங்குதல் கடனாகும். 'இவன் பிறந்ததனால் இக்குடி கெட்டது' எனத் தலைசாய்க்கவரு பழிமொழியிலிருந்து நீங்குவது நம் கடன்.''

இங்ஙனம் சிந்தித்த சீதத்தன் 'திரைகட லோடியுந் திரவியந்தேட' வுறுதிபூண்டான்.

உடனே, காதல்கொண்ட மங்கையரின் வாட்கண் வடுவைக்கொண்ட மலர்மாலை யணிந்த, மலையனைய மார்பனான அவன் குற்றமற்ற நன்னாளிலே மரக்கலமொன்றிற் செறிந்த பொருள்களை வெறுப்பின்றி யேற்றிக்கொண்டு புறப்பட்டான். வானளாவிய புகழையும் மாரியனைய வண்மையையுமுடைய அவன் வறியவர் வேண்டுவன விருப்புடன் வழங்கி, 'இம் மரக்கலம் இடையூறேதுமின்றிச் செல்க,' என இறைவனை வேண்டினான்.

கொடியாடும் உச்சியையுடைய கூம்பிலே மூன்று பாய்களைக் காற்று முகக்குமாறு கட்டி, மரக்கலவினைஞர் அதன் அமைப்பைப் புகழச், சங்கும் பறையும் முழங்கப், பவழக்கொடிகளை யறுத்துக்கொண்டு களிறுபோலச் சென்றது கலம். அலைகள் ஈன்ற சங்குகள் அக்கலத்திலே மோதி முத்துக்களைச் சிந்தின. அது சென்ற விரைவினும் கணைகளின் விரைவு பிற்படும். ஒரு மலை கடலிடையே இடந்து கிழித்துச்சென்றது போலத் தீவுகள் பலவற்றையும் விரைந்து கடந்துசென்றது அக்கலம். இங்ஙனம் விரைந்து சென்று, மின்னற்கொடியையும் பூங்கொடியையும் மென் மலரையும் போன்ற மங்கையர் அன்னம்போலும் கலவ மயில்போலும் சாயலுடையராய், அமிர்தம்போன்ற பண்புடையராய் நிறைந்து வாழும் தூய நலம்நிறைந்த பொன் விளை தீவினை யடைந்தது.

**பொன்விளை தீவு**

சீதத்தன் பொன்விளையும் அத்தீவில் இறங்கினான். அரசனைக் கண்டு முத்தாரக் காணிக்கை கொடுத்து வணங்கி, அவன் அருளைப்பெற்றான். சிலநாள் அரசவையிலே பழகித்

திருமகளைப்போன்ற இளமங்கையர்தம் நாவினையும் இன்னிசையைக்கேட்டு, நாடகங் கண்டு களித்தான்.

அங்கு அவன் இருந்த காலம் ஆறு திங்கள். அதுவரையில் தான் கொணர்ந்த பண்டங்களைவிற்றுப் பொற்குவை திரட்டிக், கணக்கிட்டுக் கலத்தில் ஏற்றிக்கொண்டான். அரசனையும் அங்குற்ற நண்பர்களையும் கண்டு விடைபெற்றான்.

வியாழக்கிழமை இரேவதி நாள் தனுவோரையாகிய நன்னாளிலே மரக்கலம் புறப்பட்டது. கடலை நீந்திக் காற்றினுங் கடுகியது. ஐந்நூறு காதம் சென்றது மரக்கலம். மேலும் யோசனை தொலைவிருந்தது கரைக்கு. கலத்திலிருந்தோர் களிப்பிலிருந்தனர்.

அந்நிலையிற் காற்றொன் றெழுந்தது. நீர்த்துளியுடன் முகில்கள் வானிடை நிறைந்தன. வானுங் கடலும் வேறுபாடறியாப் பேரிருள் மயங்கியது. கூற்றும் நடுங்கி ஒளித்துப் போமாறு வெம்பி வெடித்து முழங்கி யிடித்தது.

**சீதத்தன் செப்பியவை**

"எட்டுத்திக்கினும் இருந்து காற்றுக் கனன்றெழுந்து எதிரெதிர்மோதிக் கடலைமொண்டுகொண் டெழுதல்போல முழங்கிய மேகம், பளிக்குக்கோல்போலத் தண்ணிய நீர்த் தாரையைச் சொரிகிறது! இது தெய்வத்தின் சீற்றம் போலும்! நீவிர் அசையாதீர்! இடையூறு வந்தபோது எரியும் விளக்குப்போல நடுங்காமல் மகிழ்தல் வேண்டும். அம்மகிழ்ச்சியே அவ்விடையூற்றைப் பிளக்கும் படைக்கலம். அங்ஙனமின்றி அழுவதாற் பயன்பெற்றார் யார்? நம் வீரத்தை வடுப்படுத்தல் வேண்டா. மற்றும் நம் கூட்டிலே கொண்ட வாழ்நாள் பழைய தீவினைப்பயனால் வீழ்ந்ததேல் ஆடகப் பொற்கிண்ணத்திலே உயிர்க்கு நலம் பயக்கப் பருகஏந்திய தெண்ணீருங் கொல்லும். பழைய நல்வினைப் பயனிருப்பின் கடலிடைச் செல்லும்போது முழுகினும் நல்லோர் தப்பிப்பிழைப்பர். எனவே, வினையின்

வினைவால் வந்த கெடாத துன்பமாகிய கடலிடை நீந்திக் கண்ணீர்விட்டழுதல் வேண்டா! தேன்பிலிற்றும் அசோகின் நீழலில் எழுந்தருளிய அருகனுடைய நலந்தரூந் திருவடித்துணையை யாவரும் நினைமின்! நினைத்தால் அச்சம் நீங்கும்."

**கலங் கவிழ்ந்தபின்**

அணிசெய்த களிறுபோன்ற சீதத்தன் இங்ஙனங் கூறித் தானும் மெல்லெனத் தலைசாய்த்து நின்றான். அப்போது, மரக்கலம் பொங்கி முழங்கித் தான் நினைத்த சார்பிலே ஓடிக் கூம்பு முறிய, நீர்பாய்ந்து நிறைந்து இடியிடித்தாலென அழுந்தியது. அங்குள்ளவரெல்லாரும் ஒருங்கே மறைந்தனர். இவ்வாறு காப்பாற்றியீட்டிய பொருளையும் பேரன்புடையவர்களையும் உவர்நீர்க் கடல் விழுங்கினபோதும் தான்மட்டுங் கலங்காமல் நின்றான். கூம்பொடிந்த துண்டமொன்று கிடந்தது. அதனைத் தழுவி அலையிலே மிதந்தான். அலை அவனைக் கரையிலே சேர்த்தது.

"வினைப்பாவையே! 'மரக்கலமிழந்து யாருமில்லாத நள்ளிரவிலே கடலைநீந்தித் தனியே போவாய்' என என்னைப் படைத்தாய். இங்ஙனமின்றி முன்படைத்தபொழுதே, 'பொருளைப் பொருளென்று கொண்ட நீ இறப்பாய்' எனப் படைத்தாயிலை. நீ இனி எதுதான் செய்யமாட்டாய்?" என்று கூறிச்சென்று, கொழித்த மணல்மேட்டை யுடைந்தான். அங்கே, ஞாழலும் புன்னையும் மலர்ந்து வரிவண்டுந் தேன்வண்டும் முரலும் அழகு மலர்ந்த பூம்பொழிலொன்று காணப்பெற்றது. அதனை யடைந்து வருந்தி யிருந்தான். அப்பொழுது, மோதும் அலைகள் உதைப்ப வுருண்டுருண்டு, திரும்பவும் கடலிற்போக விரைந்து அலமரும் நண்டொன்றை அன்னம் பார்த்திரங்கித் தான் அதனைக் கொல்லாமல் அருள்செய்ததை அங்குள்ள கானலிலே கண்ட சீதத்தன், 'தன் ஆதரவிலே வாழ்வாரைக் காலால் உதைத்துக் கடல் தள்ளவும் போக்கற்றுப் பின்னும் கடலினிடத்தே செல்லாநின்றது இந்த நண்டென எண்ணிய அன்னம்

அதற்கு அருளினாற்போல இருக்கிற இக்காட்சி நமக்கு நன்னிமித்தமாகும்,' என்றெண்ணி, இங்ஙனம் நமக்காதர வாக ஏதாவது கலம் வருமோ என்று நோக்கி யிருந்தான்.

**சீதத்தனும் தரனும்**

அப்போது, முயற்சிவல்லானொரு மகன், தரன் என்பான் அங்கு வந்தான். அவனைக் கண்டதும், 'ஐயனே! எனக்குற்றது கேள்,' எனத் தனக்குற்றன யாவும் உரைத்தான். விலங்கும் மரமும் இரங்குமாறு சீதத்தன் கூறியதைக்கேட்ட தரன் சீதத்தன் உளங்குளிரத் தேனும் அமுதும் அனைய மொழிகளைக் கூறித் தேற்றினான்.

"யான் பலவகை விஞ்சையினும் வல்லேன். மறைந்த நின்தோழருடன் நீ யிழந்த பொருள்களையெல்லாம் இமைப்பினுள் சிறிதும் வஞ்சமின்றித் திரும்பப்பெறச் செய்வேன். நீ நினைந்து வருந்தாதே. என்னுடன் இம்மலைமேற் சிறிது தொலைவு வருக!"

என்று கூறி அவனை நம்புமாறு செய்து தன்னாற் கொணரப்பெற்ற பரிபோலும் விரைந்து செல்லும் ஓர் ஆட்டுக்கடாவின்மேல் ஏற்றிக்கொண்டு, சிறிதுசென்று வான்வழியே பறந்துசென்றான். அப்போது அவர்களை முகிலின் தண்ணிய நீர்த்துளிகள் நனைக்குமாறு முகிலைப் பிளந்து சென்றனர். பிறகு, விரைவில் ஒரு நறுமண மலர்ப்பொழிலையும் சாரலையும் உடைய மலையை அடைந்தனர்.

அம்மலையிலே, உலகில் இதுவரை சீதத்தன் காணாதனவும், காண்பதற்கினியனவும், திருமகளும் விழையுந்தகையனவும் ஆகிய கொழுங்கனிகளை மரங்களிற் கண்டான். அவற்றைப் பறித்துண்டான். அவை அமிழ்தம்போல நாவிற்கினியனவாய் இருந்தன. உடலுங் குளிர்ந்தது. மற்றும், அம் மலைமிசை முகில்தவழும் சோலைகளும், அச்சோலைகளிற் குங்குமம், சுரபுன்னை, தழைத்த சந்தனம் முதலிய மரங்களுஞ் செறிந்திருப்பன கண்டு களிகூர்ந்தான்.

மாலைபோலும் அருவியையுடைய குளிர்ந்த அம்மலையின் மேல் இருவரும் சிறிது களைப்பாறினர். பிறகு, தரன், 'இங்கிருந்து காதங் கடந்தால் அழிவற்ற மதிலையுடைய, இறைவன் உறையும் நகரொன்றுண்டு. அங்குச் செல்வோம் எழுக!' என்றழைத்தான். சீதத்தன் அது ஓர் அருகன் கோயில்போலும் என எண்ணி அதற்கிசைய, இருவரும் அந்நகரை அடைந்தனர்.

**வெள்ளிமலையில்**

அந்நகர் வெள்ளிமலையின் மீதிருந்தது. வெள்ளிமலையின் தாழ்வரையெல்லாம் இருண்ட முகில் தவழ்ந்தது. கொடுமுடியுடன் பாதிமலை முகில்தழுவாமல் வெள்ளொளி வீசியது. அத்தோற்றம் கரிய நாகமொன்று கீழிருந்து முழுமதியை விழுங்கத் தொடங்கிப் பாதியே விழுங்கிய தன்மையைக் காட்டியது. அவ் வெள்ளிமலைமீது செவ்வொளி குழுமியதுபோல் அந்நகர் காணப்பெற்றது. முழுமதியின்மேல் ஞாயிற்றை வைத்தாற்போன்ற மதிலின் தோற்றமும், மதிலுக்குட் பொன்னகரை அங்குள்ள நகர் பொருளெலாம் ஒழுங்கியற்றி வைத்தாற்போன்ற நகரின் தோற்றமும் சீதத்தனை வியப்புறச் செய்தன. அந்நகரின் பெயர் விச்சாதரலோக மாநகர். அது காந்தார நாட்டின் தலைநகர். அதனை நோக்கிய சீதத்தன் பொன்னகரே மீண்டுப் புக்கதோ என மருண்டவாறு தரனுடன் சென்றான்.

தரன் தன்னுடைய மாளிகைக்கு அவனை யழைத்துச் சென்று விருந்துவைத்துச் சோர்வு போக்கியபின் இனிதின் அமர்ந்து கூறுகின்றான் :

" வித்தியாதர மன்னர்களாகிய நாகங்களுக்குக் கருடனைப் போன்றவன் இந்நகர் அரசன் கலுழவேகன். அவன் பட்டத்தரசி பழம்புகழ்பெற்ற தாரணியென்னும் பூங்குழலாள். இவ்விருவருக்கும் பிறந்தவள் கிளிமொழியனைய தத்தை என்பவள். அவள் ஆடவரின் அறிவைப் பிளக்கும் அணங்கனையாள். விண்ணிடத்தே வெண்கோட்டுப் பிறை

தோன்றினுளொப்ப இவள் தோன்றியஞான்றே மன்னர்கள் இடமின்றி நெருங்கி யிம்மலையில் வந்து குழுமிக் களிற்றின் மேல் வெறுக்கை பல காணிக்கை கொடுத்தனர்.

அப்போது வந்த நிமித்திகன் அரசனுணைப்படியே சாதகம் எழுதினுன். அவன் திருவில்லனைய புருவத்தை யுடைய அவளுக்குத் திருமணம் இராசமாபுரத்தே நடை பெறுமென்று அரசனுக்குத் தெரிவித்தான். கேட்ட அரசன் தன் கருத்தை யிதுவரை வெளியிடவில்லை. அவன் கருத்தை நாம் இன்று தெரிந்துகொளல் வேண்டும்.''

**கலுழவேகன்**

இருவரும் கலுழவேகனை அவன் அரண்மனையிலே சென்று கண்டனர். அவன் பால்பரவினுற்போன்ற வெண் பட்டினை விரித்த பூவணையிலே பசும்பொற் கட்டிலில் அமர்ந்திருந்தான். வேலனைய விழிமகளிர் வெண்டிங்கள் கதிர்பொழிவதுபோலக் கவரி வீசினர். கலுழவேகன் இவர்களைக் கனிவுடன் வரவேற்றுன். சீதத்தன் அவனுடைய கழலடியை வணங்கினுன். மாரியனைய வண்கையாற் கலுழ வேகன் அவனைத் தழுவியெடுத்து மன்னர்கள் இருக்குஞ் சிறப்புறு தவிசிலே யிருத்தினுன்.

பிறகு, சீதத்தனுடைய தந்தை தாய் தமர் காதல் மக்கள் சுற்றம் முதலாம் உற்றவர்களையெல்லாம் வினவி னுன். வினவிய பின்னர் முரசுநாண அமிழ்துபெய் மாரி போல இனியமொழியால் இயம்பலுற்றுன்.

“நம் கேண்மை யின்றையதன்று. ஏழு தலைமுறை யாக வந்தது. வச்சிரவெழுத்துப்போல அத்துணை உறுதி யான்து. நாம் இருவேமும் அருகனறத்திலே நிற்கின்றேம். அதனுல், 'யான் அரசன், நீ வணிகன்,' என்னும் வேறுபாடு வேண்டா. இது நினதரண்மனையே.''

மாரியால் வற்றிநின்ற சந்தனந் தளிர்த்ததுபோல் அவன் மொழியாற் சீதத்தன் தளிர்த்தான்.

"என் தந்தைக்குத் தந்தை கூறியதைக் கூறுகிறேன். 'வித்தியாதரர் வாழும் வெள்ளிமலையிலே தென்சேடியிலே தேன்சொரியும் தாழைவேலி சூழ்ந்த காந்தார நாட்டிலே, விச்சாதரலோக நகரிலே வீற்றிருக்கும் கலுழவேகன் வெள்ளிமலைத் தலைவன். அவன் தாமரையுஞ் சங்கும் மலர்ந்த பொய்கையணைய நங்குடிக்குத் தெய்வமாவான்,' என்று கூறினன். ஆகையால் எங்குடி தனக்குத் தெய்வ மாகிய நின் திருவடிக்குப் பிழைசெய்யாது."

என்று சீதத்தனும் தன் நட்புரிமையை வணக்கத்துடன் நவின்றான். வித்தியாதர மன்னன் அவனுடைய விலைமதிப்பற்ற கடகமணிந்த கையைப்பற்றி அழைத்துச் சென்று அந்தப்புரத்திலே தன் மனைவியுடனும் மகளுடனும் அறிமுகஞ்செய்து வைத்தான். தாரணி சீதத்தனை அன்புறு முகமன்கூறி வரவேற்றாள். தத்தையைக் கண்ட சீதத்தன், 'இப்பளிக்கு மாடத்திலே எழுந்த காமவல்லியோ? அரிய மணிக்கொடியோ? மின்கொடியோ? இந்திரன் எழுதிவைத்த மாணிக்கப் பாவையோ?' என்றெண்ணி வியந்தான். அரசன் அவனைப் பரிவுடன் தழுவிக்கொண்டு, 'இவளை நின்குலமகளாகவே கொள்க!' என்று மேலுங் கூறுகிறான்:

"கொவ்வைச் செவ்வாயையும் மணமிகுங் குழலினையும் உடைய மின்னற்கொடிபோலத் தன் காதிலணிந்த குழைகள் மார்பில் தவழ நாணத்துடன் குனிந்துநிற்கும் இவள் காந்தருவதத்தையெனும் பெயரினள். இவள் அழகைப்போலவே வீணையினும் ஒப்பிலாதவள். மங்கைப் பருவம் அடைந்த இவளை நின்னகர்க் கழைத்துச்சென்று, வீணையிலே வென்றவன் யாவனாயினும் அவனுக்குரியளாக்குக!"

சீதத்தனும் அங்ஙனமே அடிப்பணி புரிவேனென்றான். தாரணி வருத்தத்துடன் 'பேரழகும் பெருங் கலையறிவும் உடைய என் அருமைத் தத்தைக்கு இது தக்கதோ?' எனவுரைத்துக் கலங்கினாள்.

அரசன் அவள் கலக்கந்தெளிய விளம்புகிறான்:

"வெறுப்பற்ற இன்பமுடைய இப்போக பூமியினும் தனியராக இருப்பது இறத்தலைத் தருவதுபோன்ற துயர முடையது. கனிமொழி மகளிர் தம் காதலர் தொடையிலே துயிலும்பேறு அமரருலகம் பெற்றதுபோன்ற இன்ப முடையது. எனினும், காலம் வருமளவும் காத்திருத்தலே செய்யத்தக்கதாயிற்று. வேலேந்திய கடலனைய படையரசர்கள் பலர் வந்து விரும்பி வேண்டினர். எனினும், 'வீணையினால் வென்று இவளை மணப்பவன் இராசமாபுரத்திலுள்ளான்,' எனும் கணியின் மொழியைக் கருத்துட்கொண்டே அவர்களுக்கிணங்காதிருந்தேன். இப்போதே காலமும் வந்தது."

கணவன் கூறியதைக் கருத்துட்கொண்ட தாரணி தன் மகளைக் கவலையுறாது தேற்றினாள். தாயும் தந்தையும் மகளுக்கு அருங்கலம் வைக்கும் வயிரம் இழைத்த மணிப் பேழை ஐந்நூறும், மணியும் பொன்னும் நிறைந்த பவனப் பேழை ஈராயிரமும், பலவகைத் தொழில் நுணுக்கமும் சுரிகையமைத்த பவளக்கால்களும் உடைய அகில்மணங் கமழும் கச்சார்ந்த கட்டிலும், தவிசும், நிலைக்கண்ணாடியும், தூபமுட்டியும், மணச்செப்பும் பிறவும் அளித்தனர். மற்றும் விளக்கினிடம் அழலைச் சேர்த்தினாற்போலும் நன்னிறமுடைய உள்ளிருப்பன தெரியாமற் போர்த்த போர்வையினையும், தேன் அசைவற வொழுகினாற்போன்ற தீம் அறத்திரண்ட நரம்பைக்கொள்ளும் வார்க்கட்டினையும் உடையவாய் இனிய யாழ் ஆயிரம் நல்கினார்கள்.

பிறகு, வீணாபதியென்னும் பேடியை அழைத்து, 'நீ உடம்பிடை யுயிர்போலச் செறிந்து, எங்கும் பிரிந்து செல்லாது, கண்ணுந் தோளும்போலத் துணையாகி எங்களை அவள் பிரிந்திருக்குந் தனிமைதோன்றாமற் காத்துச் சீதத் தன் ஆணைவழி நடப்பாயாக!' என்று வேந்தன் ஓம்படை கூறினான்.

இங்ஙனம் யாவும் நல்கிய பின்னர் அழுதழுது சிவந்த குவளைக்கண்களையுடைய தத்தையை அன்புடைய செவிலித்

தாயர் பலரும் நற்றாயும் பன்முறை தழுவித்தழுவி வருந்தித் திருமகளைப் போகவிட்ட தாமரைக் கோயில்போலத் தம் உளமும் அரண்மனையும் வறிதாக வருந்தினர்.

தாயரை வணங்கிய தத்தை பொன்னாற்செய்த காம்புடைப் பிச்சமணிந்த குடையையும் கவரியையும் ஏந்திய மகளிரிடையே கிண்கிணியும் பல்கலையும் மிழற்றச்சென்று தந்தையை வணங்கினாள். மின்னுக்கொடி பல மிடைந்தாற் போலத் தோழியர் பலர்சூழ வந்த மகளைத்தழுவி ஆற்ற முடியாமல், 'வலம்புரியீன்ற முத்தின் பயனை மற்றவர் பெறுவரேயன்றி வலம்புரி யடைவதில்லை. அத்தன்மையரே மகளிர்,' என்று வருந்திக்கூறி விடைகொடுத்தான்.

தந்தையிடம் விடைபெற்ற பொற்கொடியாள் இன் சுவை யாழும் அன்னமும் இளங்கிளியும் மயிலும் கருங் குரங்கும் குரங்கும் புறாவும் மருண்ட நோக்கமுடைய மானும் இவைபோன்ற பிறவும் தன்னைச்சூழச் சென்று விமானத்தை யடைந்தாள்.

காந்தருவதத்தை புறப்பட்டவுடன் ஆயிரம் யானைகளும் இரண்டாயிரந் தேர்களும் நாலாயிரம் புரவிகளும் பன்னீராயிரம் போர்வீரரும் என நாற்படையும் அவளைச் சூழ்ந்து காவலாகப் புறப்பட்டன.

இங்ஙனம் படைசூழ வரும் தத்தையை அழைத்துக் கொண்டு செல்லும் சீதத்தனுக்கு வழிவிட்டவந்த தரன், 'அன்பனே! கலங்கவிழ்ந்த நிகழ்ச்சி கலுழவேகன் தத்தையை நின்னிடம் ஒம்படை செய்யச்செய்த சூழ்ச்சி,' என்றான். சீதத்தன் வியப்புடன் திகைத்து நோக்கினான்.

தரன், "தத்தையை மணம்புரிய விழைந்து வெள்ளி மலையெங்கும் நிறைந்தபோது, கணி மொழிந்தவாறு தத்தையின் வாழ்வு மண்ணகத்திலேயே," என்றுணர்ந்த அரசன் "நீ கடலிடை வருவதையும் கணியினாலுணர்ந்து என்னை விடுத்தான். நான் 'துன்பமுற்றவர்க்கலால் — இன்பம் இல்லையாதலின்' நின்னைத் துன்பத்தினாலே தடைசெய்

தேன். மன்னித்திடுக!'' என்று கூறிக் கடலின் ஓரத்திலே சிறிதும் இடையூறின்றி நிற்கும் மரக்கலத்தையும் சீதத்தன் தோழர்களையும் காட்டினான்.

**நகரடைந்தான்**

தேன்மழை பெய்தாற்போன்ற தரனுடைய இனிய தூயமொழியால் சீதத்தன் உள்ளங் குளிர்ந்து, 'கலுழவேகன் தந்த துன்பம் என் மரபுக்கெல்லாம் உண்டாவதாக,' என உவந்துரைத்தான். பிறகு, தரன் விடைபெற்றுச் செல்லவும், சீதத்தன் மரக்கலத்தை யடைந்து தோழரை யெல்லாந் தழுவி மகிழ்ந்தான்; தானுற்றவை யாவும் நவின்றான். அவர்கள் நகைத்தவாறு, 'நீ கூறிய அவ்வளவும் நாங்கள் நாடகமாகக் கண்டோம்,' என்றனர். தரனுடைய விஞ்சையால் அவர்கள் அவ்வாறு கண்டனர். பிறகு, காந்தருவதத்தையுடனும் தோழருடனும் அளவற்ற பொருள்களுடனும் படைசூழச்சென்று இராசமாபுரத்தே தன் மனையை அடைந்தான்.

**மனைவியிடம்**

தன் மனையை அடைந்தவுடன் பிறைநுதல் மனைவி பதுமை வந்து வணங்கினாள். அவளைத் தழுவித் தன்னைப் பிரிந்திருந்த துயரம் நீங்க இன்மொழி கூறித் தேற்றினான். தன் கடற்செலவை விளங்கக் கூறித் தத்தையைக் கொணர்ந்து காட்டினான். பதுமையைத் தத்தை வணங்கினாள். அவளைத்தழுவித் தன்னோடிருத்திக் கொண்டாள்.

**அரசனிடம்**

பிறகு, சீதத்தன் மணியும் பொன்னும் முதலிய காணிக்கையுடன்சென்று கட்டியங்காரனைக் கண்டு வணங்கித் தன் வேண்டுகோளை வெளியிட்டான். சுயம்வர மண்டபங் கட்டவும் வெளிநாட்டரசர்க்கும் நகரத்திற்கும் 'தத்தையை வீணையினால் வெல்வார்க்குத் தருவோம்,' என அறிவிக்க ஆணைபெற்றான். அரசன் உடன்பாட்டைத் தன் மனைவிக்கறிவித்து மகிழ்ந்தான்.

**சுயம்வர மண்டபம்**

மணங்கமழும் அகழியை ஆடையாகவுடைய நகரின் நடுவே பொன்னகரைச் சிரிக்கும் ஒரு மண்டபம் சமைக்க வென்றவுடன், கம்மியர்கள்* வெள்ளிக் கிழமையும் திருதியையும் பெற்ற உத்திரட்டாதி நாள் சிங்கம் தோற்றமாக நாள் கொண்டனர். பின்னர் பதினுயிரவர் வேண்டும் பொருள்களுடன் மண்டபஞ் சமைக்கப் புகுந்து விரைவின் முடித்தனர். அதன் அழகை யெங்ஙனம் இயம்புவது?

தத்தையிருக்குமிடம் பளிங்குச் சுவர்களாலானது. முத்தும் பொன்னுங் கொண்டியற்றிய மாலைகள் தூங்குவது. அதனை ஓவியக் கோயிலெனவே உரைக்கலாம். அழகிய களிறும் பிடியும் கன்றும் கலையும் மானும் தாமரை வாவியும் புட்களும் பாவைகளும் ஓவியத்தின் தெய்வமான இயக்கியின் கோயிலும் ஆங் கெழுதப் பெற்றிருந்தன. பளிக்குச் சுவர்களாதலாற் காண்பவர் அகமும் புறமும் அறியாமல் திகைத்தனர். மற்றும், ஓவியரும் இதனை வியப்பொடு நோக்கினர். ஓவியமாகவுள்ள விலங்குகட்கும் பறவைகட்கும் பகைப் புட்களும் விலங்குகளும் இவற்றை உயிருடையவை யென வெண்ணி நெருங்க அஞ்சின. கடல்சூழ்ந்த நிலவுலகில் இம்மண்டபத்திற்கு நிகரில்லையென நவிலுமாறு விளங்கியது அது.

**முரசறைதல்**

அரசன் ஆணைப்படி சுயம் வர மண்டபம் அமைத்த பின்னர், உலகறியவும் நகரறியவும் முரசறையும்படி விரைந்த செலவுடைய இளையரை முரசறையும் ஏவலரிடம் விடுத்தான். அவர்கள் அம்பென விரைந்து சென்று முரசறைவோரிடம் பணித்தனர். முரசறைவோர் மங்கல வணிபுனைந்து, 'அரசன் அறநெறி பொலிவொடு மலிக' என முதலில் வாழ்த்திக் கடிநகரிலே முரசறைந்தனர்.

---

* 'மீனத்திடை நாள் கிழமை வெள்ளி சயை பக்கம், கானத்திடை வேங்கை யெழக் கண்ணினர்க ளன்றே'— என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் இது.

"வான் தரும் மழைவளம் பெற்று வையகம் பிணி தீர்க! தேனென மிழற்றும் மாதர்கள் கற்பில் மாறுபடாமல் நிலைபெறுக! ஊழியூழியாக உலகமாந்தர்கள் பெற்றோரை யோம்பி யில்லறம் நடாத்துக! ஐம்பொறிகளை யடக்கி நோற்கும் தவம் புரியும் சான்றோரை யடைந்து அவர்களை வழிபட்டு 'எமக்குப் பவம் நீங்குக' எனவணங்கி அவர்கள் மகிழப் பொருளளிமின்! பயனற்ற செயல் புரிந்து உடல் நீங்காமல், நலந்தரும் நெறியைச் சேர அருந்தவம் புரியுமின்!

மேலும், யான் கூறும் இதனையுங் கேண்மின்! அழகிய அனிச்சமலரையும் அல்லியையும் அணியினும் நொந்து வாடும் இடையையுடைய திருவனைய அழகினள் காந்தருவ தத்தை யென்பவள், அவள் தந்தையாகிய கலுழவேகன் குலத்தொடு பழகிய நாய்கன் வண்மை மிகு சீதத்தன் என் பவன் கூறும் பொருள் இது. 'முன்னைய நல் வினையுடைய வளாகிப் பெருமை மிக்க கலைகளை யெல்லாம் கற்றவள். இசைக் கூறுபாடுகளையுடைய நல்யாழிசையினாற் காமனைக் களிப்பிக்குந் தகையினள். அவளைத் தீந்தொடை மகர வீணையிலே தெளிந்த இசையை எடுப்பித்துப் பாடிப் பைந் தொடியினும் தன் புலமையை மிகுத்துக் காட்டும் நம்பிக்கு அளிப்பான். அரசர், அந்தணர், வணிகர் என்னும் மூவகைக் குலத்துளாரும் இப் போட்டிக்குரிய ரெனக் கலுழவேகன் கூறியுளான்."

என்று தெருவெங்கும் முரசறைந்து கூறிப் பிறகு அரசனையும் நகரையும் வாழ்த்தி முடித்தான். மற்றும் பிற நாட்டரசர்க் கெல்லாம் தூதுவர் சென்று விளம்பினர்.

**அரசர்களும் பிறரும் வருதல்.**

வணங்காத மன்னருடைய யானைகளின் மத்தகத்தைப் பிளத்தலிற் பிழையாத துதிக்கையினையும், வலிமையை யுடைய யானையையுடைய அத்தினபுர அரசன் அம்பை வென்ற கண்ணளாகிய தத்தையை மணக்க வந்தான்.

அழிக்க வியலாத சிற்றத்தினையும் வலிமையினையும் உடையவனும் வீரக்கழலை யிசைபெற வணிந்து மதமிகு களிற்றினையும் தாக்கிக், குன்றையும் மணி வட்டுப் போல உருட்டும் ஆற்றலையும் உடைய, கூரிய வேலேந்திய காம்பிலி காவலன் பாலகுமரன் என்பவன் வந்தான்.

விற்றழும்பு பொருந்திய தோளினையும், ஒளிவிடும் மணிக்கடகக் கையினையும் சில்லரிச்சிலம்பினுர் தழுவுதலால் அலர்ந்த மாலையணிந்த மார்பினையும் உடைய வாரணவாசி மன்னன் வந்தான்.

ஒளி விடும் முடிமன்னர் பலர் கைதொழுது, தம் முடியிலணிந்த வயிரத்தின் ஒளியாற் சேவடி அழகுற வணங்க, முடியணிந்த வீரமுடைய அவந்தி யிறைவன் ஒரு பிடியிடையினுளை யுன்னி வந்தான்.

தான் பிறந்து வெள்ளணி யணிந்த நாளிலேயே அரசர்களின் முடியிலுள்ள தேன்மலர் மாலை மோந்த, ஒலிக்கும் கழலணிந்த காலினையும் கருடக் கொடியோனைப் போலப் பல போர்களிற் கொண்ட வெற்றியினையும் கூரிய வேலினையும் உடைய அயோத்தி வேந்தனும் வந்தான்.

இங்ஙனம் அரசர்களும் வணிகரிறுதியாக உலகிலுள்ள யாவரும் காந்தருவ தத்தையை வீணையிலே வெல்ல விழைந்து விரைந்து நெருங்கி வந்து இராசமாபுரத்தின் மறுகினும் மூலை முடுக்குகளினும் பாவாற்றி போல நிறைந்தனர். அவர்கள் நிறைந்தது, தேனை விரும்பி மொய்த்த மதுகரங்களின் கூட்டம் போல இருந்தது.

எல்லோரும் வந்து நிறைந்தவுடன் சுயம் வர மண்டபத்திற்குத் தன் வீட்டிலிருந்து தத்தை செல்லும் வழியைத் திருத்தத் தொடங்கினுன் சீதத்தன். முதலில் ஐந்து விற்கிடை அகலத்திற்குத் தெருவைச் சீர் செய்து, நறுமண நீரால் எழுந்த துகளையவித்துப் பன்மலரையும் பரப்பினர். அம்மலரின் மேல் விலைவரம்பறிதலில்லா வெண் துகிலை அம்மடந்தையின் மெல்லடிப் பரிவு தீரச் சேர்த்தனர். அத்

துகிலின் மேல் அனிச்சமலரை ஐம் முழ அகலத்திற்குப் பரப்பினர். அவன் செயல் நிலவுலகில் தன் போன்றவர் களைச் செல்வத்தினாலே வறுமை செய்வது போலிருந்தது.

**காந்தருவதத்தையின் புனைவு**

இனி, வீணாபதி யென்னுந் தோழி வட்டமாகிய முழு மதியின் அருகே வியாழனைப் போல ஒரு குண்டலம் விளங்க நின்ற பொற்கொடியை அணுகித் தொழுது, அவள் மண மலர்க் கூந்தலை நீவியவாறு, அவட்கு நாணத்தால் வரும் கலக்கம் நீங்கப் பண்டைய மணங்களை யெல்லாம் உலகிய லுடன் கலந்து கூறினாள். மற்றும், 'மணியை இருதலையிலும் சுமந்த பிறையோ என்னுமாறு இருமருங்கினும் மணி கோத்த முத்துமாலையைப் பொருத இடையையுடைய பாவையே! உனது மகரயாழாகிய மலையினின்றும் குதித்த பாலையெனும் பண்ணாகிய நீர்ப் பெருவெள்ளத்திலே வந்திருக்கும் அரசரெல்லோரும் அழுந்துதல் உறுதி, இதனையான் நன்கறிவேன்,' என்று தேறுதலுங் கூறினாள்.

நிற்க, சந்திராபரண மென்னும் நூலினைக் குற்றமற நுணுகி ஆராய்ந்த, வியாழனைப் போன்ற விரிச்சிகன் ஒருவன் நன்னாள் கண்டு, 'நில மெங்கும் மக்கள் வந்து குழுமினர். ஆதலின், உரோகிணியுடன் திங்கள் கூடிய வியாழக் கிழமையிலே நம் நங்கையின் வீணைப் போரைக் காண்போம்,' என்று சீதத்தனுக்குச் செப்பினான். சீதத் தனும் பதுமையுடன் நடைமுறையை ஆராய்ந்து வறியோர் வறுமை தீர மூழ்குமாறு பெரும் பொருட்குவையை நல்கினான்.

இந் நிலையிற் பணிப்பெண்கள் தம் மாந்தளிரனைய விரல்கள் சிவப்பேறும்படி நறுமண நெய்யைத் தத்தையின் மெய்யெங்கும் பூசி, வெள்ளி லோத்திர மென்னும் மலரின் உலர்ந்த இதழை அரைத்த சாந்தைக் குற்றமற்ற குவளை யின் அழகிய அகவிதழ் பயிலத் திமிர்ந்தனர். பிறகு, மணியைச் சாணை பிடிப்பது போலத் தத்தை நயக்குமாறு ஓமாலிகைகளையும், சந்தனமும் அகிலும் கருப்பூரமுங்

கத்தூரியுங் குங்குமமுமாகிய ஐவகை விரைகளையும், பத்துத் துவர்களையும் பூசினர். பூசிய பின்னர்க் களிற்றின் மீது கங்கையிலிருந்து கொணர்ந்த நறுமண மங்கலநீரைக் கதிர்விடும் பொற்குடங்களிலிருந்து சொரிந்து நீராட்டினர்.

நீராட்டிய பிறகு, வெண்முகிலினுள்ளே கிடந்த மின்னுப் போலத் துகிலுக்குள்ளே கலாபத்தைச் செறித்தனர். மார்பினுந் தோளினுஞ் சந்தனக் குழம்பைப் பூசினர். தெளிந்த நிறத்தையுடைய சிலம்பையுங் கிண்கிணியையும் அடிகளிலே பூட்டினர். கற்பிற் கறிகுறியாகிய முல்லைக் கண்ணியைத் தலையிலே சூட்டினர். வானவில்லென விளங்குமாறு முத்துவடத்தை மார்பிலே அணிவித்தனர். சிறு புறத்திலே (முதுகிலே) மணிச் சுண்ணத்தைச் செறியத் தீட்டினர். அதனையே மார்பிலே விரல் நுனி கொண்டு மெல்லிதாகப் பூசினர். இங்ஙனஞ் செய்ததாலே தத்தையின் மெய் ஒளிவிட்டு மணிபோல விளங்கியது. ஆழ்ந்த கயத்தை வானிலிருந்து தன்னைப் பற்ற நோக்கும் சிச்சிலிப் பறவைக்கு அஞ்சிக் கயத்தை விட்டு நீல மணியாகிய நெருங்கிய வில்லிரண்டு காப்பத் திங்களை இடமாக் கொண்டு பிறழ்ந்து கிடக்கும் கயலல்ல, இவை கண்களே யென்று பிறர் துணியுமாறு கண்களின் கீழே * கரி போக்கினர்.

இங்ஙனம் பொற்றாண்கள் நான்காற் பொலிந்து, நூற் புலவரின் செந்நா வருந்தியும் புகழ்தற்கியலாத மரகத மணியாலான கூடத்திலே அமர்ந்து ஒப்பனை செய்யும் பணிப் பெண்கள், இந்திரன் சமைத்தாற் போன்ற ஒப்பனையைச் செய்த பிறகு, தத்தை திருமகட் கிட்ட பொட்டெனச் சிறந்து விளங்கினாள்.

**தத்தை மண்டபத்திற்கு வருதல்**

விண்ணவர் நெஞ்சு நெகிழ்ந்துருகுந் தன்மையையுடைய வளைத் தோளி, யாழேந்தி வந்திருக்கும் மூவகை மக்கட் படையையும் வெல்வதற்கு, மண்ணுதல் செய்யப்

*கரிபோக்கினர் — மையிட்டனர்; சான்றமைத்தனர் (சிலேடை)

பெற்ற திரண்ட முழவம் முழங்க, சிறிய வாரால் கட்டப் பெற்ற முரசம் இடியென ஆர்ப்பச் சுயம் வர மண்டபத்தை நோக்கி வந்தாள்.

அவளுடன், பரவிய ஒளியை உமிழும் பொற் கண்ணாடியும், கொடியும், அங்குசமும், இருளை ஒழிக்கும் செம்பொன் விளக்கும், முரசும், நிறை குடமும், மதியைப் பிளந்து கதிர் கொண்டு தொகுத்தாற் போன்ற கவரியும், இணைக் கயலும் ஆகிய எண்வகை மங்கலமும் போந்தன. மற்றும், வென்றவன் மார்பிற் பூட்ட ஒளிவிடும் மணியாற் செய்த செப்பிலே பொன்மாலை வந்தது. அதன் பின் சுரும்புகள் முரலும் மாலையணிந்து நகரம் அழகுற யாழ்கள் வந்தன.

தத்தைக்கு முன்னாக, அணிந்த முத்தாரம் அசைய, உடுத்த உடை நெகிழ, வீர முண்டாக விலாப்புடைக்குள்ளே கையை வீசித் தேரைகள் நடப்பன போலக் குறளுஞ் சிந்தும் போயின. வட்ட மான பனிச்சையும், வாரால் கட்டிய கச்சும், பட்டுடையும், பல்கணை செறிந்த தூணியும் வில்லும் உடைய மகளிர் ஆயிரத் தெண்மர் அக்குறளுக்குஞ் சிந்துக்கும் பின் சென்றனர். அவர்கட்குப் பின்னர் மார்புக்கச்சை யிறுக்கிக் கட்டி, ஆணுடையணிந்து, அம்பினுங் கடிது செல்பவராய்க், கேடகமும் வாளும் பற்றியக்கையராய்க் காவல் மகளிர் தத்தையைச் சூழ்ந்து சென்றனர்.

தத்தை செல்லும்போது இருபுறமும் நெருங்கியபொது மக்களைக் காவற் குரியோர், ' ஆணை ! ஆணை ! அகலு மின்,' எனக் கூறி மூங்கிற் கோலால் தள்ளினர். ஆனால், ' விண்ணவரும் மண்ணவரும் எள்ளிட இடமின்றி நெருங்கியது தத்தையின் அழகு வண்ணங் காண்பதற் கன்றோ? ஆதலால் ஆராயின் யாமும் கண்ணினோடு பிறந்தது தத்தையின் அழகைக் காண்பதற்கேயாயிருக்கும். மற்றும், நீர் எங்கட்கு விருந்து செய்தாற் போல எம்முடைய ஆணையே ஆணையாக் கொண்மின் !', எனக் கூறி விலகாமல் நெருங்கி நின்றனர்.

**கண்ட மன்னர் கலக்கம்**

"புனத்திலுள்ள முல்லை யரும்புகள் இளைஞர் உயிரை யுண்ணும் எண்ணங் கொண்டு தம் இனத்தைச் சேராமல் அழகிய பவளத்தினுள்ளே புகுந்து மலர்ந்தன போலும் அழகு மிக்க பவளச் செவ்வாயையும் ஒளி மிக்க பற்களையும் கண் மலரையும் கண்டோர் பேரின்ப வீட்டை விரும்பார் போலும்.

'விண்ணில் ஒளிரும் மீன்களைப் போல் ஒளிரும் மணிகள் கோத்த மேகலையும் விருப்பமுண்டாக்கும் இள முலைகளுங் கூற்றம்! கூற்றம்!! உடலிடை உயிர் வாழ விரும்பியவர்கள் ஓடிப் போமின்! உரைத்தோம்', என்று மணங்கமழுங் கோதையினள் காலைச் சூழ்ந்து கைவிடாமற் புலம்புகின்ற கிண்கிணிகள் பொன்னாயிருப்பதற்குத் தக்கனவே.

கள்ளைப் பெயப் பெற்ற மலர்மாலை யணிந்த கூந்தலையும், பார்த்தோர் பதைக்குமாறு மதுபெய்த இரு மாணிக்கச் செப்புக்களை யீன்ற மார்பினையும், அன்னத்தின் குரல்போல ஒலிக்குஞ் சிலம்பினையும் உடைய இக் கொடியைப் பெற்றவள் இவ்வுலகுக்கோர் கூற்றினையின்றாள்! இது கொடிது!

இவள் செந்தாமரைத் திருமகளோ? கொடிய நோக்கினையுடைய காந்தருவ மகளோ? குற்றமற்ற வானவர் மகளோ?"

—இங்ஙனஞ் சில மன்னர்கள் ஐயமுற்றுரைத்துக் கொண்டிருந்தனர்.

சிலர், 'எம் உறுதி மொழி கேண்மின்! இவளை வீணையால் வென்று தழுவுதலன்றி, ஒருவன் வலிதிற் கொளக் கருதின் மாறுபட்ட போர்த்தீயில் முழுகுவேம். அல்லது, இவளையடையத் தகைசான்ற தவம் புரிகுவேம்,' என்றனர்.

சிலர், 'இங்குலிகச் செப்பனைய இவள் முலைகள் எம்மை நலியும், அதுவுமன்றித் தன் அழகிய கண்ணம்பு

களால் நன்றாக வலிய வாங்கி எம்மை யெய்தாள். எனவே இனி யாம் வாழ்கலேம்', என்றனர்.

சிலர், 'இயல்பான சிவப்பால் அரக்கை உருக்கி யூட்டி னாற் போன்ற நிறத்தையுடைய சிற்றடிகளை அனிச்சமலர் களின் மேல் மெல்ல நீட்டிவைத்து வந்து நின் அழகினைக் காட்டி எம்மைக் கொன்றனை', என்று கைதொழுது பறி போன நெஞ்சுடன் உழன்றனர்.

சிலர், 'மணமிகு மலர்க்குழலாளின் திங்களென மதித்த முகத்திலே உள்ள கண்களும் வாயும் புருவமும் பற்களும் சேலையும் பவளத்தையும் சிலையையும் முத்துக் களையும் போன்றவை. மெல்லிய மார்பிலுள்ள முலைகளும் சுணங்கும் கோங்கரும்பையும் ஒட்டற்ற பொன்னையும் போன்றவை. அகங்கைகள் குழிவின்றி நெய் தோய்த்த தளிரினைப் போன்றவை. இவளுடைய சிற்றடிகள் தாமரை மலர் போன்றவை. எனினும், இவை வருத்தும் வருத்த மொன்றுமே எம்மாலறியப் படவில்லை', என்றனர்.

சிலர், 'மீனக் கொடியையுடைய காமனும் மயங்கும் இவளை வானவர் மகளென்னுமல் மாறுபட்டுணரப் பொன் மகரமீன் வாயிலமைந்த முத்துவடம் தோட் கட்டில் விளங் குவதும், மகரக் குழை ஒளிவிட்டுக் கூத்தாடிக் காதில் இலங்குவதும் என்னே?' என்பார்.

சிலர், 'கண்களிமைக்கின்றனவே வானவர் மகளெனல் எங்ஙனம்?' என அவரை நோக்கி, 'இவையோ இமைக்குங் கண்கள்?' என அவர் கூற்றை மறுத்தனர். காந்தருவ மகளானதால் மண்மகளின் வேறுபட்ட நோக்கம் அவளுக் கிருந்தது.

வயிரக் கற்களைக் கொழிக்கும் நீண்ட அருவிகளை யுடைய குன்றின்மேற் செஞ்ஞாயிறு போல, நீள் வயிர வெண்மருப்பினையுடைய கரிய களிற்றின் மேல் இருந்த பல மன்னர்கள் வயிரக்கலன் அணிந்த தோளைத் தூக்கித் தொழுதவாறு, 'நிரைத்தார் பொங்க வயிரவாளை வென்ற

இம்மட நோக்கியைப் பெறுவார் யாவரோ?' என அழுது நைந்தனர்.

இங்ஙனம் இவர்கள் அவலமுற்று வருந்தியிருக்க, அழகிய செந்தாமரையில் திருமகளைப் போன்ற தத்தை யானவள், நிமிர்ந்த பசும் பொற்கொடி போன்ற பாவையின் அழகாகிய தளிரையீன்று செம் பொன்னை மலர்ந்து, இளைஞர் கண்களாகிய மணிவண்டுகள் உழல அம்பொற் சிலம்பொலிக்க அன்னம் போல் மெல்ல நடந்து சென்று மண்டபத்தினை அடைந்தாள்.

**அவைவணக்கப் பாடல்**

பட்டினாலாகிய பல நிறத் திரையை வளைத்து, நறுமண மலர்மாலை பலவற்றைத் தூக்கி, மணம் நீங்காத சந்தனத்தினாலே நிலத்தை மெழுகி, மெல்லிய மலர்களைத் தூவி, நறும் புகையிட்டு, இள மங்கையர் வாழ்த்த வானவர் மடமகளென அமர்ந்து, குற்றமற்ற யாழை யெடுத்துப் பண்ணை யெழுப்பி நரம்பைத் தெறித்தாள் காந்தருவ தத்தை. அவ்வளவிலே கின்னரரும் மெய்ம் மறந்து வந்தடைந்தனர்.

"புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண் (டு)
அன்புகொள் மடப்பெடை அலமந்தாங் ககல்வதனை
என்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத்
தன்பெடையைக் குயில்தழுவத் தலைவந்த திளவேனில்

"தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்ததனைக்
கண்டானு மடப்பெடை கிளியெனப்போய்க் கையகல
நுண்டுவி யிளஞ்சேவல் நோக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில்

"குறுத்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி
வெறுத்தாங்கே மடப்பெடை விழைவகன்று நடப்பதனை
மறுத்தாங்கே சிறகுளர்ந்து மகிழ்வானுக் கொளத்தேற்றி
உறுப்பினா லடிபணியத் தலைவந்த திளவேனில்"

—இவ்வாறு (ஒரு பொருள் மேல் மூன்றடுக்கிய கொச்சக வொருபோகு) பாடினாள்.

**வீணாபதி அறிக்கை**

தத்தை பாடி அமர்ந்தாள். உடனே தோழியாகிய வீணாபதி யெனும் பேடி அங்குள்ளாரை நோக்கி, 'வேற் கண்ணியாகிய தத்தை பாடினால் இங்குள்ள வீரர்கள் அப் பாட்டிற் கேற்ப யாழின் நரம்பிலிருந்து இசையை யெழுப் புக! அன்றி அவள் யாழிசைத்தால் வீரர்கள் வல்லவாறு பாடுக!' என்றாள்.

**அரசிளங் குமரர் வீணாபதியை நகையாடல்**

அவ்வாறு கூறிய வீணாபதியை நோக்கிய மைந்தர் களிற் சிலர், இவள் மெல்லிய தோள்கள் வேய்போன்றவை. வளைந்த புருவங்கள் வில்லைப் போலுள்ளன. வாய் பவளமனை யது. சிறந்த மேனி மாந்தளிர் போன்றது. எனினும் முலை கண்டிலேம். அவற்றைச் சுமத்தல் இவட்கு வருத்தம் போலும்!' என்றனர். அருகிருந்தோர், 'ஏஏ இவள் பேடி போலும்! என்றனர். மற்றுஞ் சிலர், 'தத்தையுடன் வந்தா ளெனக் கேள்வியுற்ற பேடி இவளேயாம்,' என்றனர்.

**வீணாபதி விடை**

தன்னை நகையாடுவதைக் கேட்ட வீணாபதி, 'இவள் கண்கள் இப்பொழுதே மைந்தரின் உயிர்ப்பலி கொண்டு பேராத காலபாசம் போன்றன. இவளோ விரைந்து சென்று உயிரை யுண்ணுங் கூற்றமாவாள்,' என்று கருதி 'நான் முகனார் எனக்கு முலையை மறைத்து வைத்தார்,' என்று கூறிச் சென்று திரையில் மறைந்தாள். இவ்வகையா லுண் டான ஆரவாரத்தை யெண்ணி நகைத்த தத்தையும் அவை வணக்கம் புரிந்த இடத்தை விட்டுப் போருக்கென அமைத்த மேடைக்கு வந்து திரை மறைவிலே அமர்ந்தாள்.

**வீணைப்போர்- அரசரின் தோல்வி**

காமவல்லியனைய தத்தை அரங்கினிலே யாழேந்திய மகளிரின் இடையே அணையில் அமர்ந்தும் பணி மகளிரின் திரையை நீக்கினர். தத்தைக்கும் அரசர்கட்கும் இடையே பளிக்குச் சுவரொன்றே யிருந்தது. அச் சுவர்

இருபுறத்திலிருப்போரும் பார்க்கத் தக்கவாறு அமைந்தது. எனவே, பளிக்குச்சுவரின் மறுபுறத்திலே தத்தையைக் கண்ட மன்னிளங் குமரர்களின் மலர்க்கண்ணிகள் அவர்களுடலில் தோன்றிய காமத்தீயினாற் கருகின.

இனி, அழகிய சிறு நுதலாள் தெய்வப்பாவை போலிருந்து, இசைக்கலையியல் வழாமல் யாழை வாசித்து அதற் கேற்பப் பாடினாள். அப்போது கனிவுற்றுருகிய தழைத்த பொழில்கள் வளர்ந்தன. தூண்கள் தளிரையீன்றன. கின்னர மிதுனப்பறவைகள் மெய்ம்மறந்து நிலத்திடை வீழ்ந்தன.

அவள் பாடுவதை நோக்கிய அரசர் முதலாயினோர், * கரிய கொடியனைய புருவங்கள் நெற்றியில் ஏறா! நீண்ட கயற் கண்களும் ஆடா; அழகிய மிடறும் விம்மாது; அழகிய முத்தனைய பற்களும் தோன்றா! ஆதலால் இவள் பவளமனைய செவ்வாய் திறந்து பாடினாளோ? அன்றி யாழே தனக்குரிய நரம்பொடு உடல் வீணைக்குரிய நாவாலும் பாடிற்றோ? என்று நைந்தனர்.

இவள் பாடி நிறுத்திய பிறகு, இசையிலே காமனையனைய அரசிளங்குமாரர்கள் - குற்றமற்றவர்கள் - சிறந்த அழகிய யாழையிசைத்து, எடுத்துப்பாடினர். உடனே, கின்னரப்பறவைகள் (அவள் பாட்டில் மயங்கி நிலத்தில் வீழ்ந்தவை) வெருவி, அவரை நகைப்பனபோற் பெருவானிலே பறந்து சென்றன.

பிறகு, தத்தை யாழிசைத்தாள்; அப்பறவைகள் வந்தன. மைந்தர்கள் யாழிசைத்தனர்; அவை திரும்பிப் போயின. தத்தை வாயாற்பாடினாள்; பறவைகள் புகுந்

---

*' கண்ணிமையா; கண்டந் துடியா; கொடிறசையா;
பண்ணளவும் வாய்தோன்றா; பல் தெரியா;— எண்ணிலிவை
கள்ளார் நறுந் தெரியல் கைதவனே! கந்தருவர்
**உள்ளாளப் பாட** லுணர்' — என்று இசை மரபு என்னும்

நூல் கூறுவதால் தத்தை பாடியது உள்ளாளப்பாடல்.

தன்; தாதியன்ற மலர்த்தாரினூர் பாடினர். உடனே, அவை திரும்பிப்போயின.

**அந்தணரும் வணிகருந் தோற்றல்.**

சுரும்புகள் தேன்பருகி முரலும் மாலையணிந்த குழலி னுட்கு மன்னர் மைந்தர்கள் இங்ஙனந் தோற்ற பின், யாழினைப் பயின்ற நான்மறையாளர்கள் போர்தொடங்கினர். அழகிய தாமரைமலரிலே தேன்வண்டுகள் முரல்வது போல விரிமலர்க்கோதை பாடினாள். அதற்கேற்ப யாழிசைக்க வியலாமல் அந்தணர் தோற்றனர். பவளச் செவ்வாயினாள் யாழிசைத்தாள். அதற்கிசையப் பாட முடியாமல் வணிகர் தோற்றனர்.

மற்றும் காந்தளின் செவ்விய அரும்பனையவாகி யாழ் நரம்பினைத் தடவிச் சிவந்த விரலினையுடைய தத்தையுடன் இயற்றிய வீணைப் போரில் நுண்ணூல் வணிகரும் அந்தணரைப்போலவே மற்றையோரும் தோற்றனர். ஆகவே, அந்தப் பேரவைாடைக்காற்றுற் கருகிய தாமரைப் பொய்கை போன்றது.

அப்பொழுது, மணமிகு மாலையணிந்த கட்டியங் காரன் அவையிலுள்ளோரை நோக்கி, 'இனிய மகர யாழிசையிலே இவளை வெல்லத்தக்கவன் வானவரின் அறிவை வாட்டும் நீண்ட கருப்புவில்லையுடைய காமனுகவே யிருத்தல் வேண்டும். இவ்வுலகில் வேறு எவனும் இல்லை போலும். எனவே, இனி யாழிசைக்கும் போர் நிற்பதாக,' என்றான்.

**சீவகன் வருகை**

முயலைக் காப்பாற்றத் தன்னிடத்தே மறுவினைக் கொண்ட நிறைமதி, இராகு என்னும் பாம்பினாற் பற்றப் பட்டு ஒளி குறைந்தாற்போல, மன்னரெல்லாம் ஒளி குறைந்து வாட இவ்வாறு ஆறு நாட்கள் கழிந்தன. இனி, வணிகர் தலைவனான கந்துக்கடன் சிறுவன் சிங்கவேறு போன்ற சீவகன் தன் தம்பியராகிய (கந்துக் கடன் மகன்)

நந்தட்டனும் (சச்சந்தன் காமக் கிழத்தியர் மக்களாகிய) நபுல விபுலரும், தோழர்களாகிய பதுமுகன், புத்திசேனன், சீதத்தன், தேவதத்தன் என்போரும் ஒன்றாகக் குழீஇ யிருந்தபோது ஆராய்ந்து, அரசர் முதலானோர் "வெம்பிய இவ்வீணைப் போர்க்கு யாமும் செல்வோம்," என்று முடிவு செய்தான். பிறகு, புத்திசேனனை நோக்கி, "வீணைப் போருக்கே செல்கின்றான். 'கன்னியிடம் வேட்கையாற் செல்கின்றானல்லன்,' என்று தந்தையாரிடங் கூறுக," என்று கூறி விடுத்தான். அங்ஙனமே அந்தணன் மகனாகிய புத்திசேனன் கந்துகனிடங் கூறினான்.

கந்துகன், 'நம் ஐயனுக்கு வையகத்திலே அமிர்தம் போன்றவர் அறுபத்துநால்வர் நீக்கமிலாத கொல்லிப் பாவையன்னார் முன்னரே இயைந்துள்ளனர். எனவே, யாழ்வாசிக்கச் செல்ல ஏதுங் குறையிலன். எனினும், உலகம் அவனை மிகுத்துக் கூறுதலால் ஒரு குறையுளது,' என்று கூறிக்கொண்டிருக்கும்போது, அரண்மனையி லிருந்து பிறை நுதலாளாகிய பெண்கொடி யொருத்தி வந்தாள். அவள் தன் கூந்தலாகிய உறையிலிருந்து பசிய இதழையுடைய நீலமணி போலும் குவளைமலரொன்றை யெடுத்துக் கொடுத்தாள். அதனைக் கந்துகன் (கூந்தலி லிருந்த பூவென்று) இகழாமல், நாகமாலை யென்பவளால் அனுப்பப்பெற்ற இதன் குறிப்பில் ஒரு பொருளுண் டென்று கருதிக் கையில் வாங்கிக்கொண்டான்.

அக்குவளை மலரினுள் ஓரோலையிருந்தது. அதனை யெடுத்து (முன்னரே நாகமாலைக்குந் தனக்குமுள்ள குறிப் புப்படி) அக்குவளை யிதழை இருப்புக் கம்பியாக அமைத் துக்கொண்டு ஓலையை அதன்மேல் வரி ஏற்றி ழிவுபடாத வாறு துகிலிகைக் கிணக்காலெழுதின எழுத்தைப் பார்த் துச் சுற்றினான். ஒழுங்காக அமைத்துக்கொண்டு படித் தான். அவ்வோலையில், 'கட்டியங்காரன் நஞ்சுண்ட கடவுள் போல வெம்பினான். நம்பியைச் செகுத்திட வேண்டு மென்று என்னிடங் கூறவுஞ் செய்தான். இனி, நம்பியை

நகரினின்றும் நீக்கிக் காவலான ஓரிடத்திலே இருத்துக,' என்றெழுதியிருந்தது.

அதனைப் படித்த கந்துகன் அப்பெண்ணுக்குக் குழையும் முத்தும் நல்கி, 'மாலையினும் அங்கு நிகழும் நிகழ்ச்சியை ஒற்றி வந்துகூறுக,' என்று விடுத்துப் பின்னர், * புத்திசேனனை நோக்கி, 'மேலை நாட்பட்ட தொன்று விளம்புவல் கேள்,' என்று கூறத் தொடங்கினான்:

ஒருநாள், இயலாசிரியனும் யாழாசிரியனும் இசையாசிரியனும் குழலாசிரியனும் தண்ணுமையாசிரியனும் என்ற நடையறி புலவர் அரசனுடன் சூழ்ந்து இந்நகரில் ஒரு நாடகங்காண விழைந்து, அரங்கினை யணிசெய்தனர். பிறகு, சீவகனுக்கும் அவன் தோழருடன் வருமாறு கூறி விடுத்தனர். அவ்வாறே சீவகன் சென்றான். ஆங்கு, நாடகமாடும் அனங்கமாலை யென்னும் பைந்தொடி பன்னீராண்டே நிரம்பியவள்; பேரழகினள். அவளை அரங்கிற் கேற்ப அணியவல்லவன் சீவகனே யென எண்ணி அவனைக் கேட்டுக்கொண்டனர். அவனும் முறைப்படி நெற்றிப்பட்டங்கட்டி, முடிக்கண்ணி சூட்டி, மார்பிலே குங்குமச் சாந்தையும் முத்தாரத்தையும் அணிகலன்களையும் அணிந்து, பொருந்திய செம்பட்டுடன் ஆடையணி செய்தான். மற்றும், இந்திரவில்லென ஒளிவிடும் குண்டலம் பொற்றோடு ஆகியவற்றைத் திங்களையொப்ப முகம் ஒளிர அணிவித்தான். பிறகு, காற்சரியுஞ் சிலம்புஞ் செம்பொற் கிண்கிணியும் அடியிலே பூட்டினான்.

சீவகனால் அணியப்பெற்ற அவள் அவனிடம் விருப்பம் பெரிதும் உடையவளானாள். அவன் தன்னைத் தீண்டி அணியும்போது புளகமும் நாணமும் உற்றாள். பிறகு, முழவும் யாழுங் குழலும் ஒலிக்கக், காற்றிலசையும் பூங்கொடிபோல வந்து, திரையை நீக்கிவிட்டுக், கைத்தலங்கள்

* இக்கூற்றைப் புத்திசேனனுக்கு அரண்மனையிலிருந்து வந்த பெண்ணே கூறுமாறு போல அமைத்து உரை கூறுவர் நச்சினார்க்கினியர். பாட்டின் போக்கு அதற்கு இடந்தரவில்லை.

காட்டித், தெய்வத்தை மேலே அச்சத்துடன் நோக்கிக் கூத்திற்குரிய முகத்துடன் தோற்றினாள். அவ்வளவிலே அவையோருளத்தை யெல்லாம் அசையச் செய்தாள்.

தெளிந்த தேன்துளியும் வண்டும் சிதற, முழு மதியுடன் நட்புக்கொண்ட குவளைபோலும் அழகிய கண்கள் வெருண்டு பிறழ, வானிலிருக்கும் தெய்வங்கள் நிலத்திலே விழ, அவள் ஆடும்போது அவளுடைய புருவ வளைவினுக்கே அவையோருள்ளம் பண்விட்டுத் தடுமாறியது.

செவ்வொளி பொழியுஞ் சிலம்புகளும் பொற்கிண் கிணிகளும் சிலம்பின. பூங்கோதை பொங்கியது. பொன்னாலாகிய தோடு மின்வட்டத்தை யெழுப்பியது. குண்டலம் மார்பிலணிந்த குங்குமச்சாந்தைப் பூசிக்கொண்டு செவ்வொளி பரப்பியது. அழகிய ஒளிவிடும் ஆரம்மின்னியது.

இங்ஙனம் அவள் ஆடுவதை நோக்கிய அவையோர் அறிவைப் பறிகொடுத்துப் பலவாறுகத் தம்முள் பிதற்றிக் கொண்டனர்.

அவர்களின் பிதற்றல்கள் :

"இவளுக்கிருப்பது ஓரிடையே; வேறிடையில்லை. இவளன்னைக்கும் இவள் ஒரு மகளே ; வேறு மகள் இலள். இவ்வுண்மையை நன்குணர்ந்தும் இங்குள்ள இரும்பினாலாகிய வுள்ளமுடைய இக் கொடியோர் அமர்ந்து வீணே பார்த்துக்கொண்டிருக்கின்றனரே ! இரக்கமின்றி யிவர்கள் இக்கூத்தை நிறுத்தாமல் முடிவுவரை கண்டிருப்பர் என்றறிந்தும் அரங்கின்மேல் இவளை விட்ட அன்னை கொடியளோ? வண்டுமுரலுங் கண்ணி சூட்டி விட்டவர் கொடியரோ? சொல்வீராக!"

"அகிற் புகையன்றிச் சந்தனம் பூசாள். மலர்களின் அருகினும் அணுகாள். வெளிப்படையாக முலையென்னும் பகையை வளர்த்துக்கொண்ட இப்பாவைக்குச் சிற்றிடையொன்றும் உளது! பாவம்! மற்றும் பகைகெண்ட முலைகளின்மேற் சாந்தினலெழுதி முத்தாரமணிந்து பூவும்

அணிந்தனர். மின்போன்ற இடையும் முகிலனைய குழலும் உடைய இவள் நற்றாய் இந்நிலை கண்டும் உயிருடன் பொறுத்திருக்கின்றனளே! என்னே பாவம்!''

"நம்மைக் கொல்லுவதற்கே கொடியவர்கள் குளிர்ந்த முத்தாரஞ் சூட்டிவிட்டனர்! குங்குமக் குழம்பையும் அப்பி வைத்தனர்! எப்போதும் தம் காற்கீழ் வாழ்வாரை உலகம் அழிக்குமாயின் அம்முலைகளும் நம்மை அழிக்க அமையும்,'' என்று கருதித் தான் முறியாத அளவிலேயே இடையும் உண்டென்று நினைக்குமாறிருந்தது. இக் கொடுமையைக் கண்டும் இனிதமர்ந்து காண்பாரும் உளரே! திருமாலின் மகனை காமன் தன் வில்லையும் அம்பையும் வைத்திருக்கின்ற இது முகமோ? முழுமதியோ? பார்மின்!''

மற்றும், "தேன்சொரியும் மலர்த் தாமந்தாம், செம் பவளத் தாமந்தாம், செம்பொன் தாமந்தாம், ஒளிவிடும் மாணிக்கத் தாமந்தாம்,'' என்று கண்டோர் கூறினும் இது மேகலையையுடைய தாமமே யென்று உடனிருக்கும் தோரிய மடந்தையர்க்கு வெளிப்படுத்தி அவர்களிருக்கும் அருகிலே மலர்க் கொம்பனையாள் ஆடுவதைக் கண்ட பலரும், "இவள் புனமயிலே, அன்னமே, பொன்னங் கொம்பே, தாமரை மலர்த் திருமகளே, அன்றேல் விண்ணவர் மகளே,'' எனப் பலவாறு மயங்கினர்.

மற்றும், இருட்கற்றையனைய நெய்பருகி நீண்ட குழற் கற்றையைக் கண்டு சிலர் நிலைகெட்டுத் தவிப்பர். மையுண்டு நீண்ட மதர்த்த கண்ணாகிய வாளால் தாக்கப்பெற்று வருந்துவர். பலரும் பக்குவமாகிய பாவையனையாளின் கூத்தை நோக்கி மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம வெயிலிலே வெண்ணெய்ப் பாவைபோல் உருகி நின்றனர்.

இங்ஙனம் ஆடவரின் உள்ளங்களாகிய அரங்கின்மேல் ஆடிய அனங்கமாலை (யாவரும் தன்னைக் கண்டு உருகியும் உருகாத சீவகன் நிலைகண்டு அவன்மேல் வேட்கை மிகுதலால்) தன் மேனி வாடியவாறும் நோயும் உரைத்து, நெடுங்

கண்களென்னும் ஓலையை எழுதி அதனை முறுவல் என்னுந் தோழியின் கையில் கொடுத்துச் சீவகனிடம் விடுத்தனள். அவ்வோலைக்கும் அவன் திரும்பாமை கண்டு, 'சீவகன் கையினால் வளமலர் அணியப் பெற்றேன்! ஒளி பொருந்திய வளையல்களைத் திருந்த அணியப் பெற்றேன். மேகலை ஆடை முதலியவற்றை அணிவித்தலால் என் மேனியெல்லாந் தீண்டப் பெற்றேன். அதனால், இள முலை சுமந்து பெற்ற வருத்தமும் தீர்ந்தேன். சிலம்பு முதலியன அணிவிக்க அடிகளைப் பற்றியதால் ஊடல் மகளிர் எய்தும் இன்பமும் பெற்றேன். இனி, யான் பெறுதலொன்றில்லை,' எனத் தன் மனத்தைத் தேற்றிக் கொண்டாள்.

மற்றும், அவள் அரசனைச் சிறிதும் நோக்கிலள். அரசனும் இவள் ஆர்வம் சீவகன்பாற் சென்றிருப்பதைக் குறிப்பினால் உணர்ந்தான்; சீவகனிடம் சீற்றங் கொண்டான். கூத்து முடிந்தபின் தன் அரண்மனைக்கு அனங்கமாலையை வலிதிற் கொண்டு சென்றான். அங்கே ஊனைக் கொத்தும் காக்கை தேன் பெருகி யொழுகுஞ் செவ்வியையுடைய தாமரைமலரின் இதழ்கள் உகுமாறு குடைவதைப்போல அவ்விளங் கோதையை அவள் முல்லை (கற்பு) பெலாம் உகுமாறு பறித்திட்டான்.

ஆனால், அவளோ கட்டியங்காரனைச் சிறிதும் பொருட்படுத்தாமற் சீவகனை நினைந்து, 'வில் வீரனே! சீவக சாமியே! தாமரைக் கண்களாலே முலையிலெழுதிச் செவ்வாய் நல்குந் தேனைப் பருகிக் கலையை நெகிழ்த்துக் கன்னிமையை நீக்கித் தழுவ வல்லாய்! தழுவ வருவாய்!', எனக் கடலலைபோல இடைவிடாது கூவிப் புலம்பினாள்.

இங்ஙனம் தன் சேர்க்கையைச் சிறிதும் விரும்பாமல் தன் எதிரிலேயே பிறன் பண்பைக் கூறி அரற்றலைக் கேட்டும், சிறிய நறுமலர் மாலையாகிய அவள் மணத்திற்கு நான்குகாதத் தொலைவிலும் வருவதற்கு அறியாத அவன், மேலும் அவளுக்கு உருகினான். அத்துடன் அவளால் விஞ்சப்பெறுஞ் சீவகன்மேல் வெறுப்பு மிக்கவனும் ஆயினான்.

எனவே, அவன் அமைச்சரை விளித்து, 'அணிகலன் விளங்கும் மார்பினையுடைய கந்துகன் மகன் மலையனைய வேழம் நான்கினை வெல்லும் ஆற்றல் மிக்கானென உலகம் புகழ்கின்றது. அவன் இந்நகர்க்கு மன்னனோ? அவனிடம் உள்ள சிறப்பென்னை?' என்றான்.

அமைச்சர்கள், "மது விரிந்த மாலையினான் இந்நகரில் ஆயிரவர் கூடித் தொட்டெடுக்கவும் இயலாத உருண்ட கல்லொன்றை ஏந்தி ஆடினான். மற்றும் யானையால் எடுக்கவியலாத ஓரிரண்டு கற்களையும் இரு கையினும் மலரென ஏந்தி யெறிந்தான். கொடிய வில்லேந்திய வேடர் சூழ பெய்த அம்புமழையினால் நம்முடைய படை தோற்ற பிறகு, சீவகன் சென்று கணைமழை பொழிந்து பெரிய ஆநிரையைத் திரும்பிக் கொணர்ந்து, ஆயர்மங்கையரின் புகழ்மாலையைப் புனைந்தான். அன்று நாம் பசித்திருந்த போது, பருப்புச்சோறு ஆயிரம் மிடாவும் நறுநெய் வெள்ளமும் கன்னலும் நீங்காத ஆயிரங்குடமும் கொண்டுவந்து கொடுத்துப் பசியை நீக்கினான்," என்று கூறினர்.

எனினும், அரசன் சீவகனை யிகழ்ந்து கொல்லும் வழியையே நாடி நிற்கின்றான்.

ஆகவே, நாகமாலை குற்றமற அரசன் சூழ்ச்சியை அறிந்து கூறினாள்.

இவ்வாறு கட்டியங்காரன் சீவகன்மேல் நோக்கம் வைத்திருப்பதை எடுத்துக்காட்டிய கந்துகன் படையமைத்துக்கொண்டு சீவகன் செல்ல வேண்டுமென்று புத்திசேனனிடங் கூறி விடுத்தான்.

புத்திசேனன் சீவகனிடம் சென்று தந்தை யுரைத்ததை யெல்லாஞ் சாற்றினான். அவன் நகைத்து, 'நமக்குக் கெடுதி யொன்றும் நேராது. எனினும் தந்தை யுரைத்தவாறே செல்வோம்,' என்றான். உடனே தோழர்கள் புலித்திரளொப்பக் கூடினர்.

அப்பொழுது, நுதற்கட்பெருமான் சீற்றத்தால் அழலிலே முழுகிய காமன் மண்மிசைத் தோன்றினாற்போன்ற அழகுடைய சீவகன் மகளிர் நெஞ்சத்திலுள்ள நிறையைப் பருகுமாறு தன்னை யணிந்துகொள்ளத் தொடங்கினான்.

கரிய நெறித்த சிகையிலே அகிற்புகை கமழுமாறு ஊட்டினான்; வண்டுகள் முரலும் அழகிய மலர்க்கண்ணியை வலமாக மிலைச்சினான். அழகிய ஒளிவிடும் முகத்திற்கேற்ப ஒரு காதிலே செம்பொற்றோடும் ஒரு காதிலே எரிகிறக் குழையும் அணிந்தான். பொதியமலைச் சந்தனக் குழம்பை வரையனைய மார்பிலே அப்பினான். வலம்புரியாக முத்துமாலை யணிந்தான். மின் விரித்தாற்போல விலையிடவியலாத இனிய நுரையனைய ஆடையை இடையிலே எழுதினாற்போல அணிந்தான். இரும்பை நன்கு காய்ச்சிக் கருமை நீங்க வடித்துச் செய்யப்பட்ட சுரிகையைப் பூங்கச்சிலே கோத்தணிந்தான். இவ்வாறு செயற்கை நலஞ் சிறந்த முருகனைப்போலத் தோற்றினான்.

இனி, இவன் தோழர்களும் தம் மார்பிலே மணங் கமழுஞ் சந்தனம் பூசி, மலைவிழித்து நோக்குவதே போல ஒளிவிடும் முத்தாரமும் மணிக்கலன்களும் அணிந்து, நுரையைக் கிழித்தாலனைய மெல்லிய நுண்ணிய துகிலை இடையிலணிந்து, வாக்காற் புகழ்தற்கரிய ஓவியப்பாவை போன்றார்.

பிறகு, சிவந்த புள்ளிகளையுடைய நெற்றியுடன் காணப்படுதலின் இங்குலிக நீரைத் தெளிக்கப்பட்ட வரையனைய களிற்றின்மீது, மிகுவிரைவுடைய, ஊனைக்கிழிக்கும் புலிபாய்ந்தாற்போலத் தாவியேறிச் செஞ்ஞாயிறு ஒரு குன்றின்மீதமர்ந்தாற் போலச் சீவகன் அமர்ந்தான்.

உடனே, விரைந்துவிட்ட அம்பைப்போலச் செல்லும் புரவி பூட்டிய தேர்களும், கடுநடைக் குதிரைகளும், வடித்த முனையையுடைய வாட்படை மறவரும் சூழ்ந்துவர, அலையிடைப்பெற்ற சங்குகள் முழங்கச் சென்று யாழ் மண்டபத்தை யணுகினான்.

**யாழ்மண்டபம் அடைதல்**

அப்போது, அங்கிருந்த திரண்ட வளையல்களையுடைய மகளிர் கோதையுங் குழையும் மின்ன எங்கணும் பரவி நின்று தமக்கேற்ற வகையில், தத்தை தோற்றாள் எனவும், அழகியஇவள் இவனையடையப் நோற்றனள் எனவும் கூறு வாராயினர்.

அந்நிலையிற் சுறாமீன் வடிவமான குழை சுழன்று எருத்திலே அலையத் திரும்பி நோக்கி வியந்த பொறுமை மிக்க கட்டியங்காரனின் மனத்தைத் தன் அழகாகிய சவுக்கினால் அடித்துத் தோன்றிய சீவகன் வளைந்த பிறைத் திங்கள் போன்ற அங்குசத்தை அழுத்திப் பனிவரையனைய களிற்றை நிறுத்தி, மகிழ்வுடன் இறங்கி, வீரர்கள் இனி துற வாழ்த்த மண்டபத்தை அடைந்தான். அங்குப் புதி தாக இடப்பெற்றிருந்த பூந்தவிசின் மேலே நடந்து சென்று, புதிதாக இடப்பெற்றிருந்த வட்டமான அணை யின்மேற் பொலிவுற வீற்றிருந்தான். அத்தோற்றம் வெஞ் சுடர் திங்களின்மேல் ஏறிச்சென்று தன் வெம்மை நீங்கு மாறு உதயவரைமேல் அமர்ந்திருந்ததைப் போன் றிருந்தது.

**தத்தையின் தோழியர் மகிழ்ச்சி**

அப்போது, மணம் பொங்குங் கோதையராகிய தத் தையின் தோழியர் சீவகனைக் கண்டு, 'தத்தையின் நலத் தைப் பருகவேண்டிக் காமனார் ஐங்கணை பொழித்து வந்த னர்போலும்' என்று வியந்தனர். மற்றும், 'தவத்தின் மிக்க முனிவரின் தலைவராகிய நான்முகனார் அழகு மிக்க வர்களில் முதன்மை பெற்ற ஒருவனைப்படைக்க நெடுநாள் எண்ணியிருந்து படைக்கப்பெற்றவன் போலும் இவன். இவனுடைய மின்னிலங்கும் பூணணிந்த மார்பம் ஓலையாகக் கொண்டு, திருமகளின் சாயல்கொண்ட தத்தை தன் முலை களால் எழுதி அடிமை கொள்ளும்படி வீணை வெள்ளத் திலே அகப்பட்ட வியப்பை என்னென்பது!' என்று பாராட்டினர். தோழிகளேயன்றி அவையிலிருந்த யாவ

ருமே காமனைக் கண்ணுற் கண்டவர் 'எனையது எனையது எய்தினர் அனையது அனையது ஆயினர்'

**தத்தையின் கலக்கம்.**

ஆழமாகிய நீர் நிலைகளில் உள்ள குவளைமலர்களெல்லாங் கூடினும் முன்னிற்க வியலாத பேரழகுடைய கண்ணினளான தத்தை சீவகனைக் கண்டு, 'ஒளிபொருந்திய செந்தீயின் வடிவாகிய வேலேந்திய பெருவனப்புடைய இந்நம்பி - என்னையும் இந்நிலையிற் படுத்திய ஏந்தல் - யாவனோ?' என ஐயுற்றாள். பிறகு, 'யாவனேயாயினுமாக! நம் அறிவுக் கண்ணாலறியப்பட்டான். அக்கண்ணால் யான் நோக்கினவிடத்து என் கையிலகப்பட்டிருந்தான்' என அங்ஙனமிருந்தும், 'தனது வடிவழகை மத்தாக நாட்டி, வலியும் இளமையும் அம்மத்தினது இருதலையினும் பூட்டும் வாராகக்கொண்டு, ஒப்பனை செய்யும் அழகாகிய கடைகயிற்றை அம்மத்திலே பூட்டித், தாய்குலம் தந்தை குலம் என்னும் கைகளாலே காமமென்னுங் கடலைப் பொங்குமாறு கலக்கிக் கடைந்திடு காளையின் மார்பைத் தழுவும் நல்வினை எந்நாளிலே உண்டாகுமோ?' எனக் கலங்கினாள்.

அக்காலம் சிறிது நீட்டிக்குமென்ற உணர்வு வந்தவுடன், அதற்கு ஆற்றாதவளாய் நிறையென்னும் சிறையை மீறி, நாணமாகிய வேலியை எடுத்தெறிந்து, கடலெனப் பொங்கிய காமத்தீ யெரிய நின்றாள்; எரியுறு மெழுகென உருகினாள். அங்ஙனம் நின்று, உறையினின்றுங் கழித்த வேலால் ஏறுண்ட பிணைமான்போல் மாழ்கினாள்; விழித்தாள்; பெருமூச்செறிந்தாள்; நடுங்கினாள். பிறகு, மெல்லச்சென்று, தன் தோழியாகிய வீணாபதியின் கூந்தலில் உள்ள வண்டுகள் தப்பியோடும்படி, அவள் மேல் வீழ்ந்து ஒரு கொடியை மற்றொரு கொடி தழுவுவதுபோல் தழுவினாள்.

இவ்வாறு கையாறுற்றுத் தன் மனத்திற் புகுந்த சீவகனை, என் அரிய நிறையாகிய கதவைத்திறந்து, காவலு

டன் கூடிய என் உள்ளமென்னும் கன்னிமாடம் புகுந்து யான் நோவுறுமாறு என்னுள்ளத்தைப் பிணித்தாய். நின்னையும் மலர்க்கோதையாலே வானவரைப்போல இமையாது, என்னை] நோக்குமாறு பிணிப்பேன். சிறிது பொழுது கழிக' என்றுரைத்தாள்.

பிறகு, தன் உள்ளத்தை விளித்து, 'நெஞ்சே! நம் கண்ணாலே பருகப்பெற்று நலனை யுண்ணப்பெற்ற இந்த நம்பி தீங்கரும்பினிடத்தே தூங்கி, ஈயினால் நுகரப்படாமல் இருந்த இனிய தேன் போன்றவன். எனினும், பூங்குழல் மகளிர் முன் இவ்வாறு கலக்குற்றுப் புலம்பாதே' என்று தெளிவித்தாள்.

பிறகு, தன் தோழியை நோக்கி, 'இந்நம்பியின் கலைத் திறனையறிய வேண்டும். ஆதலால், இங்குள்ள பல யாழ்களையும் கொடுத்துச் சோதித்த பிறகு, இந்த இனிய யாழைக்கொடு' என்றாள்.

**வீணாபதி யாழெடுத்துக் கொடுத்தல்—சீவகனின் கலையுணர்வு.**

தத்தையின் ஆணைப்படி நல்ல யாழை நிறுத்திக் கொண்டு மற்றவற்றை யெடுத்துச் சீவகன் முன் வைத்தாள் வீணாபதி. அரியேறு போன்ற சீவகன் அவைகளை வரவேற்றுத் தன் கலையுணர்வினால் அவற்றை நோக்கினான். ஒவ்வொரு யாழையும் வண்டு முரல்வதுபோல நரம்பினைத் தடவி யிசையெழுப்பியவாறு அவற்றின் குறைகளை விளக்கினான் :

"கட்ட ஆதாரமின்மையாற் கச்சிளகும் முலையினாய்! இந்த யாழுக்குரிய மரம் நீரிலே நின்று மெலிவடைந்தது. இதன் மரம் நீரிலே கிடந்து அழுகியது. இது வாளால் வெட்டுண்டது. இது இடியால் தாக்கப்பெற்றது. இது கணிகை மகன்போல நிலம் மயங்கினவிடத்தே தோன்றியது. இது காமத்தீயால் வெந்தவர்போல் உழவராற் சுடப்பெற்ற கொல்லையில் வெந்து தாழ்வுற்றது. இது களிற்றால் முறிக்கப்பெற்றது"

என்று கூறி ஒவ்வொன்றையுந் திருப்பிவிட்டான். வியப்புற்ற வீணாபதி அகிற்புகை யூட்டப்பெற்றுத் துகி லுறையுள் இருந்த நல்யாழை எடுத்துக் கொடுத்தாள். அதனை வாங்கிய சீவகன் 'இது நின் தலைவியின் இயல் போல இனியது' என வாங்கிக்கொண்டான். மற்றும், இவ்யாழின் மரம் இருநில மடந்தை யீன்றது; பெரிய வானென்னுஞ் செவிலித்தாய் அழகிய மின்னுகிய பொன் னணியுடைய முகிலாகிய முலையாற் பெய்யப்பெற்ற மாரி யாகிய இனிய பாலையுண்டு வளர்ந்தது; வெயிலுங் காற் றும் நீரும் நிழலும் மிகுதலாகிய நோய் நான்கும் நீங்கி யது; வாளால் அரியப்பெற்றுக் கொண்டுவரப்பெற்றது' என்று தெளிவாகக் கூறினன்.

பிறகு, இனிய இசையை யெழுப்பும் நரம்பிலே குறை யிருக்கக் கண்டு, நீண்டபொழுது ஆராய்ந்து, தத்தையின் கண்காண அதன் முறுக்கையுடைத்து, அதிற்கிடந்த மயி ரொன்றை எடுத்துக் காட்டினன். அவையிலுள்ளோர் வியந்து 'இனி இச்செல்வனுக்குத் தேன் முரலுங் கூந்த லாள் தோற்றாளென்றே செப்பலாம்' என்று புகழ்ந்தனர். சீவகனே, தன் தம்பியாகிய நபுலன் கையிலிருந்த சேம நரம்பொன்றை வாங்கி யாழிலே சேர்த்தான்.

**சீவகன் யாழிசைத்துப் பாடுதல்.**

நூல்வல்லான் புகழுங் காளை போன்றவன் இசைத்தற் குரிய பத்தர், பல தொழிற் சிறப்புடைய பவள ஆணி, நால்விரலளவான பாலிகை வடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யுங்கருவியான வயிரமாடகம், இனியதேன் அணிபெற ஒழுகினாற் போல அமிழ்தனைய நரம்பு ஆகிய வற்றையுடைய யாழைக் கையிலேந்தித் தன் இசையினாலே உலகை வளைக்கலுற்றான்.

குரல் குரலாக வருஞ்செம்பாலையை அமைத்துத் தன் விரலாலே சீவகன் எழுப்பிய பாட்டைக் கருவியின் இசை யெனநினையாமல், மிடற்றுப் பாடலேயென மயங்கி வான வரும் மக்களும் தம்மை மறந்தனர்; கின்னரமும் அசுண

மும் சோர்ந்தன. மரமும் கல்லும் உருகின. பிறகு, யாழிசைக்கேற்பப் பாடத் தொடங்கினான் :

"கன்னி நாகம் கலங்க மலங்கி
மின்னும் இரங்கும் மழையென் கோயான் ?
மின்னும் மழையின் மெலியும் அரிவை
பொன்னாண் பொருத முலையென் கோயான் ?

"கருவி வானம் கான்ற புயலின்
அருவி யரற்றும் மலையென் கோயான் ?
அருவி யரற்றும் மலைகண் டழுங்கும்
மருவார் சாயல் மனமென் கோயான் ?

"வான மீனின் அரும்பி மலர்ந்து
கானம் பூத்த காரென் கோயான் ?
கானம் பூத்த கார்கண் டழுங்கும்
தேனார் கோதை பரிந்தென் கோயான் ? "

இம்மூன்று செய்யுளும் கூதிர்ப் பருவங் குறித்துப் பிரியக் கருதிய தலைவற்குத் தோழி அதற்கு முன் நிகழ்கின்ற காரின் தன்மையும் அது தலைவியை வருத்துந் தன்மையும், 'யான் கூற வேண்டுமோ? நீயே அறிவாய் அன்றோ?' எனக் கூறிச் செலவழுங்குவித்தல் என்னும் அகப்பொருள் துறை பற்றியவை.

யாழ்ப் போர் நிகழும் இக்காலம் வேனிற் காலமாகவும் கார் காலத்தைக் குறித்துப் பாடியதன் கருத்தென்னை யெனின், யாழ் வென்ற பின்னர் அல்லது சீவகன் மனத்தே வேட்கை தோன்றாதாகையால் வேனிற் பருவங் குறித்துப் பாடவில்லை யென்க.

இனி, யாழிசைத்தபோது மயங்கியவாறே யாழிசைத்தவாறே பாடிய மிடற்றுப் பாடலின் வனப்பை நோக்கிய கின்னரர் வீணையை யெறிந்து விட்டனர். விஞ்சையர் நெஞ்சுருகிச் சோர்ந்தனர். மண்ணவர் மருள் கொண்டு வீழ்ந்தனர். சித்தர்களும் 'இதுவே பேரின்பம்' என்றுன்னினர். மற்றும், யாழிசைத்தலை விடுத்து மிடற்றாலே மட்டும் பாடிய போதும் அங்ஙனமே யாவரும் மயங்கினர். இசைக்

குரிய காமனும் நாணுமாறு இனிமை கொண்ட அப் பாடலைக் கேட்ட அரசர்கள் யாவரும் ஓவியப் பாவையாயினர்.

**தத்தையின் கலக்கம்**

இனி, மழை பெய்யும் முகிலை நோக்கியிருக்கும் மயில் போலச் சீவகனை அடையுங்காலத்தை யெதிர் நோக்கியிருக் கும் வேற் கண்ணுளாகிய தத்தை யாழினும் பாட்டினுந் தான் தோற்குமாறு, இதுவரை அவள் காணுத புதுமை யாய்ப் பருந்தும் அதன் நிழலும் போலப் பாட்டும் யாழ் வாசித்தலும் சீவகனுக்கே சேர்ந்திருக்கின்றன என்று உணர்ந்தாள். அத்தகைய எண்ணத்துடன் யாழை ஒழுங்கு செய்து வாசித்தாள். அவ்விசையில் அவனை நிகர்த்திலளாய்க் கூந்தல் புறத்தே தாழவும் குண்டலமும் தோடும் ஒளிர நுதல் வியர்ப்பவும் இடப்புறத்தே தலையைத் தாழ்த் திக் காதல் உணர்ச்சி உள்ளத்தில் நிறையப் பாடத் தொடங்கினுள்.

"இலையா ரெணி மணிப் பூண் ஏந்தும் முலையும்
சிலையார் திருநுதலும் செம்பசலை மூழ்க
மலையா ரிலங்கருவி வாள்போல மின்னும்!
கலையார்தீஞ் சொல்லினுய் காணுர்கொல் கேள்வர்?

"பிறையார் திருநுதலும் பேரமருண் கண்ணும்
பொறையார் வனமுலையும் பூம்பசலை மூழ்க
நிறைவா ளிலங்கருவி நீள்வரைமேன் மின்னும்!
கறைவேலுண் கண்ணினுய்! காணுர்கொல் கேள்வர்?

"அரும்பேர் வனமுலையும் ஆடமைமென் தோளும்
திருந்தேர் பிறை நுதலுஞ் செம்பசலை மூழ்க
நெருங்கார் மணியருவி நீள்வரைமேன் மின்னும்!
கரும்பார்தீஞ் சொல்லினுய்! காணுர்கொல் கேள்வர்?"

இச் செய்யுட்கள் இளவேனில் வருகின்றமை கண்டு ஆற்றுளாகிய தலைவி தோழிக் குரைத்தன. தத்தையின் மனநிலைக் கேற்ப இவை அமைந்தன. மற்று, இவள்

பாடிய பாட்டும் அதற் கேற்ற யாழும் ஒரு திறமாக இருந் தன. அவன் பாடின பாட்டும் யாழும் வேறொரு திறமாக இருந்தன. மேலும், தத்தையின் யாழ்தடவும் விரலும் அதற்கேற்கும் பாட்டுக்களும் நரம்புடன் நடவாவாயின. தனியே பாடிய பாட்டும் விண்ணிலே நின்றியங்கி அக் காலத்தே நடுங்கியதாலே வாதிற்கு எடுத்த இசையிலே சிறிது குறைந்து தோல்வியடைந்தாள்.

**சீவகனுக்குத் தத்தை மணமாலை அணிதல்**

மையெழுதிய கண்ணாள் இங்ஙனம் அழகிய யாழிசை யிலே தோற்றதால், நமக்குத் தோல்வி நேர்ந்ததே யென்று வருந்தி, நடுக்கங் கொண்டு, அவையிற் செல்ல வேண்டு தலின் மிகவும் நாணமுண்டானதால், மெய்யாகவே ஒரு மலையை யெடுப்பாள் போலத் தளர்ந்து பொன் மாலையைச் சீவகனுக்குச் சூட்ட ஏந்தினாள்.

சிலம்புகள் மெல்லென ஒலிக்கவும், மேகலை ஒளி வீசவும் அழகிய பெண்ணன்னம் போல நாணத்துடன் அடியெடுத்து வைத்து, 'எல்லீரும் என்னைப் போல ஒல்லெனப் புகழப் பெறுந்தவமே செய்ம்மின்!' என்று கூறுவாள் போலச் சீவகன் கழுத்திலே அம்மாலையை வீழ்த்தினள். அம்மாலை அவன் கடுஞ்சிகையிலே வீழ்ந்து மார்பிலே விழுந்த தோற்றம் ஒரு மின்னல் முகிலிடையே தோன்றி மணி வரையிலே வீழ்ந்தது போல இருந்தது. இவ்வாறு சூட்டிய பிறகு அவன் மலரடிகளை வணங்கி, இன்ப வழியைக் காட்டுந் திருமகள் போல அவனருகிலே நின்றாள்.

சீவகன் தத்தையின் மலரனைய சிற்றடி முதல் முகம் வரை முறையே ஏறிட்டு விழுங்குவான் போல நோக்கி, மலர்க்கண்ணாளாகிய திருமகள் போலிருக்கிறாளென வியந்து விம்மிதமாகி நின்றான். அங்ஙனம் அவன் தன்னை நோக்குவது கண்ட அழகிய பாவையனையாள் நாணமுற்று முகிலிடை மின்னென நிலம் நோக்கி நின்றாள். உடனே, தோழியர் பூம்பட்டாலாகிய எந்திர எழினியை விட்டு அவள் நாணத்தினால் வருந்தாதவாறு செய்தனர்.

**கட்டியங்காரன் மனக் கொதிப்பு**

அப்போது, ஆங்குக் குழுமிய மக்களெல்லோரும் 'வேற் கண்ணளை வீணையாற் சீவகன் வென்றான். அவன் மிகவும் சிறப்புடையன்' என்று முழுமதிநாளிற் கடல் போல மகிழ்ச்சி மிக்கு ஆரவாரித்தனர். அது கண்ட கட்டியங்காரன் உளம் புழுங்கிக் கொதித்துக் கள்ளரைக் கொண்டு புலியை வீழ்த்துங்கதையை எண்ணி மன்னரை யெல்லாம் பார்த்துரைக்கின்றான் :

"அந்தோ! இமயமே போன்ற உயர்ந்த மன்னர் குலத்துக்கு மாசு விளைவித்தீர்! ஒளிவிடுங் கதிர்களையுடைய ஞாயிற்றுக்கு முன்னர் மின்மினி விளக்கினைப் போன்றீர்! இவ்வடுவுரை யெப்போது மாயும்? இனி, நீங்கள் போர்க் கஞ்சினீரேல் ஆட்சியை விடுத்து முனிவராய் வனம் புகுமின்! குங்குமச் சாந்தினையும் மணமலர் மாலையினையுங் கொண்ட அகன்ற மார்பினீரே! கையாற் பிசைந் தெறிதற் குரிய முல்லைப் பந்தொன்றைக் களிறுகளைக் காவலாகக் கொண்ட கொல்லையிலே குன்றாக்கி விட்டீர்! இனி நும்முடைய நிலமகளும் புகழ்ப் போர்வை கொண்டு நாளை அவனிடஞ் செல்வாள்! மற்றும், திருமகளனைய இவளை அவன் பெற்று விட்டான். ஆதலால், தெளிந்த அலைகளையுடைய கடலை ஆடையாகக் கொண்ட நிலமகட்கும் சக்கர வாளகிரிக்கும் இறைவனாவான். ஆனால், அமரிடையிவனை வென்றால் செல்வம் பெற்று வாழ்வீர். இனி 'அனிச்ச மலர்மாலையை அணியினும் 'அம்மவோ!' என வருந்தும் நுண்ணிடையாள் ஒருத்தியே. நாம் பலருளேம்; என்று நீவிர் நடுங்கி வருந்தல் வேண்டா. நும்முயிர் நீங்காமல் ஆழ்கயத்து நீரைச் சிவிறியாலே தூவித் தனித்தனியே பொருது வென்றவர்கள் அவளை யடைவீராக!"

**மன்னர் போர்க்கெழல்**

கட்டியங்காரனால் தூண்டப்பெற்ற மன்னர்கள் விரைந்து முழங்கித் தத்தையிடம் இன்பத்தை விழைந்து, தூணெனத் திண்ணிய தோளையுடைய சீவகனை அவனுடைய

ஐந்தலையரவாகிய சிற்றத்திலே முழுக வளைத்தனர். எங்ஙனம் ஐந்தலை யரவெனிற் சீவகனும் நந்தட்டனும் ஒரு தலையும், சீத்தனும் புத்திசேனனும் தேவதத்தனும் மூவரும் மூன்று தலையும், நபுலனும் விபுலனும் ஒரு தலையுமாக மன்னரை யெதிர்க்க நின்றனர்.

**பதுமுகன் அறிவுரை**

அரசர்கள் போர்க்கெழுவதை யறிந்த பதுமுகன் யானை மீதமர்ந்து மன்னரை நோக்கிக் கட்டியங்காரன் கருத்தையும் அரசர்களால் சீவகனை வெல்ல முடியாதென்பதையும் காமத்தைக் கருதிய தண்ணிய மொழியாலும், பேதத்தைக் கருதிய சிறிய சொல்லாலும், தானத்தைக் கருதிய வெய்ய (விருப்ப மூட்டும்) உரையாலும், தண்டத்தைக் கருதிய தழற் கூற்றாலும் நவிலுகின்றான்.

**தண்ணிய மொழி**

"நாம் இசையிலே இவனிடந் தோல்வியுற்றோம். இசைக்கு வணங்கும் யானையால் வெல்வோம் என்று கருதுவது பொருந்துமோ? மேலும், வசையையுந்தருவதாகும். மற்றும், தீயைத் தொட்டால் மட்டுஞ் சுடும். ஆனால், பிறன் மனைவியை விரும்பும் தீவினைத் தீ நினைத்தாலுஞ் சுடுமே. இங்ஙனம், பழியும் பாவமுமாக நீரே அறிதற்குரிய இச் செயலை, மாற்றுதை இப்போது நேரவிருக்கும் யானே இரந்து கூறுகின்றேன். இனி நீவிர் இருக்குந் திசை நோக்கிச் செல்வீராக.

**சிறிய மொழி**

"இன்பத்தை விழைந்தோர் தோளினால் நெருங்கித் தழுவிக் கொவ்வைக் கனியனைய இதழைப் பருகுவர். அத்தகைய இன்பத்தை நீவிர் வாளினால் மலைந்து கொள்ளக் கருதினீர்! நும் கலையுணர்வு நூறாண்டு வாழ்க! மற்றும், ஆற்றல்மிக்க அரியேறனையான் இப்பொற்கொடியை அடைவதைத் தடுக்க முயன்றீரேல் நீவிர் பெற்றிருக்கும் சில மகளையும்விட நேரிடுமே! தன் மதச் செருக்காற் பிற

களிறுகளை வெருட்டுங் களிறானது அதிமதுரத் தழை யைக் கைக்கொண்டால் யாவரால் அதனை விடுவிக்க முடியும்? இளமை மிக்கதான கொழுவிய நாகினைத் தழுவித் தன் இனத்திடை நிற்கும் போரேற்றினை வென்று அந் நாகின் அழகை நுகர உழவெருதிற்கு முடியுமோ? விண்ணிடைத் தாவுஞ் சிங்கமொன்று பெண் சிங்கத்தினைத் தழுவி நின்றால், அதன்மேற் பாய்தல் மறப்புலிக்கும் இயலுமோ? செற்றம் மிகுந்த களிறொன்று பொங்கும் மதத்துடன் நல்லியல் அமைந்த பிடியுடன் நின்றால், அதனை வெல்லுதல் யானைக் கன்றால் இயலுமோ? இரதியைத் தழுவ வேண்டுமென்று காமம் மிகுந்து செல்வோர் அவளைக் காமனிடமிருந்து பிரிக்க இயலுமோ? ஆகவே, அரசர்களே! கற்பிற்சிறந்த காந்தருவதத்தையை அடைந்து நிற்கும் சீவகனை வெல்வதற்கு நும்மால் இயல்வதொன் றன்று. நுமக்கேயன்றிக் காமனுக்கும் இயலாது; இந்திரனுக்கும் ஏலாது.

வெய்ய மொழி

"எம்மை நீர் ஒருவாறாக வென்றாலும், அதற்குப்பின் இக் கட்டியங்காரன் நும்முளே பகையை யுண்டாக்கி நீவிர் பொருது கொண்டு மடிந்தால் நும் நாட்டினையுந் தானே யாளச் செய்யும் கொடிய சூழ்ச்சியிது! இதனை நீர் தனியே கூடி ஆராய்ந்து பார்த்தறிவீராக!

தழற் சொல்

இதுகாறுங் கூறியவற்றை பெண்ணுமைற் போர்க் கெழுவீராயின், நீவிர் அனைவீரும் ஒருங்கே குழுமி வம்மின்! யாம் வாய்மொழி வீரர் மட்டுமல்லேம் என்பதனை இதோ காண்மின்!!"

இவ்வாறு கூறிய பதுமுகன் வில்லை வளைத்துக் கணையொன்றைக் கற்றிரளின்மீது விடுத்தான். அஃது கற்றிரளைத் துளைத்துச் சென்று நிலத்திற் குளித்தது. மேலுங் கூறுகிறான்:

"சக்கர வியூகமாக வகுத்த இப் படையாகிய விளை நிலத்தே, அம்பையுந் தண்டத்தையும் விரைந்து, விதைத்துப் பிணமாகிய நெல்லை விளைவித்த பிறகு, கூட்டமாகிய பல பேய்களுக்கு இரத்த நெய்யுடன் கலந்த ஊன்சோற்றை முறைப்படியூட்டி, வெற்றிமகள் விரும்புமாறு களம் வேட்டு நின்றவரே இவளைப் பெறுவர். அங்ஙனமின்றி, நீர் நினைத்தவாறு எளிதன்று இவளையடைவது! எனவே, சீற்றத்தை விடுக!"

இங்ஙனம் பதுமுகன் கூறியுங் கேளாத மன்னர் படை போர்ப்பறையை முழக்கி, எங்கும் காற்றினால் மோதப்பட்ட கடலென முழங்கி யெழுந்தது.

**சீவகன் போர்க்கோலம்**

சீவகன் அதனைக் கண்டு, தன் மலர்க்கையில் இருந்த யாழை வைத்துவிட்டுத் தத்தையை நோக்கித் "தேய்ந்த நுண்ணிடையாய்! நின் கண்கள்போல் ஆராய்ந்த அம்பினுக் கிரையாக இம் மன்னர்கள் விரும்பி நிற்கின்றனர். அதற்காக நீ வருந்தாதே," என்றான்.

அதனைக் கேட்ட தத்தை நடுங்கிய வுள்ளத்தளாய், 'அம்மாவோ!' என்று துடித்துக் கண்ணீர் வாரக் கலங்கினாள். அவளழகும் மெலிந்தது. "உறவாயிருந்து நம்பிக்குக் கடிய பகையை விளைவித்த பாவியேன் உயிரே! நீ பாழுடலை விட்டுப் போகின்றாயில்லை. நீயும் ஓருயிரோ?" என்று கதறிக் கண்களில் மோதிக் கொண்டாள்.

அருகிருந்த வீணாபதி அவளை அணைத்துக்கொண்டு, "வலிமையையுடைய நம் படை மேலே நிற்கின்றது. அப்படை இவர்களையேயன்றி இவ்வுலகிலுள்ளோரையெல்லாம் கொன்று குவித்து ஒன்றாகக் கரைத்துக் குடித்துவிடும். நீயே பார்த்துக்கொண்டிரு," என்று கூறிக் கண்ணீரை முன்றானையாலே துடைத்தாள்.

மற்றும், தத்தையின் வாளேந்திய பெண்படை, "எங்கள் பெண்மையையும் குளிர்ந்த மலர்மாலை யணிந்த மன்ன

ரின் ஆண்மையையும் சிறப்பக் காண்பேம்," என்று கூறி, அவளைச் சூழ்ந்து காவலாயிற்று.

அப்போது, கூனுங் குறளுமாக வந்திருந்தவை அச்ச முற்றுக் குடர் வெந்து பொற் பெட்டிகளிற் பதுங்கவும், சாந்திருந்த பரணிலே புகவும், அழகிய பளிக்குத் தூணிலே மறையவும் ஓடலாயின.

இவற்றையெல்லாம் பார்த்த சீவகன் முறுவல் செய்து, பதுமுகன் தத்தையைக் காக்கக்கடவன் என்று கருதி, அதனைத் தத்தையிடம் நகைமுகத்துடன் கூறினான். பிறகு, கடிய சிங்கமொன்று அங்குக் கூடிய சில சிங்கங்களின் முழக்கைக் கேட்டுச் சீறி, அவற்றின்மேற் செல்வது போலப் பொங்கிய கழலொலிக்கச் சென்றான்.

பின்னர், 'பதுமுகன் தத்தையைக் களிற்றின்மீ தமர்ந்து காப்பானாக! மற்றையோர் கூரிய வாளும் வில்லும் நுண்ணிலை வேலும் ஏந்திய நான்கு பிரிவாகப் படையை நிறுத்தித் தாமும் நிற்க,' என்று பணித்தான். அவ்வாறே, நபுல விபுலர் ஒரு பிரிவினும் மற்றைய மூவரும் மூன்று பிரிவினும் நின்றனர்.

இங்ஙனம் படையை அணிவகுத்த சீவகன் வட்டுடை யணிந்து, இருபுடையும் வாளைக் கட்டித் தேர்த்தட்டிலே பொலிவுற்ற விசயன்போல ஏறி அமர்ந்து, தேர்க் காலைப் புரவிமீதமர்ந்து காக்கச் சிலரை ஏவி, உயிர்பருகுங் கூற்றம் கொல்ல வெழுந்தாற்போலப் புறப்பட்டான். பறவைகள் ஒலிப்பதுபோல இசைக்கும் கிண்கிணி மாலையணிந்த குதிரைகள் பூட்டிய தேரிலே ஞாயிறு போலமர்ந்து, சீற்றம் பொங்க மன்னரை நோக்கிப் பற்கள் தோன்ற நகைத்து, இடியென முழங்கிக் கூறுகிறான்:

"போர் புரியும் புகழை விரும்பி, நினைக்கவுமியலாத கேட்டினைச் செய்யும் இந்த அம்புகள் சீற்றங் கொண்டன. இந்த வேல்களும் புகைந்தன. ஆதலால், நும் காதலியராகிய இளமங்கையர், நீர் இங்கே யாழ் வாசிக்கப் போந்ததற்காகப் புலவி நோக்கத்துடனிருப்பதை நீவிர் தணிக்கப்

பின்பு தாம் பெறுங் கலவியின்பத்தை இனி வீணே யிழப்பரே.''

இம் மொழி கேட்ட மன்னர், "உணவும் நன்றாக உண்ணுமற் சேர்க்கப்பெற்ற முதலுடன் ஊதியத்திற்குங் கேடு வந்தால், ஊதியத்தின்மேற் செல்லும் நெஞ்சுறுதியை மாற்றிக்கொண்டு, இரண்டையும் இழப்பதினும் முதலை மட்டுமேனும் பெறுதல் ஊதியமென்றெண்ணி முதலைமட்டும் கெடாமல் நின்குலத்தோராகிய வணிகர் கைக்கொள்வர். நீயும் அவ்வாறு செய்யாமல், போர் குறித் தெழுந்ததனால் வாணிகமொன்றும் அறியாய் போலும். இனியேனும், இப்பொற்றொடியாகிய நின் ஊதியத்தைக் கைவிட்டு, நின்னுடம்பாகிய முதலைக் கொண்டு பிழைத்துப்போ,'' என்றனர்.

சீவகன் நகைத்தான். "தம்முடைய பண்டத்தைப் பிறர்க்கு விற்று, அவருடைய பண்டத்தை வாங்கிக் கொள்வது எம்மவர் வாழ்க்கை. ஆதலின், எமக்கும் அஃது பொருந்தும். எனவே, யான் நுமக்கெலாம் என் கைக் கணை தந்து நும்முடைய வெற்றிமகளையும் புகழையும் இப்போதே கொள்வேன். வல்லீராயின் அவற்றைக் காத்துக் கொள்வீராக,'' என்று கழறினன்.

மன்னர் சினந்து, "மணமிகு மாலையணிந்த பாவியே! சிலம்பையுஞ் செம்பொற் கிண்கிணியையும் அணிந்த இளமங்கையரின் மார்பிலுள்ள கோங்கரும்புகள் பாய்ந்த நின் மார்பிலே எம் அம்புகள் மூழ்க, நின் வனப்பும் இளமையும் கல்வியும் கெட்டு மண்மீது வீழ்ந்து கிடக்கலுற்றாய்! நீ ஏது சொல்லமாட்டாய்?'' என்று முழங்கினர்.

சீவகன் மேலும் வெகுண்டு, 'ஞாயிறு முன்னர் இருள் போல நீங்கள் என்னைக் கண்டு ஓடும்போது, உங்கள் முதுகு கண்ட பின்னரே முருகு கமழுங் கூந்தலையுடைய இவளைக் கூடுவேன். அவ்வாறு செய்திலேனெனின், என் புகழ் ஞாயிறுந் திங்களும் வழங்கும் உலகெங்கும் பரவாமற் கெடுவதாக,' என்று வஞ்சினங் கூறினன்.

**போர்செய்தல்**

பிறகு, ஆளாகிய *மரங்கள் நிறைந்த வாளாகிய நிலத்திலே அம்பு வேலாற் செய்த இடுமுள்ளேயுடைய—எல்லோருங் காணும்படியான—காட்டில், கூட்டமாகிய களிறுகளாகிய மலையின்மேல் வேந்தராகிய வேழக் கூட்டம் தத்தையெனும் பிடியைப் பெற விரும்பிப் போரிடத் தொடங்கின.

அப்போது, இசையேழினுனு முயர்ந்த சீவக வேழம், கை நந்தட்டனுகவும், இரு மருப்பும் நபுல விபுலராகவும், தோழர் நால்வரும் நான்கு கால்களாகவும், தேருங் குதிரையுங் காலாட்களும் மும்மதமாகவும் அரசராகிய களிற்றுக் குழுவை யெதிர்த்துச் சென்றது.

கடலொலியுடன் வான்முழக்குஞ் சேர்ந்தாற்போல முரசும் சங்கும் முழங்கின. அரசர்களெல்லோருங் கவசம் அணிந்தனர். படைகளும் போர்க்கோலங் கொண்டன. சீவகன் தோழரும், 'சீவகன் வாழ்க' என்று கூறியவாறு போர்த் தெய்வத்தை வணங்கிப் போரிலே இறத்தலைக் குறித்துச் * செம்பொற்றகட்டை வாயிலிட்டுக் கொண்டு எங்கணும் பெய்யும் மழைபோல அம்புகளைப் பெய்யும் போரை மேற்கொண்டனர்.

இரு பெரும் படைகளுங் கணைமழை பெய்து கலந்தன. வாட்குழாம் ஒளிர்ந்தன! குதிரைகள் தாவின! தேர்கள் தடுத்தன! களிறுகள் சீறிப் பிளிறின! இயமரம் இயம்பின! சங்குகள் முழங்கின!

அப்போது போரில்லாமையால் இதுவரையிற் பசித்திருந்த மறப்படை வீரர் இப்போது வயிறு நிறைகவெனக் கூறிக் களிறுகளைக் குறைத்தனர்; குதிரைகளைத் துணித்தனர்; தேரை இறக்கினர்; இனிய வுயிர் துறக்கம் புகுக என்று கூறி மைந்தரைத் தடிந்தனர். சூழ நின்று சில

* பொற்றகட்டை வாயிலிட்டுப் போர்செய்தல் மரபெனத் தெரிகிறது. வடமொழிவாணரும் இதனை '**லோகாபிசாரம்** என்பராம்.

யாகிய முகில் பெய்த பிறையெயிற்றம்புகள் சூழ்குதலால் அற்று வீழ்கின்ற முகமாகிய அவை தாமரை மலர் மாரி யைப் போன்றன.

**சீவகன் தோழர்**

சீவகன் பிறந்தபோதே பிறந்தவரும் இரும்பினால் உதயபத்துச்சிறையைக் கட்டினலைய தோளினரும் வேற் போரை விரும்புவோரும் ஆகிய தோழர்கள், 'எம்முடனே போரிடுவதால் உமதாண்மை மேம்படுதற்கு வாருங்கள்,' என்பார்; எதிர்த்தோர் மார்பினல்லது மற்றோர் மார்பிலே படையை யெறியார்; கூற்றினுங் கொடிய யானைக் கோடு உழுத அகன்ற மார்பு கீற்றுப்பட்டழகிதாகக் கிடக்க எனத் தம் மார்பை யானை குத்தக் கொடுத்து நிற்பார்; வாளை உறையினின்றும் எடுத்து அமலையெனுங் கூத்தாடிக் காட்டு வார்; நெருப்பினைச் சிதறிய கண்களுடன் மேல்வரும் வேழத்தை வேலினால் விலக்கி நிற்பார்; தேரிற் பூட்டியிருக் குங் குதிரைகளின் கயிற்றை யறுத்துப் போக்கிவிட்டுப் பழிப் பற்ற குதிரைகளைப் பூட்டுமாறு பாகனைப் பணிப்பார். 'ஐங்கதியாகச் செல்லும் குதிரைப்போர் சிறியது,' என்று அதனை விலக்குவார்; வேந்தர்களை 'இவன் எனக்கு; இவன் உனக்கு,' என வேலினாற் சுட்டிக்காட்டி எதிர்ப்பார்; 'வேழத்துடன் செய்யும் வேற்போரிலே நூறுகோடிக்கு நூற்றுவர் உளேம்; வருக!' என்பார். இங்ஙனம் சிங்கமும் புலியும்போல உலவிப் பொருதனர்.

**தேவதத்தன்**

சீவகன் தோழர்களில் ஒருவனான வாள்வலி மிக்க தேவதத்தனுடைய குதிரை, வேலேந்திய மன்னவரின் குழு விலே பிளந்து புகுந்து, யானைகளின் நெற்றியிலே தன் குளம்புகளை அழுத்தி, மன்னரின் முடியிலுள்ள போர்ப் பூவையுங் கண்ணியையும் சூளாமணியையும் சிதறச் செய்து மண்ணைக் கூட்டித் திரட்டி வைத்து முறுக்கிவிட்ட குயவன் திகிரிபோலத் திரிந்தது.

**நபுல விபுலர்**

சீவகன் தம்பியரான நபுல விபுலர் சினந்து தம் குதிரைகளைத் தூண்டிப், 'பாய்ந்தது, குதிரையோ, பறவையோ' எனத் திடுக்கிட்டு மன்னரின் வயிறு வேவ அவர்களின் களிற்று நுதற் பட்டம் தேய்ந்துகுமாறு செலுத்தி, அவற்றின் மேலிருந்த அவர்களுடைய முடியி லுள்ள மணிகளைப் பறித்துக் கொண்டனர்.

**சீதத்தன்**

பெருங்காயத்தின் குழம்பைப் பூசிய இரும்பினாலே இலவினை வெட்ட அதன் காய்கள் உதிர்வனபோல முருகனை யொத்த சீதத்தன் தன் உறுதியான வில்லிலே தொடுத்து விட்ட கணைகளாலே மறவருடைய செவ்வி பொருந்திய தலைகள் உதிர்ந்தன. இச்செயல் மாயமாயிருந்தது.

**புத்திசேனன்**

கரு நிறக் கடலினுள்ள நீரைப் பருகிச் சூல் முற்றிய கருநிற முகில் வானிலே பொருந்தி இடைவிடாது நின்று பெய்த காலமழைபோல மறையவனான புத்திசேனன் பொன்னிறத்துடன் தோன்றிப் பொன்னிறப் பகழிகளைச் சிதறி மன்னர் படையைக் காலனுக்கு விருந்தாக்கினான்.

**ஆர் நிறைந்த தேர்க் குறடு**

இவர்கள் செய்த போரிடையே சில வீரர்களின் மெய்ம் முழுதும் கூரிய வேல்கள் பாய்தலால், வழியுஞ் செங்குருதி யுள் தோன்றும் வீரர்கள் சூட்டுக்கு மேலே வைப்பதற்குப் பல ஆர்களும் தைத்து நிறைத்த தேர்க்குறடு போன்றனர்.

**சீவகன் போர்**

இப்போர் ஒரு மருங்கில் நடந்தது. மற்றொரு மருங் கிற் சீவகன் போர் செய்தான். அவன் போரை எங்ஙனம் புகழ்வது? அவன் தன் தம்பியாகிய நந்தட்டனை நோக்கி, "ஈங்கு நம் இடர் கெடுமாறு வீரமந்திர மிரண்டுள்ளன. அவற்றை நினக்குக் கற்பிக்கிறேன். நீ குதிரைகளின்

காதிலே ஓதுக !' என்று அவற்றை நயந்து கூறினான், அவ னும் அவற்றைப் பரிமாக்களின் செவியிலே பகர்ந்தான்.

மந்திரங் கேட்ட நான்கு புரவிகளும் வானெட்டிச் செல்வனபோலத் தாவின! தேர் உருளைகள் நிலம் விட்டன. அழகினாலே மகளிர் கண்ணிலே குடி கொண்ட சீவகனும் நந்தட்டனும் வான் புலத்தை இரும்பினும் வலிய காவலாகக் கொண்டனர். நந்தட்டன் புரவிகளின் வாய்க் கயற்றை ஆய்ந்து, தாற்றுக் கோலை யெடுத்து, 'நமக்கு வெற்றியுண் டாக' என்று குதிரைகளைத் தொட்டுச் செலுத்தினான். அவை கடுகிய இயல்பை இயம்பற்கியலாது. பரிகளின் கழுத் திற் கட்டிய கிண் கிணியொலி வீரர்களின் செவியினும் தேர் அவர்களின் கண்ணினும் நீங்காமல் நின்றன.

அவ்வீரர்கள் சீவகன் தேரைப் பறவை யென்பர்! அதன் உருவம் அருவ மென்பர்! மண்ணினுள தென்பர்! வானிற் காண்கிற தென்பர்! மனத்தினும் முகத்தினு முள தென்பர்! கண்ண தென்பர்! செவிய தென்பர்! இங்ஙனம் அவர்கள் கலங்குமாறு நூலாலளந்து காட்டிய வீதியிலே மண்டலமாகச் செலுத்தினன் தேரை. அது * அகிலைத் தன்னிடத்தே கொண்ட கொள்ளி வட்டமும் உயிரை நுக ரும் ஆழியும் முகிலிடை மின்னும் தோல்வியுறக் கடுகுதலை யுடையதாகி, மிகுதலையுடைய இப்போரைத்தானே விழுங்கு வதற்குச் சிறகமைத்துக் கொண்டு ஞாயிற்றொளியைப் பெற்றுப் பறப்பது போலிருந்தது.

வள்ளலாகிய சீவகன் கணை தொடுப்பதற்கு வில்லின் ஒரு கால் வளைந்தவாறே யிருந்தது. அப்போது வயிர மாலையையுடைய வெண் குடைகள் காம்பற்றன; பிச்சங்கள் கவிழ்ந்தன ; மன்னருடைய கவசங்கள் அற்றன ; சாமரை கள் வீழ்ந்தன ; விற்களின் நாண்கள் அற்றன ; மன்னரு டைய உள்ளமும் செய லற்றொழிந்தன !

"உங்களை வீணையினாலே வென்ற சிலம்பணிந்த சிற்றடி யாளின் களிப்பையும் விருப்பத்தையும் ஊட்டும் தடங்கண்

* அகில் செய்ப்புடையது; ஒளிமிகும்.

கள் இவை; அம்புகள் அல்ல; விருந்தாக எதிர்கொண்மின்," என்று கூறிக் களிப்புடன் வந்த வேந்தர்க்கெல்லாம் ஒவ்வொன்றும் இரண்டிரண்டுமாகக் குருதி தோய்ந்து இனிக் கொள்ளுமுடம்பிலேனும் பிறர்மனை நயவாதீர் என்பதுபோல் சிவந்த பகழிகளை ஒழுங்காக அழுத்தினன். அவைகள் அதுபோல அவ்வரசருடைய ஒளிவிடும் மணி மார்பினைத் தாக்கியுங் கவசங்களைப் பிளந்தும் அவர்களுயிரைக் கவர்ந்துசென்றன.

அரசர்களின் நாண்கள் அற்ற கொடிய விற்கள் மீனெறி தூண்டில் போன்றன. அவர்களேறிய வேழங்கள் கச்சை துணிந்து, தேன் பெய்யுங் குன்றுகளைப் போற் குருதி சோர நின்றன. குதிரைகளைச் செலுத்துங் கயிறற்ற தேர்கள் மறிபட்டு நின்றன. இங்நிலை கண்டும் மீளாமற் பகை வேந்தர் போர் செயக் கையிலே ஆழிகளை யேந்தி யாரவாரித்து வந்தனர்.

அது கண்டு மாரி பெய்யுங் குன்றில் எதிரொலி யெழுப்புமாறுபோல, வேந்தரின் ஆரவாரத்திற் கெதிராகச் சீவகன் படை வீரரும் ஆரவாரித்தனர். அப்போது சீவகன் வில் அம்புமாரி பெய்தது. அதனாற் குருதி வெள்ளம் எழுந்து முன்னர் அற்று வீழ்ந்த பிணங்களைக் களத்திற்கு வெளியே கொண்டு சென்றது. முடிவில் ஆங்காங்கே இறைச்சிக்குன்றுகள் எழுந்தன.

வேந்தர்கள் வெகுண்டு செலுத்திய படையாகிய பெருமழையைக் கண்களை யிமையாமல் விழித்து நோக்கியவாறு கூரிய முனையையுடைய அம்புகளால் நீக்கிப் பின்னர் வில் குனிந்து பெற்ற பகழியாலும் வாளாலும் படைகளின் உயிரை வாங்குமாறு விடுத்தான். இங்ஙனம் சீவகன் படைக் கடலை நீந்தி விளையாடினன்.

அப்போது, கூற் பேய்கள் களிற்று வெண் மருப்புக் களாற் பல்லை விளக்கி, வளைந்த குருதி தோய்ந்த வாளால் அழுந்த நாவை வழித்துக், குருதியால் வாய் கொப்புளித்து, அழிந்த குதிரைகளின் குடரைக் கண்ணியாகச் சூடி;

பிணத்தை உடையாக உடுத்து, என்பாகிய அணிகலனை அணிந்து ஆடக் கண்டு சீவகன் நகைத்தான்.

மற்றும், களிற்றின் பற்களைப் போல முறை பிறழ்ந்த பற்களையுடைய பேய்கள் அளிக்கத் தக்கவற்றைப்பாடி, இரத்தம் வற்றிய பிணத்தையுடைய செந்நீர் வெள்ளத்தை நிலை காட்டுவன போலக் கைகளைத் தலைமேற் கூப்பியாடின. அப்போது கூவிய நரிகள், அவற்றின் ஆட்டத்தைக் கண்டு மகிழ்ந்து கூவின போன்றன. பிணத்தைத் தின்று குழுமிக் கிடந்த கழுகும் பருந்தும் பேயாட்டத்தைக் கண்டு சிரித்து விலா முறிந்து கிடப்பன போல இறக்கையை விரித்துக் கிடந்தன.

மேலும், உப்பினைக் கண்ட போது அடிசில் ஒழிந்த சுவைகள் மிகுந்தாற் போல, அண்ணலாகிய சீவகனுடைய தேர் பகைவரின் உடல்மேல் திரிவதைக் கண்டதும் அவன் தோழர்கள், பகைவரது நெஞ்சமாகிய திடரைப் பிளந்து கிடந்த வேலை யெடுத்துக் கொண்டு போர்க்களத்திலே புகுந்தனர்.

**பதுமுகன்**

அப்போது, பதுமுகனும் முகிலென மதம் பெருக்கிச் சளசளவென்னும் ஒலியெழ முழங்கிவருகின்ற களிற்றினை ஊழித்தீப்போலக் கொண்டு வந்து போர்க்களத்தைக் காட்டினான். அது தன்னுடைய வளைந்த பிறை மருப்பாலுந் துதிக்கையாலுங் கால்களாலும், தத்தைக்காக எழுந்த இப் போரினைப் பிறர்க்குக் கொடேனென்று புகுந்தது போலக் கொன்று குவித்தது வேந்தர்படையை. அது தன் மருப்பி னாலே யானைகளை வீழ்த்தியது; வேந்தரை வாலாற் செற்றது; துதிக்கையாலே தேர்களை முறித்தது; பாயுங் குதிரைகளைக் காலால் நெரித்தது. குருதிப் பெருக்கைக் கண்ணிலிருந்து பொங்குந் தீயால் நீறுக்கியது. இங்ஙனம் பதுமுகன் வேழம் முழங்கிப் போர் செய்யும் போது தானும் சுடுகணை பெய்ய வெஞ்சிலையை வளைத்தான்.

வளைத்த வில்லிலே அம்பெடுத்துத் தொடுத்து விடுத்தான். கால் வளைந்து வில் பொழிந்த அம்புகளை வேந்தர்களின் தேர்மீதும், அழகிய களிற்றின் உச்சியினும், புரவிகளின் மார்பினும், மறப்படை வேந்தர் மீதும் அழுந்தச் சொரிந்தான். அந்நிலையிலே முன் போர் செய்கின்ற சீவகன் வேறொரு பக்கத்திலிருந்து பெய்கின்ற கணை மாரி தன் அம்பு மழையுடன் கலப்பதைக் கண்டான். கண்டு, 'இம் மழையால் யானையீட்டம், தேர்த் தொகை, கடல் வெள்ளம் என்பவைகளும் அரசும் நம்பன் கணை யெச்சிலன்றி வேறொன்றும் இல்லாமல் இருந்தன!' என்று வியந்து, 'நாம் இனி எங்ஙனம் பொருவேம்,' என்று கருதி நகைத்தான்.

**வேந்தரின் தோல்வி**

இனி, ஆங்கே பதுமுகனுடன் பொருத வேந்தர்கள், 'இப்பதுமுகன் துணையுமிலான்; சேமவில்லும் இலான்; ஒரு களிறே உடையான்; மற்றும் தன் மார்பிற் பாய்ந்த வேலையும் அறிந்திலான்; இவன் நொந்தான் போலும்,' என மேற்சென்று பொர வாளேந்தி நெருங்கினர். அவ்வளவிலே, 'இன்னும் பொரும் மன்னர் உளரோ?' என நகைத்தான். அவன் அஞ்சாநிலை கண்ட மன்னர்கள் அஞ்சித் தம் யானையைத் திருப்பிக்கொண்டு சென்றனர். அவர் புறமிட்டுப் போதலை நோக்கிய சீவகனும் அவன் தோழர்களும், 'இனி இவரை எய்யவேண்டுவதில்லை,' என வில் நாணைத் தளர்த்தினர்.

**சீவகன் வெற்றிச்சங்கு முழக்கம்**

திருமால் பாரதப்போரிலே முழக்கிய வலம்புரிச் சங்கைப் போன்ற சங்கினைத் தன் வாயிலே வைத்துச் சீவகன் முழக்கினன். அப்போது அஞ்சாத யாளியின் பெரு முழக்கினாற் களிற்றுத்திரள் வருந்தினாற்போலத் தாரணிந்த வேந்தர்களெல்லோரும் திறல் குறைந்து கண்ணொளி மழுங்கினர். மற்றும், முற்காலத்தில், மந்தர மலையை மத்தாகக்கொண்டு வாசுகியைத் தாம்பாகச் சுற்றித் திருமால் கடைந்தபோது பாற்கடல் கலங்கினாற் போலக்

கலங்கினர். 'திருமகள் விரும்பும் மார்பனான சீவகன் முருகனே; அவன் திண்ணிய தேர் மயிலே,' என்று நினைத்து, ஒருவரோடொருவர் கூடாமலே சிதறி யோடினர். காய்ந்த மரங்களையுடைய காட்டிலே பற்றிய தீயைப் போலச் சீவகனும் அவன் தோழரும் வேந்தர் ஓடுவதைக் கண்டு கூற்றைப் போல ஆரவாரித்தனர். மன்னர்கள் அம்பைக் கைவிட்டு ஒளி பொருந்திய உப்புக் குன்றம் சூழும் நீர்ப் பெருக்குக்குக் கரைந்தது போல உடைந்து போயினர்.

'பெரும்படையினரான மன்னர்களைச் சிறு படையினரான சீவகனும் அவன் தோழர்களும் தாக்கித் தமக்கு ஒரு குறையுமின்றி வென்று போக்குவரோ?' என்று கருதுவீர்கள். செறிந்த பற்களையுடைய யாளி ஒன்றேயாயினும் வேழப் பெருந்திரளைக் கெடுத்ததன்றே? புலியொன்றே கலையினத்தை வருத்தியதன்றே? ஆதலால், ஐயுறவேண்டா.

மற்றும் நல்லவை புரியும் மக்களின்வாள் தவறிவிழாது. அதுவும் மிகையே. வெற்றிலை விடினும் வேலாய் வெற்றி தரும். தீமையிடங்கொண்ட—மனத்தினர்க்கு எந்த அம்பும் வாய்க்காது; வென்றியும் இல்லை.*

**படைவீரர்கட்குத் தலையளி**

இங்ஙனம் காந்தருவ தத்தைக்காகப்போர் செய்த மன்னர் முகிலிடை மின்போலச் செல்லுமிடமறியாமல், மறைந்ததைக் கண்ட விஞ்சையர் அரியேறனையான் போர்த்திறனைப் புகழ்ந்து ஆரவாரித்தனர். விழவறாத தெருக்களையுடைய பழமை மிக்க இராசமாபுரம் பெரு மகிழ்வுடன் இவர்களை வரவேற்றது.

**வெற்றி வீரனான** சீவகன், உலகம் புகழுமாறு போர்க்களத்தைக் கைக்கொண்டு, பகைவருடைய களிறுகளின்

---

*"நல்லவை புரியும் மாந்தர் நாந்தகம் பிழைத்து வீழா
அல்லவை புரியும் மாந்தர்க் கத்திரம் ஒன்றும் வாயா;
வெல்வதோ குணத்தின் மிக்கார் வெற்றிலை விடினும் வேலாம்;
இல்லையே வென்றி தீமை யிடங்கொண்ட மனத்தி னார்க்கே."

வெண்கோடுழுத செஞ்சால்களைக் கொண்ட மார்பினை யுடைய புகழ்மிக்க தோழர்கள் சூழ்ந்து வரத் திருமகளின் அழகைத் தன்னிடத்தே கொண்ட காந்தருவ தத்தையைத் தன் மனைக்கு அழைத்துச் சென்றான்.

பிறகு, போரிலே காயமுற்ற வீரர்கள் காயங்களுக் கேற்றவாறு நெய்யில் தோய்த்த துணியைக் காயத்தில் வைக்கப்பெற்றனர்; நெய்த் தாழியில் வைக்கப்பெற்றனர்; வேல் புகுந்த இடத்தை ஆய்ந்து இரும்பால் அறுத்து வாங்கப்பட்டனர். இவர்களையெல்லாம் சீவகன் தனித் தனியே கண்டு இன்மொழி கூறிக் கலம்பல நல்கினான். மையுடன் கலந்து கண்ணீர் பெருகும்படிச் சுற்றம் அழப் போர்க்களத்திலே உயிரை விட்ட வீரர்களின் சுற்றத்தார் பொன்முடிப்புப் பெற்றனர். மற்றும், முதுமரத்திற் பொந்துபோல மெய்யெலாம் புண்ணுற்ற வீரர்கட்குச் சிறந்த மருத்துவர் இதுவே மருந்தென ஆய்ந்தறிந்து, நெய் கலந்த மருந்துகளைக் கவளங் கவளமாக வைத்தனர். பது முகன் மார்பிலே நெய்த்துணியைப் பொருந்தவைத்து, நுண்ணிய எலிமயிராற் செய்யப்பெற்ற ஆடையால் அடைக்கப்பெற்ற எலிமயிர்க் குப்பாயத்தைப் புண்ணிலே காற்றுப் புகாதபடி யணிவித்தனர்.

**போரில் உயிர்க்கொலை நேர்ந்ததற்குக் கழுவாய்**

ஒளிவிடும் பொன்னாரமணிந்த சீவகன், பொன்னாலே அருகனுருவம் செய்வித்துத் திருவிழா நன்கு புரிந்து, வறியவர் முகப்பப் பொருள்மிக வளித்துப் போர்க்களத் திலே நேர்ந்த உயிர்க்கொலையின் பாவத்தைக் கழுவினான். செய்த பாவத்தையெல்லாந் தீர்க்குந் தூயனை அருகப் பெருமானின் திருவடியில் இட்ட நிர்மாலிய மலர்களையும் வலம்புரிச் சங்கிலிருந்த தூய நீரையும் தன் வலம்புரி யிரேகை யுடைய கையிலே ஏற்றுத் தொழுது வாழ்த்தி யுட்கொண் டான்.

**திருமணம்**

இனி, யாம் திருமணக் கிழமை செப்புவோம்.

சீவகன் திருமண வரிசையாக நந்தகோன் நான்கு நூறாயிரங் குடங்களில் தூய தயிரும் பாலும் நெய்யும் நிறைத்துக் கொண்டுவந்து வைத்தான்.

ஒருபக்கம் சங்கனைய வெண்மையான அரிசிப் பண்டிகளும் எல்லையற்ற சருக்கரைப் பண்டிகளும் நிறைந்தன. ஒரு சார்பில் பருப்புப் பண்டியும் உப்புப் பண்டியும் செறிந்தன. ஒருமருங்கே முழவனைய பலாக் கனிகளும் வாழைக் கனிகளும் மாங்கனிகளும் எத்துணை வகையுள்ளனவோ அத்துணை வகையான கிழங்குகளும் காய்களும் குருத்துகளும் ஏந்திவரும் மக்கள் இடமின்றி நெருங்கினர். கமுகின் மரகத மணி போன்ற பச்சைக் காய்களும் பழுக்காய்களும் விருப்பூட்டும் மெல்லிலைகளும் தோள் கனியக் காவடிகளிற் சுமந்து வந்து கடலெனச் சொரிந்தனர் ஒருபக்கத்திலே. சண்பகமும் தமநகக் (மரு) கொழுந்தும் பச்சிலையும் தண்ணிய கழுநீரும் மல்லிகையும் குவளையுந் தாமரையுமாகிய மலர்களின் சுமையை, வண்டுகள் மேலே மொய்க்கக் கொண்டுவந்தவர் திரள் ஒருமருங்கு பொலிவுற்றது.

சீவகனுடைய வளமனை ஓர் ஆழியின் குறடு போன்றது. குறட்டிற் பொருந்திய ஆர் போன்றன தெருக்கள். ஆழியின் விளிம்பு போன்றது மதில். அத்தகைய வளமனையிலே பெருந் திரளான மக்கள் நெருங்கிய ஆரவாரம் கடலொலி போன்றது. மற்றும், அவர்கள் பயன்பெறும் முறையாற் பழுமரத்திற் பறவைகள் போன்றனர்.

திருமணத்திற்கு வந்த கையுறைகளைப் பதிவு செய்தோர் ஏடறுத்தும் எழுதியும் வியப்படைந்தனர். உடுக்குந் துகில்களும் மெய்யிற் பூசும் கத்தூரியும் தொடுத்த மாலைகளும் காதணிகளும் சந்தனமும் கொடுப்பவராலும் கொள்பவராலும் ஆங்காங்கே சிதறிக் கிடந்தன. அடிசிற் சமைக்குங் கலங்களைக் கழுவும் ஒலியும் சமைக்கும் மடவரல்களின் சிலம்பொலியும் உண்போர் ஆரவாரமும் உண்ட மிச்சிலைத் துடைப்பவர் தங் கிண்கிணி யொலியும் கடலொலி போலக் கேட்டன.

இனி, முல்லை நறுங்குழலாள் காந்தருவதத்தையும் ஒளிவிடும் வாளேந்திய தடமலர்க்கையன் சீவகனும் காமன் தன் ஆழியணிந்த விரலிலே மலர்க் கணையையுங் கருப்பு வில்லையும் ஏந்தவும் குவளைமலர்க் கண்ணார் பரவவும் ஓரிருக் கையிலே அமர்ந்தனர்.

முருகனையனைய சீவகன் இனிய இயங்கள் இயங்கத் தன்மரபிற்கேற்ற சடங்குகளைத் தன்னுள்ளத்தே கருதி அம் முறையிலே, அந்தணர் பலாசாற் செய்த நுடிப்பினால் நெய்யை மிக்கெழுந் தீ வளரும்படி மறை மொழிந்து சொரிந்து வேள்வி செய்ய, வெள்ளி முளைத்தவுடன் சீதத்தன் நீரை வார்த்துக் கொடுக்கச் சீவகன் தத்தையை ஏற்றான்.

பிறகு, மேலாடையையும் முத்தாரத்தையும் மலர்க் கோதையையுஞ் சுமக்க வியலாமல் வருந்தும் இடையை யுடைய தத்தையின் முன்கையைப் பற்றித் தீயை வலம் வந்து பொற் கட்டிலை அடைந்தான்.

இத்திருமணச் சிறப்பைக் கண்டோர் சீவகன் செய்த தவம் நமக்கும் இயைக என்று விரும்பினர். மற்றும், இத் தகைய சிறப்பு இந்திரனுக்கும் வாயாது என்றும் புகழ்ந் தனர்.

சுற்றுச் சுவர் பவளப் பலகையால் அமைத்துத் தூண் களின் முடியிலே மணிகளை யழுத்தி, அவற்றின்மேற் பொன்னாற் செய்த வலிச்சல்களை யிட்டு, அத்தூணின் உச்சி மறையுமாறு 'மேற்கட்டி'யைக் கட்டி, மணமிகு மலர்மாலை களைத் தொங்கவிட்டு, மணமிகு புகை முகிலெனச்சூழ மணவறை யியற்றினர். 'சிறுபூளை செம்பஞ்சு வெண் பஞ்சு சேணம், உறுதூவி' ஐந்தும் படுத்த செல்வமிகும் அமளிகள் மூன்றினை, இருவருந் தனித்தனியே துயிலவும் கலந்திருக்கவும் வேண்டி அமைத்தனர். பூம்பட்டினாலாகிய இயந்திர எழினி யிட்டனர். ஆங்கே இளமங்கையர் இனிய முகவாசச் செப்பும், சந்தனச் செப்பும், மலர்மாலைப் பெட் டியும் ஏந்திப் பணிபுரிய மணமக்கள் இருவரும் இனிய இன் பக் கடலிலே திளைத்து மகிழ்ந்தனர்.

**கலுழவேகன் திருமுகம்**

சில நாட்கள் சென்றன. ஒருநாள் சீவகன் தன் இள மரக்காவில் உலவிக் கொண்டிருக்கும் போது, ஒருவன் ஆங்குப் போந்து ஓரோலையைத் தொழுது கொடுத்து விலகி நின்றான். அதனைச் சீவகன் படித்தான்.

"இடியெனப் பகைவரை யஞ்சுவிக்கும் ஒளிவிடும் வேலேந்திய கலுழன் ஓலை,

உலகாகிய பளிங்கிலே புகழாகிய பஞ்சு சிறிதிடமும் விடாமற் பரந்த இத் திருவினை முற்செய்த தவமிகுதியாலே பெற்ற செல்வனாகிய திறல்மிகு சீவகசாமி காண்க;

சீர்மிகும் அறனும் இன்பமும் பொருளும் இன்னும் சீவகசாமிக்குப் பெருகுக எனக் கருதி இவ்வோலையை வர விடுகிறேன்.

மன்னர்கள் தத்தையுடன் வீணைப் போர்செய்து தோற்றனர். கலை நிறைந்த நம்பியோ அவளை இசையில் வென்றான். பொறாத கட்டியங்காரன் உளம் வெதும்பி, 'வேலாற் போர் செய்து வென்றாற் கிவளுரியள்,' எனக் கழறி ஆங்கே போரொன்றை எழுப்பினான். அப்போரிற் குரிசிலாகிய சீவகன் தேரில் நின்று வில்லாகிய முகிலால் அம்பாகிய மழையைத் தூவினான். அப்போது பெருகிய குருதி-வெள்ளத்திலே வேழங்கள் நன்றாக முழுகுமாறு படையுடன் தான் விளையாடியதைத் தரன் விளம்ப அறிந்தேன். தரன் கூறியதேயன்றி, முன்னரொருநாள் அச் சணந்தியடிகள் உரைத்ததையும் எங்ஙனம் முடிவுறுமென்பதையும் அறிந்தே இனி நாம் செல்வது வேண்டா வென்று கருதிச் சீதத்தன்பால் தத்தையை விடுத்தேன். நம்மைப் பழிக்கும் பகைவர்கள் நாணுமாறு தான் செய்த போரைப் புகழ்ந்து, வெள்ளிமலை முழுதும் கொடியெடுத்தது. மற்றும், சீவகன் அடையும் வெற்றியும் தோல்வியும் என்னுடையனவே யாதலால், இனி மலர் மார்பன் என்மிக்க காவலை யிகழாமல், தான் நினைத்த காரியங்களும் எனக் கறிவித்தல்லது நினைத்தல் வேண்டா.

* மற்றும், ஆக்கமுறும் பொருள்களை எவராலும் அழிக்க முடியாது. அங்ஙனமே, அழியும் பொருள்களும் ஊழின்வழியே அழியும் எனவே, சச்சந்தன் வீழ்ச்சிக்கும் கட்டியங்காரன் ஆக்கத்திற்கும் சீவகன் வருந்தல் வேண்டா. மேலும் இனிய நீரை உப்புநீர்க்கடல் தராதது போலத் தீயவரிடம் நற்பண்பைக் காணமுடியா தாகையாற் கட்டியங்காரன் நமக்கு இனியும் தீமையே கருதுவான். உவர்த்த நீரை நன்னீராக்கி யாற்றுக்குக் கொடுக்கும் இயல்பு முகிலிடத்தில் இனிதாகவுள்ளவாறுபோலச் சீவகன் உள்ளம் பிறர்க்கு நலம் நாடுவதிலேயே செல்க."

இங்ஙனம் அத்திருமுகப்பொருள் இருந்தது. சீவகன் படித்த பிறகு, தன் மாமனடியைத் திசை நோக்கித் தொழுதான். வந்த தூதுவனை அன்பிற் பிணித்து விடுத்தான். தத்தையிடஞ் சென்று, நின் தந்தையார் நினக்களித்த இன்பப் பொருள்கள் இவையெனக்கொடுத்து மகிழ்ந்தான்.

---

* ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிக் கொண்ணாப்
போம்பொருள்கள் போகுமவை பொறியின்வகை வண்ணம்;
தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதரல் இன்றே
வீங்குபுனல் யாறுமழை வேண்டியறி யாதே."

## எ. குணமாலை திருமணம்

**வேனிற் காலம்**

வெங்கதிரோன் வடதிசைச் செலவைக் கருதி, முனி வர் சிந்தை போலக் குற்றமற்ற வானத்திலே தெளிவாக நடக்குங் காலத்தில், பின்பனி நீங்கும் பங்குனித் திங்களிற் காமன்தான் வீற்றிருக்குமாறு இளவேனிலைப் பிறப்பித் தான்.

அந்நாட்களில் மலர்க்கொத்தை யுடைய பூங்கொம்பு கள் தோடணி மகளிரைப் போன்றன. அப்பூங் கொம்பு களில் ஆடவர்போல வண்டுகள் வந்தமர்ந்தன. ஆடவ ரிடம் ஊடிய மகளிர்போல அக்கொம்புகள் அவ்வண்டு களின் பொறையினாலே ஒரு புறந் தாழ்ந்தன. அவ்வூடலைத் தீர்த்துக் காதலரிடம் முகங் கொடுத்து மகிழச் செய்யும் சேடர்போலத் தும்பிகள் சென்று வளைந்த புறத்தைத் தழுவி நிமிர்த்தின.

இவ்வாறு பூத்தலின் கத்தூரி யணிந்த மங்கையரின் மேனிபோல இனிதாய் மணங் கமழும் இராசமாபுரப் பொழில் வேனிலானுக்கு விருந்திடுதல் மேற்கொண்டது. கொம்புகளிற் குயில்கள் கூவின. எல்லோருந் துளைந் தாடும் வாவியிலே தும்பியும் வண்டும் தூவழி யென்னும் பண்ணை முரன்றன. எரிகின்ற காமத்தை விரும்புதற்குக் காரணமான இளவேனில் வருதலாலே இராசமாபுரம் வானவர் நகரைப் போன்றது.

**வேனில் விளையாட்டு**

இணையிலா இன்பத்தை யுடையாராகிய இராசமாபுர மக்கள், ஆற்றின் அயலிலே வானளாவிய-மணங்கமழும்-பூமரக் காவிலே இன்பம் நுகர உளங் கொண்டனர். அப்போது அந்நகர் அருகப் பெருமானுடைய பொன்னெயில் போலக் கிளர்ச்சியுற்றது. மக்களின் நெருக்கத்தை நீந்திச் செல்லும் முத்துப்பந்தர், ஒளிவிடும் யானைத் தந்தத்தாற்

செய்த உருவு திரையையுடைய *கொல்லாப் பண்டி, ஒளி யுமிழ்ந்து இளவெயிலைக் கெடுக்கும் பொற்சிவிகை, யானைக் கன்று, பிடிக்கூட்டம் ஆகிய இவற்றின்மீது ஏறுவார் ஒலி யும், கூட்டமாக வருவோர் பிரிந்து விடுதலால் மீண்டும் அவர்களைக் கூடுதற்கு முன்னேறிச் செல்ல வழி விடுமின் என்பாரொலியும், மங்கையரின் சிலம்பொலியும் கடலோடு மாறுகொண்ட மற்றொரு கடலொலி போன்றன.

அகிற்புகை, முறுக்கின மாலைகளை யொத்தது. வீசும் சாமரைகள், வளைந்த திரைகளைப் போன்றன. அப்போது தூவின மகரந்தப் பொடி பரவி வானிலே கட்டின மேற் கட்டியைப் போன்றது. சோலைசூழ்ந்த மலையினின்றும் தூங்கும் அருவித்திரள் போலும் முத்துமாலையை யுடைய பீலி வேய்ந்த ஊர்திகள் கொல்லாப் பண்டி ஆகிய இவற்றி னிடையிலே, பாகன் சொல்லுக் கஞ்சிச் செல்லும் யானைகள், கருமுகில்கள் நிரை நிரையாகச் செல்வன போன்றன.

பெருந்திரளான மக்களெல்லோரும் பிறர்க்குக் கொடுக்கும் புடைவை வைத்த பெட்டிகளும், அணிகல மிழந்தோர்க் களிக்கும் அணிகலப் பெட்டிகளும், மதுவைப் பெய்து முழக்கந்தரும் மூங்கிற் குழாய்களும், மணமிகு மாலைகளும், மணமிகும் எண்ணெயும், வண்டுமுரலும் சந்த னமும், மெய்யிலணியும் சுண்ணப் பொடியும், உண்ணும் உணவும், இன்பத்தை விளக்கும் யாழ் முதலியன இட்ட பெட்டிகளும் ஆகியவற்றை ஆங்காங்கே எடுத்துக்கொண்டு விரைந்து நகர வாயிலில் நெருங்கினர்.

அப்பொழுது பாடலொலியும், யாழிசையும், ஆடும் பொழுது இயக்கும் இயங்களின் ஒலியும், இவற்றைக் கண்டுங் கேட்டும் ஆரவாரிப்போர் ஒலியும், யானை பிளிறும் ஒலியும் தம்மிற் கலந்து வானிலே நிறைந்தன.

இங்ஙனம் யாவரும் புறம் போந்து பொழிலிடைப் புக்கனர்.

---

* கொல்லாப்பண்டி-பாய் கட்டினகட்டைவண்டி (மலைநாட்டு வழக்கு).

அள்ளிப்பருக விழைவு தரும் குவளைமலர் நிறைந்த குளங்களும், நீண்ட தேன் பிலிற்றும், கழுநீர் மலர்ந்த நீரறுத ஓடைகளும், கனிகளால் நிறைந்த - பறவைகளை யுடைய - ஆற்றங்கரைச் சோலையும் அப்பொழிலின் ஒரு மருங்கிலிருந்தன. மற்றொரு மருங்கினிற் கனிந்த செவ் வாழை மரங்களும், பருத்த அரையினை யுடையதாய்ப் புதுமைமிகக் கனிந்த மாமரங்களும், கொம்பிலேயே பழுத் துத் தேனைச்சொரியும் சுளைகளையுடைய பசும்புறப் பழங் கொண்ட பலாமரங்களும் காணப்பெற்றன. மற்றும், கள்ள வானரமும், கருங்குரங்கின் இனமான இளமந்தியும், துள் ளும் மானும், யானைகளும், வெள்ளையன்னமும், கலவ மயிலும் நிறைந்திருந்தன. அப்பொழிலிற் புகுவோர் உள்ளம் தம் துணைவியரை நாடும் இயல்பினதாயிருந்தது அது. அத்தன்மையால் அப்பொழிலிடைத் தம் காதற் கணவருடன் இன்பம் நுகர்ந்த பெண்களின் கண் முதலிய உறுப்புக்கள் கவினுற்றுத் தாமரை மலர்கள் அப் பொழி லிடை மலர்ந்தன போன்றன.

மற்றும், அப் பூம்பொழில் தேன் பிலிற்றி யூறியும் அத்தேனின் மணம் கமழ்ந்தும் வெண்மலர் பரவியும் மிகுந்த குளிர்ச்சியை யூட்டுதலின் தண்ணிய பொய்கையிற் புக்கிருப்பதுபோல் இனிமை பயந்தது.

**சுரமஞ்சரியுங் குணமாலையும்**

அங்கே, கடல்நீரிடைப் பவளக்கொடி போன்ற முல்லை மலர்க் கூந்தலாள் சுரமஞ்சரி யென்பவளும் கொவ்வைக் கனியிதழாள் குணமாலை யென்பவளும் பாலாவியனைய மெல்லிய ஆடையணிந்து, அக்காவினில் ஓரிடத்தில் திரையை வளைத்து, அதனுள்ளே பூவையுங் கிளியும் மழலை மொழிய விண்ணவர்மகளிர் போல் அமர்ந்திருந்தனர்.

அப்போது குணமாலை யென்பவள் யாவரும் விழையத் தக்க தன்னுடைய சுண்ணப்பொடியைச் சுரமஞ்சரியிடங் காட்டி, 'இதனைப்பார்,' என்றாள். சுரமஞ்சரி அதனைப் பார்த்துவிட்டுச் 'சுண்ணமென்னும் பெயருடன் நினக்குக்

சுமையாக வந்ததே!' என நகையாடித் தன் சுண்ணப் பொடியைக் காட்டி, 'இதனையும் பார்,' என்றாள்.

குணமாலை, 'வானவருலகினன்றி யிவ்வுலகிலே யென் சுண்ணத்திற் கொப்பாமொரு சுண்ணங் காணலாமெனை அறிந்தோர் கூறின் உன் சுண்ணத்தையும் ஒப்பிடலாம்,' என்றாள்.

சுரமஞ்சரியின் உளம் அழன்றது. 'சுண்ணத்திலே தோற்றால் நறுநீரில் ஆடக்கடவேமல்லேம். மற்றும், மாற்றுயர்ந்த கோடிப்பொன்னை அருகப்பெருமானுக் களிக்கக் கடவேம்,' என்று சீறினாள். குணமாலையும் ஒப்பினாள்.

**சுண்ணப் போட்டி—சீவகன் கலைத்திறன்**

இருவரும் தத்தம் தோழிகளிடஞ் சுண்ணப்பொடியைக் கொண்டுபோய்த் தக்கோரிடங் காட்டி வருகவென்று பணித்தனர். பொற்றட்டிலே சுண்ணத்தை வைத்துத் துகில்கொண்டு மூடியெடுத்துச் சென்றனர் இரு பணிப் பெண்கள். அப்பெண்களின் பின் சுரமஞ்சரியின் தோழியாகிய கனகபதாகை யென்பாளும், குணமாலையின் தோழியாகிய மாலையும் சென்றனர்.

அப் பொடிகளைப் பார்த்த சில மைந்தர்கள், 'இவ் விரண்டுமே நல்ல சுண்ணங்கள். இவற்றின் உயர்வு தாழ்வை யறியவல்லான் போர்த்திறலையும் வண்மையையுமுடைய சீவகன் ஒருவனே. அவனிடங் காட்டுக!' என்றனர்.

சீவகன் தன் தம்பியரும் தோழரும் தன்னைச்சூழ அமர்ந்திருக்க அவர்களுடன் இனிமையாக உரையாடிக் கொண்டிருந்தான். அத்தோற்றம் கோள்களும் உடுக்களுஞ் சூழ முழுமதியொன்று வானிடை ஒளிர்வதுபோலிருந்தது.

அங்கே கட்டியங்காரனின் தோளினைப் பிளக்கும் வாளினைப்போன்ற கண்ணியரின் தோழிகள் சென்று சீவகனின் தாளை வணங்கித் தம் குறையைச் சாற்றினர். சீவகன் சுண்ணங்களைத் தன் கண்ணால் நோக்கிய அளவிலே

அறிந்து, 'இவை நல்ல,' என்று குணமாலையின் சுண்ணத்தைச் சுட்டினன்.

வியந்த கோதையினர், "ஐயனே! எல்லோரும் தொட்டுப் பார்த்தும் மோந்தும் ஆராய்ந்து வேறுபாடு கூறாது இவை நல்லவென இரண்டையுமே புகழ்ந்தனர். மற்றும், 'இவற்றின் வேறுபாடு சீவகனே அறிவான்,' என்றனர். ஆதலின், வந்தோம். நீ கற்றதும் அவர்களுடனே? நூற் கடலே! அவர்கள் நின்னைச் சுட்டிக் கூறியது வீணாகாமல் நின்னறிவினால் ஆராய்ந்து கூறுக," என்று வேண்டினர்.

"இவை நல்ல சுண்ணம். *இவை சிறிது தாழ்ந்த சுண்ணம். அதற்குக் காரணம் என்னெனிற், சிறந்த பொற்புடைய இச்சுண்ணம் கோடையிலிடித்தவை. நல்லவல்லாத இவை மாரியிலிடித்தவை,"

என்றனன் சீவகன்.

"அன்பு மிக்கதேல் தீயவும் நல்லவாம்! தீரக் காய்வு உண்டானால் நல்லவும் தீயவாம். இவை உலகியற்கையன்றோ? எம் உளங்கொள விளக்கினல்லது வள்ளலாகிய நீ இங்கிருந்து விலக வியலாது"

என்று சுரமஞ்சரியின் தோழி செப்பினாள்.

"சான்றுகொண் டுணர்த்தினால் உன் உளங் கொளத் தெளிக!" என்றான் சீவகன்.

"அண்ணலே! மண்ணவரும் வானவரும் நின் சொல்லை மறார். நீ கூறியவாறே கூறுவர். எனவே, அவர்களின் சான்று வேண்டேன். தம்மினத்தில் ஒன்றையொன்றழைக்குஞ் சொல்லையறிந்து, அதிலே பயின்ற பறவை முதலாக இவற்றைத் தீதென்று நீக்குமாயின் அதனை ஒப்புக்கொள்வேன்," என்றாள் கனகபதாகை.

'அங்ஙனமாயின் இப்பொழிலிற் சான்று கூறுவார் நால்வருளார்,' என்றான் சீவகன்.

---

* சுண்ணப்பொடியிற் பல கலந்திருத்தலிற் பன்மையாற் கூறினன்.

'எம்பெருமான் அருளியவாறு ஆகும்,' என்று ஒப்பினாள் கனகபதாகை.

சீவகன் சான்றுவார் நால்வரையும்* விளித்தான்.

சுரும்பு, வண்டு, தேன், மிஞிறு என்பவை வண்டின் வகைகள். (இவற்றிற் சுரும்புதான் சிறந்தது என்பார் நச்சினார்க்கினியர்.)

வண்டுகளைக் கூப்பிட்ட சீவகன் தன் இருகையிலும் இருவருடைய சுண்ணங்களையும் எடுத்து, 'விண்ணில் தூவி விட்டான்.' சுரமஞ்சரியுடைய சுண்ணத்தை ஒரே பண்புடைய சுரும்பும் மிஞிறும் பற்றாமல் விட்டுவிட்டன. அவை வீணே நிலத்தில் வந்து வீழ்ந்தன. குணமாலையின் சுண்ணத்தைத் தேனும் வண்டும் கவர்ந்து நுகர்ந்தன.

"தத்தும் அலைகடலிடைத் தோன்றும் பவளத்தில் முத்துப்பதித்தாலனைய முறுவலீர்! உங்கள் உளம் ஒப்பியதோ? சென்று நம் தலைவியர்க் குரைமின்."

இவ்வாறுரைத்த சீவகனைக் கனகபதாகை நோக்கினாள். "நீலமணியைக் கரைத்து நிறஞ்சேர்த்து வரைந்தாலென வளைந்து, உலகைத் தமக்கு விலையாகக் கொள்ளும் புருவத்தினாள் சுரமஞ்சரியின் கண்போலத் தவறாத வேலவனே! நீ தெளிவித்த முறை எனக்கு உடம்பாடாகப் புகழ்வதற்கும் உரியதாயிற்று," என்றாள்.

**சுரமஞ்சரியின் சீற்றம்**

பின்னர் இரு மடந்தையரும் சீவகனை வணங்கிச் சென்று குணமாலையின் வென்றியைக் கூறினர். கேட்ட சுரமஞ்சரி இடியொலி கேட்ட நாகம் தான் உறையுமிடத்தே இடிப்புண்டு வருந்தினாற்போல வருந்தினாள். குணமாலை கண்டு திடுக்குற்றாள்.

---

* "மங்கை நல்லவர் கண்ணும் மனமும் போன்று
எங்கும் ஓடி யிடறுஞ் சுரும்புகாள்!
வண்டு காள்! மகிழ் தேனினங் காள்! மது
உண்டு தேக்கிடும் ஒண்மிஞிற் றீட்டங்காள்!

"பாவையே! நிலவின் கதிரால் வருத்தமுற்ற தாமரைப் பொய்கை போன்றனையே! வருந்துவதற்குரிய நிகழ்ச்சியை விரைந்தென்னிடம் உரையாய்," என்று வேண்டினாள்.

சுரமஞ்சரி யாதும் உரைத்திலள். தன்னுளத்தே, 'நின்மேல் விருப்பங்கொண்டு என்னுடைய நல்ல சுண்ணத்தைத் தீய சுண்ணமென் றிகழ்ந்த வேறுபாடறியாத அவன் என்னையும் விரும்பித் தானே வந்து, அக்காலத்தே கூறுங் கூற்றுட்படத் தோல்வியைக் கூறி என்னடியைத் தொழுமாறு நோற்பேன். இப்போது அவன் நின்னை விரும்புதற்கு நீ முன்னே நோற்றனை போலும்,' என்றெண்ணுங் குறிப்புத் தன் முகத்தே தோன்ற வறிதே சென்றனள்.

சென்ற கன்னியானவள் கன்னியர்சூழச் சென்று கன்னிமாநகராகிய இராசமாபுரத்தையடைந்து தன் கன்னிமாடத்திற் புகுந்தாள். நீராடாமல் வீணே திரும்பிய தன் கன்னிக்கு என்னுற்றதோவென அவளுடைய நற்றாய் சுமதி கலங்கினாள். கன்னியின் தோழியர் சுண்ணச் செய்தியைச் செப்பினர்.

இரு பெண்கள் தம் கண்களாற் கலந்துகொண்டாலும் உள்ளச் செற்றம் ஒழியாரெனக் கலங்கிய நற்றாய் தன் கணவன் குபேரதத்தனிடஞ் சென்றாள்.

"நம் மகள் சுரமஞ்சரியின் எண்ணம் விண்ணில் உலவும் திங்களை விண்ணினின்றும் விலக்குவார் செயல்போன்றுளது. 'ஆடவரைக் கண்ணாற் காண்பதேயன்றிக் காதாற் கேட்பினும் உண்ணேன்,' என்று உறுதியாக உரைத்துவிட்டாள். இன்று நீர்விளையாட்டிற் சுண்ணத்தினாலே தோன்றிய வேறுபாடு என் உயிருக்குக் கூற்றமாயிற்று,"

என்று கூறிக் கண்களிலிருந்து முத்துதிர்வதுபோல நீரைச் சிந்தினாள்.

குபேரதத்தன் திகைத்தான். 'நீர்விளையாட்டில் நம் நங்கைக்குப் பட்டதென்?' என்று பதைப்புடன் வினவினான்.

"சுண்ணப் போட்டியாற் சுரமஞ்சரி குணமாலைக்குத் தோற்ருள். சிறந்த சுண்ணமிதுவெனத் தெளிவித்த தனுற் சீவகனிடமுஞ் சீற்றங்கொண்டாள்," என்ருள் சுமதி.

துயில்கொள்ளுங் களிறுபோலக் குபேரதத்தன் வருந்திப் பெருமூச்செறிந்தான். சிறிது தெளிந்து, "என் பாவை நினைத்தது வேறொன்ருக இல்லாமல் இத்தகைத் தாயின் மகிழ்ச்சிக்குரியதே. என் கோதை தெருவிலன்றி நகரினும் உட்பட ஆடவரைக் கடிந்தாலும், வெள்ளக் கணக்காகப் பொருளை வீசி அவள் விருப்பத்தை நிறைவிப் பேன். 'இன்னதொரு காலத்திலே இன்னுன் மகள் இன்ன தொன்றில் இன்னதோர் நகரில் இன்னதோரிடத்தில், இன்ன தோர் எல்லைவரையில் ஆடவரை விலக்கி வாழ்ந்தாள்,' என என் பெயரை நிறுத்தல்வேண்டும். அன்னதோர் ஆரம் எடுத்துவா," என்று சுமதியை ஏவினுன்.

வையகம் மூன்றையும் விலைகொள்ளும் பெருமைமிக்க மாணிக்கமாலை யொன்றினை அவள் கொணர்ந்தாள். அவன் அதையேந்திக் கட்டியங்காரனிடஞ் சென்று காணிக்கை யாக நல்கித் தன்குறை சாற்றினுன். அரசனும் அழகிதென ஒப்பினுன். எனவே, சுரமஞ்சரி யிருக்குந் தெருவெங்கும் ஆடவர் வழக்கற்றது. மற்றும், சுரமஞ்சரியின் கன்னி மாடப் பாவையெல்லாம் பெண்ணுகிவிட்டன.

சுரமஞ்சரியோ, 'என் வாழ்நாளின் காலம் தன்மனஎல் லையையடைந்து குறுகினும் எனக்குக் கூடுமாயிற் சீவகனின் திருமகளுறையும் மார்பம் கூடுவதாக! அவனையொழிய என் நிறையை அழிப்பாரிலர்,' என்னும் ஒருமைப்பாடுற் றிருந்தாள்.

இனி, நற்பண்பினளாய குணமாலை, 'இன்பத்திற் குரித்தாய கடுநட்புத்தானே பகைக்குமுரியதாய் ஒருவினை யாட்டிலே நட்பினை விலக்கிநிற்கும்,' என்னும் மூதுரையை யெண்ணி வருந்தி அழுதாள். பிறகு, தெளிந்து, தண்ணிய தீம்புனலில் ஆடவிழைந்து, அழகிய தளிர்நிறைந்த நீண்ட

அசோகின் அடியில் வீற்றிருக்கும் அருகப்பெருமான் அடியில் ஆயிரம் பொற்றாமரை மலர்களையும் நறுமணமிகு பிற மலர்களையும் இட்டு வணங்கினாள்.

**நீர்விளையாட்டு**

இவர்கள் செயல் இங்ஙனமாக, நகர் நீர்விளையாடத் தொடங்கியது. அரசன் முதலில், வறியரும் அந்தணரும் கொள்கவென்று *பொன்னைக் கடலென வழங்கினான். அப் பொன்னையேற்கும் அவர்கள் ஒலி வானில் நிறைந்தது. நகரமக்கள் காமனை வென்ற நேமிநாதரின் திருக்கோயிலுக்காக எட்டுக்கோடிப் பொன்னை நல்கினர். மற்றும் இரவலர்க்கு யானை முதலாகப் பல உடைமைகளையும் பொற்கட்டிகளையும் அளித்து, அவ்விரவலரின் கெடாத தீவினையாலுண்டாகிய மனக்கவலையாம் நீராலே தாக்கப்பெற்றுடைந்த ஆசையென்னுங் கடலை அடைத்தனர்.

பிறகு, அழகிய சிலம்பொலிக்குஞ் சிற்றடியாரொடு வீரக் கழலணிந்த மைந்தர்கள் ஆற்றையடைந்து, போர் புரியும் களம்போலத் தோன்றும் நீர்விளையாட்டிலே யீடுபட்டனர். மைந்தருடன் மகளிர் விளையாடுவது காருடன் மின்னல் விளையாடுவதுபோன்று காணப்பெற்றது.

**சீவகனும் நந்தட்டனும் நீர்விளையாட்டுக் காணல்**

சுண்ணத்தைத் தெளிவித்த பின்னர்ச் சீவகன் தன் தோழருடன் ஒருபுறமும் நந்தட்டன் தன் தோழருடன் ஒருபுறமும் சென்று நீர்விளையாட்டுக் கண்டு மகிழ்ந்தனர்.

ஒருத்தி தன் சிலம்பொலிக்க மேகலையார்ப்ப நீராடச் சென்றாள். அத்தோற்றம், 'இவள் கண் கூற்றுவனென்பதை அறிவீர். நுங்கட்கோ உயிர் ஒன்றே; சேம உயி

---

* 'மாசை மாக்கடல் மன்னவன் ஆடலின்'—எனவரும் இப்பொருளையுடைய செய்யுளடிக்கு, 'மன்னவன் பெரியதொரு கடனாகப் பொன்னிலே பிறத்தலின்' என்றுரைகூறுவர் நச்சினார்க்கினியர். அது, 'இரணிய கருப்பம்' என்னும் தானம். அஃதாவது, பொன்னாற் செய்யப்பெற்ற பசுவின் வாயிலே ஒருவன் புகுந்து பின்புறம் வெளிவந்து அப்பசுவைத் தானமாகக் கொடுப்பதாம்.

சில்லை. எனவே, விலகிச் செல்லுங்கள்,' என்று சிலம்பும் மேகலையும் இரங்கக் காமவல்லி செல்வதுபோலிருந்தது.

அழலாகிய பொய்கையிலே அலர்ந்த தன் பொன்னரி மாலையை நீராடும்போது நீரடித்துச் செல்லக்கண்ட ஒருத்தி அதனைப் பற்றமுடியாமல், "நின் காதலன் மகிழ இவற்றையும் அணிவாயாக," என்று குழையும் பூணும் முதலான பிற அணிகலன்களையும் கழற்றி நீரிலே எறிந்தாள்.

அழகிய நீண்ட கண்களையுடைய மகளிர் நீராடிய கூந்தலை விரித்துலர்த்தியவாறு, தோகையை விரித்தாடும் மயிலைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அவர்களைத் தோகை மயில் என்று நினைத்த பெட்டைமயில் அருகேசென்று நோக்கி மகளிராயிருத்தலை யறிந்து நாணி விலகிச்சென்றது.

ஒரு தோழி நீராடும்போது அவளுடைய பைம்பூண் நீருள் வீழ்ந்துவிட்டது. அதனைத் தேடிக் காணாத அவள் தன் தலைவியை நோக்கி, 'அன்னப்பேடே! என் அன்னை கொடியளென்றறிவாய்; என் அடிமைப் பணிவேண்டின் அதனைத் தேடித்தருக!' என்று பொன்னங்கொம்பென வணங்கி வேண்டிநின்றாள்.

அகிற்புகை கமழுங் கோதையாளொருத்தி தான் புனலாடிய பிறகு தன் விரலால் இசைக்கும் யாழ் நரம்பே முலையாகவும், அந்நரம்பிலிருந்தெழும் இன்னிசையே பாலாகவும்கொண்டு காமக்குழவியை ஊட்டி வளர்த்தாள். நீராடிக்கொண்டிருந்த அவள் கணவன் அவள் குறிப்பறிந்து அவள் காண மெல்லிய மலர்ப்பொழிலிற் புகுந்தான்.

ஒரு மெல்லியலாள் தன் கிள்ளையின் பசிநேரம்வந்தும் நினைவின்றி விருப்புடன் புனலாடிக்கொண்டிருந்தாள். பசி மிக்க அப் பைங்கிளி அவளை விரைந்து வரவழைக்க விரும்பிப், 'பாம்பு! பாம்பு!' என அலறியது. அக்குரல்கேட்ட அவள் அஞ்சித் தோடுகழல்வதையும் பாராமற் பரபரப்புடன் கரையேறினாள்.

துணையில்லாத நீலக் கலவமயில் ஈசலைப் பற்றித்தின்ன அவற்றின்மேற் செல்வதுபோலத் தனித்த பூங்கோதை யொருத்தி வளையலணிந்த முன்கையிலுள்ள பந்தை வலனு மிடனும் போக்கி அவற்றின்மேல் தாவிச்சென்றாள்.

திருமகள்போல்வா ளொருத்தி தன் அழகைக்காண விரும்பிக் கண்ணாடியின் குருதிநிறத் துகிலுறையைத் தன் பொன்விரலால் நீக்கினாள். அக் கண்ணாடிமுற்றும் அரவி னால் விழுங்கப்பெற்றிருந்து, பின்னர் உமிழப்பெற்ற முழு மதிபோற் காணப்பெற்றது.

ஓரிடத்தில் இலவிதழார் சிலர்கூடிச் செம்பொற் பல கையிற் பளிங்காலாகிய காய்களைப் பரப்பிப் பொன்னாலான கவறுருளும்படி பவளவுழக்கைக்கொண்டு விளையாடினர். (கையாற் கவற்றை உருட்டாமல் உழக்கிலிட்டுருட்டுவது இன்றும் உண்டு.)

ஓரிடத்தில் உண்போரை நாடி இனிய பாற்சோறு, பொன்னிறப் பருப்புச்சோறு, சருக்கரைப் பொங்கல், பல்லில் நீரூறும் புளிக்கறி ஆகியவற்றைக் கொடுத்துண் பித்தனர்.

ஓரிடத்தில் இளமையாகிய கூம்பிற் கட்டின மாலையா கிய கயிற்றுடன் சேர்ந்த நறுமணப் புகையாகிய பாயை விரித்துயர்த்தி, செல்வமே நினைக்கப் பெறுங் காற்றாகக் கொண்டு, கள்ளுண்டார் இயல்பைத்தரும் நீர் விளையாட் டாகிய கடலில், அள்ளற் சேற்றுள் நண்டு புகுந்தாற் போன்ற மெய்யுடன் காமக் கலன்போல் விளையாடினாள் ஒரு பரத்தை.

ஓரிடத்தில், தாய் தன் கையினால் மெல்லெனத் தொடை யிலே தட்ட, அணிமிகு பொன்னமளியிலே துயிலும் அழகிய குழவிபோலக் கரையிலே மோதும் அலைகள் மெல் லென அலைப்ப இதழ்விரிந்த தாமரைமலர்ப் பள்ளியிலே மனம் பொருந்தியவாறு, வெள்ளை அன்னமொன்று துயின்றது.

சுதஞ்சணன் காட்சி

தம்முடைய சிந்தையிலே விடாது நின்றெரியும் நெருப்பினைப் போன்ற தீய நீரராகிய அந்தணர் சிலர் தமக் காக்கிய சோற்றுக்குவையை ஒரு நாய் வந்து கவ்வியது. அவர்கள் சினந்து, 'இனி நீ பிழைத்துப் போவையோ?' என்று கூறிக் கல்லையுந் தடியையுங் கையிலெடுத்துக் கொண்டுகனன்று காற்றினுங் கடியராகத் துரத்தியோடினர். அது, 'வேள்வியிலுண்டியை விலக்கிய நீங்கள் எனக்கு மறு பிறப்பிலே பணியாட்களாகப் பிறப்பீர்கள்,' என்பது போல, 'ஆள்! ஆள்!' எனக் கதறுவதையுங் கருத்துட் கொண்டிராங் கிலர். அது நீள் கயத்தே பாய்ந்து நீந்தின அளவிலே வளைத்துக் காலொடிய அடித்தனர். அது மேலும் ஓட முடியாமல் அவர்கள் வலையில் அகப்பட்டது. அவர்களோ அதனை அதனுடன் விடாமற் கூற்றினுங் கொடியராய்க் கொல்லப் புகுந்தனர்.

அப்பொழுது கள்ளின் கடுமை தாங்காதென மட் குடத்தை விடுத்துத் திங்களென ஒளிரும் வெள்ளிக் குடத் திலே நிறைய கள்ளைச் சுமந்த கன்னியர் இருவருடன் கண் டோர் யாவருந் திடுக்கிட்டு நடுங்கும் அஞ்சத்தகுந் தோற் றத்துடன் தூய்மையறியாத களிமகன் ஒருவன் அங்கே வந்தான்.

கையில் வேலேந்திய அவன் வாயில் ஒரு வெள்ளிக் கிண்ணத்தை வைத்து, அவன் வாய்க்குள்ளே செல்லுமாறு இருவரும் ஒரு குகையிலே இரு திங்களின் நிலவு பாய்வ தைப் போல இருகுடங்களி லிருந்துங் கள்ளை வார்த்தனர். உள்ளத்தே அழற்சியை யுண்டாக்கும் அழகிய மலர்களி னின்றெடுத்த அக்கள்ளை நன்றாகப் பருகிய அவன் வெம்மை பரக்கும்படி சுழலுங் கண்ணுடனும் சோர்தரும் மாலை யுடனும் கழலணிந்த காலுடனும் நீலநிற இடைக் கச்சுட னும் அந்தணர்களின் முன் வந்தான்.

"என் நாயை அடித்துக் கொன்றுவிட்டீர். இனி, என் நாயின் உயிரை விரைவிலே மீட்டுத் தருவீராக! அங்

னமின்றி என்னுடன் போரிட நினைப்பின் இவ்வடியைத் தாங்குவீராக! அதற்கும் இணங்கீரெனின் உடைப்பேன் கட்குடத்தை ”

இங்ஙனம் குழறுஞ் சொற்களால் வைதான். அவர்கள் திகைத்தனர். அதுகண்ட சீவகன் வல்லே சென்று அவனைத் தணிவித்து மறையவரையுங் கலக்கமின்றிச் செல்ல விடுத்தான். அவர்கள் திரும்பிச் சென்றனர். இந்நிலையிலே சீவகனுடைய தோழருந் தம்பியரும் வந்து சீவகனுடன் சேர்ந்து கொண்டனர். அவர்களுடன் சென்று தன் இறுதியை எதிர் நோக்கியிருக்கும் நாயைக் கண்டான். அவ்வளவிலே அவன் கண்களிலே நீர் பெருகியது. அருளுறு சிந்தையன் அழுதிட்டான்.

“யான்கூறுகின்ற மறை மொழியை நீ ஒருப்பட்டு நினைத்தால், இவ்விடத்தே நாயுடம்பை விட்டுவிட்டுச் செல் கதியில் முழுமதியென ஒளிவிடும் பெருமைமிக்க வுடம்பைப் பெறுவாய்,” என்றான்.

அந்நாய் அவன் வாய்மொழி கேட்டுச் சிந்தித்துக் கண்களிரண்டினும் நீர்வாரச் செம்மலாகிய சீவகனைப் பார்த்து மனம் ஒன்றுபட்டு வால் குழைத்து மகிழ்வைக் காட்டியது. திண்ணிய வுளமுடைய சீவகன் இதுதான் காலமென் றறிந்து மறை மொழியை நவிலத் துணிந்தான்.

இம்மையில் நற்செய்கை யொன்றுமிலாரும் வாழ்நாள் கழியும் பொழுது, ஈங்கே அவர் செய்த தீவினையினின்றும் நீங்க, முற்செய்த நல்வினையை விளைக்கும் வித்தாகிய மந்திரம் ஐந்தையும் அதன் செவியிலே தாழ்ந்து செப்புகின்றவன், அதன் பயன் தழைக்க, ‘நின் மனத்திலே குற்றத்தை முதலில் நீக்கிக்கொண்டு, பிறகு, இதற்குமுன் செய்தவை நன்மையில்லாமலே ஒழுகினேனென்று வருந்தற்க. பற்றையும் ஆர்வத்தையும் விட்டிடுக, சாவின் அச்சத்தினாலே மறுகற்க’ என்று முதலிற் பெருங்குற்றம் அகற்றினன். பிறகு, “இறைவன் கூறிய ‘ஐம்பத அமிர்தம்’ உண்டால் நின்னிடமுள்ள கருநிற வினையினின்றும் நீங்கி, நற்கதி

யைப் பெறுவாய். அக்கதியோ உள்ள நாளெல்லாம் நீங்காத இன்பத்தை நிகழ்த்தும். ஆதலால், இவ்வைந்தை யும் மறவாமல் நினைத்திடுக,'' என்று அறிவுரை கூறினான். பிறகு, அம் மறைமொழியையும் அதன் காதிலே ஓதினான். அதுவும், ஐம்பத அமிர்தத்தை நெஞ்சினாற் பருகி அவ் வுடம்பை விட்டு நீங்கியது.

அருகன் ஆகமத்திற் கூறப்பட்ட உயிர் செல்லும் நெறிகள் பலவற்றிற் *'பாணிமுகம்' என்னும் கதியாலே அவ்வுயிர் ஓடி, சங்கவெண் மலையின் உச்சியில் நின்று, கூத்தரைப் போலக் கோலமெலாம் புனைந்து சுதஞ்சணன் என்னும் விஞ்சையனாகி வியக்கத் தோன்றிற்று. மதில் சூழ்ந்த அழகிய அவனுடைய நகரில் அரண்மனையிலுள்ள இடமெல்லாம் நிறைந்த மெல்லிய தோளினையுடைய கொங்கு சூழ் குழலார் வந்து குழுமினர். அவர்கள் அவன் தேவியர். அவர்களுடைய பரிவாரமும் அடைந்தது. பிறகு, அவன் தன் தேவியரிடையே நீண்டநாள் பிரிந்திருந்த அயர்வுதீரக் கலந்தின்புற்றான்.

இங்ஙனம், தான் சீவகனிடங் கற்ற ஐம்பத நீராலே தீவினை கழுவப் பெற்று வானிடு வில்போலத் தேவனாகத் தோன்றி, முன் விடுத்த நாயுடம்பையும் இடரைக் கெடுத் துத் தனக்கு இனியனாகத் தன்னைச் சார்ந்த சீவகன் நிலை மையும் தன் 'முற்பிறப் பறியும் அறி'வினால் அறிந்துணர்ந் தான்.

இரும்பைப் பொன்னாக்குவது போலத் தன் இழிநிலை யைக் கெடுத்து, உயர்நிலையை நல்கிய ஆருயிரனைய தோழ னைக்காண விரும்பித் தன் விஞ்சை யுலகைக் கடந்து, சீவ கன்முன் விரைவில் தோன்றினான். நறும்புகை ஓரோசனை வரை கமழவும் ஒண்ணிலவு பரவிய கதிர் வீசும் மேனியுட னும் குற்றமற்ற மணிமுடியிலே புனைந்த மாலையுடனும்

---

* பாணிமுகம்: சுட்டுவிரலும் பெருவிரலும் நீங்கின இடம். அதுபோல முதலில் நேரே யோடிப் பிறகு விலங்கி யோடுதல் (நச்சி னார்க்கினியருரை)

புனைவுசெய்த ஞாயிறு போலத் தோன்றிய சுதஞ்சணனைச் சீவகன் பார்த்து வியந்தான். கண்கள் இமையாமலும் யாக்கை நிழலிடாமலும் கண்ணிவாடாமலும் இருக்கக் கண்டு இவன் வானவனேயென்று தேறி, 'ஐயனே! நீ யார்?' என்று வினவினான்.

“குங்குமக் குவடெனப் பருத்து, அழகு வீற்றிருந்த தோளனே! எந்தையே! யான் நினதருளால் இங்கிருந்து சென்று, இயக்கருக் கிறைவனாகி, சங்க வெண்மலையின் உச்சியிற் சந்திரோதயம் என்னும் நகரிலே வாழ்வேன். இதுவே என் நிலை.”

இங்ஙனம் சுதஞ்சணன் உரைப்பக் கேட்டு, இமயமும் ஒவ்வாதவாறு பொன்னை மாரியென யாவருக்கும் வழங்கும் வண்கைப் புரவலனாகிய சீவகன் விருப்பத்துடன் பார்த்து, 'ஐம்புலனை வென்றவ ருலகமாகிய 'சித்த க்ஷேத்திர'த்தைப் பெற்ற 'சித்த பரமேட்டி'களுடைய இன்பமெல்லாம் இன்றெனக்கு வந்தது,' எனக்கூறி மகிழ்ந்தான்.

பகைவர் கூறிய வீரக்கழலணிந்த சீவகன் இங்ஙனங் கூறச் சுதஞ்சணன், 'வண்டு முரலும் அசோகின் நீழலில் அமர்ந்த நம் இறைவனது தலைமைபோல நினது தலைமையிலே இவ் வுலகமெல்லாம் அகப்படுத்தி, எல்லா வுயிரும் கண்ணாடியிற் பாவைபோல நீ வருந்திய தொழிலுக்கு வருந்தும்படியாக நின்னடியில் தருவேன்,' என்றான்.

“நாளும் பக்கங்களும் கெட்டு வீழினும் வீழ்தலில்லாக் கோள்களின் உரிமை போன்ற உரிமையுடையாய்! வீரர்கள் வாளேந்திக் குழுமிக் களிற்றுத் தொழுவுடன் என்னை வளைத்து வலிமை காட்டினாரெனின் நின்னை நினைப்பேன். இப்போது, யாதுங் குறைவிலேன்,” என்று சீவகன் முகமன் கூறினான்.

சுதஞ்சணன் அவனைப் பொன்னெழுவனைய தோளாலே தழுவிக்கொண்டு, இன்னுரை புகன்று, 'நின் நிழல்போல நீங்காமல் இருப்பேன். இடர்வரின் நினைத்திடுக,' எனக்

கூறிக்கொண்டு மின் எழுந்து பறப்பதுபோல வானிலே உயர்ந்து பறந்து சென்றான்.

அவன் சென்ற பிறகு சீவகன் தன் தோழரையுந் தம்பியரையும் நோக்கிக் கூறுகின்றான் :

"நன்மையொன்றும் இம்மையிற் செய்தறியாத நாயொன்று இவ்வுடம்பைவிட்டு, இதற்கு முன்னர் இயற்றிய நல்வினை வந்துதவி, ஒருவன் கூறிய மறைமொழியால், ஒளிமிகு தேவனாகப் பிறக்குமோ என ஐயுறல் வேண்டா. கொல்லன் உலையிலே வைத்து ஊதி உருகின வழி யிரசத்தைச் சேர்க்க இரும்பு மாற்றுயர்ந்த பொன்னாய் விளங்கும் நிறத்தைப் பெற்றதன்றோ? இதுவும் அத்தன்மையதே."

"எரியெனச் சுடர்விடும் வேலின் முனையாலே இரணியன் இராவணன் முதலானோரைக் கொன்று, பின்னர், காமனுக்குத் தோற்று, அவனெய்த மலர்க்கணையால் நொந்து, திருமகளைப் புணர்ந்து தெளிவடையும் திருமால் முதலான வானவர்கள் யாவரும் திருவுறுக. நீக்குதற்கரிய எண்வினையும் நீக்கி, வீட்டின்பத்தை உண்டாக்கித் தரும் அருகனையல்லது யான் தலையாலே தாழ்ந்து வணங்கேன்."

* "பிளவுறாத முயற்சியாக ஏரைப்பூட்டி, உடம்பாகிய கழனியைத் தவத்தாலே உழுது, நோன்பாகிய செந்நெல்லை விதைத்து, நல்லொழுக்கமாகிய நீரை வற்றாமற் பாய்ச்சி, ஐம்புலனாகிய வேலியைப் புலனாகிய பசுக்கள் பிரியாதவாறு காத்துப் பேணினால், முதலிற் றுறக்கமும் பிறகு வீடும் விளைவிக்கும்.

**நீர்விளையாட்டு (தொடர்ச்சி)**

இவ்வாறு கூறிச் சீவகன் தன் தோழர்களுடன் வேறிடங் காணச் சென்றான்.

---

*"ஒன்றாய வூக்க வேர் பூட்டி யாக்கைச் செறுவுழுது,
நன்றாய நல்விரதச் செந்நெல் வித்தி, ஒழுக்கநீர்
குன்றாமல் தாங்கொடுத்தைம் பொறியின் வேலி காத்தோம்பின்
வென்றார்தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோ ருலகீன்றே"

இனி, இமயமலையை நட்டு, வாசுகியைச்சுற்றி அக் காலத்துக் கடல் கதறுமாறு கடைந்தவர்களின் ஆரவார மொப்ப, மை தீட்டிய கண்ணினரும் ஆடவரும் மாறுபட் டாடுதற்குப் பொய்கையை யடைந்தனர். திரையாகிய நுண்ணிய ஆடையையும் தாமரையாகிய முகத்தையும் குவளையாகிய கண்களையுமுடைய பொய்கை மங்கையின் நலத்தை நுகரத் தொடங்கினர்.

ஆடவர்கள் ஒழிவிலராய் *நீரிலேயே தண்ணுமை, முழவம், மொந்தை, தகுணிச்சம் முதலான பல்வகை இயங் களின் ஓசையையும் விரலாலும் அகங்கையாலும் புறங் கையாலும் தெறித்தும் கொட்டியும் குடைந்தும் உண்டாகு மாறு பிறப்பித்து மகளிருடன் ஆடி வானவரைப் போன்று காணப்பட்டனர்.

நீர்ச் சிவிறியால் ஒருவர்மேலொருவர் இனிய ஊற்று நீரைத் தூவியும், குங்குமத்தை யெறிந்தும், நீரை உழக்கி வெளியேற்றிப் புறங்கண்டு நகைத்தும், அஞ்சினுயென்று மலர்மாலையாலே பூட்டித் திரைகொண்டும் காம வெள்ளத் திலே விரும்பியாடினர். மற்றும், சந்தனம் நிறைந்த தோணி, தண்ணிய மலர்மாலைத் தோணி, அழகிய துகில் கொண்ட தோணி, அணிகலம் பெய்த தோணி ஆகிய வற்றை மைந்தரும் மகளிருங் கொண்டு நெருங்கி நெருங்கி யொருவர் மேலொருவர் எறிய, அத் தோணிகள் கடலிற் கலம் போலத் திரிந்தன.

பூங்கொம்பன்னுர், தழைத்த நீண்ட துதிக்கையாலே களிறு நீரைச்சொரிவது போல, முத்தமாலை அழகொடு பொங்கப், பின்னிய பின்னல் அசைந்தாடக் குலிகநீர் நிறைந்த மட்டத் துருத்தியாலே சொரிந்து ஆடவர் வருத் தங் கண்டு மகிழ்ந்து, பின்னரும் விருப்புடன் போரிட்டனர்.

இங்ஙனம், விண்ணிலே மின்னும் மீன்களும் தம்மிற் பொருவன போல ஆடவர் மகளிரின் எதிரெதிராக எறிய,

* நீரிலே பல்வகை இனங்களின் ஒலியை எழுப்புதல் மதுரைக் காஞ்சி (363), மலைபடுகடாம் (295-6) ஆகியவற்றினும் வந்துள்ளது.

அவ்விரு திறத்தோரும் இளைத்தபின்னர், வானவர் மண்ணிடையே கொண்ட மணம்போல மணம் நிகழ்ந்தது.

தேய்த்த வெண்ணெயும் நறுமணச் சந்தனமும் சுண்ணப்பொடியும் கத்தூரியும் மாலையும் பெற்ற நீர் நுரைத்து, வண்டுந் தேனும் முரன்று, கொழித்து இனிமை மிகுந்தது.

நீர் விளையாட்டு முடிந்த பின்னர், குருக்கத்திக் கண்ணியையுடைய, யாவருங் கைகூப்பித் தொழும் முருகனைப் போன்ற அறிவுமிக்க இளைஞரெல்லோரும் விழுமிய மணிக் கலன்கள் அணிந்தனர். பெண்கொடிக ளெல்லோரும் கூந்தலுக் ககிற்புகையூட்டி, முத்தணிந்து, கச்சிறுக்கிப் பிச்சிமாலை யணிந்தனர். இங்ஙனம் அணி செய்துகொண்டு, பொற்றேரும் பொற்சிவிகையும் களிறும் குதிரையும் பிடியும் ஆகிய ஊர்திகளிலேறி நெருங்கிச் சென்று, நெடிய மலையிலே தோன்றிய வெள்ளம், கரிய கடலைச் சேர்ந்தாற் போல மாநகரை நோக்கிச் சென்றனர்.

**அசனி வேகம்—குணமாலையைச் சீவகன் காத்தல்**

இங்ஙனமிருக்க, அரசன் கட்டியங்காரனுடைய பட்டத்துக் களிறு அசனிவேகம் காலிற் சங்கிலி பிணித்த மரத்தையும் கம்பத்தையும் அடியிலே முறித்துக் கடல்போல முழங்கிக் காற்றைப்போல விரைந்து, கூற்றெனக் கொடுமையையுடையதாய், இடியெனச் சீறி, ஊழித்தீ யெனத் தோன்றியது. அருவியென இழிதரு மதத்துடனுங் குருதி தோய்ந்த மருப்புடனும் தன் நிலைகெட்ட அதனைக்கண்ட மக்கள் அதன் கண்ணிற் படாமல் ஆங்காங்கே நின்ற நிலையிலேயே மறைந்தனர். அத் தோற்றம் ஞாயிற்றின் முன் தோன்றாது மறைந்த விண்மீன்களின் நிலையைக் காட்டியது.

அப்பொழுது குணமாலையும் அவள் தோழியும் பல்லக்கிற் சென்றுகொண்டிருந்தனர். குணமாலைக்கு மற்றவர்களைப்போல் மறைந்துகொள்ள இயலவில்லை. களிறோ அவள்மேற் காமுகருள்ளம்போல விரைந்து சென்றது.

அவள் ஏறிய பல்லக்கைச் சுமப்போர் அஞ்சிப் பல்லக்கினை வைத்துவிட்டு ஓடிவிட்டனர். அதுகண்ட குணமாலையின் தோழியாகிய அரும்பெறல் நங்கை, 'என்னைக் கொன்ற பின் இவளிடம் நெருங்கும் அளவில் எவனேனும் ஒருவன் தோன்றி இவளைக் காக்கட்டும். அன்றெனில், நான் இறந்தால் இவளுக் குறு துயர் காணேனாகையாற் பின்னர் ஆவதாகுக' என்றெண்ணினாள். * மான் பிணையின் நோக்கினாள் மின்னுக்கொடியென நடுங்கிக் காற்றிலசையும் பொற்கொம்பு போல, 'ஆடவரில்லையோ?' என இரு கையுந் தலைமேற் கூப்பியவாறு களிற்றின் எதிரே சென்று வணங்கி நின்றாள்.

அந்நிலையிற் பிறரால் தாழ்த்தற்கரிய நம்பி சீவகன், இருதலையினும் மணியழுத்திப் பொன்னாற் செய்த கயிற்றாற் சிகையை ஏறக்கட்டி, அதன்மேல் மலர்க்கண்ணி வேய்ந்து, ஆருயிரன்பராந் தோழர் சூழவுங் காதிலணிந்த குழை ஒளி வீசவும் செல்கின்றவன், குணமாலைக்குற்ற இடரைக் கண்டான். கண்ட அளவிலே, 'பெண்ணுயிருக்குற்ற அவலத்தை நோக்கி, அதனை நீக்காது சென்று வாழ்வதினும் சாதல் நன்,'றென எண்ணினன். உடனே விரைந்து இனமலர்மாலையைச் சுற்றிக் கட்டிக்கொண்டு, கடகத்தை மேலே யேற்றிக்கொண்டு நீண்ட கச்சினால் ஆடையைக் கட்டிக் களிற்றை வைது தெழித்து அதனைநோக்கி ஓடினான். குண்டலத்தைக் கழற்றி வைத்துக்கொண்டு, தோடு தானே ஒலித்து வீழுமாறு மலைமேல் வீழும் மின்போலக் குண்டலத்தைக் களிற்றின் நெற்றியிலே எறிந்தான். வட்டமான முத்துவடமும் மார்பிலணிந்த மாலையும் முடியிலணிந்த கண்ணியும் சிகையும் பொங்க மின்போலத் தாவிச் சென்றான்.

அதற்குள், விரிகின்ற படத்தையுடைய நாகத்தின் மேற் சினந்து பாய்கின்ற கருடனைப்போல, முன்பு நின்ற

---

* மின்னுக் கொடியென நடுங்கலையும் காற்றிலசையும் பொற்கொடிபோல நடுங்குவதையும் குணமாலைக் காக்குவர் நச்சினார்க்கினியர் (975 - 976)

மாலையென்னுந் தோழியின்மேற் சீறித் தாழத்தொடங்கி யது. சீவகன் விரைந்து நெருங்கி, உதயகிரியின்மீது தாவிய சிங்கம்போல அக்களிற்றின் சினத்தைக் கொழுந்துவிட் டெரியச்செய்து மத்தகத்தின் நடுவே குதித்து, இடியென முழங்கி ஆரவாரித்தான். அதன் கோட்டிடைக் கூற்றென னத் தாக்கினன். அவ்வளவிலே அக்களிறு சினந்து, முழங்கி, மதஞ்சொரிந்து, அழலெனச் சீறி அவன்மேற் காற்றென ஓடியது. சீவகனும் அஞ்சாமற் குணமாலையை யும் அவள் தோழியையும் 'பிழைத்துப்போமின்,' என்று விடுத்தான்.

திங்கள்மேற் சென்ற நாகம் விலகி, சென்றுகொண்டி ருக்கும் ஞாயிற்றின்மேற் படம்விரித்துச் செல்வதுபோலப் பைந்தொடியார்மேற் சென்ற களிறு, அந்நெறியினின்றும் விலகிச் சீவகனைக் கைப்பற்றியது. சீவகனே கார்முகி லிடை மின்னினும் விரைந்து உடலை வளைத்து மருப்பிடை யிலே புகுந்து, காலின்கீழே வல்லான் ஆடிய வட்டுப்போல அடங்கிக் கரந்துசென்று களிற்றினின்றும் நீங்கி நீண்ட தொலைவிற் சென்றான்.

கடல்நீரென நிறங்கொண்ட கண்ணனை முற்காலத்திற் கொல்ல ஓடிய குவலயாபீடமென்னுங் களிற்றைப்போன் றது அசனிவேகம். கண்ணனைபோன்றான் சீவகன். குவ லயாபீடமாக வந்த தெய்வம்போல அசனிவேகமும் வறிதே திரும்பியது.

ஒரு கையினையும் இரு மருப்பினையும் மும்மதத்தினை யும் உடைய அழகிய குன்றமனைய அசனிவேகத்தை வென்ற கழலணிந்த சீவகன் குணமாலைக்குத் தன் அறிவு முதலியவற்றைத் தோற்றலின், தன் தோழர் ஐந்நூற்று நால்வரையும் நீங்கித் தனியே சென்று பொழிலை அடைந் தான்.

**குணமாலையின் காதல் வேட்கை**

**மாணிக்கத் தூணென மயங்கும்படி பருத்த தோளின னாகிய சீவகனாலே யானையின் இடரினின்றும் நீங்கிய குண**

மாலை காதல் இடரிலே மீண்டும் அகப்பட்டதாற் சோர்வுட னிருந்தாள். அவள் தோழிகள் உண்மையுணராமற் களிற் றினால் வெருவியதேயாம் என வுளங்கொண்டு, 'வருந் தற்க,' எனத் தேற்றி அழைத்துச் சென்றனர்.

குணமாலையின் தந்தை குபேரமித்திரன் என்னும் வணிகன். அவள் தாய் வினயமாமாலை யென்னும் பெயரி னள். அவள் தன் மகளுடைய தளர்ச்சியைக்கண்டு தோழி யரை வினவினள். அவர்கள், 'யானையால் இங்ஙனம், ஆயிற்றெனின் என்ன கூறுவாளோ? அஞ்சுவாளோ?' என எண்ணி யாதும் உரையாமல் வாளாவிருந்தனர். வினயமாமாலை தன் மகளை 'வருக' வென்றழைத்து, வாள னைய கண்களிற் றுளிக்கும் நீரைத் துடைத்து, இறுகத் தழுவிக்கொண்டாள்; அவளை ஏற இறங்கப் பார்த்தாள். 'கட்டப் பூத்த மாலைபோலத் தொடர்ப்பட்டுக் கைவிடாத தோழியருடனே இவள் கொண்ட விளையாட்டின் மிகை யாலே வந்த சோர்வு,' எனத் தானே ஒருவாறு ஆராய்ந்து நினைத்துக்கொண்டாள்.

அன்னையின் நினைவு அங்ஙனமிருக்க, அழகு செய்து விடும் பணிப்பெண்கள் கொடியன்னாளை அணுகிப் பேரணி கலன்களையெல்லாங் கழற்றிவிட்டுக் கண்ணைக்கவரும் ஒளி விடும் நுண்ணிய கலன்களை மெய்நிறைய அணிந்து, கழுநீர் மாலையையுஞ் சேர்த்துக், குங்குமக் கலவையையும் மார் பிலே பூசினர். பின்னர், 'அழகிய பொற்கொம்பனைய பாவையே! தனக்குக் கிண்ணத்திலே பாலையேந்தும் நின்னை அழைத்துவருமாறு நின் கிள்ளை அழைக்கிறது. செல்க,' என்று வினயமாமாலை விடுத்தாள்.

பகைவரின் மார்பிலே செலுத்திப் பறித்த நிணங் கொண்ட வேலின் இயலைத் தன்னிடத்தே கொண்ட செவ் வரிபரந்த கண்ணாளாகிய குணமாலை, பிறவித்துன்பமுணர்ந் தவர்போலத் தமர் பேச்செலாம் வெறுத்து, உண்டி முதலி யவற்றையும் விரும்பாளாயினாள். பின்னர், சுற்றம் நீங்கித் தனியே யிருந்தபோது, வானவர் விழையத் தாடி

ரையிலே தோன்றிய முருகனைப்போன்ற சீவகன் தந்த காதலாலே வாய்விட்டுக் கூறினாள்:

"கொடிய மலர்க்கணை ஐந்தையும் எய்ய எடுத்த காமன், நான் கிடைத்தவுடன் என் மார்பே * எருக்குப் பையாகவும், என் உயிரே இலக்காகவும் எய்து என்னை வருத்துகிறான். ஆகவே, விற்கலையிலும் கல்லூரியில் தான் விற்றொழிலைத் தொடங்கும் காலமாக எண்ணிப் பயிற்சி செய்கின்றான்! நிலமகளும் தன் பொறுமையை யிழக்கும் இயல்பிலே என் நெஞ்சம் நெருப்பிடைத் தாமரைபோல வேகின்றது! வானவர்களே! 'தாம மார்பனைச்—சீவக சாமியைக்—காமனைக்—கடிதே தம்மின்,' என்று விம்மினாள்.

பொழிலிடை மூங்கிலனைய தோளினாள்—கால வேலனைய கண்ணினாள்—தன் காதல் வேட்கை கடல்நீர்போல மிகுதியும் பரத்தலின், "செய்தவம் புரியாச் சிறியார் போன்று கையாற் சொல்லக் கண்ணாற் கேட்டிடும் குறை நிறைந்த சிந்தனையுடைய ஊமையாயினேன். கண்கள் அவன் உருவெளியையே நோக்கி ஒளியற்றன. மெய்வாடிக் கைவளையல்கள் கழல்கின்றன. நெஞ்சமோ புண்போன்று புலம்புறும். இங்ஙனம் காமம் முழக்க நின்று சுட்டாலும் பனைமாமடலூர்தலைக் கைக்கொள்ளாத பெண்ணினத்தினும் கொடியது பெண்ணேயன்றி வேறில்லையே. இக்காலத்திலே பிழைக்கலாவதோர் வாயில் கிடைக்குமோ?" என்று நினைத்துருகினாள்.

பிறகு, அருகிருந்த கிளியை நோக்கினாள். 'உன்னையலால் வேறு துணையிலேன்! உய்யும் வழியை யுரைப்பாய்! நீயே சிறந்த கிளி,' என்றுரைத்தாள். அக்கிளியும், 'நங்கையே! நையாதே! இந் நாட்டகத்தே நீ விரும்பிய பொருள் உண்டெனில் தாழாதுரை,' என்றது.

---

* 'விற்பயிற்சி செய்வோர் எருவிலும் இலக்கிலும் எய்து கற்பார்' என்பர் நச்சினார்க்கினியர்.

**கிள்ளைவிடு தூது**

பதுமையென்னுங் குளத்திலே தாமரைமீதுறையுந் திருமகளினும் ஒளியும் சாயலும் உடைய குணமாலை, களிப்பைத்தருங் காமத்தினலே செயலற்றுத் தன் வருத்தத்தை வெளிப்படையாக விளம்பித் தன் கிளியைத் தூதுவிட்டாள். அதனல், அக் குணமாலையின் நாணும் குலனும் நலங்கெடச்செய்த வீணைவல்லானைக் காண வானிலே படர்ந்து சென்றது, அன்பிற்சிறந்த அக்கிளி அவனிருக்குமிடத்திற்கு.

குணமாலையை உளத்திற்கொண்டு பொழிலையடைந்த சீவகன் அவள் ஓவியத்தை யெழுதிப் பார்க்க வுன்னினன். பல நிறங்களைக் குழைத்தான். கிழியொன்றிலே அவ்வாணுதலாள் களிற்றைக் கண்டு வெருவிநின்ற நடுக்கமும் தன்னை நோக்கிய நோக்கமும் அவள் செயலாகவே தீட்டினன். மற்றும் அப்பொழுது நெகிழ்ந்து வீழ் பூந்துகிலை எழுதினன். குழல் முதலியவற்றைத் திருத்தினன். மார்பிடை முத்துமாலையைத் தடவினன். அவளழகைப் புகழ்ந்து தன் தோள்களிடைத் தழுவினன்.

"படையும் மலரும் போன்ற நெடுங்கணுளுடைய இடையைத் தழுவிய மேகலைகள் நோற்றன. மார்பிற் பூண்கள் நோற்றன. அடிமலரிடை யணியப்பெற்ற சிலம்புகள் நோற்றன. யான் ஒருவனே நோற்றிலேன்," என்று கூறிப் பொருமினன்.

சீவகன் இவ்வாறு வருந்தும் பொழுது குணமாலையின் கிளி வந்தது. அவன் நிலைகண்டு மகிழ்ந்தது. தன் அன்னையின் வருத்தமுற்ற மொழியை அறிவிக்க வுன்னியபோது, இடையீடாகக் காந்தருவதத்தை சீவகனிடம் வருவதைத் தத்தை கண்டது.

அவள் தன் இடையிலணிந்த மேகலையின்மேல் மெல்லிய துகிலையணிந்திருந்த தோற்றம் வளையவோடின வருவத்தையுடைய எரியை வெண்புகை கூடி வளைத்து அதன் புறத்தே நிலைபெற்ற தன்மை போன்றிருந்தது. அவ

ளுடைய குவிந்த முலைக் கோட்டிலே திரண்ட வடங்கள் கிடந்த தோற்றம் பொன்வளர்ந்த செப்பின்மேற் கதிரையுடைய இனியபிறைகள் பொலிவுற்றன போன்றன. அவள் முகத்தின் தோற்றம் ஒருபுடை குழையும் ஒருபுடை தோடும் ஒளிவிட வட்டமாக நிறைந்த முழுமதி போன்றது. ஒப்பற்ற அழகிய நெற்றியிற் கருங்குழலுக்கு அருகே அணிந்திருந்த நெற்றிப் பட்டத்தின் தோற்றம் பிறையைச் சேர்ந்த இருளை மின் வளைத்த தன்மையைப் போன்றது. மணங்கமழும் பூஞ்சிகையிடத்தே அழகிய மல்லிகை மாலை சுற்றப்பட்டிருந்த தோற்றம், நடுவு வளைந்து ஒல்கிய பூங்கொடியின்மேற் குயில் வளைந்திருந்ததைப் போன்றது. சிலம்பும் மேகலையும் மிழற்றவும் வண்டுகள் மாலையில் மதுவுண்டு யாழ் செய்யவும் அழகிய பொற்கொடி யொன்று நலமிக நன்னடை கற்றதை யொக்கும் அவள் நடை.

இவ்வாறு அழகுற வந்த தத்தையைக் கண்ட குணமாலையின் தத்தை 'இவள் யாவளோ? யாவளாயினும் இவள் வந்த வேலை' முடிந்து சென்ற பிறகல்லது குணமாலையின் ஏவலாற் சேர்கலேன் என்றெண்ணி மலர் நிறைந்த சண்பகத்தில் அமர்ந்திருந்தது.

மதுவின் களிப்பைப் பெற்ற நெடுங்கண்ணாள் சிறந்த பொற் கிண்கிணி மிழற்ற நடந்துசென்று, ஊன் கவரும் வேலணிந்த சீவகனைக் கண்டு காமத்தாற் புலவிகொண்டு புது நீரிலே தளிரைப் போன்று நடுங்கினாள். பிறகு, படத்தை நோக்கி, இஃது என்ன உருவம்? என்றாள். அவன் அவளைக்கண்டு திடுக்குற்றுத் தெளிந்து, 'இயக்கி' என்றான். 'நீ கூறியது உண்மையே, துகிலுங் குழலுஞ் சோர எழுதுதலின், இது புதியதோ ரியக்கியின் உருவமே. அக்குணமாலை நின் மனமாகிய அதனை ஆற்றாமை மிகும்படி முறையே இயக்குதலின் இயக்கியே யாவள்,' என்றாள். அவளுடைய திருமுகம் திங்களிலே முத்தரும்பியது போல் வியர்த்தது. புருவங்கள் நெற்றியிலேறி வளைந்தன. கண்கள் நீர்க்கீழ் அரும்பின் சிவப்பினுஞ் சிவந்தது.

அவள் தோற்றங் கண்ட சீவகன் அஞ்சிப் 'பாவையே! நீ மிகவும் புலவாதே! பாவியேற்கு நின்னுயிரே என்னுயிரா யிருக்கும். இது நம் தன்மை. மற்றும், கங்கையிலே மேவி அதனைப் பொருந்திய அன்னம் மணலூற்று நீரிலே அணு கச் செல்லுமோ?' என்று வேண்டினன்.

வேறொரு பெண்ணின் பெயரைக் கூறினும் பொறாது சீறும் அவள் எதிர் முகமாகக் குணமாலையை நோக்கி அவள் அழகின் மிகுதி கண்டும், அவன் கூறிய சொல்லின் பொருளையுணர்ந்தும் எரியழல் போலப் புலந்தாள். கொடி யென நடுங்கினள். பொன்னரிச் சிலம்பும் மேகலையும் ஒலிக்கக் கணவனுடைய அலங்கலணிந்த முடியின்மேல் தன் அடிமலரை யணிந்தாள். குண்டலம் ஒளிவீசத் தானணிந் திருந்த மலர்களைச் சிதறித் தன் மனையை அடைந்தாள்.

வெறுப்புற்ற மொழியுடன் தன் காதலி சென்றதும், 'ஊடல் நீங்காது இவள் சென்றதனால், இனியிங்கு வருவதற் கொருவருமிலர். ஆகவே, அவனிடஞ் செல்வேன்,' என் றெண்ணிய கிளி பறந்து சென்று காளையின் தண்டாமரை மலரடியை வணங்கியது. 'மைந்தனே! நின் கழலடி வாழ்க!' என வாழ்த்தியது.

சீவகன், 'என் தோழியர் பைங்கிளியே! நின்வரவு நல் வரவாகுக!' என்றான். விரலிற் சூழ்ந்த மணிமொழி ஒளி செய யாழறி கலைஞன் தன் அழகிய கையை நீட்டி 'இங்கு வருக,' என்றழைத்தான். கன்னியரின் மொழியைக் கொண்டு இக்கிளி வந்ததென் றெண்ணி மகிழ்ந்தான். பிறகு, 'நின் வரவு யாது குறித்து?' என்றினிதுற வினவினன்.

"வேலேந்திய கையனே! எம் குணமாலை, 'மதங் கொண்ட களிற்றொடு பொருத ஐயனைக் கண்டு, செவ்வி யறிந்து வருக,' என்றாள். அவள் தூதாக நின்னைக் காண வந்தேன்," என்றது கிளி.

"பைங் கிள்ளாய்! கொடிய வேழமென்னும் நோயுண்ட விளாம்பழம் போல் யாம் வெறுவியேமாம்படி

நெஞ்சையும் நிறையையும் பிறரறியாமல் நீல நெடுங் கண்களாற் கவர்ந்த கள்வி மையுடன் கண்ணீர் வார நடுங்கினுள். அவளது நிலைமை யென்கொல்?" என்று வினவினான் சீவகன். கிளி மிழற்றுகிறது:

"பாவை யனையாள் பிறரைப் பணிவிக்கும் தன் கோலத்தையும் பாராள்; பந்தும் ஆடாள்; மெய் விளர்த்தாள். அழகிய யாழையும் இசையாள்; உணவையுந் தொடாள்; உறக்கமுங் கொள்ளாள்! இம்மட்டோ? உயிர் நீங்குமோ எனக்கருதி மலரணையாகிய நெருப்பிலே கிடந்து உயிர் நீங்காமையால், தூணைப் பற்றி நின்று வறிதே நோக்குவாள். வருத்தக் குறிப்புத் தோன்ற ஐயோ எனக் கூறிப் போய்ப் பலமுறை கொட்டாவி விட்டு நெருப்பெனப் பெருமூச்செறிவாள். பின்னர்ச் சிறிதுபோது நிலமிசை அமர்வாள். 'சீவகசாமியே!' என்பாள். கருங்கடலிற் கிடைத்த வெள்வளைகள் கழல்கின்றனவே! என்பாள். நின் உருவெளித்தோற்றத்தைப் பலமுறை சென்று தழுவுவாள். அது தழுவாமையின் 'நின்னைத் தழுவி யான் வருந்தினேன் நீ வந்து மார்புறத் தழுவுக!' என்பாள். அவ் வுருவெளி மறைதலும் ஓவென அலறுவாள். ஆனால், கன்னியர் உற்ற நோய் நாண மிகுதியாற் கண்ணனையார்க்கும் இன்னதென் றுரைத்திடார். கிளிப்பிறப்பினேன் ஆகையால் யானும் உணர்கிலேன். தோன்றலே! நீ பொருந்த அறிதியோ?"

குணமாலையின் சார்பிலே இனிய வுரைகளைக் கிளியின் வாயாற் கேட்ட அளவிலே, சீவகன்—முருகனையொத்த சால்பினான்—பெறுதற் கரிதாக நினைத்தார் சிலர் தன்னிடத்தே வந்து கூறினாற் போல மகிழ்ந்தான். எனவே, 'குணமாலையின் சொல்லாகிய மருந்தினை யான் ஆறுதலடையத் தந்த நீயே நின் மனத்திற்குப் பொருந்தியதைக் கூறுக!' என்றான். கிளி, 'அவள் நின்னைப்போல மொழியாகிய மருந்தினாலே தெளியாள். வில்லணிந்து நிமிர்ந்த நின் பருத்த அழகிய தோளே அவளுக்கினிய மருந்தாகும். அத்தோள்களையே யான் பரிசிலாக வேண்டுகின்றேன்,' என்றது.

சீவகன் மகிழ்ந்து, 'அவள் சுற்றத்தார் குன்றனைய பொருளை விரும்பினும் பூம்பழனஞ்சூழ்ந்த வளமிகு நகரை விரும்பினும் யான் அவற்றைக் கொடுத்து, என் கல்லெனத் திரண்ட தோள்களினாலே அவளைத் தழுவுவேன். இச்சொல் தவறேன். சென்று சொல், போ,' என்றான்.

கிளி மகிழ்ந்து, 'மீன்கண்ணாட் கிவற்றை யான் செப்பும் ஆற்றலிலேன். ஓலையொன் றெழுதித் தருக,' என்றது. மாலைமார்பனும் அவ்வாறே எழுதி ஆழியொன்றை வைத்துத் தந்தான். அது தினைக்கதிரிலே அவற்றைக்கொண்டு வானிடை யெழுந்து பறந்து சென்றது.

இனி, முன்னர்ப் புலந்துசென்ற காந்தருவதத்தை பொய்கை வடிவாக எழுதிய துகிலொன்றை மெய்ம்முழுதும் மறையப் போர்த்துக்கொண்டு சினத்துடன் விழித்துக் கிடந்தாள். கிளியைப் போக்கிய மறவேல் நெடுந்தகை வார்கழல் ஒலிப்பச் சென்று தன் காதலியின் பிணக்கை மலரணிந்த தன் முடியினாலே வணங்கி நீக்கினான். நீண்ட கண்ணாளுக்கு இன்பம் நிறைந்தது.

மற்றுக் குணமாலையை இனி நோக்குவோம்.

"என் அருமைக் கிளிப்பிள்ளை என் காதலனிடஞ் சென்றதோ? சென்று அவன் தன் துணைவியை விட்டுத் தனித்திருக்குஞ் செவ்வி நோக்கிச் சேரக் கருதியிருந்ததோ? அவ்வாய்ப்பு நோக்கியிருக்கப் பொறாமல் திரும்பிவிட்டதோ? பொறுத்திருந்து கண்டதோ? கண்டு காலமறிந்து, நினக்குத் துணைவியாக விழையுங் குணமாலை கூறியது. அவள் காமத்தீயால் வெதும்புகின்றாள். நீ அதனைத் தணிக்க என்ன செய்யக் கருதுகிறாய்?' என்று வினவியதோ? என் காதல்நோயால் யானும் என் பிள்ளைக்கிளியும் படும் அல்லலை யென்னென்பேன்? *சென்ற கிளியா

* செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான்
தந்தாரேல் தந்தாரென் இன்னுயிர்தாம் தாராரேல்
அந்தோ குணமாலைக்கு ஆதகா தென்றுலகம்
நொந்தாங் கழமுயன்று நோற்றானும் எய்துவனே."

ருக்கு 'அவர்தாம் இனியதொரு மொழியை இயம்பின ரேல் முகமன் கூறினரல்லர். என் உயிரையே தந்தா ராவார். அந்தோ! அவர் அங்ஙனம் உரையாராயின் அங்கே சுரமஞ்சரியைப் போலே யானும் முயன்று நோற்றா யினும் பிறகு அவரைச் சேர்வேனோ? 'ஆ! குணமாலைக்கு இவ்விறந்துபாடு தகாது,' என்று கூறி உலகம் நொந்து அழுமாறு இறந்துவிடுவேனன்றோ"

இங்ஙனம் தனியேயிருந்து கவலையுற்ற குணமாலை, 'அலுவலின் விளைவு அதனைச் செய்யச் சென்றாரளவின தாகவே யிருக்கும். என் கிளி பேதையென்பதை யான் அறிவேனே! இனி, அதன் வரவு பார்த்திரேன். கூடலிழைத் துப் பார்ப்பேன்' என்று நினைத்தாள். 'போர்வேலண் ணல் மார்பம் என்னைத் தழுவக்கூடுமாயிற் குன்றாதே கூடுக,' என்று கூறி, முத்தாகிய மணலிலே, ஆயிழையாள் கூடற் சுழி யிழைக்கத் தொடங்கினாள். பாதி வளைவு வந்த வுடன், 'இக் கூடற் சுழி பழுதாயின், கிளி நல்வரவாய் வந்த தேனும் அதனைக் கேளாமலே எனக்குயிர் போய்விடுமே,' என்று கருதிக் கிளியின் வரவையே நோக்கியிருந்தாள்.

சீவகனிடமிருந்து திரும்பிய பைங்கிள்ளை குணமாலை யைக் கண்டதேனும் உடல் மெலிந்த வேறுபாட்டால் யாரோ என்றையுற்றது. அவள் வானமே நோக்கிப் பாதி கூடாத சுழியிலே கையை வைத்தவாறிருந்தாளாகையாற் குணமாலையே யெனத் துணிந்து, அவளை நெருங்கியது.

குணமாலை அக் கிளியைக் கண்டவுடன் அஃது என்ன கூறுகின்றதோ என வெய்துயிர்த்தாள். திணைக்கதிரைக் கண்டவுடன் அதிலே ஓலையிருக்குமென்று கருதித் தொழு தாள். ஆழியைக் கையகத்தே மறைத்துக்கொண்டு திரு முகத்தைத் தலையிலே சூடினாள். பிறகு, அக் கிளியை நோம்படி வயிற்றிலே அணைத்துக்கொண்டாள். அழகிய தாரினான் எய்திய வருத்தத்தைக் கிளி கூறக்கேட்டு மெய் குளிர்ந்தாள். சீவகன் என எழுதப்பெற்ற அம் மோதி ரத்தை விரலில் அணிந்துகொண்டாள். கிளிக்கு இனிய

பாலூட்டிச் செம்பொன் மணிக்கூட்டிலே அதனைத் துயிலச் செய்தாள். பிறகு, அவன் எழுத்தையுடைய ஓலையை விரைய எதிர்முகமாக நோக்கிப் படித்தாள்.

"கொடிய வில்லேந்திய சீவகன் விடுக்கும் ஓலை, குணமாலை காண்க!

காமநோய் சுடுதலாலே வெதும்பி ஆற்றாது வருந்திய யான் ஆற்றுமாறு தான் வரவிட்ட கிளியாலே மிகுதியான வருத்தமெல்லாம் நீங்கினேன். நெடுங் கண்களையுடைய தானும் வருத்தம் மிகாது தீர்வாளாக! அறத்தினால் ஈட்டப் பெற்ற பெரும் பொருட்குவியலையும், குளிர்ந்த குவளைப் பொய்கை சூழ்ந்த, மிகுவளஞ் சுரக்கும் ஊரினையும் தன் பெற்றோர் கருதியவாறே கொடுத்து, அரிய பொருளை வேட்டால் வேட்டவாறே நல்குந் தன்னுடைய வேய்த் தோளைத் தழுவாதொழியேன்.

தன்னுடைய குங்குமமணிந்த விருப்பத்தையூட்டும் முலைகளிலே என் மார்பிலணிந்த தாரின் வடுப்பொருந்தத் தழுவித் தன்னுடைய கயலனைய செவ்வரி பரந்த கண்ணிற் பெருகும் வெம்பனியால் என் சிந்தை யெரியை அவித்துத் தான் என் அன்புடைமைக்கு மகிழுமாறு உறையேனெனின், போரில் அஞ்சினார் மேற் படைவிட நினைந்தேனாகக் கடவேன்,"

என்று நூல் பிடித்தாற்போன்று செவ்விதாய்க் கிடந்த எழுத்துக்கள் அமைந்த வரிகளைப் பாலிலே தேனை வார்த்துப் பருகுவாள்போல இனிப்பூறப் படித்து, மகிழ்ச்சியிலே திளைத்துக், கண்களிலே நீர் நிறைய, மெய் குளிர, மயக்கத்தைச் செய்த சீவகன் மார்பிலே கூடினாள் போலக் களித்தாள்.

பிறகு, அவ்வோலையின் எழுத்துக்களை நோக்கி, "வில்வலான் நம்மை நீங்காமல் ஒன்றிற் கூறிய சொற் குன்றானேனும், நீங்கள் அறநூல் ஓதினார்களை நோக்குமாறுபோல் அச்சொல்லிடையூறின்றி முற்றுகவென்றே நினைந்து நோக்குமின். நமக்குப் பாலன்னமும் பூவும் நறுமணப்

புகையும் சந்தனமும் காற்றிலவியாத மணிவிளக்கும் அன்புடன் படைத்துக் கைதொழுவேன்," என்றாள்.

**செவிலிக்கு அறத்தொடு நிற்றல்**

இங்ஙனம், சீவகன்மேற் சென்ற வுள்ளத்தொடு குணமாலையடைந்த வேறுபாட்டைச் செவிலி யுணர்ந்தாள். குணமாலையின் உள்ளக்கிடக்கை அறிய விரும்பினாள்.

"வில்லனைய புருவத்தினையும் பிணைகொள் நோக்கினையும் உடைய பாவையே! நின் நற்றாய்க்கு மூத்த தமையன், நினக்கு மாமன் பெற்ற ஒருமகன் இன்று வந்தான். அவனை நின் தந்தை நகைமுகத்துடன் வரவேற்றான். தன்னை அன்புடன் வரவேற்றதனால் மகிழ்ந்த நின் மைத்துனன் நினக்குப் பரியமாக வண்டி நிறைந்த பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து, நினக்குப் பணிபுரிய நிற்பதோடன்றிக் கவர்ச்சியூட்டும் நின்னுருவைக் கிழிமிசை வரைந்து நின்னை வழிபடவும் விரும்புகின்றனன். அவன் அழகிற் சிறந்தவன்; வளமிகு செல்வத்தான்; நற்பண்புடையான்; உனது பெயரையன்றி யுரைத்தலறியான். இத்தகைய இவனுக்கு நின்னைக்கொடுக்க நின் பெற்றோர் எண்ணினர்."

இவ்வாறுகூறினாள். கேட்ட அக் கிள்ளைமொழியாள் தன் கைகளாற்காதுகளை மூடிக்கொண்டு கூறுகிறாள்:

"அசனிவேகமென்னும் மதயானையை வென்றவன், 'கொண்டுயப் போமின்,' என்ற வருத்தச் சொல்லின் கூலியாக அக் களிறனையானுக்கு அடித்தொண்டு செய்வதையன்றி இவ்வாறு அவர்கள் துணிவதற்கு நேர்ந்தது என்னே? இச் சுடுசொல்லாகிய வாளால் என் காதிடத்தைப் பிளவாதே, பந்தடித்தாலென்னப் பொங்கி விரைந்து செல்லும் பரிமாவினையுடைய அக் காளைக்கு எந்தையும் அன்னையும் என்னைக் கொடாராயின், இறத்தலாவது சிந்தனை வேறொன்றுமின்றித் தவம் புரிதலாவது நாளைக்கு நிகழும்.

தேனும் நெய்யுங் கலந்தாற்போன்ற இனிய மொழியினின் சிறுபருவத்தே பேரறிவு பொருந்திய இம்மொழி

யைக்கேட்ட செவிலித்தாய் ஊனிளகியுருகி, யுள்ளத்தே மகிழ்ச்சி பொங்கி, 'என் பாவையே! நின் மொழி ஆவின் நெய் பாலை விரும்பினாற்போன்றது! அழாதே!' என்று தன் ஆடையினால் அவளுடைய கண்ணீரை மாற்றி அணைத்துக்கொண்டாள். மற்றும், 'மனத்திலே மாசின்றி நோற்ற பழவினைப் பயனாலன்றோ நின் மனம் தடையற்ற கேள்வியானிடத்தே தங்கியது!' என்று அவள் மனங்களிப்ப மொழிந்து மறுமுறையும் தழுவிக்கொண்டாள்.

பின்னர், அவள் வாயிலாக நற்றாய்க்கும் நற்றாய் வாயிலாகக் குபேரமித்திரனுக்கும் இச்செய்தி எட்டியது.

குபேரமித்திரன் மகிழ்வுற்றான். 'அனையதேல் நம் நங்கைக்கு அவனே தக்கவன். அவனுக்கே அளிப்பேன்,' என்றுரைத்தான்.

**திருமணம்**

கல்வியினும் பேச்சுத் திறமையினும் பாவியற்றுவதினும் வல்லவராகிய நால்வர் குபேரமித்திரன் வேண்டுகோட்கிணங்கிக் கந்துகனிடஞ் சென்றனர். அவன் அவர்களைப், 'பொன்மாலை மார்பினிர்! போதுமின்!' என்று எதிர்கொண்டழைத்தான். இருக்கையில் இருத்தி, இனிய முகவாசச் செப்பினை நீட்டினான். அவர்கள் அதனை யேற்று வெற்றிலை தரித்தனர். 'ஒளிவிடும் செம்பொற் கற்பகம் போல்வீர்! நீவிர் வரும் பேறுபெற்றேன். இன்றே வீடு பெற்றேன் ஆயினேன்,' என்று முகமன் மொழிந்தான்.

"யாம் மகளைத் தருகிறோம், நீர் அவளைக் கொண்மின்,' என யாரும் தாமே மகட்கொடை மொழியார். எனினும், தண்ணிய வரையனைய மார்பிலே திருமகள் தங்கிய அறப்பொற் குன்றனைய சீவகனுக்கு யாம் மகளைத்தர விழைந்தேம்," என்று குபேரமித்திரன் வேண்டுகோளை அவர்கள் கொண்டு மொழிந்தனர்.

"பொற்கழலணிந்த குபேரமித்திரனுக்குக் காளையும் யானும் குற்றேவல் செய்வேம், கொடியனையாளை அவன்

தன் மருமானாகிய சீவகனுக்களிக்கும் பேறுபெற்றதனால்," எனக் கந்துகனும் பணிவுடன் மொழிந்தான். அவன் உள்ளம் கடல்சூழ் வையத்தைக் கைப்படுத்தினதேபோல மகிழ்வுற்றது. கந்துக்கடன் ஒப்புக்கொண்டதனாற் களிப்புற்ற அவர்கள் சீவகன் அசனிவேகத்தை வென்றதையும் அதனாற் குணமாலை கொண்ட நிலையையும் விளங்கக் கூறினர்.

மறை வேள்வியிலெழுஞ் செந்தீக் கொடிபோன்ற தூய சுநந்தையும், 'யான் இதனையே கருதியிருந்தேன். என் முயற்சியின்றியே முற்படமுடிந்தது நன்று,' என்று மகிழ்ந்தாள். இல்லறப்பொறை யொன்றுமே சுமந்த மலர்க் கொம்பனைய வினயமாமாலையின் உறவுக்குக் களிப்புற்றாள். தேன் மலர்க்கோதை குணமாலையை மருகியாக ஏற்கப் பெரிதும் விரும்பினான்.

வந்த நால்வரும் குணமாலையைச் சீவகனிடத்தே சேர்க்குமாறு செய்த யாப்புடையராய், மணம்புரியும் பொழுதையும் அழகுற மொழிந்து விடைபெற்றுப் பரிமாவின்மீது திரும்பினர்.

குபேரமித்திரனிடம் அவர்கள் சென்று கந்துகன் தானும் சீவகனும் குற்றேவல் செய்வோமென்று பணிவுடன் பகர்ந்து குணமாலையை ஏற்றுக்கொள்ள விரும்பியதை அறிவித்தனர். குபேரமித்திரனும் மகிழ்வுற்றான். நுடங்குங்கொடிபோன்ற சுநந்தை கூறியதை வினயமாமாலை கேட்டு, 'இது தக்கதே,' யென்று அவளும் மகிழ்ந்தாள்.

'குணமாலைக்குச் சீவகன் ஏற்றவன். சீவகனுக்குக் குணமாலை யேற்றவள்,' என்று மக்களெல்லோரும் மகிழ்ந்துரையாடினர். நூற்கேள்வியிற் சிறந்த கணி குறித்த குற்றமற்ற நன்னாளிலே கரையை மோதிமுழங்குங் கடலொலிபோல மங்கல முரசு ஒலிக்க, முழவுவிம்ம, வெண் சங்கு ஆர்ப்பத் தேனினங் குழுமிற்றென மக்கள் நெருங்க, மணமலர்க்குழலாள் குணமாலையை வேனிலானெனச் சீவகன் மணந்தான்.

மழை மொக்குளனைய மென்முலைமாதர் அணிகல னணிந்தார் எழுநூற்றுவரையும், கோடி செம்பொன்னை யும், இனிய கரும்புகள் நிறைந்த வயல்சூழ்ந்த மூதூர் ஐந்தையும் குணமாலைக்கு அவள் தந்தை யளித்தான்.

பண்ணார் கிளவியையும் பவளமனைய செவ்வாயையும் வேயைவென்ற தோளினையும் கண்ணைக்கவருங் கதிர்மென் முலையையும் பெற்ற வானவருலகினும் இல்லாத பெண் ணுருக்கொண்ட அமிர்தமாகத் தான்பெற்ற குணமாலை யைச் சீவகன் எண்ணினன்.

வண்டுந் தேனும் தேதா என முரல இருவர் மார்பினு மணிந்த மலர்மாலையிலிருந்து தேன் துளிக்க இருவரும் இன்பம் எய்தினர். கடலிற்றோன்றிய பவளத்தினிடையே காணப்பெற்ற முத்துக்கள் கடலிற்றோன்றிய அமிர்தத்தை யீன்று தர, மைதீட்டிய நெடுங்கண்களுடன் புருவங்கள் பிறழக், கிண்கிணி பூசலிடக் குணமாலையளித்த இன்பத் தைச் சீவகன் நுகர்ந்தான்.

கூட்டத்தினிடையே சீவகன், 'கம்பத்தை முறித்து வந்த கடகளிறு கலக்கக் கலங்கி, அம்பனைய செவ்வரி பரந்த தடமலர்க் கண்களைப் புதைத்து நடுங்கிக் குழைந்த கொம்பே! அப்போது நீ (பொது நோக்காகிய நின் நோக் கிற்கு, யான் இறந்துபடுவேனென்றெண்ணி) எனக்கே அருள் நோக்குடன் குழைந்தாய்! 'தாம் வளைவார் பிறர்க்கு ஊன்றுகோலாகார்,' என்பது உலக வழக்காத லின் யானையால் அஞ்சிய நீ என்னை அஞ்சுவித்தது உலகில் இல்லாத புதுமையாயிருந்தது. பாவையே! பணைத்த தோளை யுடைய சுரமஞ்சரி புனலாட்டிடை நறுஞ்சுண்ணத்தினால் தோற்றபொழுது, சொற்காவாமல் வீணை கூறிய சுடுசொல் இன்று எனக்குத் துன்பத்தையோ தந்தது? இன்பத்தை யன்றோ தந்தது? நீயே கூறுக,' என்று புகழ்ந்தான்.

கேட்ட குணமாலை புலந்தாள் :

"நும்முடைய அழகிய தோளினள் சுண்ணநலத் தையே சொல்ல விழைந்தீர்போலும்! என் நல்வினையாலே

அதனை மறந்தீர். அவள் நும் உளத்தே உறைகின்றாள். அவள் சிறிணால் அதனைத் தீர்த்தலரிது. எனவே, இவ்விடத்தினின்றும் இனி, சென்மின்! என்னே! யான் நுமக்கு வரும் துன்பத்திற்கு வருந்தாத அறிவிலியோ? இனி என்னை அருளித் தீண்டாதீர்,''

என்று தன் ஆடையை இறுக வுடுத்து, மாலைகளைப் பரிந்தெறிந்து, சுண்ணத்தைத் திமிர்ந்திட்டுக் காமன் வில்லனைய புருவம் நெற்றியிலேறச் சீறிக் கண்சிவந்தாள்.

சீவகன் அவளூடலைத் தீர்க்க முயன்றான். மின்னிடையாளின் அடியிலே விழுந்திரந்தான். அவள் அன்பினாலுண்டாகிய புலவித்தீயிலே இன்சொல்லாகிய நீரைப் பெய்தவித்தான். அவ்வாறு செய்ததனால் அவளுள்ளத்தே இன்பம் மிகவும் நிறைந்தது. உள்ள இன்பம் புறத்தே கண்களிற் செறிந்து களிப்புடன் கடைக்கணாற் பார்த்தாள்.

சீவகன் மகிழ்ந்தான். "வேய் மருளும் மெல்லிய தோளினையுடைய பொற்கொடியே! நின் வாள்நெடுங் கண்களுக்கு இவ்வியனுலகமே விலைபெறாதது. எனவே, எப்படிப் புகழ்வேன்?'' என்றுகூறித் தழுவி நல்லமிர்தென மகிழ்ந்தான்.

**சீவகன் சிறைப்படல்**

அரும்பெறற் குரிசிலாகிய சீவகனுக்கு நீர்விளையாட்டின்போது தோற்றோடிய அசனிவேகம் வெட்கமுற்றுக் கருப்பங்கழிகளையும் நெய்கலந்த கவளங்களையுந் தொடாமல், பொற்பூணிட்ட, பிறைத்திங்களனைய மருப்பிடையே பெரிய துதிக்கையைச் சேர்த்துச் சுரும்பும் வண்டும் முரலச் சீற்றத்தொடு நின்றது. இது பகைவனிடம் புறங்காட்டிய வேந்தனைப்போல வருந்தி நிற்பதை, நன்னிறக் குழைகள் ஊசலாடி மார்பிடைச் சந்தனத்தைத் தடவி மின்செயவும், வெண்புகை படிந்ததைப்போன்ற ஆடையின்மேல் பொன்னாண் அசையவும் வந்த கட்டியங்காரன் கண்டான். 'இதற்குற்றதென்னோ?' என்று பாகரை வினவினான்.

கட்டியங்காரன் குறிப்புச் சீவகன்பாற் பகையுண்டு நிற்பதை அறிந்திருந்த களிற்றுப் பாகன், 'இறைவ! நின் அருளின்படியோ அல்லது மிகுந்த செற்றத்தினாலோ நீர் விளையாட்டன்று இது மதமிகுந்து நின்றபோது சீவகன் இதனைத் துன்புறுத்தினான்,' என வணக்கத்துடன் புகன்றான்.

செறிந்த நெருப்புக்குளம்போலக் கண்களில் எரியெழச் சீறி நோக்கினான். காற்றினும் வலிய பதினாயிரம் வீரரை விளித்தான். "மாறுபட்ட வேடர் போரையும் அரசர் செருவையும் வென்றதுகொண்டு, இங்ஙனம் தகுதிக்கடாத செயல்சூழ்ந்த வணிகன் மகனுடைய ஆண்மையை ஒழிப்பேன். விரைந்து சென்று பற்றிவம்மின்!" என்றான்.

அவர்கள் குடர்க்கண்ணிகளையும் குடர்மாலைகளையும் குருதிக் கலவையையும் ஊன்பதி படைக்கலங்களையும் உடைய தென்றிசைவேந்தின் தூதுவர்போலச் சீவகனிருக்குமிடஞ் சேர்ந்தனர்.

அவன் அப்போது குணமாலைக்கு ஒப்பனைசெய்து மகிழ்ந்திருந்தான். சண்பகமாலையைச் சூட்டினான். சந்தனத்தையும் பச்சைக்கருப்பூரத்தையுங் கலந்து மணக்குங் குழம்பாலே முலையை அடியாகத் தொடங்கியெழுந்த காமவல்லி தனது வடிவைக்காட்டித் தோளிலே தளிரையீன்று, முகத்திலே மறைந்துசென்று, நுதலிலே சுட்டியாகமலரும்படி யெழுதினான்.

"இனிய பண்ணினைத் தன்னடியிலே விழச்செய்யும் இன்மொழி ஓவியமே! அழகிற்கெல்லாங் கண்ணாடியே! கருங்கண்களாகிய அம்பறாத்தூணியால் நோக்கமாகிய அம்பினால் ஒழியாமல் என் புண்ணுடை மார்பிலே எய்கின்றனை! இத்திறனையுடைய ஒழியா அம்பறாத்தூணியை எங்குப்பெற்றாய்?"

என நாளெலாம் புனைந்துரை செய்துகொண்டிருந்தான். திங்களணிமுடியினானும் உமையம்மையும் போன்

யிருந்தது அவர்கள் தோற்றம் அப்போது. இந்நிலையில், ஆண்சிங்கத்தை மதியாமற் சூழ்ந்த சிறுநரிக்குழுவைப் போலத் தூதுவர் குணமாலையின் மனையைச் சூழ்ந்தனர். கண்ட பணிப்பெண் நம்பிக்குக் குறிப்பித்தாள்.

சீவகன் இடிபட முழங்கினன். செந்தீ கொழுந்து விட்டெரிவதைப்போலத் தோன்றினன். சிங்கவேறு தன் பெடையுடன் முழையிலிருந்து வெளிப்படுவதைப்போலக் குன்றெனத் திரண்ட தோளிலே குங்குமக்கலவை துலங்கக் குணமாலையுடன் வெளிவந்தான். மாணிக்கமாலை தாழ, மலர்க்கூந்தலைக் கையிலேந்திச் சீவகற்கு நேர்ந்ததொன்றும் அறியாளாய், இடியொலி கேட்ட நாகமென நடுங்கி அவனைச்சார்ந்து நின்றாள் குணமாலை.

வெளிவந்த சீவகன் விரைந்து வந்த தூதுவர் நோக்கையும் அவர்கள் நினைவையும் குறிப்பாலுணர்ந்தான். விரைந்து சென்று போருக்குரிய வில்லையேந்தினன். உயிரைக் கவரும் கொடுங்கணைகளை யாப்பெடுத்தான். தானையைப் போருக்கேற்றவாறு இறுகக் கட்டினன். வீரக்கழல் ஒலிசெய அணிந்தான். பிறகு, வந்த தூதுவரை நோக்கி, 'வந்ததென்? சொல்லுமின்,' என்றான்.

"எம் வேந்தன் தன் அடிநிழலிலே நினைக்கொணர்ந்து தருக என்று பணித்தனன். ஆகவே, நீ வருதல்வேண்டும்," என்றனர் தூதுவர். பெருநிலமுழுதும் வெதுப்பத்தக்க அரண்மிகு மதில் மூன்றையும் எய்த முக்கண்ணனைப் போலச் சினந்த சீவகன், 'வாளினைவென்ற கண்ணாள் விசயையை விரும்பிய சச்சந்தன் இறந்தபிறகு, இவனும் அரசு புரிகின்றான். குற்றமற்ற வீரனே! நந்தனே! இன்று கட்டியங்காரனுடைய தோளிழுக்குற்றனபோலும்; தேரினை விரைவினிற் கொணர்க!" என்றான்.

இவன் நிலைகண்ட கந்துக்கடன், "அரசனொடு மாறுபடுதல் இறக்க விரும்பினோர் செயலாகும். இவன் சினத்தை மாற்றிக் கொடும் போரைச் செய்யாமல் இவன் கைகளைத் தகைந்து கட்டியங்காரனிடஞ் சேர்த்தால், அரசன் உள்

ளத்தில் இருக்கும் அழற்சி தணியும். இதுவே செயத்தக்கது," என்றெண்ணினன்.

எனவே, சுநந்தையுடன் சென்று, 'தூதுவராக வந்த வீரர்கள் புறங்காப்பச் செல்லுதலே தக்கது,' என்றுரைத்தனன். ஊன் கமழும் வேலாகிய சீவகனும் சிறிது சிந்தித்து, ஆசிரியன் சொல்லால் தன் மெய் கட்டுப்படச் சினந்தணிந்து நின்றான்.

மற்றும், 'பெற்றோர் வேண்ட, அதனால் இவ்விடர் நேர்ந்ததென்றால் எவருங் குறைசொல்லமாட்டார்கள்,' என்ற மொழியையும் இனிமைப்படுத்திக் கூறினன் கந்துகன். ஆகையால், மூவுலகையும் பிணிக்கும் ஆற்றலை யுடைய—வானென வழங்கும் வண்மையுடைய—வீரன் பிணிப்புற்றான்.

**நகருற்ற கலக்கம்**

இவ்வாறு குமரன் இருதோளினையும் வந்த தூதுவர் கச்சினற் பிணித்தல்போலப் பிணித்தலின், ஞாயிற்றினைப் பாம்பு பற்றியதைப்போல இராசமாபுரம் வருந்தியது. சீவகனை வளர்த்த சுநந்தை தோளினும் மார்பிலுமணிந்த அணிகலன்கள் சிதறக் கண்ணீர் சிந்த, 'நம்பியே! காளையே! சீவகசாமியே!' எனக் கதறி நீங்காத் துன்பக்கடலிடை வீழ்ந்தாள்.

அழகிய கண்களையுடைய குணமாலை பாலாவியனைய பூந்துகிலை யேந்தி, 'எம்பெருமானுக்குத் தகாது! தகாது!' என்று நூலார் கோதை மிகுதியான எரியின் வாய்ப்பட்டதுபோல வெதும்பினள்.

கந்துக்கடன் மனையிலிருந்த மற்றைய மாதர்களும் குன்றின் உச்சியிலே எரிதவழும்போது திசைகெட்டுச் சிதறி ஓடிவருதலைப்போலப் பரிவுறு மனத்துடன் வெளியே வந்து, நிகழ்ந்ததை யுணர்ந்து, 'சிங்கம்போன்ற திறலானே!', என்று வாய்விட்டரற்றினார்கள்.

கங்கை நீர்ச்சுழியிலே சிக்கிய அழகிய மான்பிணை களைப்போல வருந்தி இவர்கள் புலம்புகிறதைக்கண்ட சீவகன், "கண்மூடித் துயிலும்போதுண்டாம் மயக்கம் போலப் பல கதிகளிலே பிறப்பதும் உயிர்நீங்கி யிறப்பதும் வீடுபெற்று மேன்மையடைவதும் நன்குற அறிந்த யானே உளம் நெகிழ்ந்து உருகிலேன். ஆசை எள்ளின் பிளவளவே எனினுங் குற்றமுடையதே. எனவே, என்மேல் ஆசை யால் வருந்தல் வேண்டா," என்று தேறுதல் கூறினான்.

இவன் தேற்றியுந் தேறாராய் ஒளிவிடும் மாணிக்கத்தை யிழந்த அழகிய நாகமங்கையர்போலத் தங்கள் இல்லத்தின் மணியான சீவகனை யிழந்த இவர்கள் வருந்தி நிலத்திடைச் சோர்ந்து வீழ்ந்தனர். ஒளிவிடுந் திங்கள் ஊர்கோளினாற் கவரப்பெற்று விசும்பிடைச் செல்வதுபோல மாணிக்கக் கலன்கள் சுடர்விடச் சீவகன் பல வாயில்களைக் கடந்து சென்றான்.

அழகிய சிவந்த பவளவாயும் மழலை மொழியுமுடைய மங்கையர் தம்முடைய பந்து, பாவை, கழங்கு, முற்றில், சிற்றில் முதலிய விளையாட்டுக்களை உளம் வருந்துதலால் அப்படியே விட்டுவிட்டுச் சிலம்பரற்ற ஓடிவந்து சீவகனைப் பார்த்தனர்.

சிலர், மல்லிகை மாலைசோர அணிந்த குழை ஒளிவிட வீணையை வைத்துவிட்டு ஒல்லெனச் சிலம்பு புலம்ப ஓடி வந்து கண்டனர். சிலர் நெய்யணிந்த கருங்கூந்தல் நிழல் விட்டுப் பிடரியிலே அலைக்க, முத்துமாலை உராய்ந்து மார்பு சிவக்கப் பந்தடித்தலை விட்டு விரைந்தோடி வந்து நோக்கி மயங்கினர். சிலர் மனங்கசிந்து, 'ஐய! யாது செய்வோம்?' என்றழுதனர். செம்பொற்றோடு வீழவும் அணிகலன்கள் வீழவும் பொன்மாலையுடன் கூந்தல் அவிழ்ந்து சோரவும் நாடகமாடிய மடந்தையர் சிலர், 'நம்பன் உற்றது என்?' என வெம்பியோடி நோக்கினர். அரிவையர் சிலர், 'மலர் மாலையான் அழகு வாடுமாயிடின் உடம்பிலே வாழும் எம் முயிரே! நீயும் பொன்றுக இன்று,' என்று சாக்காடுற்ற மயிலேபோல வேலனைய நெடுங்கண்களிலிருந்து நீர் நிறைய

ஆகுலம் அடைந்து அழகிய தம் வயிற்றிலே அடித்துக் கொண்டனர். சில தெரிவையர் தம் கற்பினுக்குத் தோற்ற மாணிக்கக்கல்லை மாலையாக நூலிலே கோத்துக்கொண்டிருந்தவர்கள் அப்படியே அவை சிதறிப்போக எறிந்து விட்டு வந்து, 'ஆ இது தகாது!' எனத் தம் வயிற்றில் மோதிக்கொண்டனர். சில மாதர்கள் வட்டிகை மணிப் பலகை அழகிய துகிலிகை கொண்டு ஓவியம் வரைந்து கொண்டிருந்தவர்கள் இடை நடுங்கி வருந்தச் சிதறி யோடும் மயில்களைப்போலத் தாங்கள் விடும் வெய்ய பெரும் மூச்சினாலே கண்ணிகள் கருகிப் பொன்னுருக வந்து வாயி லில் நின்று சீவகனை நோக்கினர்.

இவர்கள் தத்தமக்குத் தோன்றியவாறு வாய்விட் டரற்றினர் :

வினையின் விளைவைக் காண்மின் என்று கைநெறித்து நிற்பார். இவ்வாறு நடுங்காமல் தெளிவுடன் சென்றால் இவன் நிலை கண்டும் வருந்துவானோ அரசன் என்பார். இன்றுடன் புனைநலனும் அழகும் கல்வியும் பொன்றுமே என்பார். அந்தோ! எம் உள்ளங்கள் குயவன் திகிரிபோல அலைகின்றன என்பார். இவன் தோளைத் தழுவ மகளிர் நோற்றிலர் என்பார். இவன் தோள்கள் நோகுமே என்பார். 'அரசன் செயல் கூற்றுவனைத் தோள் தட்டிப் போருக் கழைத்ததுபோற் செய்தான். இனி அரசன் குலத்தோடு முடிவான் என்பார். சீவகன் தந்தை இவ்வாறு இவனை அடங்கிச் செல்லுமாறு செய்த கொடுமை தக்கதன் றென் பார். பெற்ற சுநந்தை ஆற்றாள் என்பார். அறநெறி தகா தென்பார். நம் காளை சீறின் இவ்வரசன் உண்டு வாழ் வானோ, ஆராய்மின் என்பார். இக்காளை காவலனாகி வைய மெல்லாம் காக்கத் தக்கவன் என்பார். 'இவ்வாறு கட்டுண்டு செல்வதும் அழகாயிருக்கிறது. இதனைக் காண்ப தும் பேறுகும்,' என்பார். 'உம், அவனை நோக்காதீர்கள்! நாணுவான்! நுண்ணிய நாகரிகனல்லனோ அவன்?' என் பார். மலர்க் கோதையணிந்த பொன்னனைய தன் காதலிய ரின் புலவியை நீக்கச் சிலம்பு திருத்திச் சிவந்த நுனிவிரல்

கள் (கட்டுண்டு) நொந்தனவே! என்பார். ‘எல்லோரும் புகழும் இவ் வையனுடைய அழகு கெட்டுப்போமாயின் இக் கோபுர மாடமூதூர் கூற்றுவன் உண்ணுமாறு அழிக!’ என்பார். ‘வில்லேந்திய கரிய வேடர் கொண்ட ஆநிரைகளை விடுவிக்க வல்ல பெரிய விற்பயின்ற தோள்களுக்குத் தகுமோ இது?’ மந்தர மலையாற் கடல் கலங்கினாற் போலக் கலங்குவார். இவ்வாறு நலமிக்க புதிய விழவினாற் பொலிந்த இராசமாபுரம் வருத்தத்தால் மயங்கியது.

இங்ஙனம் நகரம் அவலமுறத் தீயினிடத்தே விளைந்த கொடிய கணைகளையேந்திய சீவகன் தந்தையின் பெரிய அரண்மனை துன்பமுற்றுச் சிந்திய கண்ணீரை நோக்கிப் பொங்கும்போரிலே பழகும் வேலனாகிய சீவகன், ‘நீங்கள் வருந்தி யழாதீர்கள்,’ என்றான்.

“ஒரு பெரிய மலையை மின்னினால் இருகூறு செய்யப் பிளக்கப் புகுவோன் தளர்வதல்லது அம்மலை தளருமோ? அத்தகையதே கட்டியங்காரன் துணிந்த செயல். எனக்குத் துன்பமியற்ற நமனாலும் இயலாது. என்னைப் பகை கொண்டவன் வாழ்தல் இப் பெரிய நிலத்திலே இயலுமோ? மற்றும் வளைந்த கடலை வலையாகச் சூழவிட்டுப், பெரிய நேமிவரையை வேலியாக இட்டுச் சிங்கவேற்றை அகப்படுத்த முயன்றவன் செயல் முடியினும் முடிக. என் கிளையழ என்னை வாளாற் பிளக்க முயன்றவன் தலை தளையவிழ்ந்த கண்ணிகள் சிந்த நிலத்திலே விழும்.”

இங்ஙனங் கூறி நீருண்ட முகிலனைய நெடுங் களிற்றையும் வாளேந்திய கையினையும் உடைய பொன்மால் வரை போன்ற சீவகன் செல்லும்போது பேராரவாரம் பொருந்திய இராசமாபுரம் அழுது பின் சென்றது. அவன் சிலம்பியின் நூலாற் கட்டுற்ற சிங்கம் போன்று காணப்பட்டான்.

**கந்துக்கடன் முயற்சி**

“அரசரின் சினமாகிய கொடிய நெருப்பு ‘மணியாகிய முகில் பழங்காசாகிய மின்னை மின்னிப் பொன்னாகிய மழை

பொழியின்' அவியும். அன்றேற், புகைந்து மூண்டு சினக்கப் பட்டவரோடு உறவினரையுஞ் சேர்த்துச் சுட்டிடும்,'' என்றெண்ணிய கந்துக்கடன் பன்னிருகோடி செம்பொன் காணிக்கையாகச் சொரிந்து பணிந்து கூறுகின்றான் :

"வேந்தனே அருள் செய்து கேட்க வேண்டுகிறேன். கொடியிடையாளொடு மங்கையைப் பெண்கொலை புரிந்தறியாத இம் மூதூரிலே நின் மதயானை கொல்ல நினைந்தது நினக்கு வடுவாகுமென்று நினைத்த என் மகன் அம்மத யானையை விலக்கி, அப்பெண்ணின் இனிய உயிரைக் காத்தான். இது குற்றமாயின் நற்றமென எதனைக் கூறுவது? நாணத்தாலே சிறந்த மங்கையரின் நடுக்குறும் துன்பத்தை நீக்கல் ஆண்மக்கள் கடமை யென்றெண்ணி முன்னர் ஆநிரை பெயர்த்தாற்போல எண்ணி அறிவிலாமல் அவன் துணிந்திழைத்த குற்றத்தைப் பொறுத்தருள். மேலும் நெடுந்தொலைவிலிருந்து பின்னர் வரும் பொருளெலாம் தருவேன்.''

கட்டியங்காரன் உள்ளம் நிரை மீட்டதைக் குறித்ததனாற் கனன்றது. ஒளிவிடும் முத்தாரமும் மலர்மாலைகளும் அற்றுப் போமாறு திண்ணிய தோள் பிணைந்து இடியென முழங்கிக் கூறினான்.

"சிந்தனையிலே தேங்கிய என் களிறு அசனிவேகம் தன் மருப்புக்கள் ஊசிகளாகவும் சீவகனுடைய பரந்த மார்பு ஓலையாகவும் 'கள்வரைச் சிறுவோன்' எனத் திக்கெலாங் கேட்ப எழுதுவித்திடுவேன், இப்போதே! நீ டாரினை விட்டுச்சென்று நின் மனையை அடைக! இனி இதனை நினையாதே!''

நஞ்சனையான் மொழிந்த இம் மாற்றங் கேட்ட நாய்கன் நடுங்கினான். அவன் உள்ளம் கொடிய சீற்றமுடைய வேழம் உண்ட விளங்கனியாயது. அங்கிருந்து வெளியே போந்து உணர்விழந்து நின்றான். அப்போது, புகழ்தற்கரிய தவத்திற் சிறந்த, தூய நெறிநின்ற முனிவன் கூறிய அமுத மொழி நினைவிற்கு வரவும் தெளிந்து நன்னிலையடைந்தான்.

**கந்துக்கடன் சுநந்தையைத் தேற்றுதல்**

ஒளிவிடும் வேலானை அழைத்து வராமல் தனியே கந்துக்கடன் மனை புகுவதைக் கண்ட சுநந்தை அழுதரற்றினாள். 'ஐயனுற்ற நிலை என்னோ?' என்று விம்மினாள்.

"கொடி போல்வாய்! எவ்வகையினும் வருந்தல் வேண்டா. ஒரு பொருள் பொதிந்த மொழியைக் கூறுகிறேன். நீ முன்னர் பல சாப்பிள்ளைகளைப் பெற்று மனக் கவலை மிகுந்தவளாகி, 'இம்மகவும் இறந்தால் யான் வாழேன்; இறந்துபடுவேன்,' என்று கவன்றிருக்கும் போது, ஒரு முனிவன் கதுமென நம் வாயிலை அணுகினன். நாம் தாய்ப்பசுவைக்கண்ட கன்றென விரைந்து சென்று திருவடிபணிந்து, மணமிகு மலர்மாலை தூங்கும் இருக்கையிலே அமர்த்தி 'ஆறும் மூன்றும் அமைந்த' நால்வகையுணவை யேந்தினோம். அவன் 'பறவை தாதுண்டதைப்' போல உண்டு மகிழ்ந்து பசித்துன்பம் நீங்கினன். பிறகு, மணிகளிழைத்த பவளத் திண்ணையில் அமர்த்தி, அரும் பெறற் கரகத்திலிருந்து தூய மணிபோலும் நிறமுடைய நறுமண நீரை ஒரு கலத்திலே வார்த்து ஏந்திநின்றாய். அவன் தன் நியமம் முடித்துக்கொண்டு முறுவல் செய்தான். நான் வழிபாடு பலவும் முறைப்படி இயற்றினேன்.

"ஆறுகளெல்லாம் கடலுள் கலப்பதுபோல, அருகன் ஆகமத்துள் எல்லாப் பொருளும் வைகும். அதனை நீயே நன்கறிவாய். குற்றமற்ற நின்னறிவினாலே நோக்கிக் கூறுக! இவள் மக்கட்பேறில்லாதவள் அல்லள். இவள் பெற்ற வுயிர் சென்று பிறப்பதுதான் எங்கே?" என்று வினவினேன்.

அப்போது, நான் நின்னிடம் தந்த ஒரு துவர்க்காயைத் தவறி நிலத்திலே விழவிட்டனை. பிறகு, நான் அவனை வழிபட்ட இடத்திருந்து வேறொரு செவ்விய பழுக்காயை எடுத்து நினக்குத் தந்தேன். அதனை நீ விரும்பிப் பெற்றுக்கொண்டாய்

இவ்வாறு நிகழ்ந்த நிமித்தத்தாலும் யான் கூறிய 'சென்று பிறக்கும்' என்ற வாய்மொழியாலும் குற்றமற்ற இறைவனாகிய மணியை உள்ளங்கையிலே கொண்டுள்ள முனிவன் ஆராய்ந்துணர்ந்து, 'கற்பகத்தினையுங் காமவல்லியையும் போன்றீர்! கேண்மின்! நீர் ஒன்றும் வருந்த வேண்டா. உலகெலாம் ஆளும் புகழையுடைய பொன்னொளியினையுடைய புதல்வன் ஒருவனைப் பெறுவீர்!' என்று கனிந்த மொழியாலுரைத்தான். நீ மகிழ்வுடன் சென்றனை.

பிறகு, முனிவரன் மேலும் அக்குழவியின் பிறப்புத் தொடங்கித் துறவுவரை எனக்குரைத்தான். "நிலவுவீசும் அணியினனாகிய நின்மகனை இப்பெருநகர் வருந்தக் கைகளைப் பிணித்துத் தவறு பல செய்து கொல்ல அருளிலா அரசன் சிறைப்படுத்தியபோது, ஓர் இயக்கன் நின்மகனைக் கொண்டுபோய்விடுவான். அஞ்சாதே. சிலநாட் கழித்த பின் அவ்வுண்மை வெளியாகும்."

இவ்வாறு அருந்தவன் உரைத்ததாகக் கந்துக்கடன் கூறச் சுநந்தையும் அருகிலிருந்த குணமாலையும் கேட்டுத் தம் நீங்கும் உயிர்க்குப் புணையாக அம்மொழியைக்கொண்டு கவலைக்கடலை நீந்தி, எட்டுத் திங்களென்கிற காலையாகிய கரையைக் கண்டனர்.

**தோழர் செயல்**

அழகிய குழையணிந்த மகளிர் வருந்தச் சீவகன் தன் திண்ணிய தோள்களை மன்னனாற் பிணிக்கப்பட்டான் என்பது கேட்ட தோழர்கள் செருக்குமிகு வேழம் போர்க்களத்திலே மாண்புமிக்க மருப்பினை யிழந்தாற்போலத் திடுக்குற்றனர். அவர்களிற் பதுமுகன் நகைத்து, 'ஆற்றல் மிகு தாய்ப்புலி காவலாக இருக்கும்போது அதன் குட்டியைத் தின்னமுடியுமோ? கட்டியங்காரனென்னுங் கழுதை நம் புலியேற்றைப் பாய்தல் எங்ஙனம்? இதனை விரைந்தறிதல்வேண்டும். மற்றும், நம் செல்வன் வில்லொடு நின்றால் தேவரும் அவனை வணக்கவியலாது. நற்றாயுந் தந்தையுமே இக்கொடுமையைச் செய்தனர். ஒற்றன் வந்து கூறு

வதை மேலுங் கேண்மின்!'' என்னும்போது ஒற்றனொரு வன் விரைந்துவந்தான்.

"ஈட்டி வேல் குந்தம் வாள் வில் நெட்டிலைச்சூலம் கொடிய தண்டம் ஆகிய இவற்றை ஏந்திய பதினாலாயிரம் மள்ளர் நெருங்கிவந்து எல்லாத் திசையினும் சூழ்ந்து நிறைந்து ஒளிவிடும் அழல்மிகு கதிரை ஊர்கோள் வளைந் ததுபோல வளைந்தனர். பிடியொடு நின்ற களிறு பெரிய வளைப்பிலே சிக்கினாற்போல மலர்க்கோதையாள் குண மாலையொடும் வளைக்கப்பெற்ற அண்ணல் சிறிக் கணையும் வில்லும் ஏந்தி அச்சுற வெளிவந்தனன். அவனைக்கண்ட மள்ளர் புலிகண்ட மான்போல மருண்டு சிதறினர். கழல ணிந்த அவ்வீரர்கள் சிதறுவதைக்கண்ட தந்தை சூழ்ச்சியி னாலே தழுவ, நீர்வாருங் கண்ணினள் தாய் விளங்குந் தோளைப் பிணிப்ப, 'என் தோழர்க்கு மாசுசெய்தேன்,' என்று அண்ணல் சோர்ந்துநின்ற காட்சி, ஊழினாலே பாம்பு வலைபோலச் சூழ ஒளிவிடும் ஞாயிறுபோன்றான்."

இவ்வாறு ஒற்றன் கூறியதைக்கேட்ட பதுமுகன், 'என்சொல் ஒவ்வியதோ?' என்று கூறிச் சூழ இருந்த தோழரை நோக்கி, 'இவ்விடரை நீக்கும் நெறியை நீர் தேர்ந்துரைமின்,' என்றான்.

நிறைமதிபோல் ஒளிசெயும் புத்திசேனன் ஆராய்ந்து கூறுவான்:

"நாம் மறைந்துநின்று இந்நகரைச் சுடுவோம். நகர மாக்களும் அரசன் பணியாளரும் நெருப்பினை நோக்கி விரைவர். அவர்கள் நீங்கியவுடன் அண்ணலைச் சிறைக் குற்றத்திலிருந்து நீக்கிப் பகைவனையும் அழித்துமீள் வோம்,'' பிறகு, பதுமுகன் கூறுவான்: "நாமிடுங் காலத்தீ நகரையெரிக்கும். காவலனையுடைய அரண்கடந்த அம்பைப் போல—நம் மறவர்கள் சாலவுந் தீய வேடர்போலக்— கோலங்கொண்டு குழுமி, தீய கட்டியங்காரனை அரண்மனை யிலே வளைத்தல்வேண்டும். நாம் இங்கு ஆலையிற் பாகினைக் காய்ச்சும் தீயையுடைய நாடெங்கும் அழிக்கக்கடவோம்.

நான் அண்ணலைச் சிறைப்படுத்திச்செல்லும் மதனனைத் தெருவில் விழும்படி அவன் தலையைப் பிறைக்கணையாலே நிலத்தில் வீழ்த்துவேன். இதனைக்கண்ட வீரர் மறுகி யோடுவர். நீவிர் நம் தலைவனை யழைத்துக்கொண்டு யாவ ராலும் நிலத்தை யகழ்ந்தும் வரமுடியாத அரிய காவலான இடத்தே செல்லுக. என்னைப் பகைவர் தாக்கின் விரைந்து வாளைவீசி எளிதிலே அவர்களை வேற்றுலகேற்றி நும்மிடம் கடிதின் வருவேன். உலகெலாம் ஈடுசெயும் நம் நட்பைச் சாலவும் உறுதிப்படுத்த விரைந்துவம்மின்.''

பல கூற்றுவர்கள் ஒன்றுகூடிய கூற்றுவனைப்போன்ற பதுமுகன் இங்ஙனங் கூறியவுடனே, காலனைச் சூழ்ந்து, அவன் ஏவின செய்யும் நோய்போல நபுல விபுலர் சூழ நந்தட்டன் வேலினையேந்திக் கண்டோர் நடுங்க வந்துநின் றான். குணமாலையின் தந்தையும் அவள் உடன்பிறந்தவ ரும் சுற்றமும் நட்புமாகிய பிறரும், பாயும் புலிக்குழுவைப் போலச் சூழ்ந்தனர். இவர்கள் யாவரும் பதுமுகனைத் தலைவனாகக்கொண்டு அவன் கூறியவாறு போர்புரியக் காவ லாக நின்றனர்.

**தத்தையின் செயல்**

இச்செயல் பிறவும் தத்தை கேள்வியுற்றாள். மணிக ளால் இழைக்கப்பெற்ற 'யவனச் செப்பு' ஒன்றிலிருந்து தூய வெண்மைத் துகில் ஒன்றை யெடுத்து நலம்பெற வுடுத்தாள். மற்றொரு செப்பிலிருந்து நறிய மாலையெடுத் துச் சூடினாள். மிகுவிலைபெற்ற முத்துமாலை யொன்றை யும் புனைந்தாள். வெண்சாந்தணிந்தாள். கணவனுக்குற்ற துன்பத்தை நீக்கத் தான் அறிந்த விஞ்சையை ஓதினாள்.

அவ்வளவிலே மின்னைப்பழிக்கும் வாளும் வேலும் கல்லுந் தீயும் காற்றும் ஏந்திய தெய்வங்கள் காந்தருவ தத்தையைச் சூழ்ந்தன. அசையும் மூங்கிலனைய தோளின ளாகிய தத்தை தன் கணவனுக்குற்ற துயரை மின்னென விரைந்து நீக்க எண்ணி அத்தகைய நேரத்தை நோக்கி யிருந்தாள்.

அப்போது, அவளுள்ளம், "இன்று உலகில் நிலை பெறும் பழி நம் கணவனுக்கு நேர்ந்தது. அரசன் செய்த சிறைக்கடலிலே முழுகி யாழும்போது அவனை அவள் மனையாள் அணுகிமீட்டாள் எனின், என் கணவனுடைய ஆற்றலும் கல்வியும் என்னுயின ?" என்று உலகம் கொழிக்கும் பழிக் கென்செய்வேன்?....என் கணவன் உற்ற சிறையை வெற்றித்திரு நீக்குமென்றுற் பழியில்லையே. அவ்வாறுயின் அவள் செயலை நானும் செய்வேன். அவளுக்கும் எனக்கும் வேற்றுமை யென்னை? என் இருப்பிடம் வெள்ளி மலை. அவள் இருப்பிடம் இதழ் விரியும் பொற்றுமரை மலர். மற்றும், அவளோ பொதுப்பெண்! யான் குல மங்கை. எனவே, ஆவதாகுக! புகழும் பழியும் எழும்போது வானவர் சார்பிலேயும் உள்ளன. மக்களுள் இல்லாதவரைத் தெரிகிலேன்....இனி இவற்றை நினையின் என் உள்ளம் நோகும்!" என்று நீடு நினைந்து. அவளும் ஈன்றணிமையிலுள்ள தன் கன்றைக் காத்திருக்கும் ஆவினைப்போல நேரத்தை நோக்கியிருந்தாள்.

**சீவகன் சிந்தனை**

நிற்க, இவ்விருசாரர் செயலையுங் கேள்வியுற்ற சீவகன், "வானையும் வென்ற நட்புடைய என் தோழர் மாநகரைச் சுடுவதும் மதனனை யழித்தலுமாகிய முறை தவறிய செயல் இருக்கட்டும். வேயனைய தோளியாள் தத்தையாள் செயும் விஞ்சையால் விடுவித்துக் கொண்டு உயிர் வாழ்தலை விரும்பேன்! மற்றும், என்னைக் கட்டிய கச்சற நிமிர்ந்து மக்களை மோதிக் கொல்லுங் களிறுபோல இவ்வீரர்களின் இடையையும் முடியையும் பற்றிப் பிளந்து, கொடிய புலியானது அச்சமுண்டாக அழன்று சீறி ஆட்டுமந்தையிற் புகுவதே போல இந்த யானைக் குழுவையும் ஒட்டிடுவேன். எனினும், வேழத்தை வேழத்தால் தாக்கித், தேரைத் தேரால் மோதி வெங்குருதி குபுகுபுவெனப் பொங்க இக்கட்டியங்காரன் உயிரைப் பருகும் நாள் வந்ததில்லையே! இப்புழுக்களைக் கொன்றுவதென்ன ?" என்று பலப்பல நினைந்து, இறுதியிற் சுதஞ்சணனை நினைத்தான்.

**சுதஞ்சணன் செயல்**

அப்போது சுதஞ்சணன் தன் காதலியர் குழாத்திலே யிருந்தான். காலை யிளங்கதிரின்மேல் இளம்பிறை கிடந் தாற் போல மார்பிலே பெருவிலை பெற்ற ஆரத்தையணிந்த சீவகன் பண்புகளை ஓரரம்பை யாழிசையுடன் சேர்த்துப் பாடுவதைக் கேட்டுக் களித்திருந்தான். அப்போது அவ னுடைய இடக்கண் துடித்ததுகண்டு சீவகனைத் தன் ஓதி யால் நோக்கி யிடருற்றதைக் கண்டான். மயிலனைய காதலி யர்க்குத் தன் உருவத்தை அமைத்து வைத்து விட்டு வானிடை முகில்மீ தேறினன்.

அம்முகில் மிகுந்த காற்று மலையைப் பிளக்க இடியும் மின்னுமாகிய இவற்றால் நிறைந்தது. நம்மையின்றி ஊழி நிகழ்ந்தது என்று சுதஞ்சணனுடைய சூழ்ச்சிக்கு வெள் கியவன் போலக் கதிரவன் மறைந்தனன். 'உலகமுடியும் ஊழி இப்போது வந்ததென்று கூறுமாறு கடலையள்ளி நிலத்திலே யிட்டாற்போல மழையுங் கலந்தது. விண்ணும் மண்ணுந் தெரியாமல் விலங்குகளும் மக்களும், தம் கண் களையும் வாயையு மிழந்தன போலக் கடல் கொண்டது காண்மின்,' எனப் பெண்களும் ஆண்களுமிரங்கினர். இவ் வாறு குழப்பத்தை யுண்டாக்கிய சுதஞ்சணன் சீவக சாமியை ஏந்தி மார்புறத் தழுவியவாறு விசும்பிடை மறைந்தான்.

**தத்தையின் மகிழ்ச்சி**

குன்றினை விழுங்கி ஓங்கிய திரண்ட தோள்களை யுடைய சீவகனைச் சுதஞ்சணன் கொண்டேகலை யுணர்ந்த தத்தை மகிழ்ந்து, 'நன்றுண்டாகுக!' என வாழ்த்தினள். அப்போது அவளுள்ளத்தே, 'நம் காமனைக் கண்ணுறக் காணும் நாள் என்று வருமோ?' என்னும் வருத்தம் மிக்கது. பிறகு, அழகிய நறுமண மலர்மாலையும் நிறைந்து சந்தனங்கமழும் இடத்திலே வந்திருந்த தெய்வங்களை வாழ்த்தி வணங்கி, 'எந்தையரே! எழுக!' என்னச் செல்ல விடுத்தாள் தத்தையை மொழியால் வென்ற தத்தை யெனும் பெயரினள்.

**மதனன் செயல்**

இனி, மலைபோன்ற யானைத் திரள்களையுடைய மன்னனின் மைத்துனன் மதனன் என்பவன் கொலைவேற் சீவகனைக் கொல்லக் கொண்டு வந்தான். அவன் நல்லவனாகிய சீவகனைக் காணாமையால், நஞ்செனமூச்செறிந்து, அச்சத்துடன் வில்லேந்திய மள்ளரை நோக்கிச் செப்புகின்றான்.

"அரசனாற் சிறப்பட்ட சீவகனைக் கொல்லவந்தோம். இனி என்ன சொல்லிச் செல்வோம். என் செய்வோம்; இது நிகழ்ந்ததென்றால் அரசன் நம்மை எரியிலிடுவான். நன்றாக ஆராய்ந்து சொல்லுக!"

மள்ளரும் இவனுமாக ஆராய்ந்து தாங்கள் வாழ வழியொன்று கண்டனர். உடனே விரைந்து அங்கே வந்த ஒருவனை ஓடிப் பற்றி வாளாற் பிளந்து அடையாளந் தெரியாதவாறு புரட்டி யரிந்தனர். அணிநகர் அச்செயல் கண்டு சீவகனையே வதைத்து விட்டனரென எண்ணி வருந்தியது.

மதனன் மள்ளருடன் அரசனிடஞ் சென்றான். "காய்சினமுடைய அரசே! களிற்றுடன் பொருத காளையைப் பெருந் திரளாக மக்கள் சூழ்ந்தனர். மற்றும் மழையுங் காற்றும் இருளுமாகப் பெரிதுந் தோன்றின. அவன் இந்நிலையே பிழைத்துப் போவான் என்றஞ்சி நீ நினைந்தவாறு யானைக் கிடுமாறு கொணராமல் மார்பு பிளந்து உருட்டினோம்," என்று புனைந்துரைத்தான்.

**கட்டியங்காரன் மகிழ்ச்சி**

"அருளும் வலியும் ஆண்மையும் கல்வியும் அழகும் அறிவும் இளமையும் ஊக்கமும் திருவும் பெருங்கொடையும் இன்பமும் திண்ணியபுகழும் நட்புஞ் சுற்றமும் உடைய சீவகனை ஒப்பார் இவ்வுலகில் யாவரே உளர்! இவனைக் கொல்வது பெரிதும்! அரிது! நீயே கொன்றாய்! பல சிறப்பும் பெறுக!"* எனக் கூறிச் சிறப்புச் செய்தான்.

---

*"அருள்வலி ஆண்மை கல்வி அழகறிவு இளமை ஊக்கம்
திருமலி ஈகை போகந் திண்புகழ் நண்பு சுற்றம்
ஒருவரிவ் வுலகில் யாரே சீவகன் ஒக்கும் நீரார்
பெரிதரி திவனைக் கொன்றாய் பெறுகெனச் சிறப்புச் செய்தான்."

## அ. பதுமை திருமணம்

**சீவகன் உள்ளம்**

இனி, எவ்வழியானும் போக்குதலரிய சிறையினின் றும் சுதஞ்சணனால் விடுவிக்கப் பெற்ற தூய பண்பினை யுடைய சீவகன் என் செய்கிறானென்று பார்ப்போம். விட்டுவிட் டொளிரும் மணிக்கலனணிந்த கட்டியங்கார னுடைய சிறையில் அகப்பட்ட போதும், அசைதலையுடைய தாரினனாகிய சுதஞ்சணன் வந்து தன்னை அவ்வருஞ் சிறை யினின்றும் விடுவித்த போதும் வருத்தமும் களிப்பும் நெஞ்சிடையே தோன்றலு மில்லாமல் இரண்டையும் திண்ணிய உலமெனத் திரண்ட தோளானாகிய சீவகன் ஊழ்வினையென்று கருதி விட்டான்.

**சுதஞ்சணன் நன்றியறிவு**

வானரங்கள் பாய்வதினால் நெருங்கிய நாகமலரினின்று தேன் முதலிய வண்டுகள் இரிந்தோடும் சந்திரோதயம் என்னும் மலைமீது இள ஞாயிற்றைச் சுமந்து திங்கள் ஏறு வதைப் போலச் சீவகனைச் சுமந்து சுதஞ்சணன் ஏறிச் சென்றான். சென்று தன் கோயிலையடைந்து, தாமரைக் கண்களையுடைய சீவகனைத் திங்களைக் கரைத்தாற் போன்ற தெண்ணீராலே தன் உரிமை மகளிருடனிருந்து ஆட்டி னான். அழகிய மணிக்கலன்களைப் பூட்டினான். சிறைப் பாவத்திலிருந்து நீங்கியதால் தூயமகன் ஆயினான் என்று பாராட்டினான்.

பிறகு, பொன்னாலணிந்த காம்பினையுடைய நிலவு பொழிகின்ற திங்கள் போன்ற, சல்லியும் தூக்குமாக இடப் பட்ட முத்தமாலை சூழ்ந்த குடையின் நிழலிலே, கன்னியர் கவரி வீசவும், எதிரே மணிக்குழை வில்லிட இசை தவழுங் கூத்தாடுவது கண்டு தக்கவாறு வீற்றிருந்தான் சிறப்புறு சீவகன்.

அப்போது, சுதஞ்சணன் தேவியர், 'எம் கண்கள் அளி மிகுந்த மலர்த்தாரினன் அழகைக்கண்டு, இதுவரை

இமையாதிருந்த பயனைப் பெற்றன,' என்று முகமன் கூறி னர். பிறகு, சுதஞ்சணனை நோக்கி, 'இப்பெருமானுடைய நட்பு எங்ஙன முண்டாயிற்று?' என வினவினர்.

'நோய்த்திரளுக் கிடனாகிய நாய்ப்பிறவியிலே பிறந்த என் நோயைக் கெடுத்து, அழகைத் தகைத்த இவ்வுடம் பினை யருளி இங்ஙனம் நோக்கினவன் இக்காளை,' என்று மணிக்கலத்திலே யேந்திய அமிர்தமனைய சுதஞ்சணன் கூறினான்.

கேட்ட தேவியர், 'கடற்சுறவினைக் கொடியாகக் கொண்ட காமனைப் போன்ற இக்காளையின் வெலற்கரும் பகையைக் கெடுத்துப் பரவிய நெடுநில மடந்தையை வதுவை செய்து கொடுப்போம்,' என்று இனிதின் இயம் பினர்.

**சீவகன் விருப்பம்**

சீவகன் அதனைக் கேட்டு, 'இன்ப உலகு வாழ்வையும் வானவர் நாட்டையும் நிலவுலகத்தே தருக,' எனினும் தர வல்ல தன்மையிர் நீவிர். அங்ஙனமிருக்க இந் நிலவுலக அர சாகிய இவ்வெளிய செயலை எண்ணவேண்டுமோ? போர்க் களத்தே யானே அவனுயிரைப் போக்குவேன்,' என்று மகிழ்வுடன் கூறிச் சுதஞ்சணனைப் பார்த்துச் சொல்வான்:

" ஊற்று நீரையுடைய கிணற்றிலே வாழும் மீனனை யார் தாம் பிறந்த ஊரிலேயே திரிந்துகொண்டு பிறநாட் டழகினை நுகரும் பெற்றியினை யிழந்தாராவார். எனவே, நிலவுலகிற் கிடக்கும் மலையையுங் கானத்தையும் நாட்டை யும் பொய்கையையும் கண்ணும் மனமுங் குளிரும் ஆற்றை யுங் காண்பதற்கு எண்ணினேன். அவற்றைக் காண என் னைப் போகவிட்டு நீ இங்கேயே இரு."

**சுதஞ்சணன் நெறிகூறல்**

சுதஞ்சணன் அவன் வேண்டுகோளுக் கிசைந்து செல்லவேண்டிய வழியின் அமைதியைத் தெளியக் கூறி னான் :

"சந்திரோதயம் என்னும் இம்மலையிலிருந்து இரண்டு காதம் ஏகினால் இருண்டு தோன்றும் அரணபாதம் என்னும் மலை. அதன் அடிவாரத்தில் வந்திருந்து, பிறப்புக்குரிய இருவினையையும் கழுவுகின்ற சாரணர், வீட்டை விரும்பி அரசாட்சியைத் துறந்து போந்து, பிறகு பற்றறத் துறந்தவரானவர். நிலவுலகிற் சிறப்புற்றவனே! மலங்கெடுக்கும் சிந்தையாலே இருளகற்றும் ஞாயிறு போல்வாருடைய சேவடியை இறைஞ்சின அளவிலே, வெந்திறலுடைய இயக்கி யொருத்தி தோன்றுவாள். அவள் நின்னை எதிர்கொண்டு நுகரப்படும் உணவு தந்து பேணி விருந்தூட்டுவாள். உண்டு, அவளைப் பிரிந்து அவ்வரண பாதத்தின் சாரலிலே செல்வாயாக!

"அங்கு நின்றும் போன பிறகு, இருபத்தைங் காதவழி வேழத்திரள் தங்கிய, கடலெனத் தோன்றும் காடு கங்கையின் கரையிலே உள்ளது. அக்காட்டிலே தனியே செல்பவரிலர். நீரிலே எரிதவழ்ந்தாலென மலர்ந்த தாமரையையுடைய - வாளை பாயும் - தடங்களை வலத்திலே யிருத்தி, அக் கானகத்தில் இரண்டு காவதம் செல்க! சென்றபின், மணி முதலியன கலந்து ஏந்துதலையுடைய நின் தோள்களென்னுமாறு இரண்டு குன்றுகள் ஓங்கியுள்ள அழகிய துகிலணிந்த மகளிரைப் போலப் பொலிவுற்று மனத்தை மறைக்கும் ஒரு காட்டைக் காண்பாய். அப் பேய்மகளிர், 'வெயில்மணி வரையிலே யெறிப்பதைப் போன்ற தன்மையையுடைய குங்குமக் கலவை துலங்கும் விரிந்த மார்பினாய்! களவினில் என் அணியழகைக் கவர்ந்த கள்வனே!' என்று கூறி உருகி நைவர். மூண்டெழும் அழலென எழுந்த வேட்கையினாலே, நெகிழ்ந்த பழங் குழைந்தனையதொரு மேனியின் மெலிவுடன் மிகவும் நெருங்குவர். ஆடவர் அவர்களைக் காலம் இதுவென்று தழுவினால் அவ்வளவிலே அவர்களைப் பிழிந்துயிரை யுண்டிடுவர். ஆதலின், அவர்களைத் தழுவற்க.

"பேய் நகரிலிருந்து நீங்கிக் காவதங் கடந்தால், ஒரு நாடு தோன்றும். அந்நாடு ஒழுங்கினையுடைய . கரும்பு

சூழ்ந்த வேலியிடத்து அறுத்து முடியாத செந்நெல், துகிலுக்குள்ளே நுழைந்து கிடந்த பவழ மேகலையைப் போன்று காணப்படும். கடல் சூழ்ந்து கிடந்த பொற்றீவினை யொத்துத் தோன்றும். அது பல்லவநாடு என்னும் பெயருடையது. பருவம் பொய்யாது மழை பெய்யுந் தன்மையது. பெருங்குவளை மலர்கள் மலர்ந்த ஓடைகளை யுடையது. அந்நாட்டின் தலைநகரிலே வழிவருத்தந் தீர இரண்டு திங்கள் தங்கியிருந்து, மேலே செல்லும்போது, கானைக் கடக்கக் கொடிய கல்வழி யொன்றுண்டு. அதன் தன்மை :

"வேல் பதிந்து பரந்திருப்பது போன்று கூர்மையான பரல்கள் நிறைந்தது. அவ்வழியின் வெம்மையைக் கூறும் வாயும் வேகும். எனினும் சிறிது கூறுவல். குழவியை யுடைய பிடி மயங்குமென்று களிறு அழலைத் தாங்கித் தன் நிழலைத் தரும். சேவல் பெடையைத் தன் சிறகரால் தழுவித் துயராற்றும். மான்பிணைக்குக் கலை தன் நிழலை நல்கிப் பிணையின் உருகும் வெப்பத்தைத் தணித்துத் தான் வெதும்பி நிற்கும். மதயானை பெய்த மதத்துடன் அது பெய்த சிறுநீருங் கலந்து நனைந்து கிடந்த தரையிலே படநாகம் வெயில் வெம்மை தாழாது வந்து வீழ்ந்து, ஈண்டும் வெம்மையே மிகுதலின் முறுக்கிவிட்ட கயிறு போலவும் மின்னெனவும் பதைத்துத் துடித்துப் புரண்டு நீங்கும்.

இத்தகைய வழியில் இறக்கவென ஊழாலே உந்தப் பட்டவர்களல்லாமல் பிறர் போகக் கருதுதல் அறியாமை யாகும். நீ அவ்வழியிற் போகவேண்டா.

அவ்வழியிற் செல்லாமல் அயலே சென்றாற் சித்திர கூட மலையைக் காண்பாய். அம் மலையிலிருந்து அஞ்சனம் என்னும் யாறுனது மூங்கிற் கழிகளையும் சந்தனக்கட்டைகளையும் வயிரங்களையும் மணிகளையும் வாரிக்கொண்டு இழிகின்றது. அந்த யாறு வலப்பக்கமும் மலை இடப்பக்கமும் அமையத் தாபதர் பள்ளியொன்றுளது. அப்பள்ளியின் இடம் ஒரு யோசனைப் பரப்புடையது. பொன்னும் மணி

யுஞ் செறிந்த அவ்விடம் மிகவும் குளிர்ச்சியானது. தாபதப் பள்ளியின் முன்னும் பின்னும் தேமா மரமும் சுரபுன்னை யும் சூழ் பொழில்கள் உள்ளன. இவ்விடம் இன்பத்தால் அறிவைக் கெடுக்கும். ஆங்குக் கிடைக்கும் சுவைமிகு வாழைக்கனிகளையும் மணமிகு நறுமாமரக் கனிகளையும் தேன் வழியும் பலாக்கனிகளையும் உணவாகக் கொண்டு தவம் புரியுந் தாபதர்கள் நன்னெறியிலிருந்து விலகியவர் கள் புலன்களின் வயப்பட்டவர்கள்; முறுக்கி விடப்பட்ட நீண்ட சடைகளையுடையவர்கள். அவர்களுடன் உசாவி அவர்களின் நெறியை யறிந்து கொள்க. அன்றி, அறிவை மயக்கும் இன்பச் சூழலையுடைய அவ்விடத்தே மயங்கி யிராதே.

தவத்தால் வருந்தும் அத் தாபதரின் பள்ளியிலே குருந்தத்திலேறிய அரும்பிய முல்லை தம் மனக் காதலரைத் தழுவிய மகளிர் போல அழகினைத் தரும் அக்காட்சியை விட்டு, மலையை நீங்கிப்போனால் குரவ மரங்கள் செறிந்த கொன்றைக்காடு பன்னிரு காதவழி நீண்டுள்ளது. அக் காட்டிலே, வரகை அரிவாளினால் அறுப்போருடைய பாட லுக்கு வண்டுந் தேனும் யாழிசைப்பது போல் முரலும்.

அவ்வெல்லையைக் கடந்து, அடும் நறவும் பூவாலாக்கிய கள்ளும் பொற்குடங்களிலே நிறைத்துப் பருகிப் பாடுகின்ற இன்னிசை நிறைந்த வயலினையும் சிறப்பினையும் உடைய தக்க நாட்டினைக் காண்பாய்.

அதனைக் கடந்து போம்போது, மிகுந்த சண்பகப் போது போர்த்துப் பரவி, அந்நாட்டு மகளிரின் கூந்தல் போலத் தேன்மொய்த் திழியும் யாறொன்று தோன்றும். ஒளிவிடும் பலவகை மணிகளை வாரிக்கொண்டு, மேதக்க தன்னுடைய நலத்தைக் கூறுபடுத்தி உவகையூட்டலின் பொன்னூறு மேகலையணிந்த கணிகையைப் போலத் தோன் றும். அவ்யாற்றை நீந்திச் சென்றால், யானையின் வெள்ளிய மருப்பினாற் காலும் வளையும் முதலிய யாவும் இயற்றி மான மிகு கவரியின் மயிராலே வேய்ந்த—உணவுக்குத் தேனும் நெய்யும் கிழங்கும் ஊனும் பழங்களுங் காய்களும் செறித்த

—கானவர் குடிசைகளையுடைய காடு தோன்றும். அக் காடெங்கும் கடுந்துடிக்குரலும், கள்ளரிக்குங் குரலும், நெடுங்கையையுடைய யானைகளின் பிளிறுதலும், மணி வரன்றிவரும் அருவியின் மெல்லொலியும், புலியின் முழக் கும், அம் முழக்குக்கஞ்சிய மானின் கதறலும், வேடர் களின் சீழ்க்கையுங் கலந்துகேட்கும்.

அக்காட்டிலே நான்கு வாவிகள் உள. அவை பொன் னணி திகிரியினையுடைய பேரரசனின் அழகிய கன்னிப் பருவ மகளிரைப்போலக் காண்பதற்கரியவை; அழகிய நீலமணியை நிரைத்தவை. அவற்றிற் பொற்றாமரை நிறைந்ததொன்று; இரும்பைப் பொன்னாக்கும் இரசத் தன்மையதொன்று; எந்நோயையுந் தீர்ப்பதொன்று; குவளை நீர் நிறைந்த் நறுநீர் வாவியொன்று. குவளைநீர் வாவி யொன்றுமே நுகரத்தக்கது. மற்றவற்றை விரும்பிச்செல் பவரை, அவற்றைக் காத்துக் காட்டுள் வாழ்பவர் தோற்பை யணிந்தவராய் வில்லுடன் தோன்றித் தடுத்துப் பிழைத்த லரிதெனக் கூறிக் கொன்று உடலைக் கொண்டுசெல்வர்.

அண்ணலே! நின்னைக்கண்டு மகளிர் கண்கள் மொய்ப் பதுபோல மாந்தர்கள் அவ்விடத்தை மொய்த்திருப்பர். அவ்வாவியை இடப்பக்கத்தே நிறுத்தி, அவ்வாவியிலுள்ள வற்றைக் கொள்ள விழையா வுளத்துடன் சென்றால், அச் சிலையவர் இவன் நல்வினையுடையவனென்று விரைந்துவந்து குழுமித் தொழுது காண்பர்.

அங்கே ஐங்காத வெல்லைவரையிற் பாடலையுடைய வண்டுகள் யாழெனமுரலப் பசும்பொன் கிண்கிணியும் இதழ்விரி கோதையும் ஒளிவிடும் மேகலையும் உடைய 'ஆடிய கூத்திதன் அசைந்த சாயல்போற்' செலவுக்கு மிக வினியதாயிருக்கும். மற்றும், மாலையே வீழ்ந்ததென்னும் படி முல்லையையுங் குருக்கத்தியையும் அணிந்து, பிற மலர் களும் சிதறித் தேனைப்பெய்து, 'கற்புடைய மாதரார் மன மென்க்' கிடந்த அச் செவ்விய நெறி நிலத்திலன்றிப் பூந் தாதின்மேல் நடந்தாற்போல மெத்தெனவிருக்கும். மேலும், மணிகளால் இயன்ற பாலிகையனைய பெருஞ்சுனையொன்று

அணிமணி நீள்மலரால் அணியப்பட்டுக் காணப்பெறும் அங்கே; பூந்தட்டுப்போல அழகிய பொழிலுமுளது. அவற்றைக் கண்ணாலே மட்டும் கண்டு செல்க.

அங்ஙனம் செல்லும்போது நினக்கு வலப்பக்கத்தே 'குலத்தலை மகளிர்தங் கற்பிற் றிண்ணிய' வனகிரி தோன்றும். அது அருவியாலும் குளிர்ச்சியாலுந் தண்மதி போன்றிருக்கும். மற்றும், இந்திரன் முடியிட்டு வணங்கிய சேவடியினையுடைய அருகன் அருளிய ஆகமத்தைத் தவறாமற் கைக்கொண்டொழுகும் முனிவர்கள் உறைவதனாற், காமத்தையெழுப்பும் இசையொன்று நீங்கலாகப் பிற வொலிகளெலாம் நிறைந்த பக்கமலையையுடையது.

ஏறிச் செலற்கரிய அம்மலையைக் கடந்து சென்றபின்னர், வயப்படுத்தவியலாத பரத்தையர் உள்ளம்போலப் பல கவர் வழிகளுந் தோன்றும். சுரும்புசூழ் சுனையும், சுனைமருங்கிலே மணிச்சிலா வட்டமும், அதன்மருங்கே ஒரு வேங்கைமரமும் கொண்டுளது ஓரிடம். அங்கே வேங்கைமரத்தின் அயலே காணப்படும் வழியே செல்க.

கைபோல் மலர்ந்த காந்தளின் மணங்கமழும் அவ்வழி முழுதும் நீந்திச் சென்று, கூரிய வேலேந்திய மத்திமதேயத்தை யாளும் மன்னனைக் காண்பாயாக! அது நினக்கு நன்மையைத்தருவது. அவ் வேந்தன் தன் மகளாகிய பாவையனையாளை நினக்குத்தந்து, 'இவ்விடத்தேயுறைக,' என்று கூறுவான். நீயும் அவ்வாறு உறையும் நாட்களில், நின்னைப் பிரிந்து வெற்றெனக் கிடந்த நந்தட்டனும் நின் தோழரும் யாவரும் அங்கே வந்து நின்னைச் சேர்வர்.

**சுதஞ்சணன் மறைமொழி தருதல்**

இங்ஙனம் நீண்ட நெறிகளும், ஒப்பற்ற காடும், போக்கற்ற அருவழிகளும், குன்றங்களும் நட்புறுதற்குரிய இடங்களும், நாடும், பொய்கையும் விளங்கக் கூறிய சுதஞ்சணன் தனக்கு நற்கதியிற் செல்லும் மறையைச் செவியிற்செப்பிய சீவகனுக்கு மூன்று மறைகளையும் அவற்றின் பயனையுஞ் செப்பினான்.

அவை: விரைந்து தொடுத்தலையுடைய மலரம்பு களைக்கொண்ட காமனும் விரும்பும் மெய்வனப்பைத் தரு வதும், பாம்பு முதலியவற்றின் நஞ்சையும், காற்று நீர் முத லியவற்றின் கொடுந்திறலையும், நோய்களையுந் தணிப்பதும் விரும்பிய யாக்கையைத் தருவதும் ஆகும்.

பிறகு, களிற்றையும் மாய்க்கும் கரிய வரைப்புலி போன்ற சீவகன் சுதஞ்சணன் கற்பித்த மூன்று மறைகளை யும் ஓதிப் பயின்றபின், வானவில்லென மிளிரும் பைந் தாரையுடைய சுதஞ்சணனையும் அவன் தேவியரையும் நோக்கி, 'இனி என் மனம்போல வருந்தாமற் செல்வேன்,' என்றான். சுதஞ்சணனும் வழிவிட்டான்.

அப்போது, மனைப்பெருங் கிழத்தியரான தத்தையை யும் குணமாலையையும் எப்போது சென்று கூடுவேன் என்று சீவகன் நினைத்தான். அதனை யுணர்ந்த தோழன் சுதஞ்சணன் நகைத்துப் 'பன்னிரு மதியின்,' என்றான். மற்றும், "பன்னிரண்டாந் திங்களிலே இராசமாபுரத்தைச் சார்ந்து, கட்டியங்காரனைக் கொன்று, உன்னுடைய சிறப்பு மிக்க தொன்மையான முடியைச்சூடி, உயர்ந்த நிலக்கிழமை பூண்டு, விழாக்கொண்டாடி, இறைவழிபாடு செய்து, பிறப் பறுத்து வீடுபெறுக!" என்றும் வாழ்த்தினான்.

பிறகு, சீவகனைத் தனியே அழைத்துச்சென்று மறை பொருளாகிய சூழ்ச்சிமிக்கனவெல்லாம் விளக்கமாக விளம் பினான். சீவகன் மகிழ்ந்து, அவனை வணங்கிப் பிறகு, தனக்குப் பணிபுரிந்த பெண்களைச் செல்லுமாறு பணித்து நின்றான்.

**சீவகன் செலவு**

**1. கதிரவன் தோற்றம்:** அப்போது, பெருமையும் இளமையுமுடைய செங்கயல்களைக் காக்குமாறு வில்லைப் பூட்டி மேலே வைத்தாற்போன்ற புருவத்தினையுங் கண் களையுமுடைய நிலமகளின் நுதலிலே இட்ட பொட்டென ஞாயிறு கடலிலே தோன்றியது. ஞாயிறு தோன்றிய

அளவிலே, அழல் பொதிந்த நீண்ட வேலினையும் அலர்ந்த தாரினையும் உடைய சீவகற்குத் தன் கழலணிந்த சேவடியாற் சந்திரோதயமென்னும் மலையைக் கடத்தல் அரிதெனக் கருதிய சுதஞ்சணன், தன்னைச் சூழநின்ற குழலினிசை போன்ற இன்சொல் மகளிரின் குழுவினின்றும் நீங்கிச் சீவகனையேந்தி நினைப்பளவிலே அம்மலையைக் கடந்து நிலத்தையடைந்தான்.

அங்கே சந்தனமும் சுரபுன்னையும் மாவுமாக வானளாவியதாய், விரிந்து தேன் ஒழுகும் கனிகள் பலவும் நிறைந்ததாயுள்ள பொழிலொன்றிலே சீவகனை விடுத்துத், 'திரும்பவுங் காண்பேனாக!' என்று தழுவிக்கொண்டு சுதஞ்சணன் சென்றான். சீவகனும் தானே செலவை மேற்கொண்டான்.

**2.** இயற்கையழகு: * அந்நிலையில், 'தோழராகியகால் அங்கேயே நிற்கவும், வாட்படையாகிய தடைமரங்களைத் தாவி நீங்கி, வளமைமிக்க நாகுகளை (தத்தையையும் குணமாலையையும்) விட்டு நீங்கித் தனியே இப்போரேறு வந்ததே' யென்றிரங்கி, அருவியாகிய கண்ணீரைச் சொரிந்து கூப்பிட்டு, மனக்கவலையால் மேனிகருகி, அசும்பு வீழ்தலாகிய உள்ள உருக்கத்துடன், ஆற்றல் மிக்க புலியன்னானுக்கு மலைகளும் அழுதன.

†பெரியோர்கட்குத் துன்பம் வந்தால், அறிவில்லாத கீழ் மக்கள் நகைத்தலைப்போல முல்லை வேங்கையினிடத்தேயிருந்து நகைத்து அப்போது எயிற்றின் அழகிலிருந்து கெட்டன. அது கண்டு காந்தள், 'அந்தோ! இது தகாது!

---

*" வாளுழலை பாய்ந்திளைய வளர்நாகிட் டினமென்னும்
தாளொழியப் போரேறு தனியே போந்த தெனவெண்ணி
நீளருவிக் கண்ணீர்வீழ்த் தலறி வண்ணங் கரிந்துருகிக்
கோளுழுவை யன்னாற்குக் குன்றமுநின் றழுதனவே."

†" மிக்கார்தம் கேட்டின்கண் மேன்மை யில்லாச் சிறியார்போல்
நக்காங்கே எயிறுடைந்த நறவ முல்லை நாள்வேங்கை ;
தக்கார்போல் கைம்மறித்த காந்தள் அந்தோ! தகாதெனவே;
தொக்கார்போல் பன்மாவும் மயிலுந் தோன்றித் துளங்கின வே

என்று கை கவித்து விலக்கின. அவ்வளவிலே சுற்றத் தாரைப் போலப் பல மாக்களும் மயிலுந் தோன்றி நடுங்கின.

*"முல்லைகளே ! நீங்கள் கொல்லையின் நடுவை யடைந்து, வேங்கையாகிய அரணைச் சேர்ந்து, தமியாரை நோக்கிச் சிறிதே நும்முளே நகைத்துப் பிறகு, பிறரறியச் சிரிப்பவர் போன்றீர்! இங்ஙனம் நகைக்கும் நும்மைப் பல் லைத் தட்டிடுவேம்," என்று போதினும் மலரினும் உள்ள தேனைச் சிந்தித் தாமும் கருகி வண்டுகள் துகைத்தன.

†இக் காட்சிகளைக் கண்ட சீவகன், 'நீ தருகின்ற இத மலர்ந்த கோதையை யாங்கள் வேண்டேம். ஆதலிற், கூந்தலைத் தொடாதே! இது பெருமைமிக்க கற்புடைய மகளிராகிய எம் இல்லம். நீ கூறும் பரத்தையரில்லத்திற்கே செல்வாயாக,' என்று ஊடும் கற்புடைய மகளிரைப் போலக், களிறுகள் ஊடல் தீர்க்கவும் தீராமல் ஊடிய பிடி கள் நிற்கும் சாரலையுங் கண்டு மகிழ்ந்து காலாலே யிதுவரை நடவாதவன் நடந்து சென்றான்.

**வேடன் தோற்றம்**

வழியில் ஒரு வேட்டுவன் எதிர்ப்பட்டான். அவன் கருமையூட்டிய இருள் துண்டத்தைப் போன்ற நிறத்தி னன். ஆழமான அளையிலே உள்ள உடும்பைப் பற்றி யிழுத்தலால் மார்பு உள்ளே ஒடுங்கியவன்; மெய்யெலாம் நிறைந்த மயிரால் கரடியைப் போன்றவன்; வாய்க்கு வெற் றிலை யறியாமையால் வாய் புலால் நாறுபவன்; ஆட்டுக் கிடாய் போன்ற குரலினையுடையவன்.

---

*கொல்லை அகடணைந்து குறும்பு சேர்ந்து தமியாரை
முல்லை முறுவலித்து நகுதிர்போலும் இனிநும்மைப்
பல்லை உகுத்திடுவம் என்று பைம்போ தலர்சிந்தித்
தொல்லை நிறங்கருகித் தும்பி பாய்ந்து துகைத்தனவே"

†"தோடேந்து பூங்கோதை வேண்டேம்; கூந்தல் தொடேல்எம்மில்
பீடேந் தரிவையரில் பெயர்கென் றூடும் மடவார்போற்
கோடேந்து குஞ்சரங்கள் தெருட்டிக் கூடா பிடிநிற்கும்
காடேந்து பூஞ்சாரல் கடந்தான் காலிற் கழலானே."

அவ்வேட்டுவன் கொடியிலே முற்றிய கிழங்கையும் தீந் தேனையும் கொழுவிய இறைச்சியையும் கள்ளையும் ஏந்திக் கொண்டு, தழையைத் துகிலாக உடுத்த பிடிபோன்ற மனைவியுடன், மான் தோலால் ஆகிய செருப்பும் வில்லும் மரவுரியும் அணிந்து வந்தான்.

அவனைக்கண்ட சீவகன், 'நீ உறைவது எம்மலையில்?' என்று வினவினான்.

"மாலைபோல வெண்மையான அருவியைச் சூடி இதோ தோன்றுகின்ற சோலை சூழ்ந்த மலையின் உச்சியிலே ஒழுங்காகப் பயிரேறிய தினைகள் கிளிகளால் எடுக்கவியலாத அளவிலே விளையும் ஒரு புனம் உள்ளது. அதற்குத் தென்மேல் மூலையிலே உள்ள குவட்டில் வாழும் வேடரில் யான் தலைவன்," என்று வேடன் விடை பகர்ந்தான்.

**சீவகன் :** நீர் வழக்கமாக உண்பது யாது?

**வேடன் :** ஆண்பன்றியுடன் முள்ளம் பன்றியையுங் கொன்று சமைத்த நிணமாகிய புழுக்கலைத் தேனாகிய நெய்யைப் பெய்து தின்போம். பிறகு, நெல்லாலாகிய இத் தொண்டிக் கள்ளையும் பருகுவோம்.

**சீவ :** ஊனுந் தேனும் கள்ளும் உண்டு உயிர்களைக் கொன்ற பாவத்தினாலே நீங்கள் இங்கே இப்போது ஈனராய்ப் பிறந்தீர்கள்! இனி இவற்றை ஒழிமின்.

**வேடன் :** கள்ளுந் தேனும் ஊனும் கைவிட்டால் யாங்கள் எங்ஙனம் பிழைப்போம்? நீ எம்முடம்புகளை வாட்ட வேண்டா; மற்றோருடம்புகளை வாட்டுவாயாக!

**சீவ :** ஊனைச் சுவைத்து, உடம்பைப் பெருக்கி, நரகத்தில் நலிவது நல்லதா? ஊனைத் தின்னாமல் உடம்பை வாட்டி வானவராக வாழ்தல் நல்லதா? இவ்விரண்டினுள்ளும் நலமுடைய தொன்றை நவில்க!

**வேடன் :** ஊனைத் தின்னாமல் விட்டுவிட்டு வானவராக ஆவதே நல்லது.

சீவ : நண்பா! நீ நன்றறிந்து கூறினை. ஆகவே, இனி உயர்கதியிலே செல்வாய். அருகனுகமத்தே காணப்படு வன கொல்லா நோன்பும், ஊன் துறத்தலுமே! ஆதலின், காட்டிற் கிழங்கை யுண்டாயெனில் இன்றே இன்ப வெள் ளத்தில் ஆடுவாய். இவ் வொழுக்கம் நினக்கு இறுதியிலே பேரின்பந்தருங் கனியுமாகும். இவற்றை நினைவிலே வைப்பாயாக!

வேடன் அறிவு பெற்றான். தேனும் ஊனும் கள்ளும் முற்றும் நீக்கினன். சீவகன் மலரடியிலே வணங்கி, 'யான் என் தேன்பெய் நீள் மலையை அடைவேன்,' என்று சென்றான்.

பிறகு, சீவகன் செல்லும் போது அரக்குமாளிகை யிலே நெருப்பாற் சூழப்பெற்ற பஞ்சவர் போலக் காட்டுத் தீயால் வளைக்கப் பெற்று வருந்திய யானைத்திரளின் வருத் தத்தை (மழை பெய்வித்து) நீக்கினன்.

அங்கிருந்து நீங்கி மரகதமும் மணியுங் கலந் தொளிர்ந்து, துள்ளும் மானும் மலையாடும் உலவும் அரண பாதத்தை அடைந்தான். ஆங்கே, மறையாகிய வாய் மொழி யினையுடைய குற்றமற்ற இந்திரர் வணங்கும் புகழையுடைய மாதவர்களின் அடிமலரை வணங்கினன். பின்னர், முனி வரும் தமக்கு வரும் மூப்பினைக் கெடுக்க ஆங்கே இன்பக் கனியை நுகரும் வானவரும் வழிபட்டேத்தும் இயல் பாகவே பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிய அருகப் பெரு மான் கோயிலை வலங்கொண்டு, மேருவைச் சூழும் இள ஞாயிறு போலச் சென்றான்.

குளிர்ந்த பொய்கை மலர்களையும், தாழ்ந்த கொம்புக ளிடை மலர்ந்த போதுகளையும், வளமிக்க வான்கொடி களிலே பூத்த பூக்களையும் தேன் பிலிற்றக் கைகளில் ஏந்தி அருகன் திருவடிகளிலே யிட்டு வணங்கினன். அப்பெரு மானின் இயலைக்கொண்ட பாட்டுக்களை இன்னிசையுடன் பாடினன்.

## தேவபாணிக் கொச்சக ஒரு போத

"ஆதி வேதம் பயந்தோய் நீ! அலர்பெய்ம் மாரி அமைந்தோய் நீ!
நீதி நெறியை உணர்ந்தோய் நீ! நிகரில் காட்சிக் கிறையோய் நீ!
நாத னென்னப் படுவோய் நீ! நவைசெய் பிறவிக் கடலகத்துன்
பாத கமலந் தொழுவேங்கள் பசையாப் பவிழப் பணியாயே!"

"இன்னாப் பிறவி யிகந்தோய் நீ! இணையி லின்ப முடையோய் நீ!
மன்னா வுலக மறுத்தோய் நீ! வரம்பில் காட்சிக் கிறையோய் நீ!
பொன்னா ரிஞ்சிப் புகழ்வேந்தே! பொறியின் வேட்கைக் கடலழுந்தி
ஒன்னா வினையின் உழல்வேங்கள் உயப்போம் வண்ணம் உரையாயே"

"உலக மூன்றும் உடையோய் நீ! ஒண்பொன் இஞ்சி எயிலோய் நீ!
திலக மாய திறலோய் நீ! தேவ ரேத்தப் படுவோய் நீ!
அலகை யில்லாக் குணக்கடலே! ஆரும் அறியப் படாயாதி!
கொலையில் ஆழி வலனுயர்த்த குளிர்முக் குடையின் நிழலோய் நீ!"

அருகனை வாழ்த்திய பிறகு சாரணரை வாழ்த்தினான்:

## சாரணரை வாழ்த்துதல்

"அடியுலக மேத்தி அலர்மாரி தூவ
முடியுலக மூர்த்தி உறநிமிர்ந்தோன் யாரே?
முடியுலக மூர்த்தி உறநிமிர்ந்தோன் மூன்று
கடிமதிலுங் கட்டழித்த காவலன் நீ யன்றே!"

"முரணவிய வென்றுலக மூன்றினையு மூன்றில்
தரணிமேல் தந்தளித்த தத்துவன்றான் யாரே?
தரணிமேல் தந்தளித்தான் தண்மதிபோல் நேமி
அரணுலகிற் காய அறிவரன் நீ யன்றே!"

"தீரா வினை தீர்த்துத் தீர்த்தந் தெரிந்துய்த்து
வாராக் கதியுரைத்த வாமன்றான் யாரே
வாராக் கதியுரைத்த வாமன் மலர்ததைந்த
காரார் பூம்பிண்டிக் கடவுணீ யன்றே."

அரண பாதத்தில் அருகன் சினகரம் வணங்கி, ஆங்குள்ள சாரணர் திருவடியைப் புகழ்ந்த பிறகு, இயக்கியின் விருந்தை யேற்றுப் பல்லவநாட்டை அடைந்தான்.

**பல்லவ நாட்டிற் சந்திராப நகர்**

ஆங்கே, மதுவைப் பருகி மயங்கிய நோக்குடைய உழவர் மங்கையர் இருவர் கழனியிற் களை பறித்துக்கொண்டிருந்தனர். அவர்களைத் தலைநகருக்கு வழி வினவி யறிந்து கொண்டு சென்றான். பல்லவ நாட்டின் தலைநகர் சந்திராபம் என்பது. அன்னமும் அகன்றில் என்னும் பறவையும் அணி செயும் அகழி சூழ்ந்து, பாம்புரியுடன் கூடிய பழைமை மிக்க மதில் நிலமகளணிந்த பூண் போல அழகு செய்யும் அந்நகரைச் சீவகன் நெருங்கினதும், விருந்தினனை வரவேற்கும் விருப்புடைய அந்நகரரசனின் பணியாட்கள் நிறைகுடமும் மலரும் ஏந்தி நீராட்டி வணங்கி வரவேற்றனர்.

**நாடகக் காட்சி**

சந்தன மரங்கள் சூழ்ந்து சண்பகம் மலர்ந்த ஒரு பொழிலில் உலோகமாபாலன் என்னும் அரசகுமரன்—இந்திரன் மகன் சயந்தன் போல—இனிதமர்ந்திருந்தான். நடன மகளிர் பலர் கூடி அழகிய அரங்கினை யணிந்து நாடகம் ஒன்றை அரசகுமரன் காண நடத்திக்கொண்டிருந்தனர்.

நடிக்கும் அழகி தேசிகப்பாவை தன்னுடைய கூந்தலை எடுத்து முடித்து, மலர்மாலையும் ஒளிவிடும் பொற்பட்டமுங் குண்டலமும் முத்துமாலையும் அணிந்து, மேகலையும் சிலம்பும் சிலம்ப, அரம்பையெனை ஆடினாள். தண்ணுமையும், முழவும் யாழும் குழலும் இசைக்க ஆடும் அவளுடைய அழகிய கண்புருவம், கை, கால், மேகலை, இடை, ஒள்ளிய நுதல் ஆகிய கூத்திற் கியைந்த அவள் வடிவை நோக்கிய ஆடவர் வெண்ணெய் தீயுற்றாற் போல மெலிந்தனர்.

பாடலும் ஆடலும் கருவியும் ஆகிய மூன்றும் ஒன்றி நின்று, 'குழைந்திழைந் தமிர்தம் ஊற'த் தன்னுடைய கண்ணம்புகளினால் ஆடவர் உள்ளங் கிழியுமாறு உருவ எய்து தானணிந்த கலவையழிய ஆடினதைக் கண்ட சீவகன் தானும் அவர்களில் ஒருவனாக அமர்ந்தான்.

ஒளி பொருந்திய நெற்றிப்பட்டம் மின்ன, வலக்காதிலணிந்த குழை ஒளிவிட, அணிகலன் மார்பிலே பிறழ, இடக்காதிலே அணிந்த தோடு அசைய, வளைக் கைகளால் வட்டணை போக்கி ஒல்கி ஆடிய அவள் சீவகனைக் கண்டாள். கவிஞரால் புகழ வியலாத காளையின் அழகைக் கண்களால் முகந்து பருகிய அவள் தன்னை மறந்தாள். கண் முதலிய வற்றாலியற்றப்படும் தாள அறுதிகள் நீங்கின. இமையால் நோக்கியதனாற் கண்ணீர் பெருகி முலைமீது சிறு திவலைகளாக விழுந்தன.

சிறிது தெளிந்த அவள் தன் கண்ணீரை உலோக பாலன் காண்பதற் கஞ்சி, கண்ணீருடன் கலந்து விழுமாறு முத்து வடத்தைத் தன் முலைகளால் நெருக்கி நாலை அறுத்துச் சிந்தினாள். எனினும், அணிந்த மலர்மாலை வாடும்படியாகக் காமத்தீ தலைக்கொளச் சோர்வுற்றாள்.

“இவனுக்கே என்னுள்ளம் இடமளித்தது; வேறு எவருக்கும் இதுவரை அளித்ததில்லை. என் கன்னித் தன்மையோடு முற்றிக் கனிந்து கமழும் காமமாகிய பழத்தை நுகர்வான் இவனே. இங்ஙனமிருக்கப் பொருளினாற் பரத்தையர் கற்பு உடையுமென்று கூறியவர் பொய்யரே. இக் காளையனையான் பெருஞ் சிறகுடைய மயிலில் ஊருங் கட்டழகுடைய முருகனோ? சுறவுக் கொடியுயர்த்த காமனேயோ?”

என நினைந்து நெகிழ்ந்து வருந்தி நின்றாள்.

அவள் நிலையை உலோகமாபாலன் உணர்ந்தான். ‘மலரனைய இவள் கண்கள் இமைத்திலவே! எதனைக் கண்டாள்?’ என எண்ணி அவள் கண் சென்ற வழியே தன் கண்ணைத் திருப்பிப் பார்த்தான். விடலையாகிய சீவகனைக் கண்டான்; வியந்து களித்தான். ஏவலரை அழைத்துவர விடுத்தான்: சீவகன் மேல் எல்லோருடைய கண்களும் திரும்பின.

“இவன் காமனோ? காமனெனின் கரும்பு வில்லும் மலர்க்கணைகளும் இல்லையே! இவன் அழகிய தோற்றம்

இயக்க வேந்தனுகுமென நினைக்கச் செய்கிறது! வானியங்கும் மந்திரத்தை மறந்து மானிலத்தே இயங்குகிருன் போலும்!''

என யாவரும் வியந்தனர். ஏவலர் சீவகனை உலோகமாபாலனிடம் அழைத்து வந்தனர். அவன் சீவகனை எதிர்கொண்டு மகிழ்வன கூறி, 'நீ என் விளையாட்டுத் தோழனுகுக!' என வரவேற்றுத் தன்னருகிலே யிருத்திக் கொண்டனன்.

இங்ஙனம் இருவரும் ஒருவராகி ஓரிடத்தில் இருந்த அளவிலே தேசிகப்பாவை, 'இனி இவனைப் பெற்றேம்,' என மகிழ்ந்து, உணர்ச்சி பெற்று, நீங்கின மெய்ப்பாடுகளைத் தவருமல் முன்போலக் கொண்டு கடிமலர்க் கண்களாலும் விற்புருவத்தாலுங் கலக்கி யாடினுள்.

**பதுமையைப் பாம்பு தீண்டியது**

இனி, ஊன் கமழும் வேலான் ஒருவன் ஓடிவந்து, விண்மீனென வொளிரும் மணிகள் பரவிய மார்பினையுடைய உலோகமாபாலனைத் தொழுது, 'பதுமையைப் பாம்பு தீண்டியது,' என இடியோசை போலப் படும்படி கூறினன். கேட்ட உலோகமாபாலன் வருந்திச் சீவகனை நோக்கி, 'நீ இவ்விடத்தே யிரு,' எனக் கூறி, விரைந்து சென்ருன்.

செல்லும்போதே வந்தவனை நோக்கி, 'எங்ஙனம் பாம்பு கடித்தது?' என வினவினுன்.

"நம் நங்கை பொதியிற் சோலையிற் குழவியாகிய முல்லை மௌவல் சந்தனம் இமயச்சாரற் கற்பூரம் தீம்பூ ஆகிய இவற்றைச் சந்திரகாந்தக் கல்லினின்றும் வந்த நீரையுந் தேனையுங் கலந்து சொரிந்து மலர்மாலைகளை வெயில் மறைக்கும் மூட்டாகப் பெய்து பிறையென வளர்த்து வந்தாள். மற்றும், அவற்றிற் சிறப்பாகப் பவளத்தைக் கொள்கொம்பாக நட்டுப் பொன்வேலி வளைத்து முத்து மணற் பரப்பித் தன் கையாலே திலோத்தமை யெனுந் தன்

நற்றாய் பெயரிட்டு முல்லையை வளர்த்தாள். அது மகளிர் முறுவலென அரும்பியது. கண்ட பணிப்பெண் ஒருத்தி கோதை சிந்த ஓடிவந்து, 'பூங்கொம்பு போல்வாய்! நங்கை அலர்ந்தனள்! வாழ்க!' என்றனள்.

அம்பை வென்ற பதுமை பொன்னை வாரி யாவருக்கும் அளித்துக் களிப்பினை யாவருக்கும் அறிவித்துக் கம்பல மென மலர்ந்த மலர்க்காவினை யடைந்தாள். பொழிலிலே விளையாடினாள். குரவமரம் நிறைய மலர்ந்து வண்டுந் தேனும் பாட நிழலைச் செய்திருந்ததைக் கண்டாள்; மகிழ்ந்தாள். 'இவள் என் தோழி,' என்று அம் மரத்தைத் தழுவி மலரொன்றைக் கொய்யக் கையை நீட்டினாள். அம் மரத்திலே (முதிர்ந்ததனால்) அளவிலே குறைந்த அழகிய கோழிப்பாம்பொன்று, இவள் முகத்தை, 'நாம் தீண்டுதற் குரிய திங்கள் இதுவன்று. இது மறுவிலா வல்லொளி வீசுகிறது,' என எண்ணினாற்போல் முகத்திலே தொடாமற் கையிலே தீண்டியது. உடனே பதுமை, 'அம்மவோ!' என நடுங்கி அலறித் திரும்பினாள்.

அவள் தோழி பதுமையை நோக்கி, 'அம்மைத் திலோத்தமையார் வந்தாரோ?' என வினவியவாறு தழுவினாள். பதுமை சோர்வுடன், "பூங்கொடியே! எந்தை தனபதியை வணங்கி, எம் முன்னவன் உலோகமாபாலனைத் தொழுது, அன்னைத் திலோத்தமையைத் தழுவி வணங்கி, மற்றைய தாயரையும் தழுவிக்கொண்டு, 'எப்போதும் என்னை நினை'யெனக் கூறி மின்னை மின் தழுவுவதுபோலத் தழுவிக்கொண்டு நிலத்திலே சோர்ந்து விழுந்தாள்."

உலோகமாபாலன் பதைப்புடன் கடுகிச்சென்று தங்கையை நோக்கினான். தனக்குத் தெரிந்தவாறு நஞ்சினை நீக்கும் மறையை நவின்றான். பல மருந்துகளைக் கொடுத்தான். அங்குள்ளோரும் தமக்குத் தெரிந்தவற்றைச் செய்தனர். எனினும், அவளுக்கு நலனொன்றும் விளையாமல் உயிருண்டோ இல்லையோ என்னுமாறு நஞ்சு விரைந்து பரவியது.

மறுவினைப் பொருந்திய திங்களை யடுகின்ற பகை கொண்ட நாகம் ஒன்று, 'இது நாம் தீண்டத்தக்கதாயன்றி மறுவிலாத் திங்களாயிருந்தது,' என எண்ணி அங்கை யிலே நங்கையைத் தீண்டிவிட்டது. "இந்நஞ்சினைத் தீர்த்து விடுவோர்க்கு மன்னன் நாடும் பொன்னும் நல்கிப் பதுமை யையும் பரிந்தளிப்பான்,"

என்று முரசறையப்பெற்றது.

நஞ்சு தீர்ப்போரும் வந்தனர். அவர்கள், 'இது மண்டலி', 'இது அரச நாகம்', 'கடித்தது நாகப்பாம்பு', 'வளியும் பித்தும் ஐயினும் மிக்கன; இனி உயிர் மீளாது', 'இவ்விஞ்சை பெருந்துன்பையும் அறுக்குமென்று கருதி அளவிறந்து பலவுஞ் செய்தேம்; அவற்றை இது கேட்ட தில்லையே!' 'கையிரண்டு, காலிரண்டு, நெற்றி ஆகிய ஐந்து சிரைகளையும் விடுவோம்', 'சிருங்கியைத் தீற்று வோம்', உயிருண்மை அறியப் புனலில் இடுவோம்; தீயாற் சுட்டுப்பார்ப்போம்,' 'இரையென எண்ணி வருந்துமாறு கவ்வி என்பிலேபடக் கடித்ததுபோலும்', 'பேசாதிருங் கள்; அணங்குக்குக் குடலிலே குருதிநீங்கியது; இனி அவள் உய்யாள்,' எனப் பலவாறு தத்தமக்குத் தோன்றியபடி கூறிக்கொண்டிருந்தனர்.

மற்றும் சிலர் கையினுங் கழுத்தினுந் தடைமரத்தை வைப்பர். சிலர் எரியும் விளக்கை உறுப்புக்களிலே வைப் பர். சிலர் எல்லாத் திசைகளையும் நோக்கித் தெய்வங் களைத் தொழுதுநிற்பர். சிலர், 'இது காரணத்தான் அரச னும் இறந்துபடின் உலகு இன்னே கவிழும்,' என்பார்.

இங்ஙனம் மடைதிறந்தவெள்ளமென மக்கள் கூட்டம் அரண்மனையெங்கும் பெருகியது.

மற்றும், எரியிலே வெந்த பொற்பூவினையும் பொன் னாலினையும் அரசனிடம் பெற்ற—மந்திரத்தினும் மறையி னும் வல்லவரான—குற்றமற்ற மந்திரத்தாலே வானத் திலே ஆடையை நிறுத்தும் வல்லமையுடையவரான—அந்

தணர் ஏழாயிரவர் கையைத் தட்டிப், 'பாவையனையாள் இப் பொழுது துன்பந் தீர்ந்தெழுக!' என்று கூறினர்.

'பாம்பு எழுங்காலத்தே பாம்பு தீண்டினால் (கிரகண காலத்தே) இறைவனாலும் இந் நஞ்சைத் தீர்க்கமுடியாது. இன்று அங்ஙனமின்றிப் பதுமை பிறந்தநாளாகும். மற்றும், ஞாயிறு நடுவே கவிப்பாக இருக்கும் (நண்பகல்) நேரமாகும்,' என்று கணி கூறினான். உடனே கல்லென்னும் ஒலியுடன் அழுகையெழுந்தது.

கணி அரசனை நோக்கி, 'அரசே! இன்று நங்கை யிறவாள். மிதுன ராசியில் தேனரவம் தங்கும் கொங்கு அலர் கோங்கின் உச்சியில் குவிந்த அரும்பின்மேல் ஆந்தையிருந்து பாடுகின்றது. இதனை, நீயும் கேட்பாயாக. இதனால், நம்முடைய இடுக்கணை நீக்கும் இளைஞன் ஒருவன் இங்குளன்,' என்றும் தெளிந்து கூறினான்.

அதுகேட்ட மன்னன் மகன் உலோகமாபாலன் மகிழ்ச்சியாற் கடகம் சிந்தத் தூணின்மேற் கைகொண்டு தாக்கி, 'இன்னும் ஒரு சூழ்ச்சியுள்ளது. என்னொடு அங்கேயிருந்த இளைஞனை அழைத்து வம்மின்,' என்றுரைத்தான். அவர்களும் ஓடிச் சீவகனை அழைத்துவந்தனர். சீவகன் அந்நிலையைக் கண்டான்.

**சீவகன் பதுமைக்கு நஞ்சு தீர்த்தல்**

பறவைமா நாகம் (கோழிப் பாம்பு) பல வீழ்ந்து துடிப்பனபோலக் கூனுங்குறளும் விழுந்தலறுவதையும், மயில் தன் சிறகை நன்கு பரப்பி மயங்கிக்கிடப்பனபோலத் தோழியர் கிடப்பதையும், பசு தன் கன்றையிழந்தன போலச் செவிலியர் அழுவதையுங் கண்ட சீவகன், 'இவர்களுற்றது கொடிது! அந்தோ!' என்றிரங்கினான்.

வருத்தத்தினாலே தாக்கப்பெற்ற சிங்கம்போல உயங்கிக்கிடந்த உலோகமாபாலன் சீவகனை நோக்கி, 'மன்னனாகிய வளமிகுநிலத்தே நின் சிறப்புறு புகழை விதைத்து, கட்பினை விளைவிக்க வல்லை. ஆதலினால், இன்னே மணமலர்க்கொம்பனைய இவளை நோக்குக!'' என வேண்டினான்.

சீவகன், 'நீ வருந்தவேண்டா. புற்றிடையுள்ள நாகம் மீளாதவாறு கடித்ததாயினும், இவளுக்கு இடையூறு செய்ய வானவர் சூழ்ந்த நிலையேயெனினும், இவளுக்குச் சாவில்லை,' என்றான்.

மற்றும், சீவகன் கூறுவான்:

"நஞ்சு மிகுதியாகித் தாங்கவியலாமல் ஒன்றினைக் கவ்விச் சிந்த எண்ணுதல், அச்சம், இரையென்று கருதுதல், பெருஞ்சீற்றம், பெண் பாம்புடன் கூடியிருக்குங் காலம், மனக்களி மிகுந்தாடல், தான் வெளியே செல்லுங் காலம், தனக்குப் பிழைசெய்தல் என்னும் எட்டுக் காரணங் களாலே பாம்பு கடிக்கும். அங்ஙனங் கடிக்கும்போது தட்டம் அதட்டம் என்கிற எயிறுகளிலே உண்டான நஞ்சைக் கடித்த வாயிலே உமிழுமாயின் உயிரைப் பிழிந்துண்ணும். அவற்றை யொழிந்த பற்களாற் கடித்து நஞ்சைக் காலுமாயின் வருத்தத்தைமட்டுமே உண்டாக்கும்.

பசும்பாலன்னம்போல் நாறுமெனின் கடித்த பாம்பு அந்தணநாகம். நந்தியாவட்டம் மணக்குமேல் அது அரசநாகம்! தாழை கமழுமேல் வணிகப் பாம்பாகும்! அரிதாரம் வீசுமேல் வேளாள அரவாகும்!

கடித்த வாயை விரலாலே தேய்த்தால், அது மாநாகங் கொண்டதாயின் கொப்புளங் கொள்ளும்; தெண்மட்டுப் போல நீர் பாயுமாயின் மண்டலிப்பகுதி; இது கொப்புள் கோடலின் இவளைக் கடித்த கன்னிப்பாம்பு அரசர் சாதியே யாகும். தைத்தழுந்தின பற்களும் யமதூதி யொழிந்த காளி, காளாத்திரி, யமன் என்னும் மூன்றுமே. உதயமும் கன்னியே. ஆதலின் யான் முன் கூறியவாறு இறத்தல் இல்லை."

இங்ஙனந் தெளிவுறுத்திய குன்றிரண்டனைய தோளானாகிய சீவகன் கொழுவிய குவளைமலர்கொண்டு மூன்றுருவோதி உறக்கத்திடத்து மயில்போன்ற பதுமையை அண்மி அவள் முடியிலே அழுத்தித் திரும்பிவந்து நின்று இரண்டுருவோதி அவள் முகத்தை நேரே நோக்கினான்.

அப்போது, நீண்ட கடலிடைப் பிறந்த அழகிய வெங் கதிர் ஞாயிறு வந்தவுடனே இருளுடைந்தாற்போல அவளு டம்பில் இருந்த நஞ்சு நீங்கியது. நீங்கின அளவிலே சீவ கன் அவள் அழகைக் கண்களாற் பருகுகின்றான். அவ் வொண்டொடியாளும் குடங்கையினும் பெரிய தன் கண்க ளாலே அவனை நோக்கினாள்.

**காதல் நோக்கம்**

அவ்வாறு நோக்கினவளுடைய நிறையும் நாணும் மாமையும் அழகும் வளையும் விரைவில் விலகின. பொன் னிறப் பசலையிலே முழுகினாள். முருகன் அமருட்செலுத் திய ஒரு வேல் திரண்டாலனைய கண்ணாள் மெய்யிலே காமன் அம்பெலாம் முழுகின. எனவே, காமனுக்கு அம் பறாத்தூணியாயினாள்.

ஆகவே, ஏவல் கொள்ளுந் தொழிலையுடைய ஐம் பொறியை அடக்கியாளும் ஒருவனது உடம்பெனும் புற் றிலே வாழ்கின்ற வேட்கையாகிய நாகத்தினது நோக்கம் என்னும் கூரிய பற்களின் நஞ்சினாலே வாட்கண்ணினை யுடையாள் மீண்டும் பற்றப்பட்டாள்.

மணங்கமழுங் கோதையராகிய தோழியரும் செவிலி யரும், 'மடவாள் மயங்கி வெய்துயிர்த்தாள். இனி, இது வேட்கையே' என அறிந்து ஒன்றுகூடி, 'களிறனையாய்! வாழ்க! நீ இவளைத் தீண்டிப் போக்கினால் நஞ்சறும்' என்று வேண்டினர்.

சீவகனும், காதலித்தோரைக் 'கண்ணிற் கண்டாலும், நன் மொழியைக் கேட்பினும், அவர்களால் தீண்டப் பெறி னும் நல்லுயிர் நிற்கும்' என வுன்னிப் பைந்தொடியாளின் மெய்யெலாம் தண்ணெனச் சாந்தம் தடவினாலொப்பத் தடவிக் கொடுத்தான்.

அப்போது, பிறர் கைப்படா அமிர்தமாகிய அஞ் சொற் பதுமை மற்ற மடவார்களின் கண்கள் காணாத வாறு, தன் அன்புற்ற நோக்கத்தைக்கொண்டு சீவக வள் ளலைச் சுற்றித் தப்பாமற் கட்டினாள்.

**பதுமையைச் சார்ந்த மாதரார் மகிழ்ச்சி.**

அங்கிருந்த அழகிய ஒளிமிகு முறுவலையுஞ் செவ் வாயையும் இன் மொழியையுமுடைய மாதரார் பலரும், 'இவன் விஞ்சையர் வீரன்' 'வானவர் வள்ளல்' 'சென்ற வுயிரை மீட்ட இவனுக்கிணையிவனே' 'முகிலுறங்கும் மதில் சூழ்ந்த இம்மூதூரின் அரசன் நாளைக்கு இத்தகைய வேலி னுக்கே பதுமையை நல்கும்.' 'இவனுடைய மார்பிலே திளைக்கினன்றோ பெண் பிறப்பினிதாகும்?' 'இவனைத் தழுவும் பேறுபெற்ற மகளிர் யாவரோ?' 'நாமும் இன்று நம் கருங்கண்களாற் காமனைக் கண்டோம்!' என்று தத்த மக்குத் தோன்றியவாறே கூறிக் கூறி மயங்கினர்.

பின்னர் மன்னன் ஏவலால் சீவகனை வாழ்த்தி யழைத் துச் சென்று மணமிகுநெய்யைப் பூசி, நறுநீராற் குளிப் பாட்டிப் பொன்னிறச் செப்பிலே துகிலையுஞ் சாந்தையும் நறும்புகையையும் பூவையும் அணிகலன்களையும் ஏந்தி நின்று நலம்பெற அணிந்து கொள்ளச் செய்தனர். சீவகன் அவற்றை அணிந்து மணிக்குமிழ் கொண்ட மரஅடியைக் காலிலே தொட்டுச் சென்று, மாலைகள் நாற்றிய அரும் பெறற் கூடமொன்றை அடைந்தான். மகளிர் பொற் கலங்களைப் பரப்பினர்.

கலம் பரப்பிய பின்னர் பணிமகளிர் கரகத்திலுள்ள நீரினாற் சீவகன் அடிகளைக் கழுவினர். சீவகனும் மகிழ் வுடன் வாய்கழுவி, இனிய இருக்கையிலே அமர்ந்து இனி தின் உண்டான். பிறகு, பணிமகளிர் மணநீரும் பொடியும் ஏந்த, அவற்றால் வாயும் கையும் கழுவுந் தொழிலை முடித் துக்கொண்டு அங்கையால் மும்முறை நீர்பருகி, மும்முறை வாயைத் துடைத்து, விரலைக் கண் முதலிய உறுப்புக் களாலே தீண்டி, ஆடையால் அங்கையைத் துடைத்து வீற்றிருந்தான்.

பிறகு, பொன்னாற் செய்த அடைப்பையிற் பாக்கும் வெற்றிலையும் வந்தன. அவற்றைக் கழல்வீரன் பெற்று வாயிற் கொண்டிருந்தான். அரசன் அவனருகில் அமர்ந்து,

அவன்கலைகளை யெல்லாம் விரும்பிக்கேட்டு, இவனுக்கு நிகர் இவ்வுலகிலில்லையென அறிந்தான்.

**காதலர் கலக்கம்**

அவ்வளவிலே ஞாயிறுபட்டது. இருள்வந்தது. அவ் விருளை மணியும் விளக்கும் நீக்கின. பலவகை இனிய இயங்களும் ஆர்த்தன. சீவகன் தனித்தார்க்குப் பொறுத் தற்கரிய இன்பம் பொங்கும் அணைமீது படுத்தான். அவ னுள்ளமும் காமத்தாலே வருந்தியது.

"அவள் கண்கள் யான் நோக்கின நோக்கைப் பொறுதே நிலத்தை நோக்கின. அவளுடைய குறிக் கொண்டு நோக்காத நோக்கம் என்னுயிரை அலைக்கின்றது! அவளுடைய நுதலோ, வேலனைய கண்ணோ, மடநோக்கோ, காதலைக் காட்டும் மொழியோ யாதோ காமத்தை மிகப் பண்ணுகின்றது என்பதை அறிகிலேனே!"

இங்ஙனம் இவன் வருந்தினன். பதுமையும் கயற் கண் மடந்தையர் கைதொழச் சென்று காதலருடன் கூடி யோர்க்குப் பயன்தரும் அணையிலே தெய்வச் சிற்பியிழைத்த பாவைபோல அமர்ந்தாள்.

"ஒளி பொருந்திய வெண்மதியும் பனைமடலில் உள்ள அன்றிலும் வெள்ளேற்றின் அனலிலே தாழும் மணியின் ஓசையும் பகைக்கும் மாலைப்போதும் வருத்தும் ஆம்பற் குழலும் பொங்கும் அழல்போற் சுடுகின்றன; அதனால், அன்று சாகா அமிர்தைவிரும்பி அடைந்த வானவரும் அசுரரும், அறிவினாலே ஆராய்ந்து மந்தரமலை மத்தாகக் கொண்டு நெறிப்படக் கடைந்திட்ட பாற்கடல் மறுகினாற் போல என் நெஞ்சம் மறுகுகின்றது! இவ்வாறு கலங் கும்படி என்னுளத்தைப் பிணித்து நிறையைக் கைக் கொண்ட கள்வன் கருப்புவில்லும் மலர்க்கணையுங்கொண்ட காமனோ, மணங்கமழுந் தாமரைமலர்மீது தோன்றிய குன்றுதோறாடும் முருகனோ, அறியேன். இல்லுறை அணங் குகளே! நீவிர் அறிந்தால் உரைமின்! உரைத்திலிராயினும்

என்திக்கற்ற உயிர், கடைந்த தூண்போன்ற தன் அழகிய தோள்களால் ஆரத்தழுவினன் போலத் தடவி என் உயிரை மீட்டவன் இன்னும் அருளுவனே என்று அவனிடத்தே ஆகின்றது!"

இவ்வாறு பிதற்றிப் பூமலர்ந்த சேக்கையிலே தூங்க விட்ட மலர்மாலைகளை வாட்டும் அத்தகைய வெய்ய மூச்சினைவிட்டு, வெண்ணெயை வெங்கனன் மிசை வைத்தாற் போல உளம் நைந்துருகினள். எனினும், அவன் அரண்மனையிலேயே யிருத்தலின் அடையலாமென்னும் எண்ணத்தாலே உயிர்தாங்கினள். அப்பேதைக்குத் தன் கண் தந்த நோயினால் இராப்பொழுதின் அளவு ஓராண்டாக நீண்டு காட்டியது.

**காதற் கூட்டம்**

இரவுங் கழிந்தது. இரவெலாம் பதுமை வருந்தியதை ஆற்றாத செவிலியுந் தோழியும், 'இவள் வருத்தம் நீங்க யாது செய்வோம்?' என ஆராய்ந்தனர். அவனை நேற்றுப் பொழிலிலே எதிர்ப்பட்ட இடத்தைக் காண்டலும் அவனைக் காண்பது போலாதலின், அரசன் காய்ந்தாலும் இவள் பூம்பொழிலிற் சென்று விளையாடுதலே தக்கது,' என்று நினைத்தனர். எனவே, எழுதிய பூங்கொம்பனையாராகிய அவர்கள் அவளை நுண்ணிடை வருந்துமாறு பருத்த மார்பிடையே குங்குமக்கலவையை அப்பி, முத்துமாலை யணிந்தனர்; கோதையையுங் கண்ணியையுஞ் சூட்டினர். பிறகு, ஆயத்துடன் பொழிலுக்குப் போக்கினர். ஆயமும் மயில் போற் குழுமிவந்து தொழுது கூடப்போந்தது. பொழில் அப்போது பேரழகுடன் காணப்பெற்றது.

பதுமையுடன் வந்த ஆயத்தார் அலங்கல் தொடுப்பார்; அலர்ந்த மலரைக் கொய்வார்; செய்மலையருகே சென்று எதிரொலி கேட்குமாறு கூவுவார்; சுனையிலே நீர் கலங்கப் பாய்ந்தாடுவார்; விளக்கமுறும் பாவைகட்குக் காதன் மணம் புரிவிப்பார்; ஊசல் ஆடுவார்; ஒள்ளிய கழங்காடுவார்; பந்துகொண்டாடுவார். இங்ஙனம் அவர்கள் பிரிந்து எத்திசையினும் போயினர்.

இனி, முருகு கமழும் குழலாள் பதுமையின் உருகிய நோக்கினால் உள்ளங்கிழிந்து வெதும்பி, அவளை யெதிர்ப் பட்ட இடத்தைக் கண்டேனுந் தணியலாம் எனும் எண்ணத் துடன் ஒளிவிடும் வேலேந்திய சீவகன் சென்றனன். ஆங்கே மயிலின் ஆடலும் மந்தியின் ஊடலும் குயிலின் பாடலும் கூடி மிகுந்து, வெயில்படாத வெள்ளிய மணல் நிறைந்த தண்ணிய நிழலையுடைய மாதவிப் பந்தரொன் றைச் சேர்ந்தான்.

அங்கே, சண்பகமலர்க்கோதை போன்ற நறுமணங் கமழும் அழகிய மேனியினாள் தன் காதலனை நினைந்து நின்றாள். அவள் காதிலே கடிப்பிணை, கையிலே தண்ணிய கழுநீர்மலர், மார்பிலே முத்துவடமும் பொன்மாலையும் என எளிய ஒப்பனையுடையவளாகவே காணப்பெற்றாள். காமநோயுடன் இருப்பதால் இங்ஙனம் நொய்தாகவே அணிந்தனர்.

விண்ணை மறைத்து, மலராலே வேயப்பெற்றுக் கண்ணை மறைக்கும் இருண்ட மாதவிப் பொழிலிலே தனியே நின்ற பதுமையின் மாமைநிறம்—கறந்தபாலிற் குற்றமற்ற நீலமணி கிடந்தால் அது நிறம் மிகுந்து தனது நீர்மைகெட்ட தைப்போல—மாதவி மலர்மேற்பட்டு ஒளிவிடுதலின் இவள் யாரோ என்று ஆராய்ச்சியுடன் நோக்கினான்.

"மணமிகுங் கோலமுடைய இவ்வளைத்தோளி மலை யில் வாழும் அரமகளோ? வளைந்த பெரிய மிகுநீரை யுடைய கடலணங்கோ? தேன்கமழுந் தாமரைத்திருவோ? புகழ்ந்து கூறத்தகும் இனிய சாயலையுடைய இயக்கியோ? இவள் யார்?"

என ஐயுற்றான். பிறகு, 'மாலைகள் வாடின; வாளனைய கண்கள் இமைத்தன; அடிகளும் நிலத்திலே தோய்ந் தன; ஆதலால், இவ்விடத்து நின்றவள் வளைத்தோளியாகிய அழகுமிக்க பதுமையே,' எனத் தெளிந்தான்.

எனவே, "யாழையுடைய கந்தருவர் அமைத்த இனிய மணம் நாடக வழக்கும் உலகவழக்கும் பொருந்திய தமி

ழின் அகப்பொருள். அதுவும் நமக்காம் மெய்ப்பொருளே. ஆதலின், இந்திரகோவமெனச் சிவந்த மெல்லிய சிற்றடியையுடைய பூங்கொம்பனாள் நிற்கின்ற இம்மலர்க்காவிலே யானுஞ்சென்று அவளைக் கூடுவேன்,'' என்று துணிந்தான்.

சீவகன் பதுமையை அணுகின அளவிலே அவளைப் பற்றிநின்ற நாணம் விலகியது. கல்லனைய தோளவனுக்குரிய பேருணர்வு எல்லை கடந்தது. எனவே, இருவருங் கலந்தனர். கூட்டத்தின் பிறகு, பதுமையின் இரு கண்களும் மதர்த்தன. மூங்கிலெனப் பருத்த தோளிலே வளைகள் கழலாமல் நின்றன. மாமைநிறம் வந்துசேர்ந்தது. மெய்யிற் றிமிர்ந்த சுண்ணமுங் குங்குமமுங் கலந்தன. சீவகனால் அணிசெயப்பட்ட பூம்பட்டும் அரையிலே அணியப் பெற்றுத் திகழ்ந்தது.

**நயப்புரைத்தல்**

சீவகன் பதுமையின் நலத்தைப் பாராட்டக் கருதினன்: "குவளை மலரணிந்த இக் கொடுங்குழையாளின் கூந்தலிலே சுழலும் வண்டுகளே! மென்மையான கொத்துக்களையுடைய வெள்ளிய தண்ணிய கொடிமுல்லைகள் இவளுடைய கூரிய முறுவலையினும் தகுதியுடையனவோ? பொன்னவள் துயிலும் என் மார்பிலே நின் கண்கள் பாய்ந்து பிளந்த பழம்புண்களை இன்று நின்மார்பிலணிந்த சாந்தல்லது மாறுபட்டுத் தீர்ப்பன வேறுண்டோ? இல்லையே,'' என்று பதுமையின் அழகை நயந்து பாராட்டினன்.

பிறகு, அவளுக்குக் கண்ணியைச் சூடிக் கரிய குழலை ஒழுங்குசெய்து, கொண்டையின் நடுவே மாலையை வளையமாகவைத்துப் புனைந்தான்! சிலம்பிலே படிந்திருந்த பூந்துகளை நீக்கினன். இன்பத்தை யூட்டி, 'நம் அன்பு திங்களும் அதிலேயுள்ள முயலும்போல விலகாதது,' என்று தெளிவித்தான். அவளும் தெளிந்தாள். பின்னர், 'குழலாய்! நின் தமர் வருவர். ஆகலின், இங்கே ஒளித்திடுவேன்,'

என்று கூறி, முகிலிடைக் குளித்திட்ட மின்போலத் தழை களினிடையே மறைந்தான். அணிகளிலே குளித்த அணங் கனார் பலரும் தாம் சென்ற இடங்களிலிருந்து திரும்பினர்.

பதுமையும் பூம்பொழிலிலே மின்கொடி செல்வது போல, அன்னமும் நாண அசைந்தசைந்து, சிலம்பணிந்த அடியை மெல்ல மெல்ல மலர்மேல் வைத்துச்சென்றாள். ஆனால், அவள் தன் அன்பினை அவனுக்கே துணையாக வைத்துச்சென்றாள்.

அப்பொழுது செவிலியின் மகளாய்த் தனக்கும் மூத்த வளான தவ்வையும் தோழியும் வந்து கூடினர். திங்களைச் சூழ்ந்த உடுக்களென்னுமாறு ஆயமகளிரும் வந்து குழுமி அவளுக்குப் பணிபுரிந்தனர். யாவரும் பதுமையின் நலத் தைப் பாராட்டினர். பிறகு, தழையுங் கண்ணியும் நறிய மாலையும் என அவள் விரும்புவனகொண்டு அணிசெய் தழைத்துக்கொண்டு அரண்மனையை அடைந்தனர். குகை யுள் முழங்கும் ஆற்றல்மிகும் அரியேறனைய சீவகனும் தன் தோழனை உலோகமாபாலனைக் காணச் சென்றனன்.

**திருமணம்**

நிற்க, மன்னன் தனபதி தன் அமைச்சனும் மதிதரனை நோக்கிப், 'பதுமையின் உயிரைமீட்ட ஆற்றலினனுதலா னும், உலகாளும் உயரியல்புகளுடையோனுதலானும், காமனையொத்த காளை விரும்பினுல், அவனுக்கு நம் பது மையை அழகுறக் கொடுப்போம்,' என்றான்.

அமைச்சனும், 'ஒப்பினாலும் உருவினாலும் பதுமை யைச் சீவகற்களிப்பதே தக்கது. யானும் நன்றாக ஆராய்ந் தேன். இது ஊழின்படி நிகழ்வதொன்றாகும்,' என்றுடம் பட்டான்.

'அங்ஙனமாயின் நீயே சீவகனுக் கிதனை நன்கு விளக் கிக்கூறுக,' என மன்னன் பணித்தான். அவனுஞ்சென்று தெளியச் செப்பினான். சீவகன் தெளிந்து, 'மன்னன் விருப்பம் முற்றுக,' என மறுமொழி விளம்பினான். அமைச்சன் மகிழ்ந்து வேந்தனிடம் உரைத்தான்.

பின்னர் அரசனும் உலோகமாபாலனும் திலோத்தமை யும் ஒருங்கேயிருந்து, 'அழகின் மிக்கவன்; உயிரையும் மீட்டவன். ஆதலால், நாடும் பொருளும் நல்கி மகளையுந் தருது'மென்று முரசறைந்த அவ்வுடன்பாடுகளும் ஒன்றின. மற்றும், பதுமையின் குழலிலே குவளைப்போதினை வேய்ந் தான்; அவள் மெய்யைத் தீண்டித் தடவிக்கொடுத்தான். எனவே, "உற்றூர்க்குரியர் பொற்றொடி மகளிர்,' எனக் கூறிய இயல்பும் இவனுக்கே விளைந்தது," என ஆராய்ந்து துணிந்தனர்.

பிறகு, ஏவலரையழைத்துப், 'பதுமையைச் சீவகற்கே அளித்தல் பொருத்தமுடையது; நீர் திருமணத்திற்கு வேண்டுவனவற்றை அமைத்திடுக!' எனப் பணித்தான். உடனே, முத்துமாலையைச் சல்லியுந் தூக்குமாக நாற்றி எங்கும் மலர்களை நிறைய அணிந்து, ஒரு கோயிலைப் புனைந்தனர்.

கணி விரும்பிய நாளிலே அணிசெய்த கோயிலிலே, இழையணிந்த மகளிர் மங்கல மரபினையுரைத்து, இருவர் முன்கையினும் துணிவுற்ற காப்பினைக் கட்டப் பணிமகளிர் சூழ இருந்து காத்தனர். பிறகு, களிற்றின் பிடரியிற் கொணர்ந்த மணிக்குடத்திலுள்ள நீரினாலே சீவகனைக் குளிப்பாட்டி, ஆங்கு வழங்கும் முறைப்படித் திருமணக் கோலம் புனைந்தனர். அவ்வாறே புனையப்பெற்ற பதுமை, வானவர் மகளைப் போன்றனள். புனைந்தபிறகு, கயற்கண் ணாளையுங் காமனைப்போன்றவனையுந் திருமணத்தாலே பிணித்தனர். குற்றமற்ற அவர்கள் முன்னரே பொருந்திய இயற்கைப்புணர்ச்சியி லியைந்த காதலுடன் கூடிக்களித் தனர்.

வாளையும் வேலையும் வென்று செவ்வரிபரந்த கண்ணு ளும் கழலணிந்த காளையும் நாகரைப்போல உருவொன் றெனக் கலந்தின்பம் நுகர்ந்தனர். தாமரையாளாகிய திரு மகளையும் பிணிக்கும் பதுமையின் உயர்ந்த அழகுக்கு இனியும் வேண்டுவதென்ன? அவர்கள் விளையாட்டிலே மாலைகள் அற்றன. கலைவைகள் கலைந்தன. கண்ணிகள்

கரிந்தன. மேகலை அற்றது. சிலம்புகள் ஆர்த்தன. மலர் மாலையிலிருந்த வண்டினம் பிரிந்தன. எழுமையும் பொருந்திய அன்பினராகிய அவர்கள், தழுவிய காதலாலே, நெய்த்த அகிற்புகை கமழும் மலரணையிலே காலையும் மாலையும் உட்பட நீக்கமிலராய்க் களித்தனர்.

சீவகன் நறுமணந் தருவன புனைந்தும், நாவிற் கினியன நுகர்ந்தும், இன்னிசை கேட்டும், நாடகங் கண்டும் பதுமையுடன் நாளெலாங் கூடி வைகினன்.

"அழகை யியல்பாகவுடைய என்னுயிரை யான் கண்டேன். அதன் வடிவம் இத்தகைத்து. நீண்ட கண்கள் தளிரைப்போன்ற மேனி, இவற்றுடன் குழலையும் மாலையையும் உடையதொரு கொம்பாகும். மற்றும் கூரெயிறு பிளந்து விடுமென அஞ்சிப்போலும் அதன் நாவானது ஒருநாளெலாம் ஒன்றிரண்டு மொழிகளையே மிழற்றும்."

என நலம்புனைந் துரைத்தான். நீர் நிறைந்த முகிலிடையே தோன்றிய மின்னுக் கொடிபோன்ற இடையையுடைய, மயிலனைய சாயலையுடைய, பதுமையின் நலத்தைப் பலவகையினும் புனைந்து, மட்டுத் தேறலைப் பருகி, அவள் இடை நுடங்கும்படித் தழுவி, மணமலர் மாலைகளைச் சூட்டி மகிழ்ந்தான்.

**தேசிகப் பாவை**

இங்ஙனம் நிகழும் நாட்களில் ஒருநாள், தேன்துளிக்குங் கண்ணியையும் மாலையையும் வேற்கண்களையும் ஒளிமிகு தொடியினையும் அழகிய யாழையும் உடையவளாகிய தேசிகப்பாவை, அரண்மனைப் பொழிலிலே தனிமை தீரும்படி அமர்ந்து யாழிசைத்துப் பாடிக் கொண்டிருந்தாள்.

தளிர் நெருங்கி, மலர் மல்கி, வண்டுகள் உறங்கும் அக்காவிலே சிறப்புறுஞ் சீவகனும் சென்றான். அங்கே மின்னை வென்ற இடையையும் மணங்கமழுங் கோதையையும் உடைய மயிலனைய தேசிகப் பாவையைக் கண்டான். அவள் முன்னர்க் கூத்தியற்றும் போதே இருவர் கண்களுங்

காதற் குறிப்பைப் புலப்படுத்திக் கொண்டிருந்ததனுல், இயற்கை யழகுஞ் செயற்கை ஒப்பனையும் நிறைந்த அப்பூங் கொடியின் மேனி நடுங்கி நாணமுறுமாறு தழுவினன் சீவகன். இங்ஙனங் காம மாலையைக் கலைமுறைப்படி சூட்டியதனுல் தனிமை நீங்கிய அக்கொடி சாயலெனும் புதிய தளிரை யீன்றது.

அரிவையர் விழையும் காமனை சீவகன் இவ்வாறு இரண்டு திங்கள்வரை அங்கே யிருந்தான்.

**சீவகன் பிரிவு**

இரு திங்கள் கழிந்தபின் ஒருநாள் தன் நல்வினை யைத் தேராகக் கொண்டு, நள்ளிரவில் பதுமை தன்னைத் தண்மைபெறத் தழுவியிருந்த தோள்களை மெல்ல அவள் அறியாதவாறு எடுத்து வைத்துவிட்டு, உடம்பை விட்டு நல்லுயிர் பிரிவதுபோலப் பிரிந்து, வழங்கும் நெறிவிளங்க இருளிலே சென்றுன்.

**பதுமையின் பிரிவாற்ருத் துயர்**

சிறிதுபோதிலே பதுமை கண் விழித்தாள். அருகிலே சீவகனைக் காணுமல் திடுக்கிட்டாள். உடல் உயிரை யிழந்து வருந்துவது போல வருந்தினுள். அவன் இருக்குமிடங் களைச் சேவலைத் தேடும் அன்னப் பேடெனத் தேடிச் சென்றுள். அங்குங் காணுமல் திகைத்தாள்.

"என்னைத் தழுவும் போதும் அவன் மார்பிலணிந்த பூண் என் மார்பிலே அழுந்தி வருத்துமெனக் காளையை வைது மிழற்றுவாயே! இப்போது, மனையை விட்டு நீங்கி யதை எனக்குரைத்திலையே," எனக் கிள்ளையைச் சீறினுள்.

"ஓவியக் கொடியையும் உவமையினுல் வென்ற எம் பாவை வருந்தப் படுக்கையிலிருந்து நீ போவது தகாது என நீ தடுத்திலையே!" எனப் பூவையை நோக்கிப் புலம் பினுள்.

அன்னப் பேடையைக் கண்டு, 'தனக் குவமையிலாத என் காதலனை, நீ என் பொன்னனைய பதுமையொடும்

போதல் வேண்டும், எனத் தடுத்துக் கூறிலேயே, எனப் பதறினாள்.

மயிலைக் கண்டாள். "மெய்யெலாம் உறங்கா விழிகளை யுடையாய்! நீ உண்மையாகவே அறிவாய். என் காதலன் சென்ற வழியைக் காட்டுதி," எனக் கைகூப்பித் தொழுதாள்.

ஒளிவிடும் விளக்கினிடஞ் சென்றாள். "நல்ல பொருள்களைக் கண்ணுறக் காட்டுவை. நீ செம்மையுடையை; தூயை ஆதலால், உலவும் என்னுயிர் எவ்விடத்தே ஒளித்தது? அதனை எனக்கு விளக்குவாய்," என வேண்டினாள்.

அது விளக்காமையின், "அவாவின் மிகுதியாற் செரிக்காதென்றும் நினையாமல் இருளைப் பருகி, அவ்விருளை வயிற்றிலடக்க வியலாமல் முகங்கருகி யுமிழ்ந்து, பின்னும் தங்கிற்றுளதேல் வருத்துமோ என மெய்யெலாம் நடுங்குகின்றனை! நீ எனக் குரியதொன்றை எங்ஙனம் உரைப்பாய்?" என வெறுத்தாள்.

"மாடமே! நெடிதுயர்ந்தனை! முகிலுறங்கும் பெற்றியை! எப் பொருளையுங் காண வல்லாய் நீயே! என் காதலனிருப்பிடத்தைக் காண்பாயாக! நினக்கது மிகவும் நன்று. கண்டனையேல் கோடி நுண்துகிலும் குழையும் சாந்தமும் பிறவும் நல்குவேன்," என மாடத்தையும் வேண்டினாள்.

பின்னர், ஆடகப் பொன்னணி மார்பனைத் தழுவியவாறிராமல் நெகிழ்ந்தனவென்று கொண்டு தோள்களை அணி சிதறத் தூணிலே மோதினாள். மார்பிலணிந்த கலன்களைப் பிய்த்தெறிந்தாள். மார்பிலடித்துக் கொண்டாள். 'வரை மார்பனைக் காணத் துயிலா திருப்பீர் என்னவுந் துயின்றீர்! இனி, அணியின் அஞ்சனமும் மையும்!' எனக் கண்களைச் சீறினாள்.

அழுதலால் அரக்கெனச் சிவந்த கண்மலர்களின் அஞ்சனத்தையும் மையையும் விலக்கினதால் நமக்கும்

ஏதம் வருமோ என அஞ்சியோ, இவள் வருந்துகின்றாளென எண்ணியோ மேகலை அசைந்து குரல் கொடாமல் அடங்கின போலும் என்னுமாறு பதுமை சோர்ந்து கிடந்தாள்.

அவள் வாய் பிதற்றியவா றிருந்தது.

"குளிர்ந்த மலர்மீது குலவும் வண்டுகாள்! அவனைச் சார்ந்திருந்து அவனுக்கு வெறுப்பானவற்றைச் செய்தறியேன். அவன் என்னோ டினியனுக்வே யிருந்தான். நீவிர் கூறின் நும்மை வெறுன். காலங் கடந்துரைப்பீரேல் ஒரு பெண்ணுயிரை நீக்கியவராவீர்! இது பெரும் பழி. எனவே உயிர் போமுன் அவன் எங்குளானென வுரைப்பீர்!

"நிரையாக வீழும் அருவிகள் மிகுபொன் சொரியும் செய்குன்றே! புனலே! சுரபுன்னையே! தழையே! மணமார் பொழிலே! விரியும் வெண்ணிலாவே! என்னுயிர்க் காவலன் இருக்கும் இடத்தை யுரைப்பீர்! ஒளிவிடும் பொன்னுலகி லுறைவீர்! நீவிர் அங்கே யிருப்பதால் அவன் சென்றதிசை தேர்வீர். எனினும், தெரியாத மண்ணுலகர் போல அருளிலரா யிருக்கின்றீர்! எனக்குப் படர்தரும் நோய் மிகும். அதனால், இனியும் உயிர் காத்தல் இயலாது. காக்குமாறு அவனுக் கருளிச் செய்வீராக! அமரர் மகளீர்! புணர்ந்திருக்குங் காலத்தும் புலவிநேரின் அது இனிதென எண்ணுமற் பிரிவினால் நடுங்கும் உயிர் காத்தல் அரிதென அறிவீர்! கொடியேனுயிரைக் காத்தருள அவனை யிங்கே கொண்டு வருவீராக!

"ஒளி வீசும் மணிமாலை யணிந்து நடக்குங் கொடியே! என் உயிர் நினது மணிமேகலை யாயினதாயின் தளிர்க்கும் என என் நலத்தைப் பாராட்ட வல்லவனே! இப்போது தளர்வேனோ? தளர்வேனோ? நின் மார்பிற் புனைந்ததார் பொருதலால் நொந்து வீங்கினவென என் பூணணிந்த முலைகளின் கண்குளிர உன் கண்மலர்களால் உழுது ஓம்பிப் பொய்யை மெய்யாக்கும் வல்லானே! நெடுந்தகையே! யாம் பிரியின் வருந்துவள் என நினையாது நீத்தனையே! பூங்

கழலாய்! அரசனும் நின் மைத்துனனும் உலோகமா பால னும் நின்னுடன் உசாவும் பொழுது அருளை ஆராயின் அறனே* அவர்கட்கு மொழிவாயே! இப்பொழுது இருள் செறிந்த விடத்தே நின்று வருந்துமெனக்குமட்டும் அருள் கின்றிலேயே! எனவே, நினக்கு முதலிற் சொல்லுதல் எளி தாயும் பின்னர்ச் சொல்லிய வண்ணஞ் செய்தல் அரிதாயும் இருக்கின்றது! நீ இங்ஙன் எனக்குத் துன்பியற்ற யான் அறிவின்றி மிகுந்த தவறு செய்தேனோ? அன்றி நின் னுளந்தான் முதலில் அன்புமிக் கிருந்து பிறகுவற்றியதோ கூறுக!''

இவள் வினாவிற்குச் சீவகனுடைய உருவெளி ஒன்றும் உரைத்திலது. பின்னும் அதனை நோக்கி, 'தகவல்லது செய்கின்றனையே! தகவு பெற வந்து தழுவிக்கொள்வா யாக!' என்றாள். பொன்னரி மாலையனையாள் அவ்வுருவெளி வந்து தழுவாமையின் தன் மேனியிற் காமத்தீ ஆறிக் குளிர்ச்சியுறல் வேண்டித் தானே அவ் வுருவெளியைத் தழுவச் சென்றாள். தளர்ச்சியுற்றிருந்த அவள் நடக்க இயலாதவளாய்ச் சோர்ந்து நிலத்திலே பிறழும் மின்னென வீழ்ந்தாள்; பின்னும், அவ்வணங்கனாள் அழுது உருவெளி யைப் புல்லுதற்குத் தளர்ந்து எழுந்தாள். ஏழடி நடந்து சென்று, 'மாவலிமிகு மைந்தனே!' என்று கூறி அவ்வுரு வெளியைத் தழுவினாள். அவ்வுருவங் கையிலகப்படாமை யின் நிலத்திலே வீழ்ந்தாள்; புரண்டழுதாள்.

பாலைநிலத்துச் சுனையிலே யிருந்த அன்னப்பே டொன்று, கங்கையின் அழகிய தேன் பிலிற்றுங் கமலப் பள்ளியிலே திரைகள் அசைத்துத் துயிலை யுண்டாக்கச் சேவலொடு கூடியிருந்த பொழுது, அச்சேவல் நீங்கத் தான் முன்னிருந்த பாலைநிலச் சுனையிலே கிடந்து அழுவது போன்றிருந்தது பதுமையின் வருத்தம்.

**தோழி ஆற்றுவித்தல்**

இவ்வாறு, ஒப்பின்றி யழுது மெழுகாற் செய்துள்ள பதுமையொன்று தீயினால் உருகுவது போல நைந்துருகும்

பொழுது, அவளுயிரனைய தோழி யாழ்நரம்பென மிழற்றும்-சொல்லாளான பதுமையின் கவலையை நீக்குதற்குரிய பண்புடைய ஆறுதல் மொழிகளைக் கூறினாள்.

"தேன் மிக மலர்ந்த கோதையே! உலகிற் காதலின் நிலைமை யெங்ஙனமெனின், அள்ளிப் பருகுமாறு பழுத்த காமம் கடலினும் மிகுந்து ஆடவருள்ளத்தை யிறுகப் பிணித்த தேனும், அவர்கள் மனம் மாறினால் நெருப்பில் வெந்துருகிய பொன்னிடை விழுந்த நீர்ப்புள்ளி போலத் தோன்றாமல் மறைந்துவிடும். அப்போது அந்த ஆடவர்கள் செவ்வரி பரந்து நீண்ட மலர்க்கண்களையுடைய மாதரைச் சேர்க்கையிலே நையுமாறு அழுந்தத் தழுவி வீழினும், பிரிவின்கண் சிங்கமும் புலியும் போல வருந்தார். அங்ஙனமின்றிப் பிரிவின்கண் வருந்தும் பெண்களைக் காட்டினும் பேதையர் இவ்வுலகிடையிலர். * அறியாமை யென்கிற வித்தினிடமாகத் தீவினை யென்னுந் துன்ப மரங்கள் பிறந்து காணப்பட்டு, ஆசையாகிய வேரை யிறக்கி, முற்றுதலடைந்து, பெறாத பொருள்மேற் கொள்ளுங் காதலும் பெற்ற பொருள்மேலுண்டாங் களிப்பும் ஆகிய கவடுவிட்டு, வருத்தம் மலர்ந்து, கவலை காய்த்து, இறப்பைத் தருங் கையாற்றை இவ்வுடல் நுகரப் பழுத்துத் தந்து, மேலும், அவ்வாறே காய்த்துப் பழுக்க அம்மரம் நிற்கும். மற்றும், மக்கள் யாக்கை தேனீ சென்ற நெறியும் தெளிந்த நீரிலே சிற்றலைப் போர்வையைப் போர்த்து மீன் சென்ற வழியும் போல விழித்து இமைக்குமளவில் தோன்றாமல் மாய்ந்து போம். இத்தகையதை வருத்தத்தினால் தேய்ந்துபோமாறு வருத்திக் கெடுவது தகாது.

"அணிகலன் நிறைந்த நங்கையே! மேலும் யான் கூறுவதை உள்ளத்தாலே உன்னிப்பார். முன்னே கெட்ட நம் பிறவிகளிலே இப்போது பிரிந்தவனே நம் கணவனாக, அவ

* "பேதைமை யென்னும் வித்திற் பிறந்துபின் வினைகளென்னும்
வேதனை மரங்கள் நாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்"

னுக்கே வடித்த கண்ணீர்த் துளிகளைச் சேர்த்துப் பார்த்தாற் கடல்நீர் உறையிடவும் போதாது. பாவையே! அங்ஙனங் கழித்த நாளேயன்றி இப்போது மேலும் அழுதற்கு அடியிட்டதாய் அமைந்துளது ஆகையால், அங்ஙனம் அன்பினால் ஆற்றாது அழுவதும் எளிது. நம்முடம்பிலிருந்துயிர் நீங்கி யிறத்தலு மெளிது. எனினும், தம் கணவர் தம்மைச் சேர்ந்திருந்து பிரிந்ததனாற் பிறந்த துன்பிலே யுழலும் மகளிர், அத் துன்பினைப் பொறுத்து, இது நமக்கின்பமென்று கருதியிருத்தலே யிவ்வுலகிற் செய்யத்தக்க அரிய வேலை. இதனை நீயும் செய்தல் வேண்டாவோ?

"இங்ஙனந் துன்பத்தைப் பொறுத்தாற்றி யிருத்தல் வேண்டுதலால், மக்களாகப் பிறத்தலும் குற்றம். இப்பிறப்பிற்குப் பிரிவும் சாதலும் இமைப்பளவும் இடையீடு படாதவையாகையால், ஒரு நொடியேனும் கவலை கொள்ளார் அறிந்தோர்; இயற்கையே யென்றிருப்பர். இங்ஙனமின்றி, மனத்திலே கவலை கொண்டார் பற்றுள்ளத்தாலுண்டாம் பிறவியாகிய நச்சுக்கடலிலே அழுந்துகின்றனர். ஆதலாற் கூரிய வேற்கண்ணாய்! இளமையிலே மூப்பு வருமென்றும், செல்வமுள்ளபோதே வறுமை வருமென்றும், காதலரின் சேர்க்கையிலே பிரிவுறுமென்றும், உடல் நலனுற்றிருக்கும் போதே பிணி வருமென்றும் எண்ணி, நின் காதலன் பிரிவினாலுண்டாங் கவலையைக் களைவாயாக. இங்ஙனம் வருந்தல் வேண்டா.

"திருவே! காதலன் பிரிவை நெடுநாள் எங்ஙனம் ஆற்றுவதென்றுங் கவலையுறாதே. நின் முத்தணிந்த மார்பிற் கலந்த மலர்த்தாரான்—நின் முறுவலை யுண்டவன்—நம்மை நீங்கினனல்லன்; ஏதோ செயலினை மேற்கொண்டே சிறிது பிரிந்திருக்கின்றனன். அதனைக் காட்டுஞ் சகுனமாக அதோ அம் மரப்பொந்திலே வாழும் ஆந்தைகள் பேடுஞ் சேவலுமாக இருந்து அவன் வரவைக் கூவுகின்றன. ஆகவே, அவன் நம் கையிலிருந்தகன்ற பந்து நம் கையிலே திரும்பி வருமாறு போல வந்திடுவன். முற்றிழையாய்! யான் ஒருபோதும் தவறு கூறேன். முன்னொருநாள், நாம் காவினுலா

வும்பொழுது, பிண்டியின் நீழலிலே அப்பறவை வருங் காலத்தைக் கூறியதுணர்ந்து, நின்னை நோக்கி, 'இக்குறி அரவினாலே துன்பமுண்டாமென்று தெரிவிக்கிறது,' என் றேன். அது அங்ஙனமே முடியவில்லையா? எனவே, இதனை யும் நீ நம்பி, வருந்தாதிரு''

இங்ஙனம் அவளைத் தேற்றிய தோழி அவளை வாரித் தழுவி மடிமீதிருத்திக் கூந்தலையும் மலர்மாலையையும் பிற அணிகளையுஞ் செப்பஞ் செய்து தடவிக்கொடுத்தாள். அவ் வளவிலே இரவும் ஏகியது. பதுமையின் துயரும் சிறிது நீங்கியது.

**தாயருற்ற கவலை**

பண் கனிந்து இனிய பாடலையுடைய ஒலிக்கின்ற நரம்பு பாடிக்கொண்டிருக்கும்போதே நெகிழ்ந்தாற் போல, மெய் குழைந்த இனிய காம நுகர்ச்சியின் இடையே செவ் விய அணியாளைச் சீவகன் நீங்கினதுணர்ந்த பதுமையின் தாயரெல்லோரும் குளிர்ந்த பனியினாலே வெதும்பிய தாம ரைக் காடு போன்று முகங் கருகினர்.

அப்போது பதுமையின் நற்றாய், 'முல்லையங் குழலாய்! நின் கணவன் பிரிவதற்கு முதல்நாளிற் கூறிய தேதேனும் உண்டோ?' என வினவினாள். பதுமை நெகிழ்ந்துருகிக் கேட்டு முதல்நாளிரவிற் சீவகன் கூறியதைக் கூறினாள்.

"தன் மனைவியை நினைந்து வருந்தியவாறு, திரும ணத்தின் பின்னரும் போர்த்தொழிற்கும் பொருளீட்டவும் வெய்ய கான்வழியே செல்வது ஆடவர் தொழில். அவர் கள் அங்ஙனம் நீங்கினால், மனைவியர் தொழில் இறந்து விடாமல் மனையிடத்தே ஆற்றியிருத்தல்.''

இங்ஙனம் சீவகன் கூறித் தன் வரைமார்பிலே பது மையைத் தழுவியவாறு, 'தாமரைமேல் விளையாடிய அன் னம் ஆங்கே நீலம் மிகுதியாகப் பூத்திருப்பினும் தாம ரையைவிட்டு அவற்றிற் பயிலாது,' என்றுங் கூறியதாகக் கூறினாள்.

நற்றாய், பதுமை அங்ஙனம் பகர்ந்ததைக் கேட்டு, இனிய அளிமிக்க நரம்பின் ஓசையைக் கேட்ட அசுணமா வைப்போல மகிழ்ந்து, அவளைத் தழுவி மகிழ்வித்தாள்.

"அவன் கூறியது இதுதான். அன்னம் அவன். தாமரை மலர் நீ. அவன் தொழில்நிமித்தம் நின்னை யிப்போது பிரிந்தான். காதலிருந்தபடியால் முற்றும் நீங்கான்," என்றுங் கூறித் தெளிவித்தாள்.

**பதுமை தெளிவு**

தேனினுமினிய மொழியாள்—வரிவளைத் தோளி—பதுமையும் தன் கணவன் வருவான் என அன்னை கூறிய கூற்றினால் இன்பம் அடைந்தாள்.

"நம் கணவன் தன் கண்ணுக்கினிமையூட்டும் அவ்வளவையே கொண்டு நஞ்சினை அமுதென நம்பி நுகர்ந்தாலும் அது நஞ்சேயாகும். மற்றும், அழகிய சிறகினை யுடைய தோகைமயில் பிறவுயிரை வருத்தும் அரவினை அடக்கி அச்சுறுத்தினும், கருடனைப்போலச் சேணிடையிருந்தே நினைவினும் அச்சுறுத்தும் மாட்சிமை சிறிதும் பெற்றிலது. அங்ஙனமே, மைந்துமிக்க சீவகற்கு நஞ்சும் மயிலும்போன்ற இயலுடைய யான் அமுதமுங் கருடனும் போன்ற மகளிரைப்போல வருந்துவது எற்றுக்கோ?" என்று தனக்குள்ளே மொழிந்துகொண்டாள்.

**கதிரவன் தோற்றம்**

நிற்க, *கதிரவன் மெல்லப்பரவி நிலமகள் ஒப்பனைய உளத்தாலே ஊன்றி நோக்கியவாறு, தாமரைமலர்களிலே வண்டுகளாற் பள்ளியெழுச்சிமுரசம் ஆரவாரிக்கத், தன் கதிர்களென்னுங் கையைநீட்டி, அந்நிலமடந்தையின் இருளாகிய போர்வையை நீக்கி, உதயமால்வரையின் குளிர்ந்த நெற்றியை அடைந்தான்.

---

*"பொய்கையுட் கமலத் தங்கட் புள்ளெனும் முரசம் ஆர்ப்ப
வெய்யவன் கதிர்க ளென்னும் விளங்கொளித் தடக்கை நீட்டி
மையிருட் போர்வை நீக்கி மண்ணக மடந்தை கோலம்
பையவே பரந்து நோக்கிப் பனிவரை நெற்றி சேர்ந்தான்"

**தனபதி முயற்சி**

பதுமைக்கு நேர்ந்த வருத்தமெல்லாம் அரண்மனையி லுள்ளவர்கள் தனபதிக் கறிவித்தனர். படைமிகுமன்னன் வருந்தி ஏவலரை நோக்கி, 'எங்ஙனமேனுந் தேடி அவனைக் கண்டுபிடித்து நொடியளவிலே இங்ஙன் கொணர்வீராக,' எனப் பணித்தான்.

**சீவகன் வடதிசைச் செலவு**

சீவகன், தன்னைத் தேடிவந்தோர் அறியாவண்ணம், ஒரு புதுவடிவத்தை மேற்கொண்டு, வடதிசை நோக்கிச் செல்ல நினைத்தான். முழுமதியனைய அவன்—பொற்கழ லொலிக்க அணிந்த சீவகன் கடிதிற் போவதற் கேற்றவாறு மெல்லிய ஆடையை இரு துண்டமாக்கியுடுத்தான். அணிந்த கலன்களை எதிரில்வந்த ஒருவற்குக் கொடுத்தான். பிறகு, தான் விரும்பிய நெறியே விரைந்து சென்றான்.

அப்போது, தனபதியால் ஏவப்பட்டோர் சீவகனைக் கண்டு, அவன் வடிவமாற்றலால் அறியாராய், 'ஏந்தலே! இளமையும் வடிவும் பெரிதும் நின்னைப்போன்றானொரு தோன்றலைத் தேடிவந்தேம். அவன் சென்ற இரவிலே வெளிப்போந்தான். இதுவரை கண்டிலேம். நீ கண்ட துண்டேல், நீ கூறிய வழியேசென்று காண்பேம். கண்டி ருந்தால் உரைத்தருள்,' என வேண்டினர்.

சீவகன் புன்முறுவலுடன் தன்னை வெளிப்படுத்தாம லும் பொய் கூறாமலும் சோதிடன் ஒருவன் கூறுவது போலக் கூறவெண்ணி, 'நெய்யணிந்திருண்ட ஐம்பாலையும் நெடுங்கண்களையு முடையவளின் காதலனைப் பத்துத் திங்கள் முடியுமுன் காண்பீர். அதுவரை காணீர். இது பொய்ம்மொழியன்று. இனித் திரும்பிச் செல்லுமின்! நுங்கள் களிற்றினையுடைய வேந்தற்கும் அவன் மைந்தற் கும் உரைமின்,' என்று கூறித் திரும்பிவிட்டான்.

---

## ௯. கேமசரி திருமணம்

**கல்வழி**

வான்முகிலென வழங்குங் கையினையும் மணிமாலையும் மணமலர்த் தாரும் இலங்கும் மார்பினையும் உடைய— முறுக்குடையாத வில் நாணைப்போல மாறாத திருந்திய கற்பினையுடைய காதலியரின் இன்பச் சோர்வைக் களையத் தன் கண்களால் அவர்கள் மார்பினையெழுதி முழுகும் தோள்களையுடைய—சீவகன் மலைவழியில் மகிழ்வுடன் சென்றான்.

பழங்கள் நிறைந்த வாழைக்காட்டிற் கருமையை யெழுதினாற்போன்ற அழகில்லா முகமுடைய முசுவுங் குரங்கும் இவனைக் கண்டு சிதறியோடின. அவற்றை அருளுடன் நோக்கியவாறு செல்லும்போது எதிரே கடல் போன்ற பரவிய கல்வழிநிறைந்த காடுதோன்றியது. பருகுவார்போல இன்பத்துடன் தழுவிக் கைப்பொருள் நீங்குதலால் அவரைநீங்கும் முருகுவிம்மு குழலினராம் பரத்தையரைப்போல மொய்த்த வண்டுகள் தேனுள்ள காலத்துப் பூங்கொம்புகளைத் தழுவித் தேனைப் பருகி, அது வற்றிய பின்னர் அக்கொம்புகளைவிட்டுத் தூற்றுவனபோல ஆரவாரிக்க, அவற்றைக் கண்டு சென்றான் சீவகன்.

**சித்திரகூட மலை**

*செல்வருள்ளம்போல மேல்நோக்கி வளர்ந்து, செல்வமில்லா வறியர் மனமெனப் பகற்போதிலேயே இருளைப் பெற்று, மலர்த்தாது இனிதிற் பரவி, நஞ்சுடைய பாம்பினைப்போல இடம் மறைந்து, கீழ்மக்களின் நட்புப்போலச் செல்லச்செல்லக் குறையும் வழியையுடைய மலையை நெருங்கினான்.

---

* "செல்வர் மனத்தின் ஓங்கித் திருவின் மாந்தர் நெஞ்சின்
எல்லை யிருளிற் றாகிப் பூந்தா தினிதின் ஒழுகிக்
கொல்லும் அரவின் மயங்கிச் சிறியார் கொண்ட தொடர்பிற்
செல்லச் செல்ல அஃகும் நெறிசேர் சிலம்பு சேர்ந்தான்."

அம்மலை தன் சுனைகளிலுள்ள குவளையைக் கண்களாக விழித்துச் சீவகனுருவை நோக்கி, அவனுக்கிரங்கி அழுவனபோலும் அருவியுடன் காணப்பெற்றது. சீவகன் அங்குள்ள சுனைகளிலே நீராடி, நனைதோய்ந்த போதுகளாலே அருகப்பெருமான் திருவடிகளை மறைத்து, அவரைப் பாடினன்:

இருபுற வாழ்த்து

"செய்தான் இருவினையின் பயத்தைச் சேருஞ் சென்றென்றி!
எய்தான் அதன்பயத்தைப் பிறனே துய்த்தல் இயல்பென்றி!
கொய்தாமந் தாழ்ந்தொசிந்த குளிர்பூம் பிண்டிக் கோமானே!
இஃதே நின்சொல் இயல்பென்றால் அடியேன் நின்னைத்
[தொழுதேனே!"

"உண்டே தனதியல்பின் உணருங் காலை யுயிரென்றி!
உண்டாய அவ்வுயிரே பிறிதின் இல்லை யெனவுரைத்தி!
வண்டார்ந்து நாற்காதம் வண்ண மாலை சுமந்தொசிந்து
கொண்டேந்து பூம்பிண்டிக் கோமான்! நின்னைத் தொழுதேனே."

"காதலால் எண்வினையுங் கழிய என்றி! அக்காதல்
ஆதலால் எண்வினையுங் கழியா என்றும் அறைதியால்!
போதுவாய்த் தேன்துளித்துப் பொழிந்து வண்டு திவண்டுலாம்
கோதைதாழ் பூம்பிண்டிக் கோமான்! நின்னைத் தொழுதேனே."

இவ்வாறு குரலினிமை பெறப் பாடி யேத்தி வலஞ் செய்துவிட்டு, முனிவர்கள் உறையும் சித்திரகூடம் எதிரிதுள்ளதென்று சுதஞ்சணன் கூறுதலாலே, அதனையடைய விரும்பித் தனியே சென்று, அப்பள்ளியை ஒரு பூம் பொழிலிடையே கண்டான்.

புல்லரிசியும் அல்லிக்காயிலுள்ள அரிசியும் நீண்டு வளர்ந்த மூங்கிலரிசியும் நெல்லரிசியும் தோரை யென்னும் (மலை) நெல்லரிசியும், அவைகளே யன்றிக் கனிந்த இனிய பழமுங் காயும் கிழங்கும் முதலாக நல்ல உண்டிகளையே நுகர்ந்து ஊனை நுகராத அவர்களுடைய பள்ளியை அடைந்தான்.

அவர்கள் எண்வகையாகத் தாபதருக்கு வகுக்கப் பெற்ற கொள்கையின் வழுவாதவர்; ஐவகை யழலின் நடுவேயிருக்கும் மாண்பினை யுடையர்; மறைகளை விரிவுற ஓதிய நாவினர்; எனினும், காமவேட்கை பொருந்திய தீய நினைவினையுடையர்; இவ்வகையபரான அத்தாபதர்கள் சீவகனை வரவேற்று, இனிய வள்ளிக்கிழங்கையும் மலே வாழைக் கனிகளையும் சில தந்து, 'மிகுதியாகிய மாரி போலும் இயல்பினனே! இவற்றை நுகர்க!' என உள்ளம் உவந்து விருந்தளித்தனர்.

**தாபதருடன் உரையாடல்**

இங்ஙனம் அவன் மகிழ விருந்தளித்த முனிவர்கள் அவனுடன் அளவளாவி, 'இவன் நிறைந்த பால் மதிபோல எல்லாக் கலைகளும் நிறைந்த கல்வியன்; மெய்ப்பொருளை யுணர்ந்த கேள்வியன்; அக் கலைகளினும் கேள்விகளினும் உசாவி நாமும் இவனை யறிவோம்,' எனத் துணிந்து தம் கொள்கைகளில் ஒன்றிரண்டை யுரைத்தனர்.

சீவகன் செப்புகின்றான்:

"கல்லைக் கழுத்திலே கட்டிக்கொண்டு கடலை நீந்துகிறவன் கரையேறுவனெனிற் காமத்தொடர்புடன் இங்கு நோற்கின்றவர்களும் உய்வர். மற்றும், வீடுபெற விரும்பிச் சடையை நீட்டுதலும் மரவுரியணிதலும் வெண்டலையாகிய ஓடேந்துதலும் தனியே யிருத்தலும் பிறவிக்கு வித்தாவன வென்று உண்மையுணர்ந்தோர் உரைத்தனர்."

முனிவர்கள், 'காளையே! எம் நெறியே நன்னெறியாகும். இதனையன்றி, நீ கூறியவாறு தூய்மை யில்லாதன பிறநெறிகளே. யாம் இவற்றைத் தெளிய அறிவோம். திருமால் கூறிய இந் நெறியிலே தீங்குண்டாயின் செப்புக!' என்று வினவினர்.

சீவகனும் செப்புகின்றான் :

" எங்கள் பகவனார் தூக்கப்பெற்ற உறியிலே அமர்ந்து, 'காயும் பழங்களுந் துய்த்த அளவிலே தீவினைகள் நில்லாமற்

போம்,' என்று எங்கட் குரைத்தனரென்னில், ஓங்கிய நீண்ட மரத்திலே தூங்கும் ஒளி பொருந்திய சிறகுகளை யுடைய ஒடுங்கிய வௌவால்கள் அருகிலிருக்கும் பழங்களையும் உண்பதனால் அவற்றிற்கும் இருவினைகள் கழிதல் வேண்டுமே! அதுவுமன்றி, அல்லியரிசியும் புல்லரிசியும் உண்டு செறிந்த ஐவகைத் தீயின் நடுவே நின்று, பகவனார் கூறிய வகையால் நோற்றால், வெவ்வினைகள் அறுமென்பீராயின், கற்களையுண்டு வெதும்புங் கடிய கானிலே உறையும் புறாக்களெல்லாம் இருவினைகளையும் வென்று புறங்கொடுக்கச் செய்யுமல்லவோ? மேலும், நீட்டிய சடையுடன் நீரிலே முழுகி வறுநிலத்திலே யுறைந்து வாட்டப்பெற்ற யாக்கையினாலே யாங்கள் மேலான நெறியை விளைவிப்போம் என்பீராயின், காட்டிடையுள்ள கரடி கயத்திடைச் சென்று முழுகிக் காட்டிலே வறுநிலத்திலே யுறைவதனால் வீட்டினை விளைவித்தல் வேண்டும். ஆதலால், நீங்கள் கூறிய பயனற்ற வுரையை விடுமின்.''

இன்னும் இயம்புகின்றான் :

" கலையுணர்வு மிக்க மொழியினாருடன் காமம் நுகரும் அழகிய மென்மை பொருந்திய அணையினை விடுத்துச் சென்று, இலையால் மூடப்பெற்ற குடிசையிலே வறுநிலமே படுக்கையாக அம்மாதரின் மெய்யினைத் தழுவினால் முழுவினை கெடுமாயின், மலைவாழுங் குறவர்கட்கு வினையெலாம் மாய்தல் வேண்டுமன்றோ? மற்றும் வெண்ணிற ஆடையிலே வீழ்ந்து கறை படுத்திய நிறம் விளங்கிய குருதியைக் குருதியாலேயே கழுவ வியலுமோ? அவ்வாறே, பண்ணின் இனிமைபெற்ற மொழியையுடைய மடவாரின் பற்றினாற் பிறந்த பாவத்தை, அம்மாதரின் கலவியினாற் கழித்தல் இயலாது. இனி, நுண்ணிய ஆடை வேகுதற் கஞ்சி, அதனை நெருப்பினுள்ளே பொதிந்து, மறையக் கொண்டுபோய் வைத்தால் அந்நெருப்பு அவ்வாடையைச் சுடாதோ? சுடுமன்றே! அவ்வாறே கழுத்திலே புழுகையணிந்த மகளிரின் அந்தப்புரத்தை விடுத்து, அவர்களை அழைத்துச் சென்று காட்டில் இருத்திக்கொண்டு முன் செய்த அதே கலவித்

தொழிலைப் புரிவதனாற் பாவத்தைப் போக்கவொண்ணாது. ஆதலால், நீவிர் குரங்குகள் போல நோயான் முதிர்ந்து காம நுகர்ச்சியை நோக்கல் வேண்டா. இவ்வுடம்போ காய் முதிர்ந்து கனியானவுடன் வீழ்தல் போல முதிர்ந்து விழு மியல்பினது. அவ்வாறு விழுமுன் இவ்வனத்தே காமனை வென்ற அருகப் பெருமான் உருவொடு நின்று விளங்குற நோற்றுச் சென்று துறக்கத்திலே முதிர்ந்த இன்பம் நுகர் தலை விரும்புவீராக!

"நிற்க. * ஞான மென்பது உண்மையறிதல். காட்சி யாவது அங்ஙனம் அறிந்த பொருள்களைப் பொய்யின்றித் தெளிதல். ஒழுக்கம் எனப்படுவது ஐம்பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமற் கெடுத்து, உயிரைக் கெடாமல் அவ்வுயிர் உய்யும் நெறியிலே ஒழுகுதல். இம்மூவகை யொழுக்கமும் இவ்வாறு நிறைந்த போதே இருவினைகளும் கெடும்."

இவ்வாறு முனிவர்கட்குச் சீவகன் கட்டுரைத்தான்.

அசைவற்ற மலைபோன்ற சீவகன் கூறிய மொழிகளால் நல்வினை வந்தடையும் நிலையினராகிய அவர்கள் தம் மனைவி யரைத் துறந்து, 'இன்று நின்னால் யாம் அறிவுறுத்தப் பெற்றோம்,' என்று கூறி, அருகன் நெறியைக் கைக்கொண்டு அவன் அடியைச் சிந்தித்து, வீட்டுக்குச் செல்லும் நன் னெறியினைப் பெற்றனர். அவர்களுக்கறிவூட்டிய சீவ கனும் ஞாயிறு பட்டதாலே, அங்கேயே அன்று இளைப் பாறினான்.

மறுநாள், இருள் புலர்ந்து வைகறை யெய்திய அள விலே, நிலவுலகிலே யன்றி வானுலகிலும் இல்லாத குற்ற மற்ற இலக்கணம் நிறைந்த யாக்கையினை யுடைய சீவகன் தூய அம்முனிவர்களால் வழி காட்டப்பெற்றுத் திசையும் நெறியும் தெளிந்து சென்றான்.

---

*"மெய்வகை தெரிதல் ஞானம்; விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகை யின்றித் தேறல் காட்சி; ஐம் பொறியும் வாட்டி
உய்வகை யுயிரைத்தேயா தொழுகுதல் ஒழுக்கம்; மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியும் என்றான்"

**தக்க நாடு**

எதிரே தக்கநாடு தோன்றியது. அது புனைந்தெழுதிய ஓவியமே போலத் தாமரைப்பொய்கை பல தழுவியது; அழகிற் சிறந்த மகளிரின் மாமைபோல நுகர்தற் கினியது; பரவிய இடமுடையது. இனிய பொய்கையின் மலர் நெகிழ்ந்த மணமும் மடந்தையர் திமிர்ந்த கலவை மணமும் ஆங்காங்கே அகிற்புகை மணமும் அந்நாடு தாங்கி யிருத்த லின் தக்க நாடாயது போலும். அந்நாட்டிற் சண்பகம் முதலிய நறுமண மலர்களும் சந்தனமும் பழுக்காயும் மெல் லிலையும் உணவும் யாவருக்கும் எப்போதும் குறைவின்றிக் கிடைக்கும்.

கருப்பந் தோட்டங்கள் சூழ்ந்த கழனியொன்றிற் சுரும்புகள் சூழ்ந்த தாமரைமலர் சாய்ந்து வரம்பின் அருகேயிருக்க, அதன் நெற்றியிலே கிடந்த செந்நெல், பெண்களின் நெற்றியில் தலைக்கோலம் என்னும் அணியைப் போன்றிருந்தது.

**கேம மா நகர்**

அந் நாட்டுத் தலைநகராகிய கேமமாபுரத்தின் அகழி யில் வளைந்த துறையொன்றில் ஒருவாளை தன்மேல் நண் டின் உகிர் உற்றது கண்டு நடுங்கி யொடுங்குவது, ஒரு கன்னி தன்மேலே உகிர்க்குறி யுற்றதென நாணத்தாலே நடுங்கி யோடிப்போய் ஒளித்து ஊணைத்துறந்து ஒடுங்கு வது போன்றிருந்தது.

அந் நகரின் மதிலாகிய செல்விக்கு அகழ்ந்த அழகிய கிடங்கு துகில்; பாம்புரி புகழ்பெற்ற மேகலை; ஞாயில் பூணணிந்த முலை; விளங்கும் மணிக்கோபுரம் திங்களனைய முகம்; நெடுங்கொடி சிகழிகை. மந்தரமென்று பெயர் நாட்டிய மலையாலே கடலைக்கடைந்து அமிர்தத்தை யூட்டி னும் அந்நகரைவிட்டு வெளியேசென் றுறைவாரில்லாமை யால், திரண்ட வளமிகு செல்வமுடைய அந்நகர் பிற நக ரங்கட்குத் தலைமையென்று சூட்டுவைத்தாற் போன்றது அம்மதில். பேரொலி நிறைந்த அவ்வளநகரிலே வீரர்கள்

துள்ளும் சுறுமீன்களாகவும், ஏந்திய அழகிய கொடிகள் மறியுந்திரைகளாகவும், மாடங்கள் மரக்கலங்களாகவும், பெறற்கரிய திருமகளைப் போன்ற மகளிர் அமுதமாகவும் இருத்தலால் அந்நகர் அறைகடலே போன்றது.

நிலமகட்குத் திலகம்போன்ற கேமமாபுர மெனும் அப் பொன்னகரிற் குற்றமற்ற புகழினையும் நெடுங்குடையினையும் உடைய நரபதிதேவன் என்பான் அரசாண்டான்.

**கேமசரி**

அந் நகரிலே அரசனை போன்ற சிறப்புடைய ஆண்டகை யொருவன் ஒப்பிலா வடிவினன், மறையுணர் வணிகன், கைக்கிசைந்த வேலினன், நறுமணமலர்த் தாரினன், மைதீட்டிய குளிர்ந்த கண்களையுடைய மகளிரின் மயக்கத்திலே யின்புற்றிருப்பவன், நீண்ட வில்லை வளைத்துப் பருத்து மலையெனத் திரண்ட தோளினன், மழைபெய்யும் முகிலைவென்ற வண்கையினன், சுபத்திரனென்னும் பெயரினன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் நிப்புதி. இவ்விருவர்க்கும் பிறந்த கேமசரி யென்னும் பெண்மைப் பெருவிளக்கினள் சிறந்த அழகினலே திசை யெங்கும் பொறித்த பெயருடன் இருந்தாள்.

மாசற்ற அம் மடந்தைநல்லாள் பிறந்த பொழுதே, அறிவிற் சிறந்த கணியானவன் நூல்களைக் கொண்டாராய்ந்து, 'இவள் எவனைக் கண்டு நாணமுறுகின்றனளோ அவனே இவட்குக் கணவன். அவனுக்கே இவளை அளியுங்கள்,' என்று கூறினன். அன்று தொட்டுச் சுபத்திரன் அத்தகையவனைக்காண ஆடவர்க்கெலாம் பெருவிருந்தளித்து வந்தான்.

அவன் விருந்தளிக்குமிடத்தே, ஒருபிடியில் அடங்கும் இடையினளாங் கேமசரி பைம்பொன்மாலையும் மாணிக்க மாலையும் நறுமண மலர்மாலையும் ஆகிய இவற்றினிடையே தூணொன்றினைச் சார்ந்து மின்னுக்கொடிபோலே நின்று, தனக்குத் தோன்றுற்று வருங்கணவன் அவர்களில் உளனோ என்று நோக்குவாள்.

இங்ஙனம் கேமசரிக்கும் பன்னிரண்டாண்டுகள் கழிந்தன. அவள் நற்றாய் முருக்கமலரனைய செவ்விதழையும் இங்குலிகம் ஊட்டினாற் போன்ற செவ்வாயையும் திருமகளின் அழகினையும் கண்களையும் தேன்பெய்த மலர் மாலையணிந்த குழலினையும் உடைய தன் மகளின் புனையிழையாற் பொலிந்த கோல முதிர்ச்சியை நோக்கிப் பெரிதும் உருகி வருந்துவாள். அவள் உற்ற வருத்தத்தைக் கண்டான் சுபத்திரன். "மலர்வாய் திறக்கும் போதே அழகிய புள்ளிகளையுடைய வண்டு சேர்ந்து ஊதுமன்றே? மகளிர்க்குரிய இன்பமும் அத்தன்மையதே. ஆகவே, இவளாற் காதலிக்கப்பெறுந் தவத்தினனாகிய பேரழகுடைய நம்பி நாளையே எதிர்ப்படுவான். இனி, நீ சிறிதுங் கவலையுறல் வேண்டா," இவ்வாறு கூறி அவளை ஆற்றுவித்தான்.

**சீவகன் எதிர்ப்படல்**

நிற்க, இருளைப் பின்னிவிட்டாலன்ன குழலினையும் பெருங் கண்களையும் உடைய—பொன்னிலத்தே யெழுந்த—ஒப்பற்ற காமவல்லிபோல் ஒளிவிட்டு விள்ங்கும் அழகினளாகிய கேமசரி வாழும் அந்த நகரத்தைச் சீவகன் அடைந்தான். தென்றிசையிலே முளைத்ததொரு அழகிய செவ்விய ஞாயிறு நிலத்தே நடந்து சென்று, வடதிசை நோக்கி வருவதேபோல, மணங்கமழ் மலர் மார்பினனாகிய அவன் வடக்கு நோக்கி வந்து, 'நமோ அரஹந்தாணம்' என்று கூறி மறை நினைவுடன் அந் நகரில் ஓராமர நீழலில் மகிழ்வுடன் இருந்தான். அப்போது சுபத்திரன் அவனை எதிர்ப்பட்டான். சீவகன் அழகு அவனைத் திகைப்பித்தது.

"பொன்மலையனைய இச் செம்மலுக்கு முடியானது உச்சி சிறிதுயர்ந்து முறைமைப்படத் தாழ்ந்து சுற்றொத்தவிற் குடைப்புறத்தை யொக்கும். கண்களின் அழகு மணமிகு தாமரை மலரை யொக்கும். முகத்திற்கிசைந்த மூக்கு வயிரத் தோட்டியை ஒக்கும். சிறிது வளைந்திருத்தலின் வாயின் வடிவு மறங்கெழுமிய பெரும்புலியின் வாயைப் போன்றுளது. எயிறணிந்த அவ்வாயின் நிறம் பவளத்தை

யொக்கும். குற்றமற்ற பொன்னைப்போன்ற நாவானது சருச்சரையுடையதா யிருக்கும். தோட்கட்டோ குடமுழா வைப் போன்றது. அருவரைத் தோள்கள் இந்திரன் களிறு கிய ஐராவதத்தின் அழகிய துதிக்கையின் உருவினைக் கொண்டன. அகங்கைகள் தாமரை மலரனைய தடித்த இரேகை செறிந்து விளங்கும் பொன்போன்ற மூங்கிலரிசி போன்ற குறிகளுடன் வெண்சிறு கடுகும் நுழைதற் கிய லாத நெருக்குடன் கதிர்த்த கைவிரல்கள் தம் அளவிற் கேற்ற சூல்கொண்ட கெளிற்றுமீனின் அழகை யழிப்பன வாயுள்ளன. வரைபோன்ற மார்பிலே நல்லிலக்கணங் காட் டும் மூன்று வரிகளுமுள்ளன. விலா வில்லென வளைந்த இயலின. கொப்பூழ் விளங்கும் இதழையுடைய தாமரைக் கொட்டை யனையதாகி வலஞ் சுழித்துப் பொருந்துமாறு குழிந்த வாய்ப்புடன் நன்றாக விளங்கும். குறங்குகள் தாம் அணிந்த மயிருடன் அழகிய பிற பெரிய வுறுப்புக்களினும் பெரிய அழகினையுடையன. புறவடிகள் ஆமையின் வடி வைக்கொண்டன. உள்ளங்கால்களும் தாமரையைப் போன் றன.

ஆதலால், இவன் திருமாலே போலும் எனத் தன் னுளே ஆராய்ந்தான். பிறகு, அவனுடன் அளவளாவித் திருமால் அல்லன் என்று ஐயந் தீர்ந்து தேரின்மீது ஏற்றிக் கொண்டு சென்றான்.

இவர்கள் மனையிடம் புகுமளவிலே, ஆங்குக் கேமசரி யாகிய பூங்கொடியாள், விரலால் மலர்த்திக் கட்டின கழுநீர் மாலையை யாழிலே சூட்டி யிசையை எழுப்பிக் கடவுளைப் பாடிக்கொண்டிருந்தாள்.

**படர்க்கைப் பரவல்**

"வீங்கோத வண்ணன் விரைததும்பு பூம்பிண்டித்
தேங்கோத முக்குடைக்கீழ்த் தேவர் பெருமானைத்
தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி
நாவின் நவிற்றுதார் வீட்டுலகம் நண்ணுரே"

“ அடல்வண்ண ஐம்பொறியும் அட்டுயர்ந்த கோமான்
கடல்வண்ணன் முக்குடைக்கீழ்க் காசின் றுணர்ந்தான்,
காசின் றுணர்ந்தான் கமல மலரடியை
மாசின்றிப் பாடாதார் வானுலகம் நண்ணாரே ”

“ பூத்தொழியாப் பிண்டிக்கீழ்ப் பொங்கோத வண்ணனை
நாத்தழும்ப ஏத்தாதார் வீட்டுலகம் நண்ணாரே,
வீட்டுலகம் நண்ணார் வினைக்கள்வர் ஆறலைப்ப
ஓட்டிடுப எண்குணனும் கோட்பட் டுயிராவே ”

இங்ஙனம் மூவுலகும் பாடப்படுவானாகிய கடல்போலும் நீல நிறமுடையானைக் கேமசரி பாடக்கேட்ட நிப்புதி மகிழ்ந்து, தன் கருத்தும் அவள் கருத்தும் ஒன்றுபடுதலின், ‘இவள் ஒரு வித்தகனை இப்போதே அடைதல் வேண்டும்,’ என்று இறைவனைத் தானும் பரவினாள்.

**கேமசரி நாணினாள்**

நிலம் நிறைந்து கிடந்த—அறநெறியிலே யீட்டிய—செல்வமிகு மனையிலே, அதன் வருத்தம் நீங்க அழகுடன் சீவகன் புகுந்தான். அப்போது கேமசரியின் பார்வை சீவகன் பார்வையொடு பொருந்தியது. அவ்வளவிலே, தொங்கவிடப்பெற்றிருந்த கைகளிலிருந்து வளையல்கள் கழன்று காலடியிடத்தே வீழ்ந்தன. அவள் மாமையும் நிறையும் நாணும் விலகின. வேட்கையுந் தீப்போல விளைந்தது. அத்தீயாலே அவள் உருகிவிட்டாள்.

அங்ஙனமே திருந்திய தெய்வத்தன்மை பொருந்திய அழகிய யாழ் வல்லவனுக்கு அவள் நோக்கம் வருத்தமாய் மனத்தை நோய்ப்படுத்தினதாலே, அவன் நொந்து கேமசரியை ஒரு திருவோ, மகளோ என ஐயுற்றுத் தளர்ந்தான்.

நல்ல வளமிகு தாமரைமலரை நாணுறச் செய்த திருமுகத்தையும், வேலனைய கண்களையுமுடைய கேமசரி சீவகனைக் கண்டு நாணுற்று வருந்தியதைக் கண்ட தோழியர் மனையிடத்தெங்கும் பரப்பினர். கேட்ட யாவரும் நவது சீவகனை நோக்கினர்.

அப்போது நிப்புதியும் வந்து, ஆனிரையிடையே ஏறு போன்று நிற்கும் சீவகனுடைய அழகை வியந்து நோக்கிப் பின்னர்க் கேமசரியின் அழகுடன் ஒப்பிட்டுப் பார்த்து, நம்பியின் அழகே சிறந்திருப்பதை யுணர்ந்து அங்குநின்றும் அகன்றாள்.

### சீவகனுக்கு விருந்து

பின்னர், ஆங்குள்ள பணிமகளிர் சுபத்திரன் ஆணைப் படியே சீவகனை அழைத்துச் சென்று மணமிகு நெய் பூசி, மணிக்குடத்திலிருந்து தெள்ளிய நீரைச் சொரிந்து ஆட்டினர். நீராடிய பிறகு, சீவகன் இனிய நறும்புகையூட்டிய கலிங்கத்தை யுடுத்தான். பணிப்பெண்கள் தேன் விரியும் மலர்மாலையையுங் கண்ணியையும் அணிகலன்களுடன் அணிவித்தனர். சந்தனத்தாலே மெழுகி முத்துப்பொடியாற் கோலமிட்டுப் பொற்கலத்தைப் பரப்பி அமுதனைய வுண்டி யேந்தினர். சீவகனும் அவர்தம் புகழ்ச்சியுடன் உண்டான்; பொன்னாற் பத்தியுற இயற்றிய திண்ணையின் மீது ஓவியந் தீட்டிய இருக்கையிலே அமர்ந்து, கரகத்திலிருந்து முத்தனைய நீராலே வாய் பூசுதல் முதலிய தொழில்களை முடித்துக்கொண்டான்.

ஒரு முழுப் பளிங்கை அறுத்து, அதன் பக்கத்தே பத்தியாகப் பொன்னைப் பதித்தவற்றில், பறித்த காயும் வெற்றிலையும் வரவேற்பு முறைக்காக எடுத்து வந்தனர் சில ஏந்திழையார். யவனத் தச்சர் பொன்னாற் செய்த ஓரத்திலே முத்தழுத்திய வேலைப்பாடமைந்த அடைப்பையிலே பாக்கும் வெற்றிலையும் முகவாசமும் சீவகன் தரித்துக் கொள்ள ஏந்தி வந்தனர் சில பணிமகளிர்.

சீவகன் ஒரு வெற்றிலையை எடுத்துச் சுருட்டிக் கறித்து, அதன் குறையினாலே—குண்டலம் அசைந்து குறுக்கிட்டு ஒளிவிடும்படி—பல்லிலே ஒளியுண்டாகுமாறு தேய்த்துமிழ்ந்த பிறகு, வெற்றிலையையும் மென்றான்.

**சீவகன் மெலிவு**

பிறகு, தனியே அமர்ந்து கேமசரியின் நினைவிலே நெஞ்சம் பறிபோக மெலிவுற்றான்.

"பண்ணுலவும் மொழியாளுடைய மேகலையுந் துகிலும் நிலைபெற்ற ஒண்கதிரை யுமிழ்வனவாகிப் பாவியேனுடைய கண்ணையும் மனத்தையும் இடமாகக் கொண்டுவிட்டன. அவளுந் தன் சிலையாகிய புருவத்தாலே அடித்து, மலரை வாட்டும் நெடுங்கண்ணாகிய வாளாலே என் உயிரைப் போக்காமல், என் மெய்யையெல்லாந் தன் மணமிகு குழலாகிய கயிற்றாற் கட்டிவிட்டாள். அக் கொடியவளின் முலையாகிய யானை என்னுயிரைக் கொல்லும்.

"கரியன, உள்ளே வெறியன (மணமுடையன) கட்டப்பட்டன, புரிவுடன் புறத்தே (பிடரில்) இடப்பட்டனவாகிய பூங்குழல்கள் அவளுடைய செய்ய நீண்ட கண்கள் வருத்துதல் போலவும் வருத்துகின்றன. ஆராயின் அவை எல்லாத் துன்பமும் இயற்றும் வல்லமையுடையன போலும்.

"வாளனைய, கண்ணினள் தன் காதலையெல்லாம் தன் கண்ணுளே அடக்கிக்கொண்டு, அக் கண்ணாகிய தூதாலே தன் நினைவை எனக்கறிவித்துச் சுற்றத்தார்க்கு அவ் வேட்கை தோன்றாதவாறு மறைத்த நோக்கம் குளிர்ந்த கடலில் தோன்றிய அமுதத்தையும் உலகையும் விலையாகக் கொள்ளும்.

"வண்டுகள் உண்ணப்பழகிய கூந்தலையுடைய சண்பக மாலை போல்வாளின் கண் காலன் கையிலுள்ள கூரிய வேல். வளைந்த பிறைப்னைய நுதல் கூற்றுவன். குவிந்த முலைகள் அவன் கையிலுள்ள பாசம். இங்ஙனமாகவும் யான் உயிர் வாழவும் ஆசைப்பட்டிருக்கின்றேன் எனின் யான் இரங்கத் தக்க பிறனே.

"கற்பகத்தின் விளங்கத்தக்க மாலையையணிந்த உருவிற்கு விளக்கமாகிய இப் பூங்கொடியாள் அழகினால் திருமகளுக்கும், வேலைக் கண்ணாகக் கொண்டதனால் முருகனுக்

கும், கருப்பு வில்லைப் புருவமாகக் கொண்டதனுற் காமனுக்கும், அறிவைக் கொண்டதனுல் எனக்கும், பிறையை நெற்றியாய்க் கொண்டதனுல் இறைவனுகிய சிவனுக்கும் பகைச்சியானுள். இங்ஙனம் ஒருத்தியின் வடிவிருந்தவாறு என்னே?"

கலைத் தொகுதிகளின் நலம் பலவறிந்து நடக்கும் சீவகன் இங்ஙனம் கூறித் தன் மேற் காதல் கொண்டவள் அழகிலே மயங்கியிருக்க, வணிகனுகிய சுபத்திரன் மதந்தவழும் யானையையுடைய மன்னவனுக்கும் அந்நகர மாந்தர்க்கும் உறவினர்க்கும் திருமண நிகழ்ச்சியைத் தெரிவித்தான்.

திருமணம்

கேமமாபுரமென்னும் அந்நகரிலே, இடியுமிழ்ந்த முழக்குப்போலவும், திரை முழங்குங் கடல்முழக்குப் போலவும் பலவகை இயங்களுந் திரண்டு ஆரவாரிக்க, நல்ல நாளிலே மலர்க்கோதையைச் சீவகனுக்கு வாழ்க்கைப் படுத்தினர் சுபத்திரனும் சான்ரேரும்.

மணியாற் செய்த குடத்தை வைத்து அழுத்தியதைப் போன்ற தோளையுடைய சீவகனது கணிக்கும் இடங் கொடாத நலத்தை அரிவையின் அழகொடும் சான்ரேர் பிணித்ததனுல், சீவகன் பெற்ற இன்பம் இடைவிடாது நுகர்தற்குரியதாயிற்று. இருவருங் காதலுங் களிப்பும் மிகுந்தவராய் இரவும் பகலும் பிரிவின்றிச் சாதலும் பிறப்பும் இல்லாத தனிமை பெற்றவர் போலாயினர். மற்றும், அணி செயப் பெற்றதாரினுனும், மலரணிந்த பூங்கொத்துப் போன்றவளும் குளிர்ந்த மலர்ப்பொழிலினும் அழகிய பொய்கையினும் இனிதுற ஆடினர். சுனையில் மலர்ந்த குவளை மலர்களாற் கண்ணி தொடுத்துச் சூட்டிக்கொண்டனர். ஊழினுல் அன்பிற் சிறந்தவராய்விட்ட இருவரும் இங்ஙனம் நல்லூழின் பயனை நுகர்ந்து வந்தனர்.

இரண்டு திங்கள் கழிந்தன.

ஒருநாள் காளை போன்ற சீவகன், பிழிந்துகொண்டாலனைய பெண்மையினையுடைய வளைத்தோழியாங் கேமசரி

யுடன் அருவி வீழும் குன்றில் ஆராய்ந்த மலர்கள் நிறைந்த காவிலே புகுந்தான். ஆங்கே, பொன்போலுங் குலைக்கமுகும், பொன்னனைய பழங்களையுடைய வாழையும் சூழப் பெற்று, மலர்க் கிளைகளையுடைய சுரபுன்னையும் தீம்பூ மரமும் செறிந்த கருப்பூரச் சோலையிலே, மாங்கிளைகளில் மயில்களாடச் சண்பக மலர்கள் சிந்தும் இனிய சுனையையும் அருவியையும் உடைய குன்றிலே ஏறினன்.

அக்குன்றிலே தினை விளைந்த புனம் ஒன்றிருந்தது. ஆங்குத் தினைக்கதிரைக் கிளிகள் கொத்திச் செல்வதைக் கண்ட கேமசரி அவற்றைக் கூவி ஓட்டினள். அக்கிளிகளோ இவள் கூவுவது கிளிகளின் மழலைபோன்றிருந்தமையாற் றம்மினம் என நினைத்து வெளியேறுமல் இருந்தன. கேமசரி நாணினள். தன் பொன்னரிமாலை கொண்டு ஓச்சினள். அப்போதும் அவை போகவில்லை. அவள் கருத்தை முடிக்க விழைந்த சீவகன் அக்கிளிகளையணுகி ஓட்டினன். அப்போது அவன் அவளைப் பிரிந்து சில அடிகள் சென்றான். அதுகண்ட அவள் தன்னைத் தனியே விட்டுப் பிரிந்தானெனப் புலந்தாள்!

அவள் புலந்தமை கண்ட சீவகன் தழையையும் மாலையையுங் கையுறையாக ஏந்தி அவளை அணுகி, "எரியும் அழலையுடைய வேற்கண்ணாலே என்னுயிரைக் கொள்ளை கொண்ட பூங்கொம்பே! பாவையே! செவ்விய தழையையும் மாலையையும் காணிக்கையாகக்கொண்டு நின் சிற்றடிகளைப் பரவவந்தேன். இனி, உயிருடனிருந்து நின்பணி புரிவேனே? அல்லது இவ்வுடம்பைவிட்டு இறந்துபடக் கடவேனே? இரண்டில் ஒன்றைப் பணிப்பாயாக!" என்று வேண்டினன்.

இவன் இறந்துபடுவேன் என்றதனாற் புன்முறுவல் கொண்டாள் கேமசரி. அவ்வளவிலே, 'வீணையும் குழலும் பாலும் அமுதமும் கரும்புந் தேனும் பாட்டையுடைய யாழும் கனியும் ஆகிய இவற்றையெலாம் வென்ற கிளி மொழியையுடைய வாணிகமகளிரே முதல் கெட ஊதியஞ்

செய்யார்,' என வியந்துகூறிய சீவகன் அவளைத் தழுவிக் கொண்டான்.

**பிரிவுக் குறிப்பு**

அழகிய திங்கட்குழவி செவ்வானிடைக் கிடந்து ஒளிர்வதைப்போலக் குங்குமமணிந்த மார்பிலே முத்தாரம் விளங்க, அவளுடன் சீவகன் அமர்ந்திருந்தபோது வந்த ஒரு வண்டைக்கண்டு, இரவு பிரியக் கருதி ஒருமொழி கூறினன்.

"மணிவண்டே! நீ இம்மாதராள் கோதையில் தேன் பருக வந்தபோது, உன் பெடை தனியே இறவாமல் இருக்குமோ? வருந்துவதுஞ் செய்யாதோ? மற்றுத், தான் இறந்துபடின் துணையாகிய நீயும் இறந்துபடுவையென்று மனத்திற்கொண்டு இறந்துபடாமல், நீ செய்யவேண்டுந் தொழிலொன்றைத் தான் முதலிலேயே கொண்டிராமையால், தொழில் முடிந்து வருந்துணையும் அன்புடனே ஆற்றியிருக்குமல்லவோ?"

கதிரவன், முன்பு கீழ்த்திசையிலே குழவியாய்ப் பிறந்து குமரனாக வெம்மைமிக்கு, இனி, விழைவொழிந்த முதியவனாகிக் கதிர்கள் சோர்ந்து மேற்றிசையிலேபட்டான். சீவகனும் வண்டூத மலர்ந்த மல்லிகை யலங்கலைக் கேமசரிக்குச் சூட்டி, அவளுடன் அமளியடைந்தான். அமளிமிசை இன்பத்தாற் பிறந்த சோர்வினால் இளைத்த கோதையாள் தன் கண்ணாகிய ஒளிமிகு நீலத்தைக் குவித்த அளவிலே, அவளைப் பிரிய எண்ணிய சீவகன் எழுந்து சென்று பவழத் தாழையுடைய மணிக்கதவை அடைந்தான்.

**பிரிவு**

மடங்கலனையான், தாமரைமலர்ப் பாவையனையாள் காதில் தான் கதவைத் திறக்கும் ஓசை கேளாதவாறு கதவை மெல்லத் தாழ்நீக்கித் திறந்து, வளமிகு மனையை விட்டு ஒளிமிகு கதிரவன்போலப் பரவிய இருளிலே சென்றான்.

**கேமசரியின் துயர்**

அப்போது, ஒளிவிடும் பூணினள் தன் மார்பிலே பயின்று நாடொறும் வளர்கின்ற ஒளிமிகு பிறைமதி யனைய காதலையுடைய கணவனைக் கனவிலே காணுமல் திகைத்தாள். உடனே விழித்தபோது வைகறை யிருளா யிருந்தது. அவளுடைய தூக்கமயக்கமுந் தொலைந்தது. எல்லாத் திசையினும் நோக்கினள். சீவகனைக் காணுமல் திடுக்குற்றள். மணிகளிழைத்த பொற்கொடியனையாள் தன் விழியிற் கருமணிப் பாவையனையானைக் காணுமை யால், மாணிக்கவிளக்கின் ஒளிபரவிய அம்மனையகத்தே ஒளிபரவிய இடமெங்கும் ஓடித்தேடி, நாகமொன்று தன் மணியை யிழந்து கலங்குவதைப்போலக் கலங்கினள்.

"ஐயனே! நீ யாண்டுளாய்? யான் அஞ்சுகின்றேன். நீயே வருக! நீண்ட தோளினய்! என் உயிர் உடம்பை விட்டுப் போகத் துணிகின்றது. என் நெஞ்சு இனி நிறை யுடன் இராது. விரைந்து வந்து தீண்டுக! 'மங்கையர், அன்புகனியும் வேட்கை தம்மிற் பொருந்தி உயிரொன்றும் போது இனியராயிருப்பர். தனித்திருப்பின் துன்புறுவர்,' என முன்னர் உரைப்பாயன்றே? யாம் இங்ஙனம் ஒன்றி யின்புறும் நாட்களிலே பனிமூடிய திங்களெனப், பசந்து வாடுமாறு யான் தனிப்பது நினக்குத் தகுதியோ? கூறு வாய். ஐயவோ! சோரும் உள்ளத்துடனே கைவளைகளுங் கழல்கின்றன! கண்களும் நாற்பக்கமுஞ் சுழல்கின்றன! மேனியும் தீயிலிட்ட பொன் வெதும்பி உருகுமாறுபோல அழல்கின்றது! ஆதலின் ஆற்றுகிலேன். யான் இங்ஙனம் வாடவும், நிழல்போல நீத்தற்கரிய காதலை நீயுங் கைவிடு வையோ? தேன்கமழுஞ் செவ்விய மல்லிகை மாலையை யான் விரும்பிச் சூடினும், 'இடை முரியுமென்றறியாத பேதாய்! நினது மெல்லிடை வருந்துமே!' எனக் கூறும் பொய்யனே! யான் கருகி நைவதைக் காணவும் வல்லையோ?

"தொண்டைக் கனியனைய செவ்வாயையுந் தொய்யில் எழுதிய அழகிய முலைகளையும் உடைய இவளைப்படைத்த

பொழுது, நான்முகனர் நோக்கி, உலகைப்படைத்த நாமே அதனை யழிப்பதோருருவையும் படைத்தோமேயென வருந்துவர்,' என்று முன்னிலைப் புறமொழியாக மொழிந்து என்னைப் புகழ்கின்றவனே! தேன் துளிக்கும் மணங்கமழ் தாரினய்! நீ வண்டினிடங் கூறியதன் உட்பொருளை அறிந்திலேன். அறியிற் பிரிந்திலேன்.

"என் உயிர்காவலனே! சிலை வல்லவனே! ஊடல் தீர்த்து என் மார்பிடைத்தழுவ நினைத்தனையேல், தலையை நிலத்தேவைத்து என் அடிகளைத் தடவுவாய். அத்தகைய நீ இப்போது என்னைக் கலக்கிவிட்டனை! காரணம் அறியேன்! அறிவித்தருள்வாய்!

"நறிய மெல்லிய மணமிகு மாலையாய்! நீ என்னுடன் இன்புற்றிருந்ததுகண்ட என் உறவினர், 'இவள் நாடொறும் பெருகும் அன்பினள்!' என்று புகழ்ந்ததன்றிக், 'குறையும் அன்பினள்,' என்று கூறினரில்லை. உருகும் என்புடன் வருந்திப் பேதுறும் எனக்கு அருளவாராய்!

"இப்பொழுது, தீவினையேன் வாடிக்கிடக்க நீ தனியே சென்றுவிட்டனை. ஆதலின், முன்பு, 'என் உயிரகத்தே உறைவாய்! நின் சிற்றடி நோவ நடந்து திரியாதே,' என்று நீ முன் கூறுவையே, அது பொய்ம்மொழியேபோலும்!

"புனத்திருக்கும் மாமயிலே! பொழிலே! புனலே! வனத்திருக்கும் சுரபுன்னையே! மலையே! கடலே! நும்மைத் தொழுகின்றேன். பல்வகை மணிகளிழைத்த ஒளிவிடும் பூணவனை யான் இனியும் அடைவேனே? அடைவேனெனின், அவனிருக்குமிடம் இயம்புவீர்!

"அறக்கடவுளே! கொடிய வில்லிலிருக்குங் கணையினுங் கொடியதாக இராப்பொழுது செய்யும் வருத்தம் மிகுகின்றதே! நெடுவெண்ணிலவும் யான் பிரிந்து வருந்துவதற்கிரங்காமல் தானும் துன்புறுத்துகிறதே! என் பங்கிலிருந்து நீயேனும் அருள்புரிவாய்.

"அவன் நின்னைக் கொண்டு தோளிணைகளே! எழுதி னாற் போன்ற இயல்பினவாக வளையையும் முத்தையும் அணிந்து, கரும்பு முதலியவற்றையும் எழுதி உமையைப் புக ழும் மணமிகு மாலையான் எங்கே போயினன்? தழுவுதலை நெகிழ்ந்து போகவிட்ட நீர் அவன் சென்றவிடம் அறிவீர்! அவ்விடத்தைக் கூறுவீர்!"

இங்ஙனம் உருகிப் பிதற்றிய பால்மொழியாள், தான் அழுத கண்ணீரிலே தோன்றிய தன்னிழலும் அழுதுகெட்டு வாடி வருந்தி அழுவதலைக் கண்டாள். அந்நிழலைத் தன் தோழியென எண்ணி, 'என் அன்பார்ந்த தோழியே! நீ வருந்தாதே! அழுவதுஞ் செய்யாதே! அவர் நமக்குப் பகையாகார்!' என ஆற்றுவித்தாள்.

அப்போது தன் தலையிலிருந்த மாலைகள் வீழ்ந்து கண் ணீரையுடைய நிலம் மறைதலாலே, அந்நிழலாகிய தோழி யைக் காணாதவளாய், 'அவள் அவன் போன வழியைத் தேடிப் போயினள்! காலமும் நீட்டித்தாள். இனி, அவனைக் கண்டு, ஒளிமிகு வளையைக்கொண்டு வருவாள்,' என் றுரைத்தாள்.

'மடப்பம் பொருந்திய மயிலே! குயிலே! மழலை மொழியையுடைய நடை மாண்ட அன்னமே! நலமிகு கிள் ளையே! என்னுடன் விளையாடும் என் ஐயனை,' என்றுரைத்த அளவிலே உருகிச் சோர்ந்த யாழ்மொழியாள், 'என் ஐய னைத் தேடுமின்,' என அவற்றிற்குக் கூறும் பணியையும் மறந்து வீழ்ந்தாள்.

**இல்லுறை தெய்வம்**

அப்போது அவள் மனையகத்துத் தெய்வம் வெதும் பிக் கிடக்கும் அவளை நோக்கி வருந்தியது.

"ஊனுலவும் புலால் கமழும் வாளேந்திய கையையும் பொன்னாலாகிய கழலணிந்த காலையும் உடைய கண்கள் அவாவும் அழகினனைக் காமனே கண்டாலும் பண் விரும் பும் பவளச் செவ்வாய்ப் பைந் தொடியாக விரும்புவன்

என்றால் இம் மானனையாள் உய்வ தெங்ஙன்? தேனுகிய நெய்யைக் கனியிலே தோய்த்து இனிய கவளமாக உண்ணும்படி துதிக்கையாலே கொடுத்துத் தழுவும் மதக் களிறு நீங்கினால் மடப்பிடி யெங்ஙனம் வாழும்? அது போலத் தன் முடியை அடியிலே சூட்டி, ஊடல் நீக்கித் தழுவும் கொடையாளன் பிரிந்தாற் கோதையாள் பிழைக் குந் தன்மை யுண்டாகாது.''

இவ்வாறு நினைந்திரங்கிய தெய்வம், சீவகன் தன் பிரி வைக் குறிப்பித்த வண்டாக அவளெதிரே பறந்தது. அவ் வண்டைக் கண்ட கேமசரி, 'நின் இறப்பு நின் கணவனுக்கு ஊனமும் பிரிவுமுண்டாக்கும்,' என்று அது கூறுவது போல உணர்ச்சி கொண்டு, அஞ்சிப், போதற் கிசைந்து நின்ற ஆவியைப் போகவிடாமல் தடுத்துத் தாங்கினுள்.

"பொய்பழகிய மொழியானுகிய காமன் கூறிய மணி நிற வண்டுகளே! இறந்து படுவேனது துயரம் தீருமாறு என் மனையிடத்துத் தெய்வமாவீர்!" என்று கூறி வேண்டினுள்.

இந்நிலையிலே வானிட்ட சுட்டிபோல வெள்ளி முளைத் தது. கேமசரியும் இறவாமல் உயிர்தாங்கினும் காதலன் பிரிவுக் காற்றுமல் வருந்திக் கிடந்தாள்; எரியைச் சேர்ந்த மாந்தளிர் போல வாடி மயங்கித் தன் இனியகுரல் மாறி வருந்திய குரலுடன் அழுதாள். அவ்வோசை மனையி லுள்ளார்க்குக் கேட்டவுடன் எல்லோரும் வந்து குழுமினர். அப்போது, நற்றாய் நிப்புதியும் வந்து மகளைக் கண்டு வருந் தித் தெளிந்து, மகளையுந் தெளிவித்தாள்.

### நிப்புதியின் ஆறுதல் மொழி

"உயர் குடியிற் பிறந்து, கொடிய வேட்கையின் வேரை யரிந்து, மெய்யிலே நின்று, எவ்வகையினுங் குறை வின்றி, நாம் செய்த தவத்தினுலே வந்து, அயன் தன் வச்சி ரத்தா லெழுதப்பட்ட எழுத்தைப் போன்றவன் தந்த இன் பத்தைத் தவறுதலின்றி யின்னும் பெறுவாயாக!

"கோதையே! மேலாய் வளர்ந்தன தாழ்ந்து வீழும். பிறந்தவ ரெல்லோரும் இறந்துபடுவர். இறந்தவரும் அவ்வாறே பிறந்திடுவர். மேலும், மிக்க வனப்பெல்லாம் ஒரு நாள் கெடும். அங்ஙனம் கெட்டாலும் பிரிந்தவ ரெல்லோரும் புணர்வர்; என்பதனை யெண்ணி வருந்தா திருப்பாயாக!

"தீயைப்போல எழும் காமத்திலே கூடும்போதுண்டாகும் இன்பம் நீர்த்துளி போன்றது. பிரிவிலே பிறந்த துன்பமோ பெருங்கடல் போன்றதாகும்! ஆதலின், இப் பிரிவாலே பெறுதற்கரிய மக்கள் யாக்கை நீங்குமாயின், இம்மை மறுமைக்காகச் செய்து கொள்ளும் நன்மையும் இன்றிப் பயனும் பெறார் என உயர்ந்தோர் கூறக் கேட்டிருக் கின்றோமல்லவா? எனவே, நீ வருந்துவது தகாது.

"மற்றும், மக்கள் இளமை நீரிற் பொருந்திய குமிழி போன்றது; அவரின்பம் மின்போலத் தோன்றி மறையும்; அவர் செல்வம் வெயிலிற் பட்ட பனியென விலகும். ஆகலின், தீவினையின் ஆக்கம் மேற்கூறியவாறு செய்யும் வலிமையுடையது. இதற்கு வருந்தினாற் பெறுவதொன்று மின்று"

இங்ஙனம் ஏதுக்கள் பலவும் எடுத்துக் காட்டி ஆறுதல் மொழி கூறினவுடன் கேமசரியும், 'காதலனைப் பிரியாமற் பிணிக்கவியலா மாதர் வருந்துவதாற் பயனுண்டோ?' என வுன்னித் தேறினாள். எனினும், மணமிகுதாரினான் வண்டினுக் குரைத்த மொழியின் பிணிப்பாலே அன்புமிக் காக்கப் பெற்ற உயிரொன்றும் உடையளாய், அவ்வுயிரை யொழிய உடம்பெல்லாம் பிசைந்து வீசிய மாலையைப் போன்றாள்.

**சீவகன் செலவிடை**

கொடிய அரவினால் விழுங்கப்பட்ட தண்கதிர்த் திங்களே போல மெய்யெரியுந் துயரத்திலே மூழ்கி, நடுங்கி யுருகி வருந்தும் கரிய நீண்ட குழலினாள் தன் கணவனை வலைபோட்டுத் தேடியுங் காணாளாக, அவனும் காலாலே நடந்து சென்றான்.

பாலைப் பளிங்காலாகிய குடத்திலே முகந்து கரிய சேற்றிலே வீழுமாறு சொரிவது போலத் திங்களாகிய தெய்வம் தன் கதிரை இருளிலே முழுகுமாறு பெய்து, மாதர்தம் பசத்தல் கொண்ட முகம்போல வளைகடலிலே மூழ்த்தது. (விடியற்கால நிலவாதலின் இருளைக் கெடுக்குந் தன்மையிலதாய் இருந்தது.)

அவ்வாறு தோன்றிய விடிநிலவு ஏறனைய சீவகனுக்கு இருளிலே கைவிளக் கேந்தினாற் போல இருத்தலின் அதன் துணை கொண்டு விரைந்து சென்றான். சிறிது போதிலே, ஒப்பிலாத ஞாயிறு தோன்றியது. அப்போது வழியே போவான் ஒருவனைக் கண்டு தன் அணிகலன்களை நல்கினான்.

**சமயக் கொள்கை**

அவன் சீவகனை, "எவ்வூரீர்? எப்பதிக்குப் போகின்றீர்? மனைவியர் எத்துணையர்? ஒழுக்கமிலா மக்கள் எத்துணையர்? ஒழுக்கமுடைய மக்கள் எத்துணையர்?" என வினவினான்.

"என் ஊர் இவ்வுடம்பே. இவ்வுடம் பெடுத்தற்கே போகின்றேன். எனக்கு மனைவியர் நால்வர். ஒவ்வாத மக்க ளொருவருமிலர். அந்நால்வர் வயிற்றுப் பிறந்த ஒழுக்கமுள்ள மகன் ஒருவனே," என வுரைத்தான் சீவகன். வழிப்போக்கன் நகைத்தான்.

"ஒழுக்கமுள மகன் ஒருவனே. அவன் நான்கு தாய்மாரின் ஒரு வயிற்றிலே பிறந்தான் என இப் பெரியான் கூறுகின்றனனே! இவனைப்போல் உலகில் இனியர் யாவர்?" எனக்கூறி எள்ளியவன் மற்றும், "அறிவுமிக்க இவன் மொழியும் விளங்காத மிகுமொழியாகவே யுள்ளது. வினவிப் பார்ப்போம்," என் நினைந்து, "நீ குறிப்பிட்டதை விளக்குக," என்றான்.

சீவகனும் செப்புகின்றான் :

*"நல்ல தானம், சீலம், நடுக்கமிலாத தவம், இறைவர் வழிபாடு என்னும் இந்நான்குமே முற்கூறிய மனைவியர். இந்நால்வர் வயிற்றினும் பிறந்து பயன்தருவானாகிய நல்வினையென்ற மகனே மேற்கதிக்குக் கொண்டு போம் அறிஞன். அவனைப் பெற்றாரே மகப்பெற்றாராவர். அல்லாதார் மகவினைப் பெற்றாரல்லர். பெற்ற மகவும் அவர் மகவாகாது.

†"படத்தையுடைய நாகம் தோலுரித்தாற்போல அகமும் புறமும் தூயவாகக்கொண்டு துறந்து, நோற்று, ஐம்பொறிகளையும் தம் வசத்தனவாக வென்றார்க்குக் களிப்புடன் நல்குதல் தானமாகும். இனிய தேனையும் தெளிந்த கள்ளையும் உயிர்க்கூட்டம் கூடிநிற்றற்கிடனான ஊனையும் உறுதியுடன் துறத்தலே சீலம் என்று பெரியோர்கள் கூறினர்.

"அறம் நிறைந்த ஆகமத்தைக் கரைகண்ட இருடிகள், தந்தையின் திருவடிகளை நாடோறும் மலர் முதலியவற்றாற் புனைதலையும் வேறு மலர்கொண்டு புனைதலையும் பிறவற்றாற் புனைதலையும் பூசனை என்பர். அமாவாசை முழுமதி ஆகிய இரண்டு உவாவினும் அட்டமியினும் பட்டினிவிட்டு, எப்

---

*"நற்றானம் சீலம் நடுங்காத்
தவம்அறிவர் சிறப்பின் நான்கும்
மற்றாங்குச் சொன்ன மனைவியரின்
நால்வரவர் வயிற்றுள் தோன்றி
உற்றான் ஒருமகனே மேற்கதிக்குக்
கொண்டுபோம் உரவோன் தன்னைப்
பெற்றார் மகப்பெற்றார்; அல்லாதார்
பிறர்; மக்கள் பிறரே கண்டீர்."

†"படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து
கண்டவர்மெய் பனிப்ப நோற்றிட்டு
உடனாகு ஐம்பொறியும் வென்றார்க்கு
உவந்தீதல் தானம் ஆகும்
திடனாகத் தீந்தேனும் தெண்மட்டும்
உயிர்க்குழாம் ஈண்டி நிற்றற்
கிடனாகும் ஊனுமிவை துறத்தலே
சீலமென் றுரைத்தார் மிக்கோர்."

போதும் ஒழுக்கத்தை ஓவாது காப்பாற்றுதலே தவம் என்பர்.

"இந்நால்வரும் துணைவியராக இவன் மகனுகவுடையார் துறக்கத்தே சென்று, இந்திரராய் அங்கே யிருந்தாண்டு, பிறகு பேரரசராய் நிலமுழுதும் ஆண்டு, வாமனுக்கு (அருகனுக்கு) வழிபாடுபுரிந்து, வரம்பிலாப் பேரின்பத்தை விளைவித்துப், பிறகு வீடுபெறுதல் உண்மையென வுரைக்கலாம்.

"தடையற்ற இன்பநிலைக்குச் செல்லுங் கதவைத் திறக்கும் தாளாகிய அடியையுடைய தலைவன் முக்குடைக்கீழ் வீற்றிருக்கும் மாலே (அருகனே) ஆவன். அவனையடையாதார்க்கு, எட்டேனும் பத்தேனும் பொருள் இல்லாதார்க்கு இவ்வுலக இன்பம் இல்லாதவாறுபோல நல்வினைகள் கூடா. இவற்றை நன்கறிந்துகொண்மின் !

"அயலாரில்லாத நம் சுற்றத்தாரிருக்கும் ஊர்க்கே சென்றாலும், வெகுண்டு, அங்குச் செல்லாதீர்போலப் பொதிசோறு கைக்கொள்ளாமல் வெளியே ஓரடியேனும் எடுத்துவையீர். இவ்வியல்புடைய நீவிர் கூற்றுவன் நும்மை யழைத்துக்கொண்டுசெல்ல, நுமர் இல்லாத ஊர்க்குத் தனியே செல்லும்போது, உண்பதற்குப் பொதி சோற்றை இப்போதே தேடிக்கொள்கிலீர் ! ஆதலின், அழகன்றி அறிவொன்றும் உடையீரல்லீர்போலும் !

"நுகர்வனவாகிய காமத்தாலும் கள்ளாலும் ஊனாலும் பின்னர் விளைவது தீவினையே கண்டீர் ! எனவே, இவை மூன்றையும் கைவிடுவீராக ! இவ்வாறு தாம் வருந்தச் செயல்கூறுவோரைச் சினந்து நோக்குவாரேயன்றி உண்மையுணரார் இவ்வுலக மக்கள். அந்தோ ! என்ன பாவம் !

"நெய்கனிந்த வெண்மையாகிய நிணத்தையுடைய செவ்விய ஊனுக்கே ஏக்கங்கொண்டு, அவ்வூனையே சுமந்து, உடம்பிற்குக் காவல் செய்கின்றீர் ! ஆராய்ச்சியின்றிக் கழுகுண்ணுமாறு அக்கழுகிற்கே காவல் செய்கின்றீர் !

இதனை இவ்வாறு பழுதாக எண்ணும் இரும்பாற் போர்த்த வன்மனத்தர் ஓட்டைச் செவியராய் அறத்தைக் கேளார்.

"இறுதிக் காலத்தே அறஞ்செய் விரும்பிய ஒருவன் தன் கையாலே பொருள்முடிப்பின் அளவைக் காட்டினான். கயற்கண்ணாளாகிய அவன் மனைவி, அப்பொருளை யெடுத்துக்காட்டாமல் அவனுக்குத் தகுந்தவள்போல நடித்து, 'ஐயனே! விளாம்பழமே வேண்டும் என்கின்றீர்! அது தருதற்கு நமக்கு விக்குள் வந்தடுத்துவிட்டதாற் காலமன்றே! என்செய்வேன்!' என்று கூறினாள். மற்றும், அவ்வாறே வேறு காட்டியவற்றிற்கெல்லாம் கட்டுரைத் திறத்தாலே பொய்ப்பொருளே கூறினாள். அவ்வாறு நேராமல் ஆற்றலுண்டாம்போதே பிறர்க்குக் கொடுத்துண்டலை ஓம்புவீராக!

"திங்களை முனிந்த முகத்தியரின் அத்திங்களின் கதிரை உள்ளடக்கிய ஆம்பல்போலும் வாயின் முறுவலை விழைந்தோர் எல்லையற்ற காலம்வரை தீயகதிகளிலே தோன்றி வெவ்வேறுடம்பெடுத்து நடிப்பர். கழனியிலுள்ள வெண்டாமரைமலர் ஒளிமிகு பெருமதியின் ஒப்பற்ற இனிய கதிருக்கு அஞ்சுவதுபோலக் கருங்குழலும் இனிய கிளவியுமுடைய மகளிர் கோலத்திற்கு அஞ்சினோர் வானவராகி யாவருந் தொழுமாறு துறக்கத்தை ஆள்வர்."

இங்ஙனம் அவனுக்கு நலந்தருவன கூறித் தன் அணிகலன்களை விரும்பிக் கொடுத்துப் போகவிட்டான். அவனும் வலங்கொண்டு தொழுதுசென்றான். சீவகனும் தன் வழியைத் தொடர்ந்தான்.

---

## ௧௦. கனகமாலை திருமணம்

### குறிஞ்சியும் முல்லையும்

ஒலிக்கும் மேகலையும் இனிய தொண்டைக் கனியனைய செவ்வாயும் உடைய பரத்தையின்மேற் கொண்ட அன்பினாலே மனைவியைத் துறந்து செல்பவர்போல மருத நிலத்தைவிட்டுக், கூட்டமாக மயில்கள் அகவ, மரங்களை முறிக்கும் யானைகளின் மதம் நாற விளங்குஞ் சுரத்தை யடையப் புறப்பட்டான்.

மயிலின் கழுத்துப்போலக் காயாமலர்கள் அவிழ்ந்தன. பேரரசர் முடிசூடும் நாட்களிலே முடியணிந்து வணங்கும் சிற்றரசர்போலக் கோங்கமலர்கள் பலவும் விரிந்தன. மயிர்க்கட்டுக்கட்டி அவ்வரசரின் பின்னே திரியும் சட்டையையுடைய மிலேச்சரைப்போல மரவங்கள் ஒருங்கே மலர்ந்தன.

மலையாடு உழக்கியதால், தேனிறால் உடைந்து மிகுதியான தேன் வரையிலிருந்தொழுகும்போது, தன்னைத்தாங்கிய சந்தனமரந் தளரத் தழுவியவாறு வீழும் தோற்றம், எப்போதும் உலகையளக்கும் திருமால் ஆழியைச் சங்குடன் ஏந்தி, அவன் மார்பிலே அசையும் பொன்னாரம் போன்று காணப்பெற்றது.

வெண்முகில் படிந்து தவழும் வானளாவிய பெரிய மலை, பெரும்பாம்பு தோல்கழல உரிப்பதுபோற் காணப்பெற்றது. அம்மலையில் வீழும் அருவிகள் முழவுபோல முழங்கின. அதுகேட்ட மயில்கள் வண்டுகள் பாட வளைந்தாடிப் பிறர் ஆடும் நாடகங்களைத் தோல்வியுறச் செய்தன.

அந்நிலத்தே கைத்தளம் என்னுங் கேடகமும் தேனிறாலும்போலச் சோளமும் தினையும் விளைந்திருந்தன. யானையின் விலாவெலும்புபோல அவரைகள் குலைகுலையாகக் காய்த்திருந்தன. அருவிநீரால் ஐவனநெல் விளைதிருந்தது. கரும்பும், கடாவிட்டுக் குவித்தற்குரிய கவைத்த

கதிர்களையுடைய வரகும், எள்ளும், பயறும், உழுந்தும் பிறவும் அளவின்றி விளைந்திருந்தன.

அவன் செல்லும் வழியிலே, யானையின் வெள்ளிய மருப்பினாற் பாறையாகிய உரலில் ஐவனநெல்லை இடித்துக் குவித்த அவலையும், தேனையும், இனிய வாழைக் கனியையும், உண்டவர் ஊனை உருக்கும் தினைமாவையும் வைத்துக் கொண்டு மானனைய நோக்கியர் வழிதொறும் இளைத்த வரை நோக்கித் தரும் இயல்பைச் சீவகன் கண்டான்.

முல்லைக்கொடி பெண் பேசிச் செல்ல, அதனை யொப்பிய குரவம் தன் பாவையைப் பொன்னிறத் தாரையணிந்த செல்வனுக்குக் கொடுக்கும்போது, தோன்றி விளக்கெடுக்கச், சுரும்புகள் குருந்தினின்று வழியும் தேனை நீராக வார்த்து ஆரவாரித்தன. செம்பஞ்சை யுருட்டி அரிய மரகத மணிப் பலகையின் மேலே பரப்பினாற் போல இந்திர கோபப் பூச்சிகள் பயிர்மிசைப் பரவின. தயிரை வார்த்த மயிர்முடியையுடைய கோவலர் ஊதும் குழலோசை பரவியது. ஆனிரைகள் அணிந்த மணிகள் ஒலித்தன. இக்காட்சிகளைக்கண்டவாறு சீவகன் குறிஞ்சியையும் முல்லையையுங் கடந்து சென்றான்.

**வனகிரியருகிற் பொழிலில்**

எதிரே வனகிரி தோன்றியது. ஆங்கே வள்ளிக் கிழங்கை அகழ்ந்த குழியிலே பொன்னும் வயிரமும் ஒளி விட்டன. வனகிரியின் நாற்றிசையினும் அருவிகள் வீழுந் தோற்றம் அவ் வனகிரி பக்கத்திலே செல்லாமல் அமைத்த மாமர வேலியினின்றுந் தப்பி மேலே துறக்கத்திற்குச் சென்று விடுமென எண்ணி, வெள்ளிக்கம்பிகளைத் தலையிலே பூட்டி வலித்து நிலத்திலே முளையடித்துக் கட்டினாற் போலக் காணப்பெற்றது.

அவ் வனகிரிக்கு முன்னே, சீவகன் சென்ற பொழிலில், மணி தெளித்தாற் போன்ற நிறைந்த நீர் ததும்பி, அதிலே தண்ணிய தாமரையும் கழுநீரும் நீலமும் ஆம்பலும்

பிறவுமாக எண்ணற்ற பலவகை மலர்கள் நெருங்கி வண்டு கள் பாணரெனப் பாட விளங்கிய சுனையொன்று காணப் பெற்றது.

அப்பொழிலின் அழகைக் கண்ட சீவகன் அங்கே தங்கினன். அப்போது வானத்தினின்றும் இழிந்த வான வர் மகள் போலத் தையலாள் ஒருத்தி தானணிந்த நான மும் மலருங் கமழ, அவ்வனத்திலே யுறைவானொருவன் கவினைக் கண்டு அவன் அருகே வந்து நின்றாள்.

அவள் அணிந்த உடை சிறிதேநெகிழ்தலாலே அவ ளணிந்தபொற்கலாபம் தோன்ற, ஒருகையால் தானணிந்த நெடுந்துகிலின் விளிம்பொன்றை ஏந்தி, மற்றைக் கையினால் ஆங்கிருந்த மலரொன்றைக் கிள்ளி, அழகுறத் தெறித்துக் கடைக்கண் நோக்கமாகிய நறும்புகையைத் தூதுவிட்டு, முகத்தை வளைத்து நின்றாள்.

சுரபுன்னையும் மரவமுங் கூடிய நிழலிலே நாகமரத் தைச் சார்ந்து நின்ற அவள் தன் அணிகல ஒளியினாலும் அமுதனைய மணத்தாலும் நிமிர்ந்தசிங்கநோக்குப் போன்ற நோக்கத்தாலே கழுத்தைத் திருப்பி அவனைப் பார்த்தாள். அவள் பார்வையை அவ்வனவாசி கண்ணுற் கண்டான். அவள் நோக்கத்திற்கு அவன் நோக்கம் நெஞ்சொடு நோக் காமை புலப்பட்டது. எனவே, வேட்கையை விளைவிக்க எண்ணிக் கொடி நடுங்கியது போல நடுங்கி அசைந்து முகி லிலே நுழையும் மின்னற்கொடி போலப் போர்வை சோர அதனுள்ளே மறைந்து நின்றாள். வனசரன் இவளுடன் கூட வந்தார் உளரோவென எண்டிசையும் பார்த்தான். ஒருவருமின்மை கண்டு, தனியே வந்த இவள் ஓர் இயக்கியே என்று கருதினன்.

ஆனால், அவளோ இவனை எங்ஙனமேனும் வயப்படுத்த வேண்டுமென உறுதி பூண்டாள். இவன் மனவுறுதி உடைந்து போகத் தன் அழகிய மலர்க்கண்களை அம்பாக வும் ஒள்ளிய புருவம் வில்லாகவும் கொண்டு பெண்ணுரு வத்தின் இயலுக்கிசைய அழகு கனிய நின்றாள். அரும்பை

அலர்த்தினைப் போன்ற கண்களையும் குறுநெறிக் கூந்தலையும் உடைய அவள், அண்மையிற் பலமுறை கொட்டாவி விட்டுக்கொண்டு, மேலே போர்த்த துகிலுடன் உடுத்த ஆடையும் நெகிழ, முதலிற் சிறிய முறுவலைக் காட்டிப் புருவத்தை நெற்றியிலே வளைத்து, அறிந்தவர் உயிரைப் பிளக்கும் காமனுடைய ஐங்கணைகளையும் எய்தாள். மாவடு வனைய கண்ணாள், கைவல்லான் எழுதிய ஓவியப்பாவை அழியுமளவும் ஒரு தன்மைத்தாய் நின்று அழிவதைப் போல, இவனைக் கூடும் ஒரு நோக்குடனேயே நின்றாள். அவள் கருத்தை அறிந்த அவ் வனசரன் தன் மனத்தே சிந்திக்கின்றான் :

"நெஞ்சே! மணமாலை யணிந்து, கருப்புரங் கலந்த முகவாசந் தின்று, மகளிரின் தோளைத் தழுவிய மைந்தர், பிறகு சில நாட்களில் அம் மகளிரே கண்களை மூடிக் கொண்டு செல்ல நேர்வதையுடையது இவ்வுலகம்! இதனை என்னென்பது!

"நெஞ்சே! புழுகை மார்பிலே யெழுதி மகளிரின் உயிர் தளிர்க்குமாறு அவர்களுடைய தோள்களிலே துயின்றவர்கள், இளமை நீங்கிய பிறகு, தூவியை யிழந்த பறவை போலத் தோன்றி வருந்துதலால், அம் மகளிர் தம் கண்களைப் புதைத்துக்கொண்டு அவ்விடத்தினின்றும் நீங்குவர்.

"நெஞ்சே! இனிய புகையூட்டப் பெற்ற—வெண்ணெய் போல மென்மை தங்கிய—பள்ளியின் மேலே அன்பினால் உருகும் நல்லார்களுடைய தோளிலே துயின்றவர்கள், முதுமையினால் தங்கள் புலன்கள் குறைந்து தளர்தலாலே, அம்மகளிர் தம் கண்களைப் புதைத்து நீங்குவர்.

"நெஞ்சே! மிகப்பெரிய தச்சன், குருதியைத் தோய்த்து, நரம்பாலே என்பினைக் கட்டித், தசையை அப்பிப், புன்புறம் மறையத் தோலைப் போர்த்து, அப்புறம் அழகுற மயிராலே வேய்ந்து, ஒன்பது வாயில் அமைத்து, மயங்கினார் அழகென்று மருள ஊன் பயின்ற குரம்பையைச் செய்தான். ஆதலால் அவன் மிகவும் நல்லவன்.

"நெஞ்சே! படைக்குந் தொழிலையுடைய தச்சன் உடம்பின் மெய்ந்நிலையை நாம் பார்க்கலுற்றால் அப்போது எனக்குற்ற ஆதரவாய்க் கிடக்குமாறு அகக்கண்ணையும் புறக்கண்ணையும் மறைத்து வைக்கின்றனன்.. அது மட்டுமோ, இயல்பாய அறிவு மிக்கவரென்னுமலும் கலைகளை நீந்தினரென்னுமலும் எல்லாருளங்களையும் தளருமாறு செத்தும் மாண்பினனாதலின் நல்லவன்!"

இவ்வாறு உள்ளத்தைத் தேற்றி அவ் வனசரன் இருந்தான். அவனுறுதி கண்ட அவள், 'யான் வந்த நோக்கத்தைக் கூறினல்லது சிறிதும் அருளான்,' எனக் கருதி அவன் காதிற் படுமாறு கூறுகின்றாள் :

"வேயனைய தோளினர்க்குச் சிறந்த துணையாகிய கேள்வனே! அநங்கமா வீணையென்பது என் பெயர். யான் ஒருநாள் என் தோழியருடன் வனத்திடை விளையாடிக் கொண்டிருந்தேன். அப்போது மலையிடை முழுகும் மின் போல முகிலிடையே ஒரு விஞ்சையன் சென்றான். மயிலினம் இரிந்தோட அவற்றுள் ஒரு மயிலை எடுத்துக் கொண்ட இளஞாயிறு போல அவன் என்னை எடுத்துச் சென்றான். அங்கே, நிலைபெற்ற கற்பினளாகிய அவன் மனைவி என்னைக்கண்டு விடுவித்தாள். யான் இக்கொடிய காட்டிலே வீழ்ந்தேன். தாயிலாக் குழவி போல இறந்துபடத்தக்க துயரமெய்தி நின்ற நான் நின்னைக் கண்டவுடன் அத் துயரொழிந்து துறக்கமுற்றேனானேன். இனி, என்னை அருள் கூர்ந்து நோக்கி ஆதரிக்காமல் விட்டால், தீயினுள்ளே அமிர்தத்தைச் சொரிந்தாற் போல என்னுயிரைக் காமத்தீயிலே பெய்து கெடுப்பேன்."

அவளுக்கு அவன் அறிவுறுத்துகின்றான் :

"அழகிய கணையமரமே போன்ற தோளும், மலையென அகன்ற மார்பும், நீர் நிறைந்த பொய்கையிலே மலர்ந்த தாமரையனைய கண்ணும், ஞாயிறனைய முகமும் வருத்தும் என மயங்கிக் காமநோய் தோன்றி வருந்தும் பேதையே! இதனைக் கேள் :

"மலரும் புழுகும் மூழ்கி நறுமணப் புகை தவழ்ந்து முல்லைக் கண்ணிசூழ்ந்த கூந்தலாய்! இவ்வுடம்பு தீமை செய்கின்ற வளியையும் பித்தையும் ஐயையும் பொருந்தின மலங்களும், குருதியும், தசையும், என்பும், ஈரலும், மூளையும், கெடுதி செய்யும் குடர்களும், தோலும், நரம்பும், வழும்புமாக இருக்கும். மற்றும் விழுக்கும் நிணமும் இவை யொழிந்த உகிரும் மயிரும் கண் உமிழும் பீளையுங் கொண்ட புழுப்பயிலும் இவ்வுடம்பு பொல்லாத ஊன் பிளந்து தனியே கிடந்தபோது, இதனை யெவர்தாம் விழித்துப் பார்ப்பார்? இப்போது பிளந்து கிடவாமையால், விளைந்த காமத்திலே காக்கை கரிக்குருவிக்குப் பொன் போலத் தோன்றுங் கொள்கையாயிற்று. மேலும், உள்ளொழியப் புறத்துருவு நன்றென்றனையாயின், முற்கூறிய வெல்லாம் நிறைந்தவொரு தோல் துருத்தியைப் புருவமுங் கண்ணும் மூக்கும் விளங்குற எழுதி வைத்தால், நன்றெனக் கருதுவதொரு பொருளில்லையே? ஆதலின், இறைச்சிக் குவியலாகிய இதனைக் காப்பியக் கவிகள் மக்களுக்குக் காமத் தீ பெருமாறு வேறுபடுத்தி விட்டனர்."

இங்ஙனம், இவன் அநங்கமா வீணைக்கு அறிவுரை கூறிக் கொண்டிருக்கும் போது பவதத்தன் என்போன் அங்கே தோன்றினன்.

**பவதத்தன் புலம்பல்**

" காதலையுடைய என் மாமன் மடமகளே! தாமரை மலர்த்திருவே போல்வாய்! பூங்கொம்பே! பண்ணனைய இன்மொழியாய்! பாவையே! கொடியே! பக்குவமாக உண்ணுந் தேனே! அமிர்தே! என்னுயிரே! உன் திங்கள் மதித்த முகத்தினுள்ளவை வாளோ, கயலோ, கூற்றோ, வேலோ, போதோ அறியேன் என்றும், நின் கருங்குழல்மேல் வண்டிருப்பினும் நின் இடை துன்புற்று முரியும் என்றும் நின்னியலை ஏத்துவேன். இலவமலரனைய அழகிய நின் சிற்றடிகள் அஞ்சிவாடிக் கைவலான் சித்திரித்த பொற்சிலம்பு நக மலர் நிறைந்த நிலத்துலவும் போதும் அந்நிலத்திலன்றி யென் உயிராகிய மலர்மேலே மிதித்து நடப்பாயென

வெண்ணுவேன். அங்ஙனம் மலர்மீதுலவும் நீ, நான் கடல்போலக் குமுறி நையும்படி மறைந்தொளித்தல் பண்போ? இதற்குக்காரணம் என்? உணர்கிலேன்! நின்பாலுரிய காதலையும் மீட்கவல்லேன் அல்லேன்! நீ எங்குளாய் ?

"பணிமகளிரொடு பந்தாடுகின்ற நின்னைக்கண்டு மயங்கிப் பிணித்த நோயுடன் யான் கிடக்க, அந்நோயைப் பிறர் வாய்க் கேட்டபோதே, 'யாம் போவோம், துணிக' எனக் கூறி வரவிட்டனை. நின் மொழிப்படியே போந்த யான் வருந்துமாறு, மறுமாற்றமும் உரையாமல் மறைந்து போகின்றாயோ."

இவ்வாறு புலம்பிய பவதத்தன் அநங்கமா வீணையை நோக்கியவுடன், "இயக்கியே! என் காதலியை நின்னொடிணைத்தால் ஒப்பாயிருப்பாளென்றுன்னி, அவள் அழகைக் கெடுத்தற்கு அறிவைக் கலக்கிக் கொண்டுபோய் மறைத்து வைத்தாய்! நீ அவளைத் தந்தருள்வாயாக! தந்தனையேல், நீ விரும்பின யாவுந் தருவேன்," என்று வணங்கி, அழகிய களிறு தன் வலிய பிடியைக்கெடுத்து மயங்கினாற் போல மயங்கினான்.

"வளமிகு செல்வத்தையுடைய மத்திமநன்னாட்டிலே தாமரைப் பொய்கைகள் நிறைந்த பதுமபுரத்தில் என் தந்தை புகழ்த்தத்தனுக்கும் அன்னை சினதத்தைக்கும் என் மாமன் செல்வநாமனுக்கும் என் மாமி சித்திரமாமாலைக்கும் பிற சுற்றத்தார்க்கும் வருத்தமுண்டாக்கினேன். அங்கேகினால் அவர்கட்கென்னுரைப்பேன்? இனி, இங்குச் செய்வதுதான் என்னே ?

"பாவையே! 'நீர் வேட்கையாலே வருந்தினேன்,' என நீ கூறியதனாலே, காட்டிலே பொய்கையைக் கண்டுபிடித்துச் சென்று, தாமரையிலையைத் தொன்னைபோல் வளைத்து அதனுள்ளே நீர் கொண்டுவந்தேன்; இங்குனைக் காண்கிலேன்!" என்றுரைத்து, அழுதழுதுருகி நைந்தான்.

நிற்க, தன் காதலியைக் காணாமல் அழுகின்ற பவதத்தன் பிதற்றல்களையும், அநங்கமா வீணை வனவாசிமேல்

வீசிய காம வல்லையையும் கண்டு நகைத்த சீவகன், தன்னை வனசரன் கனிமுதலியன நல்கி வழிநடை வருத்தந் தீர்ந்து செல்க என வேண்டியதற்குத் தான் வருத்தமின்றி யிருப்பதை நயமுறக் கூறியதுடன், 'நீ இங்ஙனமே காமத்திற்கு இரையாகாமல் இரு,' என்று கூறிப் பாராட்டினான். பிறகு பவதத்தனை அணுகினான்.

சீவகன், 'நண்பரே! நீரடைந்த வருத்தமென்னை? அதற்குக் காரணம் என்னை? நும் பெயரென்?' என்றான்.

பவதத்தன், 'நம்பி! இங்கே என் தீவினையாலே பூங்கொடிபோல்வாளை யிழந்தேன். பன்னூற் கேள்வி யுடையேன், பவதத்தன் என்னும் பெயரினேன்,' என்றான்.

சீவகன், 'கைப்பொருள் நல்கியேனுங் கற்க. அவ்வாறு கற்பின் அகக்கண் கிடைக்கும். அது மெய்ப்பொருளை விளக்கும். உள்ளமெலிவை நீக்குந் துணையுமாகும். ஆதலின், கல்வி நீங்கலாக உள்ள பொருள்கள் பொய்ப் பொருள்கள். கல்வியே பொன்னும்; புகழாகிய துணைவியுமாம். இத்தகைய கல்விப் பொருளைப் பெற்ற நீர் வருந்துவதென்கொல்?' என்றான்.

மற்றுங் கூறுகிறான் :

"அன்புநூலாக இன் மொழி மலரை வைத்துத் தொடுத்து காதலாகிய சாந்தினாற் கைபுனைந்து தக்க இன்ப மூட்டுகின்ற காம மாலையைப் பகற்பொழுதினுஞ் சூட்டி அகலாதிருப்பினும் நங்கையர்க்குக் கண்ணும் மனமும் பிறர்பின் செல்லும். அப்பண்பு நங்கையருக்கு அடிப்படையானது. மற்றுங் கேண்மின்! பெண்ணெனப் படுவன மனவலி யுடையனவல்ல; குடிப்பிறப்புக் கெடுமென்று பார்ா நிறையுடைய வல்ல; ஆயிரம் முகமாக நோக்கும் மனத்தவாம். பத்துப் பொன்னை எண்ணி அங்கையில் இட்டால் பொருட் குறைபாடில்லா இந்திரன் மகளே யெனினும் உருகி அவர் பின்னே நிற்பாள். எனினும், கணவன் சாகிற் செத்து அவன் நோவின் நொந்து, அவன் நீங்கின் இதனாற்

புயனென்னென்று மலரும் புனைதலின்றி அழகுடனே தனித்திருந்து, காமன் எனப் பெயரையுங் கூருராய்க் கணவனையே தொழுது வாழ்வாரே அவனுக்குத் தேன் மலர்த் திருவினை டொப்பர். அவர்களே கணவன் துன்பந் தீர்ப்பவர்."

இங்ஙனம் சீவகன் கூறக்கேட்ட பவதத்தன் "ஐயனே! நின் தோழி அத்தகையளோ; கணவனைத் தொழுதுவாழும் பண்பினளே. அவள் என்னைக் கண்ட கண்களாற் பிறரை நோக்காப் பண்புடைய பெருமாட்டி. அவளையான் இழந்தும் வாழுமா றெங்ஙனம்?" என்றான்.

சீவகன் நகைத்து, 'அன்னளாயின் இரங்கல் வேண்டா. இம்மந்திரத்தை ஓதி வில்லினின்று கணைசெல்லும் தொலைவு நீர் சென்றீராகுல், அவளை இயக்கி அங்கே கொணர்ந்து தரும். நீர் கோல் வளையாளைக் கைக்கொண்டு செல்க!' என்று மந்திரத்தைக் கூறினான். அவன் அதனை ஓதி அவ்வாறே சென்றபோது தான் மெலிந்து பின்னிற்கும் தன் காதலியைக் கண்டான். அவளடியிலே வீழ்ந்து தழுவி அரற்றினான்; தானுற்ற துன்பமெல்லாம் வருந்தாமற் கூறினான்.

முன்னாளிலே மனையைத் துறந்து போந்த அநங்கமா வீணையும் இவன் பேரார்வத்துடன் இவளைப் பெறவேண்டுமென்று நினைத்துப் பல வுருவாக அம்மந்திரத்தை யோதினதைக் கேட்டாள். வனவாசி மேற்சென்ற வேட்கையை விட்டுக் கணவன்மேல் அன்பு கொண்டாள். சீவகன் தன் வழியைத் தொடர்ந்தான்.

**வனகிரியின்மேல்**

மேலே படிந்த முகிலாகிய மெழுகாற்செய்த முகபடாமும், ஒழுகும் வெள்ளிய அருவித்திரளாகிய மத்தகத்தினின் றொளிரும் நெற்றிப் பட்டத்தையும், ஏறுவார் காலைச் சூழ்ந்துகிடந்து உரிஞ்சும் பொன்னாகிய மதத்தினையும் உடைய வரையாகிய யானையின்மேல் அதனைத்

தொழுது மூங்கில் வேராகிய புரோசைக் கயிற்றைப் பிடித்து, மூங்கிற்கவையிலே அடியிட்டேறினன்.

அம்மலையின்மேல் தீவினைபோகத் தொழுவதற்குவரும் மகளிரின் அடியிலேயுள்ள சிலம்புகள் உரைந்தும், அடியிலுள்ள செம்பஞ்சு நிறைந்தும் இருந்தன. ஒரு பக்கத்தில் சாந்தும் கோதையும் சுண்ணமும் நறுமணப் பூம்புகையும் அவியுஞ் சுமந்து பொன்விளக்கேந்தி அருகனைத் தொழச் செல்லும் மாந்தரின் ஆரவாரம் மிக்கது. ஒருபக்கம் துறவு கொண்ட மன்னர் கழற்றியிட்ட முடியும் தோளணியும் ஆரமும் ஒளிவிடுங் குண்டலமும் பிற அணிகளும் ஒளி வீசிப் பின்னிக்கிடந்தன. ஒருபக்கம் கைத்தளம்போன்ற தேனிறாலை ஆண்குரங்கு தன்கையாலே கீண்டதனாற் சேரக் கிழிந்து வழியுந்தேன் மிளகைவாரிப் பழங்களைத் தழுவி அருவிபோல் ஒலித்து வீழும்.

சீவகன் இக்காட்சிகளைக் கண்டுசென்று சுனையிலுள்ள நீலத்தையும் மராமலரையும் தேன்பிலிற்றுஞ் சுரபுன்னையையும் கோங்கினையும் கொத்தாக மலர்ந்த சண்பகத்தினையும் வேங்கையையும் எடுத்துச்சென்று, அருகப்பெருமான் திருவடிகளில் இட்டு வாழ்த்தெலாங் கொண்டேத்தினன்:

தேவபாணிக் கொச்சகவொருபோது

“ முனிமை முகடாய மூவா முதல்வன்
தனிமைத் தலைமை தனதுதான் என்ப
தனிமைத் தலைமை தனதுதான் என்றாற்
பனிமலர் தூய்நின்று பழிச்சாவா றென்னே ?”

“ மலரேந்து சேவடிய மாலென்ப மாலால்
அலரேந்தி அஞ்சலிசெய் தஞ்சப் படுவான்
அலரேந்தி அஞ்சலிசெய் தஞ்சப் படுமேல்
இலரே மலரெனினும் ஏத்தாவா றென்னே ?”

“ களிசேர் கணையுடைய காமனையுங் காய்ந்த
அளிசே ரறவாழி அண்ணலிவன் என்பர்
அளிசே ரறவாழி அண்ண லிவனேல்
விளியாக் குணத்துதிநாம் வித்தாவா றென்னே ?”

இவ்வாறு போற்றி அருகனடியைத் தொழுது அன்னம் உறங்கும் அழகிய அவ்வனகிரியினின்றும் முகிலினின்றிழியும் மின்னென இறங்கி நடந்து சுரத்திடையே சென்றான்.

**மத்திமநாடு**

ஒளிவிடும் வேல் தோற்றலின், விரும்பின் நீயும் போருக்கு வருகவென நீலமலர்க்கு ஓலைவிடும் கண்களையும் உருகும் கொடியிடையையும் ஏலம் கமழுங் கூந்தலினையும் உடைய மகளிரைப்போல ஐம்புலனுக்கும் ஆர விருந்தளிக்கும் ஆலைக் கரும்புமிகும்—மத்திமநாட்டை அடைந்தான்.

மள்ளர்கள் முதிர்ந்த கள்ளைப்பருகிக் கரும்புகளைத் துண்டுகளாக்கி, முகிலின் குரல் என்று மயில்கள் அகவுமாறு, ஒலிசெய்யும் ஆலையிலேயிட்டுக் கொள்ளும் சாறு மிகுந்து கால்வழியே நெல்வயலிலே பாயும் மடையை அலைக்கும் வளமுடையது அந்நாடு. அங்கே, அன்னச் சேவல்கள் தாமரை மலரைத் தலையணையாகவும் குவளை மலரைக் காலணையாகவுங்கொண்டு, தோலடியையுடைய பெடையைத் தழுவியுறங்கும் மலர்ப்பொய்கைகள் திசையெங்கும் மல்கி நீர்வளமிக்கது.

**ஏமமாபுரம்**

இவற்றைக் கண்டுகளித்துச் செல்லும் சீவகன், களிறு மறையுங் கதிர்விடு செந்நெற் கழனியையுடைய அந்நாட்டின் தலைநகராகிய ஏமமாபுரத்தை முரசுமுழங்குங் காலத்தே விருப்பத்துடன் அடைந்தான்.

புறநகரிற் செல்கையில் எதிரே ஒரு மணமகன் போந்தான். அவனை நோக்கி, 'இந்நாடும் நகரமும் எப்பெயருடையன?' என வினவ, அவனும் வாய்மணக்கக் கூறினான் :

“இந்நாடு மத்திமநாடாகும். இந்நாட்டில் எத்திசைச் செல்வமும் இறைகொள்வதால் இல்லவர்க்கு வாரிவழங்கும் இவ்வூர் ஏமமாபுரமென்னும் பெயரையுடையதாகும். நீ இத்திசைக்குப் புதியவன்போலும்!”

சீவகன், 'ஆம்,' என்ன, அவன், 'இது உண்ணும் நேரம். என்னுடன் முதலிற் பேசினையாதலால் நட்புடன் தங்குக!' என வேண்டினன். 'யான் முதலில் நகரைப் பார்த்தல்வேண்டும். பிறகு, நின்னைப் பார்க்கிறேன். சென்றுவருக!' எனக் கூறிய சீவகன் நகரினுட் சென்றான். யானையின் மும்மதம் மணமகள் கூந்தலெனக் கமழ்ந்தது, காலிலே செம்பொன்மாலையும் மலர்க் கண்ணிகளும் இடறின. இவனைக் கண்ட மகளிரின் கடைக்கண்கள்கொண்ட மகிழ்ச்சி, இவன் நீங்கினவுடன் நீங்கி ஏக்கமுறுமாறு சென்று, ஒரு பொய்கைக்கரையிலே மண்டபமனைய பளிக் கறையருகிலே அமர்ந்தான். அவனுக்கு அப்பொய்கை யின் காட்சி வருத்தத்தை நல்கியது.

**சீவகன் வருத்தம்**

வளவிய சிறகினையும் பவள வாயினையுமுடைய பெடையன்னம், அறியாமை மிகலால், தன்னிழலை நீரிலே கண்டு, அதனை வேறொரு பெடையெனக் கருதிக், 'கள்வ! நின் காதலியை நீரினுட் கண்டேம். இனி, முன்பெலாந் தேற்றத் தேறுவதுபோல இப்போதும் தேறேம். என்னைத் தொடர வேண்டா,' என்று தன் சேவனுடன் ஊடிச் சீற்றத்துடன் நோக்கி விலகியது. அதுகண்ட சேவல், 'யான் நின்னையன்றி வேறொரு பெடையை அறியேன். ஐயமுறுவதேன்? அன்றியும் நான் பிழைத்திருப்பது நின் ஏவலாலே. ஆதலின், நீ ஊடாதே,' என்று பெடையின் மனக்கோணல் நீங்கப் பலமுறை சிறகால் தழுவி வணங்கித் தாழ்ந்துநின்றது. இங்ஙனம், கலையுணர்ந்த மகளிரின் உள்ளத்திலே காமத்தினாற் கனிந்த வூடலை, அவ்வூடலின் நிலையுணர்ந்த மைந்தர்கள் தவிர்த்து முறைப்படிக் கூடிமகிழ்வதைப் போலச், சேவல் பெடையின் ஊடலைநீக்கி மலர்மிசைத் தழுவிய தன்மையை நோக்கிக் குன்றையொப்பச் சலிப்பற்றவன் நெகிழ்ந்து சிந்திக்கிறான்:

"தத்தையின் ஊடலைத் தீர்த்தற்கு யான் அவள் முகத்தைநோக்கின், எதிர்நோக்கினால் ஊடல் நீங்கிவிடுமென்று தலையைத் தாழ்த்தி நிலத்தை நோக்குவாள்.

ஊடல்தீரப் பலவுங்கூறின், அவற்றை மாற்றித் தான் மெல்ல ஒருமொழியை மிழற்றுவாள். இத்தன்மையுடைய அவள் முன்னையாள்போலவே இப்போது என் முகத்திலே தோன்றுகின்றாள்.

பாவையர், அன்புற்றால் ஒரு பயனுமின்றியே வருத்த முற்றார்போல் நெட்டுயிர்ப்புக் கொள்வார்கள். அங்ஙன மிருக்க இது பிரிவேயாதலின், அதனால் தோன்றிய பேரன் புத்தீயிலே முழுகி யிறந்துபடுவளோ? அம்பனைய நீண்ட ஒளிமிகு கண்ணாளின் மார்புந் தோளும் மனவெப்பத்தாலே நாடொறும் நலங்குறைந்து தனியே வெதுப்பும் அணையிலே புரள்வாளோ? யான் வந்தபிறகு எனக்குற்றதென்னோ வென எண்ணி உருகி வாடுதலாற், கருகிவாடிய அழகிய கோதையாள் இருகண்ணீருந் தன் மார்பிடைத் தடம்போல வடிந்துவீழ அழுவாளோ?

வண்டுகள் வாழும் யான்பழகிய கோதையாள், மணத் திற்குமுன் கண்டபோது, தன் கண்ணெனுங் கைகளாலே முகந்துகொண்டு பருகிய—என்னுவியை உருக்கும்—ஒரு நோக்கமுண்டு. அஃது இப்போதும் என்னுயிரை உருக்கு கின்றது. யாங்கள் இருதலைப்புள்ளேபோல இருவர்க்கும் ஒருயிரே உடையேமாதலின், அவள் காதலாலே உயிரை விடுவாளாயின், என்னுயிரும் தீமையுறும். என் உயிர் நீங்காமையின் அவளும் இறந்துபட்டிராள். மற்றும், அவள் விஞ்சைவல்லவள். ஆதலால், யாவுமுணர்ந்து ஆற்றியிருப் பாள்.

மலரினுள்ள தேனைப்பருகி அதனிற்றங்கும் வண்டைப் போன்ற தலைவருக்குக் காதலால் வருங்குற்றம் பெருகி யிருக்குமென்று, அறிவுடையோரிகழுமாறு என் உள்ளம் காதலிலே சுழல்கின்றது. இவ்வாறு நினைக்கும்படி காதல் மிகுந்தபோது துன்பத்திற்குத் துணையென்று கற்ற கல்வி யும் பிறர்குற்றம் நீக்குதற்குத் துணைபுரியுமன்றித் தன்குற் றம் நீக்கிக்கொள்ளத் துணைபுரியாமை கண்ணினுட்கிடந்த அஞ்சனம் கண்ணுக்குப் பயன்படாதது போன்றதாயிற்று. இத்தகைய தீவினைதான் என்னே!

தேன் மணக்குங் கோதையரது நலத்திலே பற்றிய காதலாலும், அவரைக் கூடுதலாலும் வந்துசேர்ந்த தீவினையாகிய தேரிலே சென்று நரகத்தே துன்புறும்போது, அங்கே அருகனல்லது புகலாவார் யாவர்? ஆதலின், ஈண்டும் அவனே அடைக்கலமாவான்.''

இங்ஙனம், காமவேட்கை யூர்தலாலே வருத்தமுற்ற—மாய்தலைக்கொண்ட—உள்ளத்தைத் தடுத்து, மலர்செறிந்த இனிய காட்சியையுடைய அப்பொய்கையின் அழகைக் கண்டு களித்தவாறு மீட்டும் அங்கேயே தங்கியிருந்தான் சீவகன்.

**விசயன் நட்பு**

பகை மன்னர் கொடுக்கும் திறையாகிய நீள்செல்வம் குறையாதுறையும் அரண்மனையிலே, வெம்போரிற் சிறந்த தடமித்தன் என்னும் மன்னனுக்கும் அன்புகெழுமிய கற்பினளான வேய்த்தோளினள் நளினைக்கும் சிறப்புடன் தோன்றியவன், செல்வமுங் கல்வியுமெல்லாம் நிறைந்த அழகினன், விசயனென்னும் பெயர் ஊழிவரை உலகு புகழுமாறு நின்றவன் சீவகனிருக்கும் பொழிலிலே தன் மணங்கமழச் செல்லும்பொழுது கல்விக்கடலான காளையைக் கண்டு அவனிருக்குமிடத்தை அடைந்தான்.

"இந்நாட்டிலே இவ்வூரினுள்ளோர் இவ்விடத்தை அடையார். ஆதலின், நீ எந்நாட்டாய்? எவ்வூராய்? எப்பெயராய்? உரைப்பாயாக!'' என வினவினான். புகழை விரும்புஞ் சீவகன் தன் நாட்டையும் ஊரையும் பெயரையும் மறைத்து, வேறு நாடும் ஊரும் பெயருங் கூறினான். எனினும் தான் கூறியவை பொய்மைப்படாமல் அப்பொருள்களையுடையவா யிருக்குமாறே சிந்தித்துரைத்தான்.

அதனைக்கேட்ட வள்ளலாகிய விசயன், "விற்றொழிலில் நிகரிலாத இந்திரனும் இவனையொவ்வான். இவ்வேலான் யாம் ஏற்குமாறு பயன் மிக்கவன்,'' எனத் தன் அறிவினாலே மிகுதியும் ஆராய்ந்து, 'எம் இறைவனிடம்

இவன் உளம் பிணிப்புற நட்புக்கொள்ளுமாறு அழைத்துச் செல்வேன். அதற்குமுன் இவன் கருத்தையும் அறிவேன்,' எனக் கருதினான்.

பிறகு, சீவகனை நோக்கி, 'இனி, இந்நாடு நின்னாடு. இவ்வூர் நினதூர். இந்த அரண்மனையும் நினதே. யாங்களெல்லோரும் உன் உறவினர்,' என உறவுமுறை கொண்டாடினான். சீவகனும், அவ்விடத்துக் கூறிய முகமனின் பன்மையையெல்லாம் ஒப்புக்கொண்டான். 'இனியும் இதனைத் திரும்ப மொழியற்க,' என முகமனுரைத்தான்.

பின்னர், மன்னன் மகன் ஆங்குள்ள மாமரத்திலிருந்து கனியொன்றை உண்ண விரும்பி, ஒளிவிடுங் கணையினாலே பலமுறையெய்தும் குறி தவறியதால் அங்ஙனவை விட்டு நின்றான். அதனைக்கண்ட சீவகன் அவ்வில்லையும் அம்பையும் வாங்கி ஒரு கணையினாலேயே இனிய அமிர்தம் ஊறும் அப்பெரிய கனி விழ எய்திட்டான். மற்றும், அவன் எய்த கணையும் மாங்கனியும் நிலத்திற்கு வில்லளவு உயரத்திலே வரும்பொழுது அவை தன் கையிலே தானிருந்த இடத்திலேயே வரப்பெற்றுக் கொடுத்தான். விசயன் வியப்படைந்து அணுகித் தழுவிக்கொண்டான்.

'நீ வில்லை யேந்தியதும், அம்பைத் தொடுத்ததும், குறிவைத்ததும், அப்போது தோளிருந்தபடியும், அம்பெய்ததும், அது மாங்கனியின் காம்பையறுத்துக் கனியுடன் திரும்பியதும் நோக்கின் நின்னை வில்லைப்படைத்த கடவுளெனத்தகும்,' எனப் புகழ்ந்தான்.

பிறகு, 'மராமரம் ஏழும் எய்த வில்லேந்திய தடக்கை யான் இராமனை வல்லனெனப் புகழக்கேட்டோமேயொழிய நேரிற் கண்டதில்லை. இனி, இவனுள்ளம் நம்மைவிட்டுப் போக நினையாவாறு, இவன் உவக்கும்படி யியற்றுவேன்,' என்றெண்ணி, அவனை அரண்மனைக் கழைத்துச்சென்றான். ஆங்கு, அவன் வழிவந்த வருத்தமெலாம் நீங்குமாறு ஓம்பினன். பிறகு, அரசனுக்கும் இவன் திறனை விளக்கிச் சொன்னான்.

**அரசன் ஆதரவு**

அரசன் விசயன் மொழிந்ததை விரும்பிக் கேட்டுச் சீவகனை அன்புடன் வரவேற்று முகமன் பல கூறிக், 'காளையே! நின்மேற் காதலுடையேம்,' என இயம்பினன். மற்றும், * கிலுத்தம், கூர்ப்பரம் எனுமிரண்டினும் முன் கைச் சந்தைச் சார்ந்து, நல்லிலக்கணமுடைய விரல்களைத் தினுக்குமருகே யானைத்தோலின்கண் சுண்ணம்புநீற்றை உரைத்ததுபோன்ற வெண்மையையும் சிறுமீன்போன்ற தழும்பையும் உடைய மூவிரல் நீளத்திலே நிலைத்தழும்பைக் கண்டு விற்றொழிலுக் கரசனென எண்ணினன். 'தலைமை பெற்ற வில்வல்லாற் பேராசிரியனாகிய துரோணனுக்குப் பின், வானிலே ஒளிரும் வெள்ளியமலையின்கண் விஞ்சைய ருலகினல்லது, நிலவுலகினில் இல்லையென்பர். அவர் வாய் மடங்க இவ்வேலவன் தோன்றினன்,' எனப் புகழ்ந்தான்.

மேலும், "விசயன் விற்றிறன் அறியாதவன்; அதற்கு முற்றிலும் புதியவன். இவனல்லாமல் மற்றும் நால்வருளார். அவர்களும் கலைமாண்புடன் வளர்ந்தவரல்லர். இவர்கட்கு நீ கலையில் வெற்றியை நல்கவேண்டும். இது என் வேண்டுகோள்," எனவும் உரைத்தான்.

சீவகனும் அவன் வேண்டுகோளை யேற்று, அற்றை நாள் முதலாக அவர்கட்குக் கலை பயிற்றிவந்தான். கலை பயிலும் ஐவரும் அவன் அடிகளில் செருப்பைப்போலப் பொருந்திக், காதல்மிக நிழல்போல நீங்காராயினும் தீப் போல எண்ணி மிக நெருங்காராய், அவன் குறிப்பறிந்து வேண்டுவன முடித்துக் கலை பயின்றுவந்தனர்.

**ஒருநாள் மாலை மலர்ப்பொழிலில்**

நிற்க, சீவகன் ஒருநாள் அழகுமிக்க மலர்ப்பொழில் ஒன்றையடைந்தான். அப்பொழில் பலவகை மணங்களுடன் மணமகளைப்போலப் பொலிவுற்றுக் கண்ணுக்கு விருந்தளித்தது.

---

* கிலுத்தம் - முன்கைச் சந்து. கூர்ப்பரம் - முழங்கைக்குமுன். காழ்ப்பேறியதால் யானைத்தோல் போன்றிருந்தது.

பச்சைக் கயிற்றிலே பசும்பொன்னலாகிய தாலியை வரிசையாகக் கோத்தாற்போல வேங்கை மலர்ந்தன. அழுக்கற்ற வெண்மையான ஆடையை நீரிலே தோய்த்து மேலே போர்த்துவிட்டாற்போல அழிஞ்சில் தேனொழுக அலர்ந்தன. செந்தலையும் வெண்கரையுங்கொண்ட நெற் பொறிபோலப் புன்கம் பூத்தன. மேற்சூட்டுவையாத—குறட்டுடன் ஆர்கள் அழுந்தத் தைத்துச் செய்த—தேருருளை போல மகிழ் மலர்ந்தன. உயர் சண்பகம் கோழியின் கொழுவிய முள்ளைப்போல அரும்பின. பாதிரி கோசிக ஆடைபோல் அலர்ந்தன. வெண்கடம்பு பந்துபோலப் பூத்தன. முல்லை காட்டுப்பூனை விரும்பச் சிரிப்பனபோல அரும்பின. குருதிக்காந்தள் பாம்பு படத்தை விரித்துக் கொட்டாவி கொண்டாற்போல முகைநெகிழ்ந்து மலர்ந்தன. குரவம் கையிலேந்திய குறும்பூழின் கொழுவிய கால்போலக் கொழுவிய முகையைச் சுமந்தன. செம்முல்லை கூத்தியரிடத்துக் கூரெயிறுபோல அரும்பின.

சீவகன் இம்மலர்களையும் பிற மலர்களையும் எடுத்தான். நூல்களிற் கூறியவாறு நயந்தோன்ற, வானவரும் மயங்க, மணியும் முத்தும் பொன்னும் பவளமுங் கோத்தாற்போலத் தன் அழகிய விரல்களின் நுனியால் இம்மலர்களை இடையிடையே பலவின் சுளைகளை யிணைத்து ஒரு வகை மாலையைக் கட்டினன். அதுவுமன்றித் தனியே மற்றொரு மலர்மாலையும் பந்தும் புனைந்தான். இவற்றை நறுவிய புழுகிலே தோய்த்து, அரும்புகளுக்குச் சந்தனத்துடன் கூடிய பனிநீரையும் புழுகையுந் தெளித்தான்.

அப்போது பாலனைய தீஞ் சொலாள் படிவி (பணி மகள்) ஒருத்தி வந்து வணங்கினள். அவள் தன் நீண்ட வாளனைய கண்கள் வாயாகக் கொண்டு இமைத்தலாகிய சொல்லாலே, ‘இம்மலர்மாலைகளும் பந்தும் கனகமாலைக்குப் பொருந்தியவை,’ என்றாள். சீவகனும் கொள்கவெனக் கொடுத்தான். அவள் அவனை வணங்கி வாங்கிச்சென்று மாவடுவையும் வேலையும் குவளைமலரையும் கயலையும் வனப்பினலே அழித்த கண்களையும் சிலம்பணிந்த அடிகளையும்

உடைய கனகமாலைக்குக் காட்டினாள். அவளும் வாங்கிக் கொண்டாள்.

**மாலைப் பாசுரம்**

அம்மாலையை வாங்கின கோதையாள் தன் விரல்களிலே ஏந்திப் பார்த்தபோது அது ஒரு ஓலைப் பாசுரமாக இருப்பதைக் கண்டு மலராகிய எழுத்துக்களைப் படித்தனள்:

"அரக்காம்பல் போல மணங்கமழும் பவளவாயார் அமுதனையார்-பலரும் ஆடும் நாடகங் கண்டு வாழாதவர் வாழ்க்கை யெல்லாம் மக்களாய்ப் பிறந்தும் பயனை நன்கு நுகராத வேடர்வாழ்வே யாகும். மற்றும், மகளிரைக் கூடும்போது வேலனைய கண்கள் பாம்பு படமெடுத்தாற் போல (நஞ்சூட்டிற்போல) மருட்ட, வளவிய மாலையில் தேன் துளிக்கும்படி முலைகள்பாய, அவர் தம் தோள்கள் கவின் வளர அகில் கமழும் பூவணையிலே தழுவி மகிழ்தல் கலப்பென்பர். அவ்வாறு கலந்து தனது மார்பு பலகையாக, மகளிர் முலைகள் சூதாடு கருவியாக, இணையில்லாத இன்பத்தையுடைய காமமாகிய கவறுடல் கூடாதாயின், இவைகளெல்லாம் வரு பிறப்பிலேனுங் கிடைக்கும்படி நோற்றடங்குதல் ஆண்மைக்கு அழகென்று கூறுவர்," என்று இவ்வாறு படித்து முடித்தாள்.

**கனகமாலை காதல் நோய்**

முறையாக நோக்கி, இடைவெளியின்றி யிருத்தலின் பிடியினுடைய-பின்னி விடப்பட்ட துதிக்கை யிரண்டை யொத்துத் திரண்டு, கணவன் தொடாத ஆடை விரும்பிக் கிடந்த துடையினாள் அப்பாசுரத்தைப் படித்துக் குழையும் தோடும் ஒளிரக் கழுத்தை யிடப்பக்கத்தே சாய்த்துச் சிறிதும் இமையாமல், அவனை நினைத்து, இயக்கியைப்போல எழிலுடன் இருந்தாள். கரிய மயில்போலுஞ் சாயலுடையாள் நாணைப்பூட்டி வில்லை வளைத்து அம்பை நனியும் வலித்து வேடனால் எய்யப்பட்ட கன்னிப் பிணைமான்போல நிலைதப்பித், தோளிலிருந்து தொடி விழுமாறு

தோள் மெலியத் துணைவெம் முலைகள் பசப்புப்பரவ நெஞ்சிற் குறைக்கின்றாள்:

"ஓரெயிற்றையே யுடையதொரு பெரும்பேய் உலகை விழுங்குமாறு வாயைத் திறந்து நின்றாற்போல, இம்மாலை திங்களாகிய எயிறு நிழலை யுமிழ்ந்து விளங்கச் செக்கர் வானாகிய வாயைத் திறந்து, என்னை இன்றே விழுங்குவதற்கு வந்துற்றதன்றே? இனி என் உயிர் இதற்குரியதோ? எனக்குரியதோ? அறியேன்.

"அழகிய பொழிலிலுள்ள கரிய குயிலே! மாலைக் காலத்தே நாம் கூவுதல் இவர்க்குப் பொருந்திய தன்றென்றும் நினையாமல், இவருயிர் போமே யென்றுங் கருதாமல் அமர்ந்து முழங்கிக் கூவுகின்றனையே! இத்தன்மையை யுடைய நின்னை வருந்திப் பெற்றவளோ மறந்து விட்டாள். எடுத்து வளர்த்தவளும் நின் ஒலியின் கடுமையால், வீட்டினின்றும் ஓட்டி விட்டாள். நீயோ அடிக் குருத்தினளவும் பொருந்திய மயிருடையாய். ஆதலின் நின்னை எதனைக் கொண்டு வெறுக்கமாட்டார்? பிறப்பு, வளர்ப்பு, வடிவு செயல் ஆகிய எவ்வகையானும் வெறுக்கத் தக்காய் ஆயினை.

"அன்றில்கள் தம் குரலாலே என் அழகைக் கொள்ளை கொண்டன. பெரிய வெண்மையான திங்கள் என மயங்கிய உள்ள மலரோடு மலைந்து அதன் கேடு கண்டு மிகவும் நகுகின்றது. ஆம்பலென்னும் பண் சுற்றியுலவி என் உயிரின் தளர்ச்சி கண்டு அதன்மேலே நடக்கின்றது. இங்ஙனம் உலகிலுள்ள பொருளெல்லாம் பகையாதற்குப் பற்றாமல் யான் ஒரு பெண் பாலாகவே யிருந்தேன். இங்ஙனமாகவும் என் கொடிய வுயிரே! நீ தீயால் விழுங்கப்பெற்று வேறொரு வடிவாக இலைச் சாம்பல்போல இருக்கின்றாய்! இது நீ யிருக்கும் அளவன்று! உன் எண்ணம் என்ன?

"காமத்தீயால் என் உள்ளம் வேகும். அதனால், மெய் வெதும்பும். நீங்கும் நிலையிலுள்ள உயிரும் நீங்காமலே யிருந்து நெட்டுயிர்ப் பெறியும். யானும் மகளிருக்குற்ற

றீங்கு நோக்கி நகுவார்க் கெல்லாம் நகுதற் கிடமாயினேன். இத்தகைய யான் தமியளாகவே மலர்மாலை யணிந்த மார்பன் புனைந்தளித்த மாலையைப் புணையாகக் கொண்டு யாமக் கடலை நீந்த வேண்டியுளேன், நீந்துதல் அரிது.''

"இங்ஙனம் செவ்விய அழகிய கடம்பனின் வேலையும் காமன் வில்லில் தொடுத்த அலர்க் கணையையும் வென்ற செவ்வரி பரவிய நெடுங்கண்ணுள் திங்களனைய ஒளி பொருந்திய முகத்தினுள்-மணங்கமழ்ந்து தேன் துளித்து நின்றதொரு பூங் கொம்பு வெவ்விய தீயினிடத்தே அகப் பட்டது போன்றாள்.

"நீலமணிபோலும் மாமையினையும் சாயையினையும் வளையையும் மகளிர்க் கணிசெயும் போர்வையாகிய பெறற் கரிய நாணினையும் விற்றுவிட்டு யாவரும் வணங்கும் என் நலத்தைப் புதுமையாக வுண்டவனது பலவகை மலர் மாலையை நோயை நிறமாகக் கொண்ட புறஞ்சொல் என் னும் பெரிய ஞிமிறுகள் ஆர்ப்பப் பெற்றுக் கொண்டேன்,'' என வருந்தினாள்.

அப்பொழுது மடக்கிளி, 'நின் காதலன் காதலைப் போலவே அகன்று நீண்டு, அலர்ந்த கண்ணையும் கோதை யையும் உடைய நங்கையே! இஃது அலராலே தொடுத்த மாலையே ஆதலின் அலரிடத்ததாகவே யிருக்கும். இனி, வருந்தாதிரு,' எனத் தன் மழலைச் செவ்வாயாலே மிழற் றியது.

'கனகமாலையும், என்னுள்ளத்தை யிறுகப் பிணித்து, என் நலத்தையுங் கவர்ந்த தாரினானை யானும் அங்ஙனம் பிணிப்பேன்,' என்று கருதி அன்றிரவாற்றி யிருந்தாள்.

### அநங்க விலாசினி தூது

மறுநாள் கனகமாலை, தன் மணிச் செப்பினுள்ளிருந்த மாலையை யெடுத்து, அநங்க விலாசினியின் கையிலே கொடுத்து, 'அவனிடங் கொடு' என்று விடுத்தாள். அவ ளும் அவளை வணங்கிச் சென்று சீவகனை யண்மினாள்.

அவன் முன்னர் நின்று, அங்கை குவித்து வணங்கிப் பிணையலை நீட்டினாள். அவன் அதனை வாங்காமல் அவளைப் பார்த்தான்.

அவள், 'ஒப்பில்லாத மயிலனைய என் நங்கைக்குத் தொடுப்பவனும் நீயே! தோள் மெலிவுக்கு மருந்தும் நீயே! உயிரும் நீயே! ஆதலின் இதனை ஏற்றுக்கொள்,' என்றாள்.

சீவகன், 'அரசர் அரண்மனையில் தங்குவோர் ஐம்பொறியையும் அடக்க வேண்டியவர். ஆதலின் இது தகாது,' என்றான்.

அவள், 'அஞ்சினை போலும்,' என இகழ்ந்தாள்.

சீவகன், 'மலர்க் கோதையாய்! அங்ஙனமன்று ; ஆசிரியனாக விருக்கும் என் நிலைக்குப் பொருந்தாது காண்!' என்றான்.

அவள், 'அன்ன நடையினாள் இறந்துபடுவாள்,' என்றாள்.

சீவகன் அதற்கஞ்சிக் குலிகமூட்டப்பெற்ற தாமரையனைய தன் கையை நீட்டி அம்மாலையை வாங்கினான் ; ஊழ்வினையாலே நேர்ந்த இந்த அன்பு சுடுகின்றது என்றுங் கூறினான். அவன் மாலை பெற்றதனால் மகிழ்ந்த அநங்க விலாசினி சென்று மெலிந்து வெம்பி நையும் கனகமாலை பிழைக்கும் வகையைச் செய்யத் தொடங்கினாள்.

சந்தனம், சந்திரகாந்தக்கல், நீண்டு அழகிய கூந்தளம் பாவை யென்னும் மலர், கழுநீர், பிறமலர்கள், கோத்த நெடிய தாமரை வளையம், அருவிநீர் ஆகியவற்றாற் கனக மாலையை அணிவித்தாள். ஆனால், அவை குளிர்ச்சி செய்யாமற் கொதித்தன.

கடலிலே பிறந்ததாய்ப், பனியை வென்ற குளிர்ந்த ஊற்றினை யுடையதாய், மன்னர் பின்னடைய உலகை விற்கும் அரிய முத்தினை நூலிற் கோத்து அணிவித்தாள். முல்லைநாறுங் கூந்தலாட்கு மேலும் மருத்துவம் புரிகின்றாள்.

மேலே கட்டி நீரைத் தாங்குகின்ற கஞ்சி தோய்த்த நோசிகம் என்னும் பட்டின் நீர் மாலை வழியே தொடர்ந்து வீழச் சுற்றிலும் மாலைகளைக் கட்டினாள். கீழே செறிந்த பூவையுடைய நீரிலே படுக்கையமைத்தாள். நன்னீரைச் சிதறும் குளிர்ந்த சாந்தாற்றியும் பொன்னாலான ஆலவட்டமும் கொண்டு வீசினாள். குளிர்ந்த கொழுவிய சந்தனத்தை மெய்ம்முழுதும் அப்பினாள்.

இள முலையிலே அப்பிய சந்தனங் கொதித்து உயிரை வாட்டியது. சுற்றின மாலைகள் கருகின. கீழ் நின்ற நீர் வெம்மையாற் கொதித்தது. இங்ஙனம் நீட்டித்து நின்று கனகமாலைக்கு வெப்பம் மிக்கது. ஆனால், அப்பொழுதும் சீவகன் கட்டின மாலைகளே மெல்லிய கூந்தலாளுக்குத் துணையாகிய தெப்பமாயிற்று.

இந்நிலையிலே நீலமுங் கழுநீருங் குவளையும் தோற்குங் கண்ணாளாகிய கனகமாலை தன் தோழி அனங்கவிலாசினியைத் தூதாகக் கொண்டு, நாட்களை எண்ணி வந்தாள்.

**போர்க்கலை அரங்கேற்றம்**

இனி, மன்னன் மக்களும் கல்விக்கடலைக் கரைகண்டனர். கொடுங்கணையையும் இருப்புச் சலாகையையும் விரும்பி எய்வதையும், தம்மேல் வரும் அம்பை அம்பாலே விலக்குவதையும், வாளேந்திய அமரிலே செல்லும் நிலை தெரிந்து செல்வதையும், எதிரி படை யெய்தாற் கிடுகினால் மறைத்துக் காத்துக்கொள்வதையும், பகைவர் விடும் அம்பைத் தடுத்துத் தம் கணை செலுத்தும் முறையையும் ஆகிய ஐவகை வினையையும் அவர்க்கு விளக்கமாகத் தெரிவித்தான் சீவகன். அவர்களும் வருத்தமின்றிக் கற்றனர்.

தம் மேலே வேழம் எதிர்த்து வந்தால் அதன் காலிடைப் புகுந்து மறையும் முறையையும், அது துதிக்கையால் வளைத்தபோது அதன் கைநடுவே உடம்பு பிறழுமாற்றையும், அது வாலாலே வீசினால் அது படாமற்போய் அதன் காலிடையிற் புகுமுறையையும், அது கொல்லப்

புகின் அதன் கொம்பிரண்டிற்கும் நடுவே அமையும் படியையும் தண்மையாகக் கற்ற சீவகன் நூல் முறைப்படி கற்பிக்க அவர்களும் கற்றனர்.

மற்றும், கொடிநெடுந் தேர்ப்போரும், யானைப் போரும், குதிரைப்போரும் வெளிப்படையாகக் கற்றுத் தழும்பேறினர். இவ்வூர்திகளில் இருந்தால் ஒன்றற்கொன்று உதவுதலறிந்து வினை செய்யும் இடமறிந்து செலுத்தும் போது, வாளும் வில்லும் எறிகோலுமாகிய மூன்றையும் கையாளும் முறையும் அறிந்து, வானவர்க்கும் புகழ்தற் கரிய தகையரானார்.

படையிலில்லாமல் தாம் தனியே நின்ற இடத்தைப் பகைவர் படை ஒற்றின் வாயிலாக அறிந்து மேற்சென்றாலும், வென்றியிலே சோர்வின்றிப் பகைவர் படையைக் கெடுக்கும் சூழ்ச்சியுடன் போர்த்தொழிலிலே மக்கள் சிறந்தனர் என்றறிந்த மன்னன் தடமித்தன், 'அவர்களை அழைத்திடுக,' என்றான்.

அவர்களும் வந்தனர். தம் பயிற்சியைக் காட்டினர். அம்பாற் கூடங்கட்டி மழையையும் புழுதியையுந் தடுத்தனர். குழையைத் தொடுமாறு வில்லை வளைத்துக் கணையினாலே நூல்பிளக்க எய்தனர்; வாளினாலும் நூல் பிளக்க வெட்டினர்; வேலாலும் நூல் பிளக்க எறிந்தனர். மின் திரிதல் போலச் சாரியை திரியுந் தொழிலிலே சிறந்து தோன்றி வியக்கத்தக்கவராயினர்.

"மக்களிற் சிறப்பு மிக்க விசயன் விற்பயிற்சியிற் பாரத விசயனை போன்றான்; கதம்பன் வேற்போரிலே முருகனுக் குவமையானான்; திசை வணங்குங் கனகன் வாட்போரிலே பரசுராமனை நிகர்த்தான். அசலகீர்த்தி யானைப்போரினும் தேர்ப்போரினும் (சச்சந்தன் படைத் தலைவனாகிய) அசைவிலாத அசலனுக்கே ஒப்பானான். சேனன் குதிரைப்போரிலே வசையற்றவன்," என எல்லோராலும் புகழப்பெற்றனர்.

இங்ஙனம் மக்களின் ஆக்கம் மிக்கிருப்பதை நோக்கி மகிழ்ந்தான். 'அந்த வில்லாளி அரசனாகவோ அந்தணனாகவோ இருத்தல் வேண்டும். இன்றேற் பிறருக் கித்தகைய கல்வி கிடையாது. ஆதலால், அவனை யான் தளைப்படுத்தி எப்போதும் விலகாதவாறு செய்வேன். அவனை இப்போதே கொணர்க!' என்றான்.

**அரசன் விருப்பம்**

அரசன் நினைவை யறியாத பலரும், 'அரசன் இக்கலை மிகு காளையைப் பொறுமற் சிறை செய்கின்றனன்! ஆகையாற், கல்வியும் கொடியது போலும்!' என்று வருந்தினர். அவ்வளவிலே சீவகனும் வந்தான். அவனை மன்னன் தனியே அமர்த்திக்கொண்டு, "புலவு கமழும் கோட்டினையுடைய களிறனைய தோன்றலே! நிலவுலகேயன்றி வானுலகும் என் கையில் வந்து கூடச் செய்தனை. உடம்பெலாங் கண் பெற்றாற் போல இக்காட்சி கண்டு களிப்புற்றேன். ஆதலின், நினக்குக் கைம்மாறியற்றுதற்கு இயலாதவனானேன். எனினும், பண்ணனைய தீஞ்சொலாள் என் மகளை நின்னிடம் ஒப்படைக்கின்ற அவ்வளவேனும் இயற்ற விரும்புகிறேன்," என்று கூறினான்.

அரசன் மொழியைக்கேட்ட குரிசில், தன் கருத்தைத் தெளிவாகக் கூறாமல், அவள் ஓவியம் தீட்டப்பெற்றிருந்த தன் உளம் வேட்கையை மிகுவிக்க, மொழிமட்டும் வேட்கையில்லாமல் மறுத்துக் கூறினான். மன்னன் விடாமல் அவன் கையைத் தன் கையாலே பற்றி முரசனைய மொழியால் தன் கருத்தின்னதெனத் தெளிவித்தான்.

"தாமரை மலரைத் தனக்கிருப்பிடமாகக் கொண்ட திருமகளைப் போன்ற என் செல்வி பிறந்தபோது, கணிகள் குழூஉப் பொழுது பிழையின்றி, *மூவியலையுந் தெளிவாகக் கொண்டு நினக்கே உரியளெனச் சாதகஞ் செய்தனர். ஆதலின், மறாதே," என்று இங்ஙனம் வேந்தன் விளம்பியதை மறுக்கவியலாமற் சீவகன் ஒப்புக்கொண்டான்.

---

* மூவியல்: தலைத்தோற்றம், நிலத்தில் விழுதல், தெரியுங்காலம்

**திருமணம்**

உடனே கனகமாலைக்கும் தடக்கைச் சீவகனுக்கும் திருமணநாள் குறித்து, எல்லோருக்கும் அறிவித்தனர். திருமணத்தன்று மணக்கோலம் புனைவித்து, மணவியங்கள் முழங்கத் தீ முன்னர் மணம் புரிவித்தனர். இருவருடைய காதல் வேட்கையும் இனிதே நிறைவேறியது. அவளுடைய இதழ்க்கரும்பைச் சீவகக் களிறு பெருவிருப்புடன் சுவைத்தது; அவளுடைய காதல் வேட்கையிலே அகப்பட்டது. அவளும் அவன் 'காட்டக்கண்ட' அவ்வின்பத்தை மகிழ்ச்சியுடன் நுகர்ந்தாள்.

**நந்தட்டன் வருகை**

சீவகன் நிலை யிங்ஙனமிருக்க, இராசமாபுரத்தே சீவகன் தம்பி நந்தட்டனென்பான், திங்களையிழந்த உரோகிணியென மயங்கித் தன்னறிவினலே, சூழ்ச்சிமிக்க தன் தமயன் இருப்பிடம் அறியவியலாதவனகி, நாட்டிலே அறிவு வருந்தத் தேடினன். பிறகு, குணமாலை யகத்தைச் சேர்ந்தான். அங்கும், காணுதவனுகிக் காந்தருவதத்தையின் இருப்பிடத்தை அடைந்தான்.

அப்போது, வளவிய மலரிதழ்க்கோதையாள் தானே அமைத்த ஓரினிய பாட்டினைத் தானே பாடவெண்ணி வீணையைக் கையில் எடுத்தாள். பொன்னுணியிற் கட்டிய நெய் யொழுகினுற்போன்ற நரம்பினை மாடகத்தாலே முகந்துகொண்டு, ஒலியின் அளவு நிறையக் கட்டினுள். குவிந்த விரல்கள் சிவப்பத் தெறித்துத் தெளிவுடன் பாடினுள்:

**தாழிசைக் கோச்சக வொருபோது**

" இறுமருங்குல் போதணியின் என்றினைந்து கையின்
நறுமலர்கள் சிந்துவார் நண்ணுர் துறந்தார் !
நண்ணுர் துறப்ப நனிவளையும் தோள்துறப்பக்
கண்ணேவா முத்துறைப்பத் தோழி ! கழிவேனே?"

"பூமாலை சூடிற் பொறையாற்ரு நுண்மருங்குல்
ஏமாரா தென்றினைவா ரெண்ணுர் துறந்தார்!
எண்ணுர் துறப்ப இனவளையும் தோள்துறப்ப
மண்ணுர்வேற் கண்துயிலா! தோழி! மருள்வேனே?"

"வண்டூத அம்மருங்குல் நோமென்று பூமாலை
கொண்டோச்சுங் காதலர்ர் கூடார் துறந்தார்
கூடார் அவர்துறப்பக் கோல்வளையும் தோள்துறப்பத்
தோடார்பூங் கண்துயிலா! தோழி! துயர்வேனே?"

இங்ஙனம் பாடிமுடித்து யாழை வைத்துவிட்டு, ஊனைச் சிதறினாற்போன்றும், எரி பலவாக முளைத்தல் போன்றும் தோன்றும் மலரையுடைய இலவிலே அணில னைய காய்த்தொகுதிகள் அளித்த பஞ்சிலுலமைத்த அணை யிலே சாய்ந்து, வருந்திய நினைவிலே நீண்டனள், வாள னைய கண்ணி நோக்குவோர் கண்ணும் மனமுங் கவர்ந்த அண்ணலை அவ்வாறு நினைத்து வருந்தியதனாற் பழைய நிறந் திரிந்து வாடினாள். 'வரைபோலும் மார்பனைத் தழு வும்நாள் என்றோ?' என ஏங்கியிருந்தாள்.

அந்நிலையிலே நந்தட்டன் அங்குப் போயினான்; ஐந்து வில்லளவு தொலைவிலே நின்று வணங்கித் தலைதாழ்த்து நின்றான். அவள் அவனை மருண்டு நோக்கிக், 'கையில் வில்லுங் கணையுமில்லாக் காமனே! வந்திருப்பாயாக!' என்றாள். அவனும் மூன்றுவில் தொலைவாக நெருங்கி வணங்கிநின்று, கயற்கண்ணாளின் சிலம்பணிந்த சீறடியையே நோக்கிய வாறு, "அடிகள் எங்கே? மூவரி குலவிக் கிடந்த மார்பினை யுடைய புண்ணியன் இறந்திருந்தானேல், மணங்குலவிய மாலைகளையும் வளைகளையும் முத்துக்களையும் நீக்கி, நெறிப் படி தவம் புரிதலாவது பெருந்தீயில் விழுதலாவது செய் தல்வேண்டும். இங்ஙனம் ஒன்றுமின்றிக், கணவன் இறந்த பின்னர் அணி சுமந்திருப்பதைக் கேட்டறியேன்," என் ருன்.

அவன் மொழியையும் தீ வெதுப்பிய கற்பகம்போல, அன்பாகிய தீயின் வெம்மையாலே வாடிக் கன்றி நிற்பதை

யுங் கண்டு, வளைந்த குழற் கற்றையையும், அழகிய தாரினை யும் தேன் துளிக்குங் கண்ணியையும் உடைய பூங்கொம் பனையாள், முதலிற் சீவகன் மறைந்து வேற்றுருவுடன் இருப்பதை யறிவித்துவிட்டுப் பிறகு கூறுகின்றாள்:

"குருசிலோ நம்மை நினையாமல், முறையாகப் பல திருமணங்களைச் செய்துகொண்டு இன்பமுற்றிருக்கின்ற னன். மதிமுகம் என்னும் விஞ்சையை அறிந்த நாம் அவனு டன் ஊடுதலன்றி, அவனுக்குத் தீங்குண்டாமென எண்ணி வாடுவதேன்? வில் வல்லாய்! நீ யாம் வேண்டியதொரு பணியை இயற்றின், நின் தமயனைக் காண்பாய்," என்றாள். நந்தட்டன், 'இம்மையேயன்றி எழுமையும் அடிமைப் பணிபுரிவேன்,' என்றான். அவள் ஒரு விஞ்சையை ஓதித் தன் முகத்தைத் தடவினாள். அவ்விஞ்சை அவனிருந்த இடத்தை நந்தட்டற்கு விளக்கியது.

மலரணைப் பள்ளியாகிய அழகிய அமளியிலே, கற்பக மாலையாகிய கனகமாலைக்குக் கரிய குழலை மலரணிந்து புனைந்துகொண்டிருந்த சீவகனை அவன் உண்மை வடிவுடன் எதிர்முகமாகக் கண்டு மகிழ்ந்து, தொழுது, மெய்குளிர்ந்து நின்றான் நந்தட்டன். அவ்வளவிலே தத்தை விஞ்சையை மாற்றினாள். நந்தட்டன் மயங்கிய நெஞ்சுடன், 'சீவகன் உண்மையில் இன்பத்துடன் இருப்பதால், பூங்கழலான் அடியை அடைவேன். அருள்புரிவாய்,' என்று வணங்கி **வேண்டினான்.**

தத்தை அதற்கிணங்கியவளாய்த் தேன் மலர்ந்த மாலை யும் வண்டுகள் முரலுங் கலவைச் சந்தனமும் முடிமயிர்க் கணியும் நானமும் புதிய கச்சிற்பொருந்திய வாளும் சுரி கையும் அழகிய அணிகலன்களுங் கொணர்கவென்று பணி மகளிர் வாயிலாகத் தருவித்து நந்தட்டனுக்கு நல்கி அணிந்துவரக் கூறினாள். அவனும் உடனே பளிங்குமணி யின்மேலே ஞாயிற்றின் இளங்கதிர் போர்த்ததுபோலத் தன் பழைய வடிவிற்குப் புறத்தே இருள் அழிய வீசும் ஒளி தவழும் வடிவினனாகச்—சீவகன் கொண்டிருக்கும் மாற்று

வடிவத்தையே கொண்டவனாக—அழகிய பல்வகைக் கலன்களையும் அணிந்து வந்துநின்றான்.

தத்தை அப்பொழுது 'ஆகாச காமினி' என்னும் விஞ்சையை ஓதினாள். பிறகு, ஓரிடத்தைச் சாந்தினால் மெழுகி, ஒரு துகிலில் மலர்மாலைகளை நாற்றி, அகிற்புகையிட்டு, நந்தட்டனைப் படுத்துக்கொள்ளக் கூறிவிட்டுத் தன் தோழியருடன் அவ்விடத்தினின்றும் நீங்கினாள். மணப்புகை கமழும் பள்ளியின்மேல் காமன் தம்பியாகிய சாமனைப் போல நந்தட்டன் கிடந்தான். ஒரு தெய்வம் அவனைக் கொண்டுபோய் ஏமமாபுரத்தே அரசன் கோயிலிலேவிட்டு வைத்தது. ஒளிசெயும் பூணும் முத்தாரமும் பொன்னும் பூத்த கற்பகமலர் மரம்போல அங்குக் கிடந்த நந்தட்டன் துயில் நீங்கினான். ஞாயிறும் கீழ்த்திசையில் ஒளியைப் பரப்பியது.

**விசயன் கலக்கம்**

சிவந்த வாயையும் நெடிய கண்களையும் உடைய தத்தையின் விஞ்சையினால் நந்தட்டன் வந்ததை அறியாத விசயன் அவனைச் சீவகனெனவே எண்ணி, அருகே வந்து பார்த்தான். சீவகன் வடிவையே கொண்டிருப்பினும் தெய்வத்தன்மையின் ஒளி பரவியிருத்தலின் ஐயுற்று, 'ஐய! நீ யார்?' என்றான். நந்தட்டனும் தெய்வமயக்கினாலே விடை கொடாதிருந்தனன். விசயன் மெல்ல நீங்கிச்சென்று பனி மலர்க்கோதை மார்பினையுடைய மயங்கிய களிறுபோன்ற சீவகனைக் கனகமாலையின் அரண்மனையிலே கண்டு கூறுகிறான் :

"விஞ்சை மகளிரைப்போன்ற வசந்தரி (கனகமாலையின் தோழி) விற்பயிற்சி செய்யும் நிலையத்தை வழிபடுதற்குச் சந்தனக் குழம்பும் பூவும் பொற்குடத்திலே நீரும் அகிற்புகையும் விளக்கும் முத்துமாலையும் ஏந்தி அங்கே சென்றவள் வந்து கூறியது இது. அடிகள் அகில்மணஅணையிலிருந்து நீங்கி வெறு நிலத்தே நல்ல நீர்மையுடன் கிடந்ததைக் கண்டு, இதற்குக் காரணம் என்னென்று கண்க

மாலையை முனிதற்கு விரைந்து வந்தனளாம். கனகமாலையுடன் நீ இங்கேயிருத்தலைக் கண்டனளாம். உடனே, என்னிடம் வந்து, 'வேலோய்! இஃது என்ன மாயமோ? அறிந்து போற்றுக!' என்றாள். யானும், அவள் கூறியதைக்காணச் சென்றேன். மணியிழைத்த பொன்வாளும் கேடகமும் அருகிலிருந்தன. உவமையில்லாத சிங்கம் போன்றான் இளமையும் அழகும் கிளர்ச்சியும் வடிவமும் நின் உயர்ந்த இலக்கணத்தைத் தனக்காக்கிக் கொண்டுள்ளான். அங்ஙனம் இருந்த நீண்ட தோளையும் நெடிய செங்கண்ணையும் கரிய நெளிந்த குடுமியையும் ஆரம்பூண்ட பொன்னிழைத்தாலனைய மேனியையும் காணத்தக்க காதிலே தாழ்ந்த குண்டலத்தையும் குவளைப் பைந்தாரையும் உடைய ஆண்டகையாகிய அந்த அழகன் யார்? அவனை யான் இதுவரை அறிகிலேன்!''

**சீவகனும் நந்தட்டனும்**

மிகு வலிமையுடைய விசயன் மொழியைச் சீவகன் கேட்டுச் சிந்தித்து, 'வந்திருக்குங் காளை நந்தட்டனே யாவன். புனமயில் போன்ற தத்தையின் பொருளுரையாலே யான் கொண்ட இவ் வடிவைப் பெற்று வந்துளான்,' என்று மகிழ்ந்து தாழாமல் விரைந்து நந்தட்டன் இருக்குமிடத்தை யடைந்தான். கடலிடை முளைத்த கதிரவன் கருமுகிலிடத்தே விடாது நடப்பதே போலத் தன் முகம் ஒளிசெயச் சென்ற சீவகனைக் கண்ட நந்தட்டன் தருமனைக் கண்ட தனஞ்செயனே போல மலர்த் தடக்கை குவித்துச் சேவடியைத் தொழுது வீழ்ந்தான். அங்ஙனம் தன் அடிமிசைக் கிடந்த தம்பி தாமரைப் பொய்கை போன்றான். தமயனும் ஞாயிறு போன்றான். தாமரையென்னும் எண்ணைப்போல அளவுகடந்த பண்புகளையுடைய நந்தட்டனைத் தாமரைச் செங்கணான் ஆகிய சீவகன் மும்முறை தழுவிக்கொண்டு தான் பிரிந்திருந்த வருத்தமெலாந் தீர்த்துக்கொண்டான்.

"யான் அடைந்த நிலையினை அறியாமற் சிறப்புமிக்க பெருஞ் சுற்றமும் நீங்களும் எரியுற்ற தளிர்போல வாடிப்

பொன்னனைய மேனி கருகிப் போயினீர்! தாய்தந்தைய ருடன் இருக்கும் நல்வினை யிலாதேன் முன்னரே இங்ஙனம் நிகழும் என அறிகிலேன். உங்களைப் பின்னர் முடிய துன் பத்திடை யுழலுமாறு செய்துவிட்டேன் பேதையேன். இனி, வருந்தற்க!" என்று வருந்தியுரைத்தான் சீவகன்.

நந்தட்டன், "ஆக்கமுங் கேடும் உற்றீர் நீரே அல்லீர்! அலங்கல் மாலையணிந்த கருடக் கொடியோனும் இராமனுக் கும் நேர்ந்தது. ஆனால், அவன் கேட்டிற்குத் தம்பியையும் உடன் கொண்டான். நீரோ, என்னை உடன்பிறந்த மகளி ரைப்போல உதவி செய்யாமல் வருந்தும்படி நோக்கினீர்." என்று கொழுந்துவிடும் அழற்குட்டம் போலக் கொதித்துக் கூறினான். மற்றும் அவன், "முற்பிறப்பிலே குரவரை வழி படலின்றி அவர் கருத்தைக் கடந்ததனால் உண்டாகிய பாவந் தருதலால் வந்த பயனாலே, பாவியேன் இத் தாமரை யடிகளை நீங்கி, மிகவும் வருந்தினேன்," என்று சீவகன் அடிமிசைத் தன் முடியை வைத்து நொந்தழுதான்.

வருந்தியழுகின்ற தன் தம்பியின் தாமரையனைய செங் கண்களைத் துடைத்துக், 'காளையே! வருந்துதல் வேண்டா,' என்று கூறித் தன் அமுதனையாளிருக்கும் அரண்மனைக்கு வலிந்தழைத்துக்கொண்டு சென்றான். அருந்ததியனைய கற்பினாளை நந்தட்டன் கண்டு அடியிலே பணிந்தான்.

**கனகமாலையின் மகிழ்ச்சி**

மலரனைய தடங்கண்ணாள் தன் கணவனை, 'இவ்விளை ஞன் யார்?' என்று குறிப்பினாலே வினவ, அவன், 'கற்பி னாய்! ஐயன் நின் மைத்துனன்,' என்றான். அவள் மகிழ்ந்து 'இத்தன்மையான இளங்கிளைச் சுற்றம் எழுமையினும் பெறுவேனாக!' என்றாள்.

கனகமாலை தன் மைத்துனனுக்கு முறைமைப்படி விருந்திட்டாள். குங்குமம் எழுதலாலே அத்தகிரியைப் போன்ற நந்தட்டன் மார்பிலணிந்த சாதி வைரத்தின் ஒளி கலந்தபூண் சீவகனது வரைபோலும் மார்பிலே மின்னு மாறு எதிரெதிராக அமர்ந்து இருவரும் உண்டனர்.

**நந்தட்டன் கூறியது :**

விருந்துண்ட பிறகு, தம்பியுடன் சீவகன் தனியே அமர்ந்தான். "என்னைக் காணமையாற் குரவர் முதலானோர் உற்ற வருத்தம் என்கொல்? நம் தோழர்கள் என் செய்தனர்? வகைப்படுத்திக் கூறுவாய்," என்று வினவினன். நந்தட்டன் கூறுகிறான் :

"ஞாயிறு மேற்றிசையிலே மறைந்தது. குருதி பரவிய களம் போலச் செக்கர் வான் பரவியது. அந்த அந்திமாலையிலே மழையின் மிகுதியால் எல்லோரும் கலந்து சென்றபோது, யாங்கள் நின்னைக் காணமையால், அங்குநின்றும் நீங்கி நகர்ப்புறத்தே கூடினேம். பதுமுகன், 'யாம் மேற்செய்யுமதனை எண்ணுமின்!' என்றான்.

"புத்திசேனன் சீற்றத்துடன், 'மலையெனத் திரண்ட தோளானைக் காண்கிலேமாயின், இப்போதே கட்டியங்காரனை வாளினாலே வானுலகிற் செலுத்தி, இம்மூதூரையும் அழித்துச் சென்றும் நம் சீவகசாமியைக் காண்போம்,' என்றான்.

"வில்லுந் திரண்ட தோளுமுடைய தேவதத்தன், 'மலைமேல் தாக்கிய இடிபோற் குமுறிப் பகைவனுயிரை யுண்பது நமக்கெளிது. ஆதலின், நம் குருசில் (சிறையில்) இருப்பதும் இல்லாததும் வருத்தத்துடனே ஆராய்ந்து, பின்னரே பகைவரைக் கொல்லத் துணிமின்,' என்றான்.

"சீதத்தன், 'கடலிடைத் தோன்றிய வெய்ய கதிரவன் போன்ற திறலையுடைய சீவகற்குப் பகைவரால் தீங்கு வராது. எனினும் புத்திசேனன் கூறியவாறே ஆராய்ந்து, பகைவரைக் கொன்று துன்பத்தை நீக்குவோம்,' என்றான்.

"அப்போது பதுமுகன், 'நம்பி! நந்தட்டனே! கேட்பாயாக! உலகில் தமக்கு அறிவுறுத்தக் கூடியார்க்குத் தாம் அறிவுரை கூறுதல் செய்யார். ஆதலின், இவ் வுலகொழுக்கத்தைப்பற்றி உவமையில்லாத நினக்குக் கூறுவது ஒன்றுமில்லை. எனினும், கூறுகின்றேன். நடுக்கஞ் செய்யும் இவ் வருத்தத்தினின்றும் நீங்கி, நமக்குக் குரவராயுள்ளாரின்

உள்ளக்கவலையை மாற்றி, அவரிருக்குமளவும் அவரை வழி பட்டு, அவரிறந்தால் அவர்க்கு நீர்க்கடனை முறைப்படிச் செய்வாயாக,' என்றான்.

"யான் வருந்தி, 'உயிருடன் இருப்பாரை நோக்கி யன்றே இவரை ஓம்புக வென்று கூறுதல் வேண்டும். உயிர் வாழும் நிலை யெனக்கில்லை. என் கண்கள் கையாக அவற் றின் நீராலே தேன் துளிக்கும் மாலை யீர்க்கும் செல்வனுக் கும் செய்யவேண்டிய நீர்க்கடன் முறையெல்லாஞ் செய்து விட்டேன். இனி, மூங்கிலை யெறிக்குங் காட்டுத்தீ போலக் கனன்று ஒருங்கே எழுமின்!' என்றேன்.

"உடனே வளைந்த இளந்திங்கள் போன்ற எயிறுகள் இரண்டு கொண்டே கொலைத்தொழில் மேலெழுஞ் சிங்கத் தின் ஏதம் தீர்த்தற்கு எழுந்த புலித்திரளைப் போன்று நமது வாட்படை எழுந்து 'சீவகன் வாழ்க!' என்றது. அவ்வளவிலே எங்கள் பரிவு தீர ஒருவன் பாடினான்.

"அப்பாட்டின் பொருள், 'நம் கேள்வர் நின் ஒள்ளிய நுதலிற் பசலை நீங்க இன்னே வருவர். எனவே, உருகி நைந்து, முன் கை வளை சிந்த வருந்தவேண்டா. இப்போது அவர் வாராமைக்குக் காரணம் இது பருவம் அன்று என் பதே. மும்மதத்தை அருவியெனச் சொரியும் யானை பிளிறியதனைக் கார் முழக்கென எண்ணிக் கார்ப்பருவத் திலே மலரும் முல்லை அறியாமையாற் பூத்துவிட்டன. கார்ப் பருவம்வந்து யான் அழைத்தவுடன் வருவர்,' என்பதாகும்.

"இப்பாட்டைக் கேட்டவுடனே, நம்பி உயிருடன் இருப் பதை யறிந்தாற், பிறகு, சிலநாள் கழித்துக் கட்டியங்கார னைக் கொல்லலாம். 'பழம்பகை நட்பாதல் இலை' என்னும் பழமொழியும் உளது. எனவே, நாம் நாடெங்கும் பரவிச் சென்று தனித்தும் குழுமியும் தேடுவோம்' என்று '*இலைப் புரை கிளைத்திட்டோம்.'

* 'இலைப்புரை கிளைத்தல்' ஒரு பழமொழி. எங்கும் ஆராய்தல் என்று பொருள்.

"யான் நீலமணியைப் பொதிந்த ஆடைபோல வெண் முகில் தவழும் மலைகளெங்கும் நினைத் தேடிச் சென்றேன்; திரும்பி நகரையடைந்து, குணமாலையின் அரண்மனையை அடைந்தேன். அப்போது, காந்தட் பூ முதிர்ந்து உதிர்வன போல அழகிய முன் கையிலிருந்து வளைகள் அழகுடன் சிந்த இருந்து குணமாலை வருந்தினள். என்னைக் கண்டவுடன், 'ஐயர்க்கு வருத்தந்தீர உணவு சமைத்திடுக,' என்றாள். தோழியர் உடனே சமைத்து ஏந்தினர். நோயுற்ற மயில்போலிருந்த குணமாலை ஆங்கே வந்து, செவ்வியழிந்த குவளையிலிருந்து வீழ்தல்போலக் கண்ணிலிருந்து நீர் விழுந் தன்மையுடையளாக 'ஐயரே! அடிகளின்றி நீரே உண்ணவும் வல்லீரானீர்! நீர் கொடியீர்!' என்று கூறிக் கசிந்துருகிப், பொற்கொடி புழுதியில் வீழ்ந்தாற்போல நிலத்தே வீழ்ந்தாள். அவ்வாறு பெடைமயிலாள் வருத்தங்கண்டு, அங்கிருந்து மீண்டு புறம் போந்தேன்.

"பிறகு, 'இன்று செல்வனை நாடிக் கண்டு சேவடியைத் தொழுதல் வேண்டும். அல்லது, இவ்வுடம்பை விட்டு வேறுலகடைதல் வேண்டும். இரண்டில் ஒன்றை இற்றைப் பகலே முடிப்பேன்,' என்று கருதி மல்லிகைக் கோதையணிந்த மலைமகளின் அரண்மனையை அடைந்தேன். அங்கே, அவள் அழகிய ஒளியையுடைய யாழைப்பண்ணி, மார்பிலே சேர்த்து, மார்பின் வெப்பத்தாலே அதன் குளிர்ச்சியை மாற்றி, அதன் நரம்பைத் தடவிப் பாடிக் கொண்டிருந்தனள். யான் பெரிதும் வருந்தி அவளுக்குத் தகாத வருந்தும் மொழி யொன்றைக் கூறினேன்.

"அவள் என்னை நோக்கி, 'வருந்தாதே, நின் அடிகளின் திருவடியை நீ காணுமாறு யான் கூட்டுவேன்,' என்று கூறி ஞாயிறு மறைந்தபிறகு, விஞ்சையை ஓதி, வைகறையிருளிலே இங்கே யிடுவித்தாள். இனி, அடிகளே! நீவிர் போந்த வரலாற்றை எனக்குக் கூறுக!"

**சீவகன் கூறுதல்**

"ஐயனே! தந்தையார் மகிழ்வதற்காகத் தாழ்ந்த கச்சிற் பிணிப்புண்டு வரும்போது, நம் சுற்றமெல்லாம்

போர்ப் புலிக் குழுவைப்போல முழங்கிக் கையிலே வேலேந்திச் சாதற்கு விரும்பியெழுந் தன்மையைக் கண்டேன். அப்போது, உன்னை நோக்கினேன். நீ கரிய மலையினின்றும் முழங்கி, மலையுச்சியும் உடையுமாறு, வாலினாலே வீசி, வெகுண்டு நாற்புறமும் நோக்கி, எட்டுத் திசையினரும் அஞ்ச, யானை அழியப் பாயும் வலிய திறலையுடைய சிங்கம் போல மெய் ஒளிவிட உடன்று நின்றாய். உன்னுடன் நின்ற தோழர்களை நோக்கினேன். அவர்கள் சீற்றத்தைப் பெருக்கித் தீமையை விளைவிக்கும் உறுப்புக்களைச் சுருக்கித், தீயைப்போல் அனல் விட்டுச் சுழலுங் கண்ணுடன், நிமிர்ந்த காதுடன் முன்னோக்கிப் பாயப் பின் வாங்கி நின்ற புலிக் குழாம் போல இருந்தனர்.

"கட்டியங்காரனை எதிர்ப்பது நம் தந்தையார் கருத்தல்லாமையின், நீங்கள் நின்ற நோக்கத்தைத் தடுக்க நோக்கினேன். அப்போது, நம் மாடத்தின் உச்சியிலே தத்தையானவள் வாளுங் கேடகமும் ஏந்தி, 'இந்நகரம் கெடுக,' எனக்கூறி நின்ற நிலையை நோக்கினேன். புலியேறு போன்றவனே! அவள் நோக்கத்திற்கு அஞ்சினேன். பெண்ணொருத்தி நம் இடரை நீக்க அதனால் வாழ்தலினுஞ் சாதலே நன்றென எண்ணினேன். எனினும், நம் சுற்றம் இறந்து படுமென்பதனாலும் முன்வினை நெருக்குதலானும், இந்நிலைக்கு இறைவனல்லாமல் வேறொருவர் துணையின்றெனக் கருதி இறைவனை வாழ்த்தி, இயக்கனை நினைத்தேன். சுதஞ்சணன் அங்குக் குழுமியோர் வருந்துமாறு தோன்றி, அங்கிருந்து என்னைக் கொண்டு சென்றான்.

"பிறகு, அவன் மூன்று விஞ்சைகளையும் வழியையுங் கூறி விடுப்ப வந்தேன். இந்திர வில்லுடன் கூடிய முகிற் கூட்டம்போலக் கொழுந்து விட்டெரியுங் காட்டுத் தீயின் நடுவே அகப்பட்ட யானைத் திரளைக் கண்டேன். இறைவனைச் சிந்தித்து வருந்தி நின்றேன். அவ்வளவிலே மழை பெய்து தீயணைந்து யானைகள் அச்சம் நீங்கி யுய்ந்தன. காட்டின் வழியே நடந்து சென்று பல்லவநாட்டை யடைந்தேன்.

"பல்லவ நாட்டரசன் தனபதி. அவன் மனைவி திலோத்தமை. உலோகமாபாலன் எனபான் அவர்களுக்கு மகன். மகள் பதுமை. அவளைக் கோழியரவு தீண்டியது. திருமகளும் விரும்பும் அவளுக்குற்ற நஞ்சினை நான் தீர்த்தேன். நீங்காத உறவை விரும்பிய அரசன், அவளை எனக்களித்தான். இரண்டு திங்கள் கழிந்தன. பதுமைக்குத் தெரியாமல் நள்ளிரவிலே புறப்பட்டேன்.

"தக்கநாட்டை அடைந்தேன். கேமமாபுரம் என்னும் நகரில் தங்கினேன். அங்கே சுபத்திரன் என்னும் வணிகன் என்னைக் கண்டு உயிரிற் பொருந்திய அறிவு போல நட்புக் கொண்டான். அவனுடன் அவன் தேரில் ஊர்ந்து சென்று அவன் அரண்மனையை அடைந்தேன். அவ்வரண்மனை விளங்க யான் உள்ளே புகும்போது, அவன் மகள் கேமசரி யென்பாளைக் கண்டு திகைத்தேன். அவன் அவளை எனக்கு மகிழ்வுடன் மணம் புரிவித்தான். ஆங்கும் இரண்டு திங்கள் கழிந்தன. பிறகு அவளறியாமற் புறப்பட்டேன்.

"இவ்விடத்து இந்நாட்டினைக் காண வந்தேன். அரசன் கண்டான். அரசன் சிறுவர் செவ்விய வழிபாடு செய்து விற்றொழில் கற்றனர். அரசனும் மைவழி நெடுங்கணாளைத் தந்தனன்."

இங்ஙனம் சீவகன் தான் உற்றனவெல்லாந் தம்பிக்கு விளங்கக் கூறினான். நந்தட்டன் அவற்றைக் கேட்டுக் குரவரும் இவற்றைக் கேட்டிலரே யெனக் கண்ணீர் விட்டான். மழையெனப் பெருகிய அக்கண்ணீர் மார்பகமெல்லாம் நனைத்தது. சீவகன் அவன் கண்ணீரைத் தன் கையால் மாற்றிக் கூறுகின்றான் :

*"ஐயனே! திண்ணிய பொருளை எய்தலாம். பகைவரை வெல்லலாம். நண்பரையும் பெண்டிரையும் மக்களை

*திண்பொருள் எய்தலாகும்; தெவ்வரைச் செகுக்க லாகும்;
நண்பொடு பெண்டிர் மக்கள் யாரையும் நண்ண லாகும்,
ஒண்பொரு ளாவதையா! உடன்பிறப் பாக்க லாகா;
எம்பியை யீங்குப் பேற்றேன் என்னெனக் கரியதென்றான்."

யும் பிறரையும் அடைய முடியும். ஆக்கலாகா ஒண் பொருளாவது உடன் பிறப்பொன்றே. இத்தன்மையாகிய உடன் பிறப்பை இங்குப் பெற்றேன். இனி எனக்கு அரிய தொன்றில்லை.''

சீவகனுக்கு நந்தட்டனுடன் தேனிற் கலந்த பாலெனப் பல பொழுதுகள் இனிதாகக் கழிந்தன.

**தோழர் கலக்கம்**

இனி, இராசமா புரத்தே நிகழ்ந்தது காண்போம். சீவகன் தோழரெல்லோரும் வேனிற்காலத்துக் குன்று போல மனங்கொதித்து மெய்யிளைத்துக் கிடந்தனர். பது முகனும் புத்திசேனனும் சீதத்தனும் தேவதத்தனும் ஒன்றியிருந்து இனி நாம் செய்ய வேண்டுவ தென்னெனச் சிந்தித்தனர். தத்தைமட்டும் ஆடுங் கலவ மயில்போல மெய்வாடாமற் களிப்புடனிருத்தல் அறிந்தனர். 'ஈதென்ன வஞ்சமோ? நம் தலைவன் மறைந்துறை கின்றனனோ? அவளை வினவியறிவோம்,' என, அவளிருக்குமிடத்தை மெல்லச் சேர்ந்து வினவினர். வெள்ளிமலை மன்னன் மகள் சீவகற் குற்றதும் அவன் மறைந்து போனதும் பிற வும் விளங்கக் கூறினாள்.

அவள் மொழி கேட்ட மைந்தர்கள், இழந்த உயிரை முறைப்படி பெற்றவர் போலப் பெரிதும் மெய்குளிர்ந்து உண்மையான அச் செய்தியாலே வருத்தம் நீங்கினர்; திரு வனைய சாயலாளின் சிற்றடிச் சிலம்பு தம் அழகிய சிகை யிலே பட வணங்கினர்; விரைவிலே உருகுமன்பினால் உடல் பருத்தனர். அவனைக் காண்பேம் என்னுங் காதலாலே பாடியாடினர். 'ஒலிமிகும் கடல் பொங்கிச் சிந்திய ஒளிமிகு முத்துக்களைப் பதித்தாற் போன்ற முறுவலையுடைய இத் திருவனையாளைத் தொழுவார் தம் துயரமெல்லாங் கெடும்,' என்று கூறினர்.

'ஆயிழையே! யாம் ஆங்குச் சென்று நம் ஐயனைக் காண விழைகின்றேம். நீ கூறுஞ் செய்தியுளதேற் கடிதிற் கூறுக!' என்றனர்.

அவள் மாட்சி மிகுந்த பூவிதழ் ஒன்றின்மீது எழுத்தாணி கொண்டு மையினாலே மறைந்த பொருளுடன் கடிதில் எழுதினாள். அதனை மடித்து அரக்கிட்டாள். காதின் குழையினாலே இலச்சினை வைத்தாள். 'இது அவனிருக்குந் திசைக்குச் செல்வதாக,' எனத் தெய்வத்தைத் தொழுதாள். பிறகு, அதனைத் தோழரிடம் நல்கினாள். அவர்களும் புறப்பட்டனர்.

**தோழர்களின் புறப்பாடு**

விளக்கமுற்ற திங்கள் அசுவதி நாளைச்சேர்ந்த அன்றைய நாளிலே பிறந்து வளர்ந்தன, நல்லியல் முற்றிய புள்ளிகளையும் சுழியையும் உடையன, முழங்கி முன்னிருகால்களையும் உமிழ்வனபோலத் தாவுவன, குறுக்கே பாய்வன, தம்மேலிருந்தெய்யும் அம்பினும் விரைந்துசெல்வன, அள்ளலாகிய சேற்றினும் மணலினும் நீரினுஞ் செல்லநேர்ந்தாலும் உள்ளம்போலச் செல்வன, வலிமை கெடாதன, அமரிடையே கொள்ளிவட்டம்போல இடையறாமல் திரிவன, வெள்ளிமலைச் சாரலிலே மேன்மையாகப் பிறந்தன, சாமரையணிந்தன, விளங்கும் ஒளியையுடைய கலணையுடையன, கிண்கிணி மாலையும் செச்சைமாலையும் ஒலிப்பன ஆகிய இருபதினாயிரம் குதிரைகள் வீரர்களாற் செலுத்தப்பெற்று வந்து கூடின. காலாட்படைஞரும் ஆர்த்தெழுந்தனர்.

ஆராய்ந்த எருதுகளும், விரைந்து செல்லுங் கோவேறு கழுதைகளும், கடுநடை ஒட்டகங்களும், காற்றெனச் செல்லும் பிறவும் நொடியிலே நூறு விற்கிடையளவு செல்லக் கூடியனவாய் மனம் பொருந்திப் பண்டங்களைச் சுமந்து நின்றன.

உலகை விலைகொள்ளும் தன்மையுடையனவாகப் பவளக்குளம்புடனும், காற்றினும் விரைந்துசெல்லும் நடையுடனும் கண்கவரும் அழகுடனும் கிளிநிறத்துடனும் செல்லும் பரிகள் நான்கைப் பண்ணுறுத்தித் தோழர் நால்வரும் ஏறினர்.

பின்னர் நாளும் கோளும் ஓரையும் பறவையொலியும் பிற நிமித்தங்களும் நல்லனவாக எப்போதும் ஆராயும் மக்களைப்போலவேகொண்டு அவ்விடத்துப் போகின்ற சாத்துடனே எருது முதலியன போயின

பறைகள் ஒலித்தன. சங்குகள் ஆர்த்தன. உறையிலுள்ள வாளும் ஒளிவிடுசுடருடைய வேலும் மின்னின. கடலனையபடை கரையையுடைத்தெழும் வெள்ளம்போல விரைந்து ஆரவாரித்தெழுந்தன.

முருடு முழக்கத்தினால் வயலிலிருந்த அன்னங்களும் நாரைகளும் தம் கால்பட்டு, விளைந்த செந்நெற் கதிர்களின் மேல் மலர்ந்த முல்லைப்போதுகள் தேனைப்பெய்து சிந்த எழுந்தோடின. கூகைப்பெடை சேவலோடு புணர்ந்து அழகிய குலைகளாகக் காய்த்த மிளகின் நீண்ட கொடியை ஊசலாக விரும்பும்—முறமனைய நீண்ட செவியையுந் துதிக்கையையுமுடைய யானைகள் மிகுந்த—காடு இளகுமாறு படைகள் சென்றன.

அருவிவீழுங் குன்றும் ஐவன நெல்விளைந்த மலைச்சாரலும், பறவைகள் ஆரவாரிக்கும் தினைப்புனத்தையுடைய கானமும், வறியவர் வாழும் நாடும் சீவகன் எதிரே வருகின்றானோ என ஆராய்ந்தவாறு சென்ற படை மாதவர் உறையும் பள்ளியை அண்மியது.

**விசையையைக் கண்டனர்**

அப்பள்ளியிலே வண்டுகள் மலரிலே துயிலவும், குயில்கள் கூவவும், மயில்கள் ஆடவும் தேனைச்சொரியும் மலர்கள் விரிந்து நிறைந்தும், தளிரைக்கொண்டு வேய்ந்து, கிளைகள் தாழ்ந்து வானுலகையொப்பதொரு பொழில் உள்ளது. அப்பொழிலில் காவி, கழுநீர், குவளை, ஆம்பல், தாமரை மலர்கள் விரிந்து, வண்டுகள் முரன்று, மடநாரையும் அன்னமும் பயின்று, மீன்கள் துள்ளிவிளையாடும் பொய்கைக் கரையிலே படைகளுடன் நால்வரும் தங்கினர்.

அப்போது, அழகர்களாகிய தோழர்கள் முனிவர்கள் உறையும் பள்ளியைச் சுற்றிப் பார்த்துக்கொண்டுவந்தனர்.

ஓரிடத்திற் கொய்யத்தகுந்த மலர்ப் பொதும்பரில் மரப் பலகையிலே திருவினுஞ் சிறிது மேம்பட்ட பொலிவுடன் வீற்றிருக்கும் விசையையைக் கண்டனர்.

ஆடையில் தோய்த்த குருதிபோன்ற செங்கல் மேனியை வருத்த, நுண்ணிய மேலாடை தோளில்வீழ்ந்து வருத்த, சீவகச் சிறுவன் உளத்தை வருத்த, வடிவேலனைய கண்கள் சென்றகால நிகழ்ச்சியை நினைதலால் நீர் பெய்து வருத்தச் சோர்ந்திருந்தாள் விசையை. புழுதியுடன் கலந்து நீலமணியைக் கம்பியாக நீட்டினாற்போன்ற கூந்தல் நீரில் முழுகாமலும் சடைபிடித்துத் தாழ, மறைவான இடத்திலே, அருகனடியிலே மலரிட்டுக் குற்றமற்ற வாழ்த்துக்களை உள்ளத்திலோதி, வணங்கியிருந்தாள்.

தோழர்கள் அவளை நெருங்கும்போது, சீவகனை நினைந்து, கண்ணீர் மேலாடையை நனைக்க அழுதுகொண்டிருந்தாள். இளைஞர் நால்வரும் அவளைக் கண்டு மனம் நெகிழ்ந்து வணங்கி அமர்ந்தனர். அவர்களைக் கண்ட அவள் உள்ளமும் சிறிது மகிழ்ந்தது.

தோழர்கள் அவளை, 'மலைகள் சூழ்ந்த இப்பள்ளியை இடமாகக்கொண்டு வீற்றிருக்கும் இவள் மணங்கமழுந் தாமரை மலரில் வாழும் திருமகளோ? மொழிகமழும் நாவில் உறையும் நாமகளோ? அன்றி, அலைகடலை ஆடையாகவுடுத்த நிலமகளோ?' என ஐயுற்றனர்.

'மங்கலம் இழந்த திருமகளைப் போல்வீர்! நீர் தவம் புரிய இங்கு வரவேண்டியதென்னை? அடிகளின் குலம் யாது?' என, அவள், 'என் குலமும் என் வரவும் எளிதிற் கூறவியலாது. நீங்கள் நுங்கள் குலமும் வரவும் உரைமின்!' என்று வினவினள்.

தேவதத்தன் செப்புகிறான்:

"நிறைந்த நீர்நிலையிலே மலங்கும், மொய்க்கின்ற இளவாளையும், பூட்டின வில்போன்ற இறவும் பொருது துயிலும்—பொருள் குவிந்த செல்வர்கள் உறையும்—இராசமா

புரம் என்னும்—யாவரும் நாடும்—அழகிய நகரம் எம் இருப்பிடம்.

"அரசர்கள் நடுங்கப் பருத்த திரண்டதோள்களை யுடைய மடங்கலனைய இவன் பெயர் சீதத்தன்; பொன்மாலை யணிந்த மார்பினையும் புகழையும் உடைய, நுண்ணுணர்வு மிக்க அமைச்சன் சாகரனுக்கும் வாளனைய கண்ணாள் குருதத்தைக்கும் மகன்.

"போரை விளைத்துக் கவசமணிந்தணிந்து மிச்சிலாகிய வரைமார்பனாகிய இவன் பெயர் புத்திசேனன்; அளப்பரிய நான்மறை பயின்ற அசலன் என்பவன் மனைவியாகிய திரு வனைய திலோத்தமை யென்பாள் மகன். இவன் புகழ் உரைத்தற்கியலாதது. அசலன் சச்சந்தனுக்குப் படைத் தலைவன்.

"தன் மலர் மார்பிலே மதயானையின் கோடுகள் உழுத தழும்புடன் அமர்ந்திருக்கும் இவன் பெயர் பதுமுகன்; சச்சந்த மன்னனுக்குரிய செட்டி தனபாலன் மனையாள் பவித்திரையின் மகன்.

"செல்வமிக்க அந்நகரிலே சச்சந்தன் பெயராற் பட்டம் பெற்றவன், வில்மருவிய தோளான் விசயதத்தனுக்கு உயிர்க்கவசம் போன்றாள் கற்புமிக்க பிரீதிமதியென்பாள் பெற்ற காதல் மகன் யான். என் பெயர் தேவதத்தன்.

"எங்கள் வினையால் மன்னன் மடிந்தான். அன்றே எங்கள் உயிரனைய நம்பியும் நாங்களும் பிறந்தோம். எங்கள் தமர் எங்களை நம்பிக்குத் தோழரென நல்கினர். நல்வினையாலே நம்பியொடு கூடிய நாங்களும் நம்பியும் 'எங்கெழி லென் ஞாயிறு,' என வளர்ந்தோம்.

"ஓராண்டு முற்றிய பின்னர் நந்தட்டன் என்பான் நம்பிக்குத் தம்பியாகப் பிறந்தான். நந்தட்டனுக்குப் பின் நபுல விபுலரென்பார் பிறந்தனர். நாங்கள் எண்மரும் திண்டரிய வெம்மையுடன் திசை யானைகள்போலக் கடுக வளர்ந்தோம். நம்பியுடனே விற்றொழிலும் வாட்பயிற்சி

யும் மற்போரும் தேர் செலுத்தலும் யானை நடத்தலும் குதிரை விடுதலும் யாழிசைத்தலும் இவைபோன்ற பல கலைகளும் நீந்திக்கற்றோம்.

"வெவ்விய வில்லினால் வேடர் கொண்டுசென்ற ஆநிரைகளை மீட்டு, வானிற் செல்லும் விஞ்சையர் மன்னன் மகளை யாழிலே வென்று மணந்து, அசனிவேகத்தை அடக்கிக் குணமாலையின் நலனைப் பருகிய எம் தோழனாகிய நம்பியின் பெயர் சிந்திப்பவரின் துன்பம் நீங்குதற்குரிய சீவகன் என்பதாகும். அவன் அந்நகரிலே முதன்மைபெற்ற பழமையான வணிகன் கந்துக்கடன் பெற்ற முதன்மகன்.

"ஒருநாள், அந்நகரிலே அரசனுடைய பிழையாலே, கொடிகள் தவழும் பருத்த தோள்கள் இறுகக் கட்டப்பெற்று, மணங்கமழும் கூந்தலையுடைய மகளிர் அழுது மனம் வெதும்பக், கொடிகள் தவழும் நகரிலே கொல்ல..."

**விசையை வீழ்ந்தாள்**

தேவதத்தன் இம்மொழியை முடிக்கவில்லை. 'கொல்ல' என்ற சொல் வந்தவுடனே விசையை மயங்கி, இடியொலி கேட்ட அரவென வீழ்ந்தாள்.

தோழர்கள் வியப்புற்றனர். "மாதவப் பெருமாட்டியின் வண்ணம் என்னே! மாநகரிலே நம்பிக்கு நேர்ந்த துன்பத்தைக் கேட்ட அளவிலே, அன்புறு தம் மகனுக்குற்ற துன்பமேபோலக் கலங்கி இருகண்களும் மேலே செருக, அறிவிழந்து கலங்கி வீழ்ந்தார். ஆதலால், இவர் சாலவும் அருளுடையார்போலும்!" என்று பாராட்டினர்.

உடனே, மயங்கி வீழ்ந்த மாபெருந் தேவிக்கு நேர்ந்துள்ள ஆழ்துயரத்தைத் தவிர்த்தற்குரிய மருந்தினைத் தேடிக் கொணர்ந்து, முத்துவடத்தை யறுத்துக் கூடவைத் தரைத்த சந்தனக் குழம்புடன் பனிநீரைக் கொண்டு தெளித்தனர். தெளிந்த யாழ்மொழியாள் ஆற்றுமல் அரற்றுகின்றுள் :

விசையை அரற்றினள்

"எம்மானே! படைவகுப்பாற் சிறந்த கடல்போன்ற படையுடன் பொருது மன்னன் இறக்க, யான் மயிற்பொறியூர்ந்துசென்று புறங்காட்டிலே வீழ்ந்தேன். மயங்கி வீழ்ந்த எனக்குத் துணையாக நீ பிறந்தனையே! இப்பொழுது எனக்குத் தோன்றாமல் மறைந்தனையோ?

"நீ பிறந்தவுடன் கைவேலுடன் வந்த கந்துக்கடன் கொண்டுசென்று, செறிந்த மகிழ்ச்சியுடன் முற்றிய அணியினள் சுநந்தைக்குக் கொடுத்தான். அவள் வருந்தாமல் நின்னை வளர்த்தாள். வளர்த்த அவள் துன்புற அகன்றனையே! ஐயா! என் ஐயா!! என் ஐயாவோ!!!

"என் அரசே! ஒளியை நிரைத்த அணிகலன் அணிந்த வேல்வேந்தன் முன்னர் உரைத்த மூன்று கனவும் புணையாக என் உயிரைச் சுமந்திருந்தேன். எனக்குறுதியாகாமல் என் அரற்றலையுங் கேளாமல் இறந்தனையே!

"அரசனும் அழகிய செல்வமுமாக இருந்து குடிகளை நின் குடைக்கீழ்க் காத்திருந்தாயெனில், அதனைக் கண்டு என் துன்பமெலாம் நீங்கும். பிறகு, நீ 'அம்மா! துறந்து போ,' என்னப் போவேன் என்றிருந்தேன். ஆ! ஐயோ! ஐயோ!! ஐயோ!!! நீ முன்னே அகன்றே போய்விட்டனையே!

"'கோமான் மகனே! குருகுலத்தார் போரேறே!—ஏமாங்கதத்தார் இறைவா! என் இன்னுயிரே!—காமா!! கடலுட் கலம் கவிழ்த்தேன் கண்ணுள் நீர்—பூமான் புனைதாராய்! நோக்காது போதுதியோ?'

"கட்டுத்தறியிற் பொருந்தும் மதகளிற்றையுடைய சச்சந்தனார் வழித்தோன்றலைப்பற்றி யிங்குவந்தார் கூறிய நலனைக்கேட்டு நோன்பிலே மறைந்திருந்து பலமுறையும் நொந்தேன்! அந்த நோயுடனே இறக்கின்றேன். அந்தோ! அறனே! இனி ஆற்றேன்! ஆற்றேன்!!

"வானவர்களே! என் மகனை என் கண்குளிர முன்னொரு முறையே கண்டேன். பின்னரும் ஒருமுறையேனுங் காண்பதற்கியலாமற் றப்பிய தீவினைதான் யாதோ? இனி, என்னைப்பாராகிய பெண்கள் இவ்வுலகில் தோன்றற்க!"

அன்னப்பேடனையாளாகிய விசையை வருந்திய மயில் போல வீழ்ந்தாள்.

**தோழர்கள் மகிழ்ச்சி**

புண்பொருந்திய மத்தகத்தையுடைய போர்க்களிற்றை அழித்த, வேலைப்பாடமைந்த தாரினன் சச்சந்தன் தேவியின் மொழியைக் கேட்டு, அரசன் பட்டதற்கு வெய்துயிர்த்து, அரசி யிருந்ததற்குக் களிப்புமிக்க நெஞ்சினராய்க் கண்களில் நீர்மல்க ஒருவர் முகத்தை யொருவர் நோக்கினர். 'வினைமுடிந்தவாறு கண்டீரோ,' என்று கூறிக் கடக மொளிரத் தம் கையை மறித்து, 'இனி, உலகைக் கொண்டோம்! கீழ்மகன் உயிரைக் கூற்றெனப் பருகினோம்,' என்று கூறிக் களிப்புடன் ஆடினர்.

**விசையையைத் தேற்றினர்**

பிறகு, மயில்போற் கிடந்த விசையையைப் பல குளிர்ந்த பொருள்களாலே தெளிவித்தனர். அவள் உணர்வுபெற்றுப் புலம்பியவாறே யெழுந்திருந்தாள். அவளைச் சூழ்ந்து நின்று வணங்கிக் கூறுகின்றனர்:

"கொல்லக் கொலைக்களங் குறுகுதலும், ஒரு தெய்வம் தன்னுணர்வினால் இதுதான் இடமென்று நீக்க, அவ்விடத்திலிருந்து நீங்கினான்.

"நாங்கள் தவமாதாகிய நின்னை வணங்கவந்தோம். இங்கு, மலர்மாலையான் சீவகன் தன்னை வணிகனென மறைத்த போர்வையைக் கைவிட்டு அரசனாதலைக் கண்டோம்."

தோழர்கள் அவளை வணங்கினர். விசையை தன் மகன் உயிருடன் இருப்பதுகேட்டு மகிழ்ந்தனள்.

**விசையை வேண்டுகோள்**

"நிலவுலகின் காவலனான சச்சந்தன் பரணி நாளிற் பிறந்ததனாற் பகை வெல்லாவற்றினையும் மதியாதவன் ஆயினான். எனினும், என்னிடங் கொண்ட காதலாலே உலகு காவலைக் கைவிட்டு நீங்கி அமைச்சர் மொழிகேளாமல், இரணியன் பட்டதனைத் தானும் பட்டான். விசையையென வுலகறியப்பட்ட சிறப்பிலாதேன்மேல் வைத்த காதலால் அரசனுற்றதையெல்லாம் நம்பிக்குக் கூறும் முறையறிந்து கூறி, ஐயனை என்னிடம் வருந்தாதவாறு கொணர்மின்! வேலேந்திய நம் நம்பிக்கல்லது வேறெவர்க்கும் இப்பொருளில் யாதும் உரையாதீர்! யாரையும் நம்பாதீர்! இத் தன்மைய குற்றங்கள் நினைவின்றியும் வருதலின், அறிவிலாருடனும் பெண்களுடனும் பேசாதீர்! பகைவருள்ளத்தையும் பாம்பின் போக்கையும் வகைகொண்ட மேகலை யணிந்த மங்கையருள்ளத்தையும் வானிற் படரும் முகிலிடைத் தோன்றும் மின்னையும் நிலையில்லாதனவெனக் கொண்மின்! உள்ளத்திருப்பதைப் போற்றிச் சென்மின்!" என்று கூறினள்.

"பகைவரால் வணக்கவியலாத வில்லேந்திய—நற்பண்புடைய—சீவகனை ஒரு திங்கள் எல்லையிலே நின் திருவடிகளிலே வணங்குமாறு கொணர்வேம். பின்னை நீ பணித்தவாறே செய்து, பகைவருடைய தழும்பேறிக் கிடந்த பகையை முற்படக் கெடுப்பேம்," என்றனர் தோழர்கள்.

மாசுபடிந்த மணிக்கொடி போன்றவள், 'அதனையே துணிமின்!' என்றாள். அவர்களும் புறப்பட்டனர்.

**தோழர்கள் செலவு**

மகளிர் தமது வாய் பவளம்போலச் சிவந்திருத்தலைக் கண்டு நாணமுற்று, அச்சிவப்பு நீங்குதற்குரிய நெறியெதுவென ஆராய்ந்து, தம் கூந்தலைக் கலைத்து, அச்சிவப்பு நிறத்தைத் துடைப்பதுபோல, இந்திர கோபத்தைக் கவ்வியவாறு கலவத்தைப் பரப்பியிருந்த மயில்கள், இவர்கள் ஊர்ந்துசெல்லும் குதிரைகளின் தார்மணியொலி கேட்டு வானிலெழுந்து பறந்தன.

சந்தன மரத்தின்மேல் தொடுக்கப்பட்டிருந்த அடை நீண்டொழுகும் தேனையுடைய குன்றும் அதனைச் சார்ந்த பூங்காவும் இனிய நீர் பெருகும் யாறும் நீந்திச்சென்று மாந்தர் வாழும் நாட்டையுங் கடந்துசென்றனர்; ஏமமா புரம் நாற்காத அளவிலேயிருக்கும் ஓரியாற்றின் கரையிலே தங்கினர். மதுவிரியும் மலர்க்கண்ணியணிந்த மங்கையர் மூட்டிய செந்தீயாற் புதுக்கலத்தினின்றும் பொங்கியெழும் பாலின் நுரைபோலச் செங்கல்லாற் கட்டப்பெற்ற மதிலினுள் உயர்ந்து வெண்ணிறச் சுதைதீற்றிய மாடங்கள் தோன்றிய ஏமமாபுரத்தின் காட்சி கண்ணைக் கவருந்தகையதாயிருந்தது.

**தோழர்களின் சூழ்ச்சி**

மானை வருத்தும் நோக்கியரான மங்கையரின் மருங்குலேபோன்று நுடங்கி அழகுறச் செல்லும் அக்காட்டாற்றின் அடைகரையிலே, ஞாயிற்றின் கதிர்கள் செல்லாத இருண்ட, தேனினம் நீங்கவியலாத குளிர்ச்சி தங்கிய பூம்பொழிலொன்றிலே, உயர்ந்த மணல்மேடையிலே நால்வருஞ் சென்றமர்ந்தனர். அவர்களமர்ந்திருந்த மணல் மேடை சிந்திய நறுமண மலர்களாற் பூந்தவிசேபோலக் காணப்பெற்றது.

ஆங்கமர்ந்த அவர்கள் சீவகனைக் காணுந்திறம் யாதென ஆராய்ந்தனர்.

பதுமுகன் காதலுடன் கூறுகின்றான் :

“தடமித்தனுடைய செல்வமும் படையும் நிரம்பிய மாநகரில் உள்ள இனமாகிய ஆநிரைகளை ஒப்புக்குக் கைப்பற்றுவோம். அப்போது முருக்கமலரெனச் செவ்வொளி தவழும் அடிகளையுடைய சிறப்புற்ற நம் அண்ணலைப் போர்க்களத்தெதிர்ப்படல் தவறாது. வளைந்த வில்லுடன் தொலைவிலே நின்று போர்புரிந்தாலும், பிறகு வாட்போர் தொடங்கின் சீவகனை நெருங்கிக் காண்போம், அப்போது, நம் படையை மீட்டுக்கொள்ளலாம். இதுவே நான் விரும்பிய முறை.”

இவ்வாறு மூவர்க்குங் கூறிப் படைகளையும் விளித்துப் போருக்கெழப் பணித்தான்.

அப்போது புத்திசேனன் புகன்றான் :

"நாம் சென்று கடலெனப்பரவிய ஆநிரைகளைக் கொண்ட பிறகு, நம் ஐயன் அந்நகரில் இல்லையானால், எதிர்த்த பெரும்படையொடு பொராமற் பின்வாங்கிவருதல் பழிதருஞ் செயலாய் முடியும். அன்றி, வானில் தவழும் முகிலிடை மின் ஒளிர்வதேபோல நம் மறவர் வஞ்சமின்றி வாளேந்திப் போர்செய்தால், யானைகள் குளிக்கத்தக்க இரத்தப் பெருக்கினை யெழுப்பநேரும். எனவே, இச்செயலை யெண்ணித் துணிமின்."

இங்ஙனம் புத்திசேனன் உரைத்ததைக் கேட்ட மற்றவர்கள், 'எங்ஙனமாயினும் போர்செய்வதே துணிவு,' என்றனர்.

அப்போது இவர்களால் விடுக்கப்பெற்ற ஒற்றர்கள் மூவரும் வந்து தாம் கண்டதைக் கூறினர்.

**ஒற்றர் கூற்று**

"மன்னன் தடமித்தனுடைய பட்டத்தியானை வளைய சுந்தரம் எனும் பெயருடையது; முளைத்திங்கள்போல முத்தொளிருங் கோடுகளையுடையது; இளம் பிடிகள் ஐந்நூற்றினிடையே அஞ்சனவரையேபோலத் திரிவது. அது கடுமதங்கொண்டு முகிலெனப் பிளிறியது. பாகரும் விடுகிலராய்த் தடுத்தனர். எனினும், கட்டுத்தறியை முறித்துக்கொண்டு, நீருருளைப் பிளந்து, பின்காற் சங்கிலியை யறுத்துக்கொண்டு பிடியொடும் அணைவின்றிப் பாகரை வெருவரக்கொல்ல அழன்றெழுந்தது.

அதன் கண்களிலிருந்து உமிழுந் தீயினால் நிறங்கரிதானாற்போல வண்டுகள் மொய்த்து உலவப் பரவிய மதத்தையுடைய அண்ணல் யானையை நம் சீவகன் அடக்கினான். அது அவனிடத்தே மகளிர் உளம் படிவதேபோலப் படிந்தது. வரைபோலும் மார்பினன் பெருமலைமீது தாவும்

அரியேறுபோலப் படிவித்தற்கரிய அவ்வியானையின்மேற் புரோசைக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு விரைந்தேறியதைக்கண்ட மக்கட்குழு, அலைமோதுங் கடல் இரைந்தாற்போல ஆரவாரித்தது. மணம்விரியுங் கண்ணியான், 'அப்புது, அப்புது, ஆதுஆது, ஐஐ' என்று கூறி, அங்கைத் தலத்தாற் கொம்மை கொட்டினவுடன், அக்களிறு பொங்கிய களிப்புடன் விளங்கி, அவன் பயிரின்வண்ணம் (குறிப்பின்படி) அவனிடுந் தொழில்களைத் துதிக்கையால் இயற்றியது.

சீவகன் தன் பெருவலிமிக்க கைகளினல் தலைப்பக்கம் மணிமுடியையுடை புரோசைக்கயிற்றை இருவடங்கொண்டு சேரக்கட்டினன். நெடுந்தோட்டியையும் குறுந்தோட்டியையும் பிணைத்துக் களிற்றின் கழுத்திலேயிட்டான்; கயிற்றைக் கோத்துப் பட்டத்தையுங் கட்டினன் பனிமால்வரை மீது மின்போல; கீழ்வயிற்றிற் கட்டுங் கச்சையுங் கட்டினன்; இருபக்கத்தினும் மணியையும் அணிந்தான்; யானையின் விரைவைத் தடுக்கும் ஒரு சங்கிலியை அவிழ்த்துவிட்டான்; தன் அடிகளிரண்டின் முனையையும் புரசைக் கயிற்றுக்குள்ளே அழுந்தச்செலுத்தி மன்னனும் விழையுமாறு வந்து நின்றான்.

திரண்ட தொடிபோல வளைந்த மதிலிலே மன்னன் வந்து நின்று, 'யாம் சீவகன் யானையைச் செலுத்தும் இயல்பைக்காண விழைகிறேம். இங்குக் கொணர்க,' என்றான். சீவகனும் விரைவினலே காற்றைப்போலவும், ஒலியாற் கடல்போலவும், வடிவாற் கரிய மலையெனவும், அச்சத்தால் இடி நிகர்ப்பவும், கொலையாற் கூற்றெனவும் நினைக்குமாறு அதனை மதிலுக்குள்ளே கொணர்ந்தான்.

இளஞாயிறு ஒருகுன்றின்மீதூர்ந்து அழகுறவிரைந்து பறப்பதுபோலவும், புயலுடன் கூடிய முகிலை யூர்ந்துசெல்லும் வானவன்போலவும் அதனைச் செலுத்தின தோற்றம் எழுதலாகாதவண்ணமாக இருந்தது.

குயவனுடைய கலம்வனையுந் திகிரியும், உயிர்மேற் செல்லும் கொடிய விரைவினையுடைய காலன் ஆழியும்போல வட்டமும் வீதியும் பத்தியும் என்னும் இச்செலவுகளிலே தவறின்றி ஒரு நொடியிலே நடத்தினான். சீவகனும் ஒருவன், அவனருங் களிறும் ஒன்று, எனினும் நூறுயிரங் களிறுகள் திரிவபோன்றன. எங்கு நோக்கினுங் களிறே காணப்பெற்றது. 'இவனல்லது களிறூர்வதற்கு மற்றொருவன் இலன்,' என்று கூறிய மன்னவை, 'அமைக', எனவும் விலக்கியது.

உடனே, தோட்டியின் நுனியெனும் பெரிய நகத்தின் நுனியினால் நெற்றியிலே அழுத்தினவுடன், இவனுள்ளத்தை விரைந்துணர்ந்த யானை கடுகவே நின்றது. நின்றவுடன் இருபக்கத்தினுமிருந்த மணிகள் கிணின் என ஒலித்தன. வெள்ளம் போன்ற மக்கட்கூட்டம் வியந்து கை விதிர்த்தது.

'தன் உள்ளத்தில் நினைப்பதைத் தானே தனக்குரைப்பதைப்போன்று பணிசெய்தலாலே, என்னுளம் நின்னுளமே யென்றுரைப்பதாகிய களிறு நம்பியுடன் இயைந்து தொழிலைச் செய்தது. எனவே, அக்களிற்றுக்கும் சீவகனுக்கும் வெவ்வேறு மனமில்லையாயிருந்தது,' என்பாரும், 'இச்செல்வன் வானவனே; மகனலன்,' என்பாரும், 'உலகிற் கனகமாலையே நோற்றனள்,' என்பாருமாக ஓவென இரைந்து கூறலின் ஆரவாரமுண்டாயிற்று. அப்போது மன்னனும், மக்களும் மகிழ்ச்சியுடன் தம் தம் தோளை நோக்கினர்.

பிறகு, கவளமுண்ணும் பெருங் களிற்றைக் கம்பத்திலே கட்டிவிட்டு மங்கலப் பாடகரும் வாழ்த்துக் கூறுவோரும் (வண்டரும் ஓவரும்) புகழப், பெருநகரமக்கள் தொழத் தம்பியுந் தானுமாகத் தமக்கென அமைத்த அரண்மனையிலே புக்கனன் சீவகன். நாங்கள் கண்ணாலே கண்டோம்."

இங்ஙனம் மாற்றுருவுடன் சென்றுவந்த ஒற்றர் மூவரும் தனித்தனியே கூறியவை ஒத்திருத்தலின், பதுமுகன் மகிழ்ந்து கொழுவிய நிதியை முகந்து அவர்கட்கு நல்கினன். பிறகு, வலிய திரட்சியையுடைய சுறுவினம் பலவுந் தொக்கனபோலும் மறவர்களும் வில், வாள், வேல் போன்ற படைகளையேந்தி நின்றனர்.

**ஆநிரை கவர்தல்**

வேல் நிரையையுடைய வாள் மதிலைப் பிளந்துசென்று செய்யும் போரிற் களிற்றின் நெற்றியிலே திண்ணிய குளம்பை யழுத்தும் இவைகள் ஆநிரை கொள்ளுந் தொழிலை இப்போது கொண்டன என நகைத்தவாறு, உடன் விரைந்து மாநிரையைப் பண்ணுறுத்தினர். துடியும் சிறுபறையும் ஒலித்தன. வெள்வளைகள் வானுலகுற நிமிர்ந்து முழங்கின. வீரக்கழலணிந்த வீரர்களும் கவசம் பூண்டனர். இங்ஙனம் விடையுடன் கூடிய ஆநிரைகளை விழுங்கப் புறப்பட்டனர்.

நிற்க, அழகிய காந்தள் மலரைக் கண்ணியாகத் தொடுத்தணிந்த நெற்றியர்—அளவிட்டு நெய்த சிவப்பூட்டிய ஆடையர்—வேய்ங்குழல் அசையும் முதுகினர்—ஒளிவிடும் அழகிய கோடரியேந்திய தோளினர் ஆகி, மன்னனுடைய ஆநிரைகளைக் காக்குங் கோவலர், ‘ஆநிரையின் இடையிலே காரிப்புள் ளெழுந்தன. ஆதலாற், காவல் செய்ம்மின்,’ என்றனர்.

அப்பொழுது, தோழர் படையினர் தீப்பொறியை யுமிழும் அரவென விளங்கும் வில்லை வளைத்துக் கணைகளைச் சிதறினர்; வளைகள் ஆர்த்தன. பரிகள் கடுகின. கண்ட ஆயர் நிரையைக் காக்க முற்பட்டோடிவந்தனர்.

மலைக்குகையிலே வாழும் புலியனைய வீரர்கள் நிரையை வளைத்தனர். அஞ்சாத ஆயரும் வருத்திப் போரிழைத்தனர். எனினும், இயலாதவராய்ப் போரைக் கைவிட்டுக் கொடிய சொற்களால் அரசனுக்குணர்த்த ஓடினர்.

போர்

அப்போது, தேர்ப்படையை மிகவும் உடைய மன்னன் நந்தட்டனை அருகிருத்தி, 'நும் நீர்வளமிக்க கழனிசூழ்ந்த நாடும் நகரும் நும் குலமும் எல்லாம் விளங்க உரைப்பாய்,' என வினவினன்.

நந்தட்டன்

"அடிகள் விருப்பம் அதுவாயின், நீ யுணருமாறு, செம்பொன்னை அரித்தொழுகும் அருவியின் ஒலியாற் குன்றத்திலிருந்து வெருவியோடிய மயில்கள் நாரைக் குஞ்சுகளுடன் மருதமரத்திலே தங்கும் வளமிகு நாட்டையும் ஊரையுங் குலத்தையுங் கூறுவேன். தீயை யுமிழ்ந்து ஒளிவிடும் வேலோனே! கயல்மீன் பிறழ்ந்து துள்ளுவதால் அஞ்சிய அன்னமும் குருகும் ஓடுவதால் அவற்றின்மெய் தீண்டிச் செந்நெலின் கொழுவிய கதிர் குவளைமேல் தாக்குதலால் நறுமணம் விரிந்துபரவ, அதனை விரும்பிவருந் தேன் கூட்டங்கள் முரலும் கழனியையுடைய எங்கள் நாடு ஏமாங்கதம். பூந்துகிலுக்கு ஊட்டிய அகிற்புகையும் பொன்னனைய மகளிரின் கூந்தலில் வண்டுகள் கொப்புளித்த தீந்தேனும் மக்கள்மேல் தவழ்ந்து இருள்படுதலாலே மாடங்கள் புதையுஞ் செல்வத்தினையுடைய பழமையான நகரம் இராசமாபுரம், எங்குலம்...."

என்று நந்தட்டன் கூறிக்கொண்டிருக்கும்போது, குழப்பமான ஆரவாரம் ஒன்றெழுந்தது. 'ஆநிரைகளையெல்லாம் பொங்கும் உளையையுடைய குதிரைவெள்ளம் கோலி வளைத்துக் கவர்ந்தது,' என்று ஆயரெழுப்பிய அப்பூசல் அரசன் செவியினும் வந்துமோதியது.

அதனைக்கேட்ட அளவிலே, அரசன் சீறி, மருப்புக் கந்திலே பாயமோதி முழங்குங் களிறுபோலச், செல்வமிகு மணிகள் இழைத்த பொற்றூணிலே தீயெழ மோதினன். அவன் கண்களில் சினத்தினாலே எரிதவழ்ந்தது.

"நாற்கடற் பரப்பும் வந்து நம்நகரிலே கூடின என்னுமாறு, கூற்றெனப் பிளிறும் யானைப்படையும், தேர்ப்படை

யும், குதிரைப்படையும், வேலேந்திய கடல்போன்ற காலாட்படையுமாகக் கூடிச்சென்று பாற்கடற் பரப்பே போலும் ஆநிரையைப் பெயர்க்க!" என்று முழங்கினன்.

அவ்வளவிலே சங்குகளும் பறைகளும் முழங்கி யொலித்தன. வானிலுலவும் முகிற்குழாமென நிரைநிரை யாக வேழங்களும் திண்ணிய நுகம்பூண்ட குதிரைகளை யுடைய தேரும் விரைந்துபாயும் குதிரைகளும் மண்ணகம் நிறைந்த காலாட்கடலும் கிளர்ந்தெழுந்தன.

**சீவகன் வஞ்சினம்**

பால்போலும் கவரியை நெற்றியிலேகொண்ட பசுங் கிளி நிறமுடைய குதிரைகளைப் பூட்டிய வலிய தேரிலே நந்தட்டன் செலுத்த ஏறிய—வளைந்த குழவித் திங்கள் என ஒளிவிடும் முத்தாரத்தினையும் தேன் துளிக்கும் விளக்க மான மலர்மாலையினையும் அணிந்த மார்பினையுடைய—சீவ கன் கூறுகிறான் :

"அரசனுடைய ஆநிரையைக் கவர்ந்தவர்களை வளம் பொருந்திய இந்நகரிற் கொண்டுவந்து, அரசனுடைய பொற்கழலில் அவர்களுடைய புனைமுடியைப் பணியச் செய்யேன் எனின், இனிய புகழ்பெற்ற இவ்வுலகில் என் பெயர் பரவாமற், கன்னியர் உளத்தே தோன்றிய காமம் போல் மறைக!"

இவ்வாறு வஞ்சினங்கூறிய சீவகன் ஏறிய தேர் பாரில் நிறைந்து பரந்த கடலனைய தானையின் இடையிலே பறப் பதுபோலவும், நிறைந்த நீராகிய மதத்தையுடைய முகிலா கிய யானையின் நெற்றியிலே தோன்றிய மின்னெனவும் கடி தாகச்சென்று தோன்றியவுடன், கறுகணுளனுகிய பது முகன் பகழியொன்றைச் சிலையிலே தொடுத்தான்.

**பதுமுகன் அம்பு**

"அடியேமாகிய யாம் குடைநிழலையும், கொற்றத்தை யும் உடைய சச்சந்த மன்னன் மகனாகிய தன்னைக் கண்டு,

தன் குன்று அடிநிழலிலே உறைய விரும்பி வந்தேம்,'' என எழுதி விடப்பட்ட அந்த அம்பு சென்று, தேர்மீது மாறி வீழ்ந்த அளவிலே, கழலணிந்த சீவகக்குருசில் அதனைக்கண்டு, பதுமுகனே யென்றறிந்து தூய வெள்ளைத் துகிலை வீசித் தன் படையை மேலே பொராமல் விலக்கினான்.

**தோழருஞ் சீவகனும்**

சீவகன் ஏந்தல் என அறிந்தமையால் தோழர்கள் அவனுடைய இணையடிகளிலே விழுந்து வணங்கினர். அவனும் ஆராய்ந்து அம்முறையாகத் தோளால் தழுவியும் இன்மொழி கூறியும் முடியசைத்தும் கண்களால் அன்புடன் நோக்கியும் சிறப்புச்செய்தான். அவர்களும் பிரிவுத்துயர் நீங்கினர். பிறகு, தன் தோழரையும் அரசகுமரரையும் யானைமீதேற்றிக்கொண்டு ஏமமாபுரத்தையடைந்தான்.

வானைத்தடவி யசையுங் கொடிகளையுடைய மாடங்கள் நிறைந்த மூதூரிலே, சிங்கவேற்றை யொத்தவர்கள் பால்போலினிய மொழியையும் மானனைய நோக்கினையும் உடைய பவளநிற மடவார் தொழவும், மைந்தர்கள் போற்றவும் யானைகளினின்றும் இழிந்தனர். செவ்விய பொன்னாற் கண்ணாடிகள் பதித்து இளஞாயிற்றின் தோற்றத்தை வென்ற கோயிலுக்குள் நெடுங்கண்மடவார் விரும்பப் புகுந்தனர். பிறகு, அரசன் அருள்பெற்றுச் சென்று அவனடி வணங்கினர்.

மன்னன் பல்கலன் அணிந்த பிடரின்மீது, வயிரக்குழைபரந்து ஒளிசெய்யும்படி, மல்லார்ந்த திண்டோளினையுடைய மருமகன் முகத்தை நோக்கினான். 'அடிகளே! இம்மைந்தரெல்லோரும் எனக்கினிய உயிர்த்தோழர்,' என்றான் சீவகன். உடனே, அரசரின் மணிமுடிகளிலுள்ள வயிரம் உழுதலாலே சிவந்த, கழலணிந்த மன்னன், 'மின்னிடையாள் கனகமாலையைக் காண்க,' என அருளினன். அவர்களும் சென்றனர்.

**கனகமாலையைக் கண்டனர்**

முற்றுந் தழுவவியலாமல் பெரியனவாகக் கட்டிய திரண்ட மாலைகள் தாழ்ந்த அரண்மனையிலே, தானே முழு விளக்காக, மணிக்கொம்பென நின்ற கனகமாலையை எழு வனைய தோளாராகிய தோழர்கள் தொழுதார்கள். சீவகன் நோக்கினாலே தோழரென்றறிந்ததும் அவர்களிடம் அன்பு கொண்டு வரவேற்றனள்.

பிறகு, 'நம் ஆநிரை கொண்ட கள்வர்கள் இவர்களா யின் ஒறுத்தற்குரியா'ரென நகையாடி, அளகையிறைவன் மகளென விருந்துசெய்தாள்.

**தனிமையில்**

விருந்து முடிந்தபின், சீவகன் தனிமையில் இருந்த பொழுது, மறைவாக விளம்பவேண்டுவன பின்னர் ஆகு மெனவெண்ணிய புத்திசேனன் ஓரோலையைச் சீவகனிடம் நல்கினன். அவன் அதனை வாங்கிக் குண்டலத்துடன் பொருந்திய குழையைப் புறத்தே பிரித்து நீக்கிப் படித் தான் :

"திருவடிகட்கு அடிசிலையும் மஞ்சனத்தையும் உள் ளிட்டவைகளும் பிற காப்புக்களும் முதலிலிருந்தே போற் றப்பட்டுப் பொற்புடையவாகவேண்டும் என்று சிற்றடிச்சி யாகிய தத்தை மலரடிக்கீழ் வீழ்ந்தேன். அடிகள் உள்ளங் கொண்டு ஏற்றருள்க !

எம் மன்னன் கழலுவேகன் வயிரமணிக்கலன், மண மிகு கற்பக மாலை, உயிருக்கு மதமூட்டும் வீரக்குடிவகை படைக்குங்குழாய் (மதுத்தண்டு), உடை, ஆடை, குற்ற மற்ற நல்ல கலவைச்சாந்து, வில், அம்பு, வேல், வாள் ஆகியவற்றையும் எலிமயிர்ப் போர்வையும் நமக்குத் தூதன் மூலமாக அனுப்பினன்.

வந்த தூதனை ஒருவரும் அறியாமல் மறைவாக அழைத்துவந்து, 'ஓராண்டிற்கு ஐந்து திங்கள் அளவு குறைவாக இருக்கத் தமருடன் ஏமமாபுரத்திற்குச் சென்

றான். இதனைச் சாமியே அருளிச்செய்தான்,' என்று கூறி னேன். சாமிக்கு நேர்ந்த பழி வெள்ளிமலையிற் பரவுமென அஞ்சி என்னைத் தொட்டுச் சூளுரைக்கச்செய்து போக விடுத்தேன். இனி, இப்பழி மறைய அரசுரிமையை எய் துவதன்றி, மகளிரை மணஞ் செய்துகொண்டிருப்பதனால் விளையும் நலமொன்றுமில்லை.

அல்லதூஉம், என் தங்கை குணமாலையும் ஒரு பழி விளைவிப்பாள்போ லிருக்கிறாள். நின் பிரிவு அவளால் ஆற்ற முடியவில்லை. இரவிலே செல்லுந் திங்களை நோக் கிப், 'பகலே! சிறியை' என்பாள். அம்மதி அவளுக்கு வெம்மை நல்குகிறதுபோலும்! பகலில் ஞாயிற்றை நோக் கித், 'திங்களே! பெரியை!' என்பாள். திங்கள்போல ஞாயிறு குளிர்கிறது போலும்! இவ்வாறு இரவும்பகலுந் தெரியாளாய் ஏங்குகிறாள். அவள் நிலத்தே வீழ்ந்து, இந்திரவில்லை வளைத்தாற்போன்ற மேகலையை அணியாமற், புருவத்தை யுடையதொரு திங்கள் போலும் முகமும் தோளும் வடிவழிந்து கிடக்கின்றாள். அவள் பிழைப் பாளோ இறப்பாளோ! அறியேன்.

அவள் வளர்க்குங் கிளி, "சீவகன் நாளை வருவான். நையாதே!" என்று கூறும். அதனை நன்றென விரும்பிக் கேட்பவளாய், 'நீ கூறிய நாளையென்பது அண்மையதோ, சேய்மையதோ? அந்நாளைக் கூறுக,' என்று அது நகு மாறு வினவுவாள். இவ்வாறு நாள் கழிகிறது.

நோக்கின அளவிலே தளிர்த்தும், நோக்காமல் இமைப் பினும் மெலிந்தும் அன்பூட்டும் மங்கையரைப் பஞ்சணை யிலே கலக்கும் புது மணவாளராக இருப்பவர் என் நெஞ்சி னுள்ளே நீங்கலின்றி யிருப்பாராதலால், யான் வருந்தாமற் பொழுதுபோக்குவேன். இனி, அவர்தாம் தம்மைக் காப் பாற்றிக்கொள்வாராக."

இலவம்பூவிலே அரக்கினை யூட்டினாற்போன்ற செம் பஞ்சூட்டிய அடியினளின் புலவிச்சொற் பொறித்த ஓலை யைத் திருமுடியசைத்து நோக்கி, முடிவில் எழுதின தனக்

குக் காவலாகிய விசையை மனத்திடைப் பதித்துக் கொண்டு, வெற்றிமாலை சூழ்ந்து கொலைத்தொழிலிற் பழகிய வேலேந்திய சீவகன் தோழரிருக்குமிடம் எய்தினான்.

### தோழருடன்

தோழரை நோக்கி, 'நீர் என் திறத்தை எங்கே கேட்டீர்?' என்றான். அவர்கள், 'எரியும் மணிப்பூண்களையும் செங்கோலையும் மணிநெடுந் தேரையுமுடைய சச்சந்த மன்னனின் காதற் பெருந்தேவி விசையை தண்டகாரணியமென்னும் வனத்திலே தனக்கொவ்வாத் தவவுருவத்தைத் தாங்கி, உள்ளத்தை நீ வாழவேண்டுமென்கிற ஆசை பிணிக்கத் துறவோருறையும் பள்ளியிலே இருந்ததைக் கண்டு, அவரால் நின்திறம் அறிந்தோம்,' என்றனர்.

கேட்ட சீவகன் திகைத்து, 'நீர் மொழிந்தது என்னே! என்னே!!' என விரும்பி மறுமுறையுங் கூறுமாறுவேண்ட, அவர்களும் விசையையே நேரிலிருந்து கூறினாற்போல அடைவே எல்லாச் செய்தியையும் இயம்பினர். அது கேட்டவுடன் முத்தஞ் சொரிவதுபோற் செந்தாமரையனைய கண்களிலிருந்து நீர் பெருகி மார்பிலே சொரிய வருந்தினான்.

"என்னைப் பெறவல்ல தீவினையுடையார்க்குக் கிட்டா இடரும் உளவோ? அத்தீவினையையுடைய அடிகளும் உளரோ?" என வினவினான். அவர்கள், 'நல்வினையாகிய தெய்வம் நமக்கு அருளும் நெறியிருந்தபடி யிதுவாகும்,' என்றனர். சீவகன், 'அவரிருக்குந் திசை யெங்கே?' என வினவி, அத்திசை நோக்கி விரைந்து வணங்கினான். பிறகு, தோழருடன் அரசன் கோயிலை அடைந்தான்.

### தடமித்தன் அறிந்தான்

இலைவிரவிய மலர்த்தாரான் தடமித்தன் சீவகன் குலத்தையறிய விரும்பி, மலையென அகன்ற மார்பினையுடைய குமரனின் தோழர் முகத்தை நோக்கிக், 'குமரன்

எக்குலத்தான்?" என வினவினன். கலைமணங் கமழும் இனிய மொழியையுடைய தோழர், 'இக்காமன் குருகுலத் தான்,' என்றனர்.

"அண்ணல் குருகுலத்தான் எனில் யான் முன் கருதிய குலமே. என் எண்ணத்திலே வெளிப்பட்டான்," என்று கூறி, இதுகாறும் மறைந்த தோற்றமுடையனுயிருந்த மைந்தனுடைய பூணணிந்த வண்ண மார்புறத் தழுவிக்கொண்டான். பிறகு, அமைச்சருடன் அளவளாவிச் சீவகன் விரும்பியவாறு அவன் நெறியே செல்ல விடை நல்கினன். சீவகன் மகிழ்ந்து கனகமாலையின் கோயிலை அடைந்தான்.

**கனகமாலைக்குப் பிரிவறிவித்தல்**

"நீங்காத பெரிய தேரையுடைய வேந்தனின் காதல் மடமகளே! தேன்மணங் கொப்புளிக்கும் கோதையாய்! நீ என் மனத்தினுள்ளே உயிராயிருக்கின்றனை! என்னைப் பிரிந்தாயல்லை," என்று தன் பிரிவினைக் குறிப்பித்தான் சீவகன். அதனை யுணர்ந்த பூணினுள் தன் கையிற் பற்றியிருந்த—வண்டினுக் குயிராகிய—செங்கழுநீர் மலரைத் தன் வெய்ய வுயிர்ப்பினுற் கருங்குவளை யாக்கினுள்.

அதனைக்கண்ட சீவகன் அவளை மனம் மகிழவும் நீர் ததும்புங் கண்கள் குளிரவும் தழுவிக்கொண்டு, அங்கிருந்து நீங்கி, தேர்ப்படை மன்னனின் மக்களை மார்புறத் தழுவிக்கொண்டு, கூந்தல்மாமீது தாவினன். அப்போது, நன்னிமித்தமாகச் சங்குகள் முழங்கின.

## கக. விமலை திருமணம்

நந்தட்டன் கூற்று

தேன் கொப்புளிக்கும் கண்ணியையும் தளிர்மிடைந்த வாகை மாலையினையும் குருதி கொப்புளிக்கும் வேலினையும் உடைய சீவகன் பரிமீதிவர்ந்து செல்லும்போது, நந்தட்டன் பொற்கழலினையுடைய தோழர்களிற் பதுமுகனை நோக்கிக் கூறுகின்றான்:

“ இவ்வுலகை விற்கும் உயர்ந்த மணி மாசுற்றுக் கிடந்தது. அதனைக் கழுவி யெடுத்துக்கொண்டீர்கள். இனி, அதனை நன்கு மூடிக் கதிரொளிபடாமல் முன்போலக் காப்பின் உலகமெல்லாந் தழுவினீராவீர். வழுவினீரெனில் தாமரையில் உறையுஞ் செய்யவள் உம்மைச் சேராள்.

* † தொழுத கையினும், மணிபொதிந்த முடியினும், சோர அழுத கண்ணீரினும், அணிகலத்தினும் கொல்லும் படை ஒடுங்கியிருக்கும். ஆதலால், அப்பழுதை ஆராய்ந்து, கண்ணோட்டமின்றி, அக்கூடா நட்பினரைத் தம்மிடமிருந்து நீக்குக! மற்றும், யாவரிடத்துந் தெளிவுகொள்ளற்க! அன்றித் தெளிந்தார் விளிந்தாரேயாவர்.

கூடத்தக்க மகளிரைக் கூடவிரும்பின், அவர்தம் மெய்யில் உள்ள அணிகலன்களை நீக்கி, ஆராய்ந்தறிந்த முதுமகளிரைக்கொண்டு வழுவின்றித் திமிர்ந்து தூய நீராட்டி, வேயனைய தோளையுடைய அம்மகளிர்க்கு வெண்மையான ஆடை மாலை சந்தனம் நல்ல அணிகலன்கள் முதலியவற்றைக்கொண்டு அணிவித்துப் பிறகே, அவர்களைத் தழுவுவானாக!

---

* “ தொழுததங் கையி னுள்ளும், துறுமுடி யகத்தும், சோர
அழுதகண் ணீரி னுள்ளும், அணிகலத் தகத்தும், ஆய்ந்து
பழுதுகண் ணரிந்துகொல்லும் படையுடன் ஒடுங்கும் பற்று(து)
ஒழிக! யார் கண்ணுந் தேற்றம்; தெளிகுற்றார் விளிகுற் றாரே.”

† “ தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.” —திருக்குறள்.

அழகிய மலர்மாலை, சாந்தம், தூய அணிகலன்கள், ஆடை ஆகியவற்றை அரச அன்னத்தின் கண்ணினும், ஆயிரம் பெடைக்கொன்றாகிய சக்கரவாகச்சேவலின் முகத்தினும் உறுத்தித் தூய்மை தெரிந்த பின்னல்லது கொள்ளல் ஒவ்வாது. தூய்மையல்லாதவை பட்டால் அன்னத்தின் கண்ணிலே குருதி சொரியும். சக்கரவாகத்தின் முகம் கடுக்கும். உண்ணும் உணவையும் பருகும் நீரையுங் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்தல்வேண்டும். தூயவல்லாதவற்றைக் கருங்குரங்குண்ணாது.

மையெழுதுங் கோலால் அடிப்பின் தாங்காத நாகப்பாம்பு தன் கூரிய நுனியையுடைய எயிற்றினாலே, அருவி வீழுங் குன்றனைய மதயானையைப் புலம்பி வீழுமாறு கொல்லும். ஆதலின், பஞ்சினும் மெல்லியதாயினும் பகைமையைச் சிறிதென்று கருதல் வேண்டா. அதனை அரும்பொருளாக நினைத்து அஞ்சித் தற்காப்புச் செய்தல் வேண்டும்.

மற்றும், * நீவிர் நம் தலைவனை விடாமல் உடனிருத்தலிற் பல்லியைப்போன்றும், வேண்டுவன செய்து ஓம்புதலின் அன்னையர் போன்றும், அருந்தவர் தம் ஒழுக்கத்தைக் காப்பதுபோற் காத்தும், ஐம்பொறியும் தமக்கு அடங்கலால் ஆமையைப் போன்றும், இவனுக்குத் தீதுண்டானால் அது நீங்கற்குப் பகைவர்போல இடித்தும், உண்டியில் இவன் விரும்பியன தேடியூட்டலின் மனைவியேபோன்றும் காப்பீராக!"

இங்ஙனம் நந்தட்டன் கூறியதுகேட்ட சீவகன், அவர்களை மனத்திடை ஆராய்ந்து தெளிந்து, "பூந்துகில், மாலை, சாந்தம், அணிகலன், முகவாசம், உணவு நீர் இத்தன்மையானவற்றையெல்லாம், மக்களில் மடங்கலனைய பதுமுகன்

*"பொருந்தலாற் பல்லி போன்றும், போற்றலால் தாயரொத்தும்
அருந்தவர் போன்று காத்தும், அடங்கலால் ஆமை போன்றும்,
திருந்துவேல் தெவ்வர் போலத் தீதற எறிந்தும், இன்ப
மருந்தினால் மனைவியொத்தும் மதலையைக் காமின் என்றான்."

தன் மனமுற ஆராய்ந்து காப்பானாக!" என்றான். பதுமுகனும் அன்று முதல் அப்பணியை ஏற்றான்.

**சென்ற நெறி**

இனி, இவர்கள் சென்ற நெறியிலே நிகழுங் காட்சிகளைக் காண்போம். சிறிய கண்களையுடைய யானைக்கூட்டம் துயில்கொண்டிருப்ப, அவற்றைப் பெரிய பாறைகளென்றெண்ணிய குரங்கின் குட்டிகள் அவற்றின்மேலே துள்ளி விளையாடி, நறுமணங் கமழும் சந்தனக் கட்டைகளில் வெந்தவைகளை ஒன்றன்மேலொன்றெறிய, அதுகண்ட கவரிமான்கள் அஞ்சியோடும். காட்டுப் பூனையினும் பெரியனவாகிய, பவழநிற மயிரையுடைய பேரெலிகள், கருமலையிலேயிருந்து அகழும் இங்குலிகம் மலைப்பக்கத்திலே வீழ்வன, யானையின் நெற்றியிலே தவழும் பட்டுக்கச்சைப் போன்றன. கிளுத்தம் என்னும் மரம் மக்கள் வடிவாகப் பழுத்திருந்தன. அம்மரங்களின் அயலில் ஏற்றிழிவுடைய—பால்போல வெண்மையான—நிலத்திற் குழியிடையே பனை கிடந்தனபோலப் பாம்புகள் துயின்றன. அவை துயிலெழும்படி யாளிகள் முழங்கின. திமிசு சூழ்ந்திருக்க இடையே சந்தன மரங்கள் மணம் வீசின. அவற்றின் தழையிடையே அழகிய தீம்பூமரமும் தக்கோலமும் இலவங்கமும் கருப்பூரமும் புழுகுடன் கலந்து நாற்காதவெல்லை கமழ்ந்தன. அங்கேயிருந்த மகள்மாக்குழாம் சீவகன் முதலியமைந்தரை நோக்கின. மதந்தவழுங் களிற்றினம் சந்தனத்தழையை மேய்ந்தன. ஆமாவினம் காடெலாந்திரிந்தன. இவைகள் யாவும் நடுங்கி யோடுமாறு சிங்கங்கள் வால்வீசின. இக்காட்சி எங்கும் உள்ளன. கூகையென்னுங் கொடியும் கோட்டம் குங்குமம் என்னும் மரங்களும் பரவி, விலைக்கரிய அழகுடன் விளங்கிய ஓரிடத்திலே சிறிது ஓய்வெடுத்துக்கொண்டு, மயிலும் அன்னமும் ஆர்ப்பதாகிய ஒரு காவிலே தங்கினர்.

அகிற்புகை மலர்ந்து பொலிவுறும் போர்வை முதலியவற்றையும் சிற்றாலவட்டத்தையும் பொன்னூலையும் நீரைக் கோத்துத்துளிக்கும் சந்திரகாந்தத்தையும் குங்குமம் வைக்

கும் வைரமழுத்திய குகையையும் பரணிக்கூட்டையும் பவ ழக் கரகத்தையும் சந்தனமரத்தாலாகிய பேராலவட்டத் தையும் தாபதர் இருக்கையிலே தூக்கி, அவ்விடத்தை ஒளி காலும் வானவருலகாக்கினர்.

மகளிர் கண்களால் நோக்கப்பெற்றும், கைத்தலத் தால் தொடப்பெற்றும் கனியாதன கனிந்தன; மலராதன மலர்ந்தன, அவர் கைதீண்டி மலர்களைக் கொய்வதற்குத் தாழ்ந்துகொடுக்கவுஞ் செய்தன. ஆதலின், மரத்திற்கு உயிரில்லையென்பார் பித்தர்; அல்லரேற் பேயர் என்று பேசுதல் அல்லது வேறே பேசலாமோ?

அப்பொழிலிலே, சீவகன், மயிலினின்றிழியும் முரு கனேபோலப் பொலிந்து மாவினின்றும் இழிந்தான். கையி லிருந்த குதிரைச் சவுக்கை யெறிந்தான். பதுமுகனை நோக்கி, "அறிவிலாதாரைச் செவ்வியறியப் போகவிடுத்த லால், தேவியை அறிந்து வெளியாமிடம் உண்டாய்விடும். அவ்வாறாகாமல் உள்ள தன்மையாலே நீயே சென்று, மயி லகவுங் கோயிலிலே அடிகளின் செவ்வியை அறிந்துவருக!" என்றான்.

**அன்னையும் மகனும்**

"விடியற்காலையிலே கனவிற் கண்டேன். இடக்கண் ணும் ஆடும். இப்பொழுது நல்ல இடத்திலே பல்லியும் பட்டது. ஆதலால், நம்பி இன்னே வருவானோ?" எனக் கூறிக்கொண்டிருக்கும்போது, பதுமுகன் சென்று தொழுது, 'அடிகளே! நம்பி வந்தனன்,' என்றான். 'ஐயன் எங்குளான்?' என்றாள். 'அடிகளே! அடியன் இதோ' என்று (பதுமுகனுடன் சென்ற) சீவகன் தொழுது அடி யைப்பற்றி வீழ்ந்தான். அங்கே, இரண்டு முற்பட்ட நீர் மையையுடைய, முலைகளையுடைய, அற்புக்கடல் கலந்த தொத்தார்! அக்காட்சியை என்னென்பது!

திருவடி தொழுது வீழ்ந்த மகனைக் கண்ட அளவிலே, வாட்கண் சுமந்தன பனிநீர். அழகிய முலைகள் பொழிந்த தீம்பால் சீவகனுடைய முழு மெய்யையும் நனைத்தது.

'என் களிறே! வருக!' என அன்புடன் தழுவிக்கொண்டாள். அன்பு மிகுதியால் தன் மகன் காளைப்பருவமுடையவன் என்பதனையும் நினையாமல், அவனைக் குழந்தையாகவே நினைத்து மார்பிலே ஒடுங்குமாறு தழுவிக்கொண்ட அவள், 'மகனே! முற்பிறப்பிற் செய்த தவத்தின் விளைவில்லாத நான் நின்னைத் தழுவியதால் தோள் வருத்தம் நீங்கினேன்,' என்றாள்.

"பெருமைமிக்க இளஞாயிறு போலும் மார்பினையுடைய சீவகசாமியீர்! வாளேந்திய திறலையுடைய அரசனை அமரிலே கைவிட்டு, நும்மைச் சுடுகாட்டிலே கைவிட்ட கொடியேனைக் காணத் தாமரையடிகள் நோம்படி வந்தீர்! நும் அன்பின் மிகுதியை என்னென்பேன்!" என விம்மினாள்.

"அரசனுடைய கெடாத வெற்றி அழியப் பிறந்த தூஉம் அன்றி, அடிகள் வருத்தத்திலே நிலைபெற, அன்புடையோர் வருந்த இடையன் வெட்டிய துன்பமிகு மரத்தின் தன்மையேனாகிய அடியேன் தந்த துன்பக்கடலிலே அழுந்தவேண்டா. இனியேனும் இத்துன்பத்தைக் களைக," என்று சீவகன் ஆறுதல் கூறினான்.

பண்பிற் சிறந்த விசையை, 'நினக்குத் தாயாவாள் சுநந்தையே; யானல்லேன். தந்தையாவான் கந்துக்கடனே; அரசன் அல்லன்,' என்று பாலுடன் தங்கிய தீந்தேனையொப்பனவாய் இனிமையூற மொழிந்தாள். பின்னும் புனக்கொடிபோன்ற அவள் சீவகன் மகிழுமாறு, 'எனக்குயிர்போன்ற மகன் நந்தட்டனே; ஐயனல்லே,' எனக்கூறி, 'வனப்புறு மகனே! வருக,' என நந்தட்டனை அழைத்து அருகிலேயிருத்தி அணைத்துக்கொண்டு, சிகை திருத்திப் பகைவரிடையே சிங்கம்போன்ற அவனுக்குத் தண்ணளியாகிய விருந்தளித்தாள்.

பிறகு, தன் சிறகினுற் குஞ்சுகளைத் தழுவி மயிற்பெடை யிருப்பதுபோல், அரசி தன் மக்களை இருகையினுந் தழுவி, மற்றைச் சிறுவர்க்கெல்லாம் முறைமுறை

முகமன் மொழிந்து, அறுசுவையுண்டி யுண்பித்தாள். அறுபகல்கள் கழிந்தன.

**விசையை அறிவுரை**

ஒருநாள், மரவமும் குரவும் நாகமும் சண்பகமும் கோங்கும் குடமொத்த காயையுடைய சுரபுன்னையும் விரவிய பூம்பொழில் ஒன்றிலே தனியேயிருந்து, வேண்டிய வரைமட்டும் இருத்திக்கொண்டு, நூலிலே ஆராய்ந்த இப் பொருளை உரைத்தனள் :

" அழிவற்ற மலையிலும் காட்டிலும் வாழும் பெரும் பொருள்படைத்த குறுநிலமன்னர் மகளையும், நிலமிசை வலிமையிற் சிறந்த மன்னர் மகளையும் மணத்தல் தம் முன்னோர் நிலையைக்கொள்ளும் மன்னர் முறைமையென அறிவிற் சிறந்தோர் ஒப்புக்கொள்வர். எனவே, சீவகன் மணந்த முறை நன்றே.

" அரசியல் முறைப்படி ஆறிலொன்றாக வரையறை செய்து அப்பொருளை யீட்டுதலும், பழம்பகையை மறவாமல் இருத்தலும், முள்ளைக்கொண்டு முள்ளைக் களைவது போலத் தமக்குப் பகைவராகவும் ஒருவருக்கொருவர் உறவாகவும் இருப்பவர் இருவரைத் தம்மில் வேறுபடுத்தி, ஒருவரைக்கொண்டொருவரை மோதச்செய்தலும், தம்முள் ஒன்றுபட்டு வினைசெய்வோரைப் பிரித்துத் தம்முடன் சேர்த்துக்கொள்ளலும் அரசர் விழையும் வினைகளாம்.

"ஒற்றர்களை ஒற்றரைக்கொண்டு ஆராய்தலும், அரசியல் நெறிகற்ற பெரியோர்களைக் கண்ணெனக் கொள்ளுதலும் அமைச்சர் சுற்றத்தையும் படைத்தலைவர் சுற்றத்தையும் ஆராய்ந்து இவன் இதற்குரியனெனக்கொண்டு பெருக்குதலும் வெற்றியை விழையும் மன்னரால் விழையப்படும் சூழ்ச்சிகளாகும்.

"திருமகள் துயிலும் மார்பினனே! வென்றியையும், மேம்பாட்டையும் கல்வியையும் அழகையும் குன்றியவர்களைக் குன்றென உயர்த்தலையும் பொருளாற் பெறவிய

லும். மற்றும், பொருளாற் படை—படையாலே நிலம்—நிலத்தினாற் பெரும்பொருள்—இறுதியிலே பேரின்பவீடு கிடைக்கும்.''

இங்ஙனம் உரைத்தவள் சீவகனை நோக்கிக், "காளையே! நாம் நிலத்தினின்றும் நீங்கினேம்! பொருளினுங் குறைந்தேம்! குலத்திற்குரிய கொள்கையுமிலேம்! அன்றியும் இந்நிலையை மாற்றற்குரிய அமைச்சரும் இல்லை! இங்ஙனமிருப்பதனால், நீ என்செய்யத் துணிந்துள்ளனை?'' என்று வினவினாள்.

சீவகன் செப்புகிறான்:

"தீயொடு நிகர்க்கும் ஆற்றலையுடைய—இடியெனமுழங்கும்—சிங்கம் நரியொடு பொருவதாயின், அதற்கொரு சூழ்ச்சியும் நல்லதுணையும் ஏன்? மற்றும், அவனோடு பொருவதற்கு நான் எதற்கு? நம் நந்தட்டன் கருடன், அவன் ஒரு பாம்பு. ஆதலால், எம்மேல் வைத்த அன்பினால், இதற்கு வருந்தற்க.''

விசையை மகிழ்ந்தாள். 'நம் நந்தட்டன் கருடனோ?' என்று கிளரும் அழகுடைய அவனைத் தன் கையினாலே உளமுருகுமாறு தீண்டினாள். அன்புடன் நோக்கி, "வலிமைமிகும் வயிரத் தூண்போலத் திரண்டு நீண்டு அமைந்த திண்ணிய இத்தோள்கள் கட்டியங்காரனாகிய கலியினிடமிருக்கும் நிலத்தைக் காளையாகிய சீவகனுக்குத் தந்து காவாமல் இருக்குமோ?'' என்றாள்.

மேலும் கூறுகிறாள்:

"காட்டிலே ஒரு காக்கையே எண்ணிறந்த கூகையிருக்கின்ற இடத்தே சென்று, அவை வருந்துமாறு பகற்காலத்தே சென்று கொன்றதன்றோ? குகையிலே வாழும் சிங்கம் பொங்கியெழுந்து, இடம் அறியாமல் வனத்தின் நடுவே நரிமேலே பாய்ந்து, அந் நரியாகிய வலையிலே பட்டதன்றோ? ஆதலால், யாம் வீரமுடையேமென்று அணிகலனைப் பொறாமல் நுடங்கும் இடையையுடைய மகளி

ரைப்போலத் தாம் நினைத்ததைச் செய்யாமற், காலமும் இடமும் ஆராய்ந்து, ஆண்டியபற்றும் வினைக்கும் அஞ்சாராய்ச் சூழும் அறிவினையும் வல்லார்க்குப் பின்னை அரிய வினையுளதோ?''

ஊழித்தீயனைய பதுமுகன் பகர்கிறான் :

"எம் ஆற்றலால் நெருங்கிநின்று, பகைவரை ஆழி வாயிலே படுமாறு வென்று பொன்னாகிய பெரும்பொருள் தங்கும் பெருநிலக்கிழமையை எய்துவோம். ஆதலால், வலியாற் பிறரை விரும்பேம்; அருள்வதே தாமதம்.''

பிற தோழர்களும் பொம்மென முழங்கி, 'இத் திருவுறை மார்பனுடைய சேவடிகளை அடைந்த யாங்கள் வெம்மைதங்கிய பேரொளி ஞாயிறாகவும் எம்மையெதிர்ந்த பகைவர் பணியுறும் இருளாகவும் எம் அடிகள் மதித்தருள்க !' என்றனர்.

விசையை, 'செம்மலே! முல்லை கார் தோன்றவே மலரும். தாமரை ஞாயிற்றின் ஒளி தோன்றவே மலரும். அவ்வாறே, நின் மாமன் அகமலர் நின் சிறப்புத் தோன்றின அளவிலே மலரும். ஆதலால், அவனிடத்தே சென்று, அவன் ஏவல்கொண்டு பார் விளங்க நின் பகையைச் செறுவாயாக,' என்றாள்.

சீவகன், 'அடிகளே! நீர் கூறியது நன்று. அப்பொருளையே துணிந்தேன். இனி, நாளை இராசமாபுரத்தே சென்று, என் சுற்றத்திற்கு என் உண்மைநிலையை அறிவித்து, மறுநாளைக்கே வந்துசேர்வேன். நீர் என் மாமனிடத்துச் செல்லும் நிலையை விரும்பல்வேண்டும்,' என்றான்.

**விசையை தமையனிடமும் சீவகன் இராசமாபுரமும் புறப்படல்**

வல்வில்லேந்திய சீவகன் அமைத்த காவலுடன் நூற்றைவர் மகளிர் சூழ, வேல் தொட்டாற்போன்ற நுனியையுடைய கொடிய கானநெறியை நோக்கி விசையை நடந்தாள். பிறகு, சீவகன் காற்றினுங்கடுகும் பரிமீதமர்ந்து தோழர் சூழ இராசமாபுர நெறிநோக்கிச் சென்றான்.

**சீவகன்**

மணமிகு மலர்மாலை மார்பனாகிய சீவகன், வானளாவி எத்திசையினும் அருவிநீர்ப்பெருக்கு மாறாத குன்றும் குளிர்ந்த நீர்ப்பொய்கை சூழ்ந்த அழகிய ஆறும் கடந்து, பழனமும் படப்பையுங்கொண்ட ஏமாங்கதமெனும் அந் நாட்டையடைந்தான்.

காவிலிருந்து மணமலர் அளித்த மணமும், பொய்கை யுள் இனமாமலர் பொழிந்த மணமும், மலர்விரி கோதையர் மெய்யில் திமிர்ந்த சந்தன மணமும் வில்வல்லானாகிய சீவ கற்கு விருந்தளித்தன. சுரும்பின்மேல் தொடுத்த தேன் தாமரை மலரினுள்ள சுரும்பின் வாயிலே துளித்தலின், ஒலித்த சுரும்புகள், பிறகு, வண்டுடன் கூடி யாழ்போல முரலும் அழகிய மலர்ப்பொழிலில் தோழருடன் சென்று தங்கினான் சீவகன்.

**பொழிலில் தங்கினான்**

குதிரை முதலிய விலங்குகள் சுமைவிலகி மூச்சுவிட் டன. மணிக்கழல் இளைஞரும் வருத்தம் நீங்கினர். உடன் வந்த மகளிர் நாமவேல் நம்பிக்கு அறுசுவையுடன் கூடிய நால்வகை யுண்டியை ஆக்கினர். கருப்புக்கட்டியுடன் கலந்த அரிசியையுங் காணத்தையுங்கொண்ட புட்டிலை, நீரிலே யலைந்த குதிரைகளுக்கு வாயிற் கட்டினர். அவையொழிந்த எருது முதலியனவும் மேய்ந்து, நிழலிலே தங்கி வருத்தம் நீங்கின.

குவளைக் கண்ணியர் மதுக் கோதையர் ஆகிய மகளிர் அருகிருந்து ஓம்பக், களிறனாகிய சீவகன் இன்னமுது கொண்டனன். பிறகு, கழிகளினுள்ள மலர்கள் கண் விழித்தன. தாமரைகள் கண் மூடின. மாலை வந்தது. மணிகள் ஒளிவீசின. இனிய அகிற்புகை யெழுந்தது. முறுக்குற்ற நரம்புகள் ஒலித்தன. தீங்குழல்கள் பாடின. அழகிய மணிமுழவமும் பொற்றாளமும் குதிரைமணியின் குரலும் இசைத்தன.

அவ்வளவிலே, தெளிந்த இனிய முறுவலார் பவளத்தைவென்ற வாயினார் எழுப்பிய அமிர்தனைய பாட்டை நுகர்ந்த சீவகன் இன்ப மகளிருடன் காமம் நுகர்ந்து, பூவணையிலே துயின்றான். இரவு நீங்கியது.

**காலையில்**

ஞாயிறு கண்விழித்தது. தாமரை மலர்கள் நகைத்தன. சீவகன் முகங்கழுவி, அருகனுக்கு மலர்மழை பெய்து வணங்கினான்; நாட்கடன் கழித்தான். பிறகு, ஒளிவீசுங் காவலுடைய நகரின் வளங்காண, மகளிர் விழையும் ஒரு வடிவுடன் சென்றான்.

**இராசமாபுரத்தே**

அந்நகரின் வட்டமாகிய மதிலின் இடமெல்லாம் வஞ்சிக்கொடியை வாட்டிய நுண்ணிடையாரின் செம்பஞ்சூட்டிய பாடகமணிந்த சிற்றடியைத் தம்முடியிற் சூட்டிய மைந்தரின் குழாம் அன்றி வேற்றுக்குழாம் இல்லை.

சீவகனைக் கண்ட மகளிர் கூட்டம், 'மேனியொளியாலே நீள்கடம்பணிந்த முருகவேளோ? பொருந்திய ஐங்கணையும் நீண்ட கருப்புவில்லையுமுடைய காமவேளோ? யாவனோ? அறியேம்! உரையீர்!' என்று வருந்தினர். வானக முருகனேயனைய இலக்கணமுடைய அண்ணலின் மெய்யை அழகிய நீண்ட கூந்தன்மகளிரின் வாளனைய கண்களெல்லாம் மீன்குத்திப் பறவையெனக் கவர்ந்துண்டன.

**விமலை பந்தாடினாள்**

நிற்க, வானவர் மகளொப்பாள், மானனைய மழைக்கண்ணாள், பாலென இனிக்குஞ் சொல்லாள் ஒரு பாவை பந்தாடிக்கொண்டிருந்தாள்.

அவள் பந்தாடும்போது குழலிலணிந்த கோதையும் மாலையும் பொங்கின. விருப்பத்தையூட்டுங் கதிர்த்த முலைகளிலே முத்துவடம் நிழலுண்டாகத் தாக்கின. அழகிய

மணிக்குழை ஒளிவிட்டது. இனிய பொன்னூலை மின்னியது. மணிக்கலாபமும் சிலம்பும் ஆர்த்தன.

ஐந்து பந்துகள் அவள் அழகிய கையிலே யிருந்தன. அவை அவளாடும்போது, முறைகுலைந்து வீழாமல் மாலையைச்சூழும் வண்டுபோலப் பொங்கி மேலே யெழுந்து போய், உடனே வந்து, கண்ணும் புருவமும் அவற்றுடன் திரிந்து அழகுசெய்யத் திரியும். மாலையிலே மணிறந்த பந்து கையில் வந்துநிற்கும். ஏலங்கமழுங் கருங்குழலில் இருந்த பந்து முகத்திலே காணப்படும். இடை வருந்துமாறு உச்சியிலே சென்ற பந்து மீண்டும் மாலைக்குள்ளே மறையும். மேலே உயர்ந்து சென்ற பந்து விரல்களினிடத்தவாம்: கையிடத்தவாம். வண்டுந்தேனும் தேனை நுகராமலே நின்றுபாட, மயில்போலெழுந்துலவி, எட்டுத் திசையினும் பந்தைக் கொண்டுலாவல், இடையே குங்குமம் அணிந்து கோதை புனைதல், படிமுறையாக அடித்தல், அப்பத்தியோடு தன்னைச் சூழ்ந்துவர அடித்தல் ஆகிய இந்நிலைகளிலே பந்தாடினாள்.

அழகிய மணிச்சிலம்பினோடு கிண்கிணியும் நகப், பொன்மலர்ந்த மின்போல நகும் கோதையின் ஒரு பந்து, நெகிழ்ந்த கூந்தலின் முல்லைமாலையை உறத் தீண்டுதலாலே, தன் எல்லையைக் கடந்து எழுந்து பாய்ந்து பொங்கிவந்து தெருவிலே புகுந்து சீவகன் முன்னே வீழ்ந்தது. அப்போது, மின்னின் நுண்ணிய இடையினாள் அப்பந்தின் மேலே வேட்கையுடையவளாய் விரைந்துவந்து நோக்கினாள்.

**காதல் கொண்டாள்**

களிப்பையுடைய வண்டு, மந்தார மாலையில் உள்ள மலரை மொய்த்து, அதிலுள்ள தேனைப் பருகி மகிழ்ந்து, காந்தாரப் பண்ணையாக்கி, ஆலாபஞ் செய்து பாடுமாறு, பந்திலே ஆர்வஞ்செய்து வந்தவள் சீவகனைக் கண்டவுடன் அவன்மேலே பார்வையைச் செலுத்தி இமையாது நின்றாள். ஆதலால், இமையாநாட்டமுடைய திருமகளின் வடிவை

நேரே பெற்றவளானாள். நீர்தங்கிய சந்திரகாந்தக் கல்லாகிய நிலத்திலே, கங்கைநீரின் குளிர்ந்த நீர்த்திவலையைப் பருகி வளர்ந்து நின்ற கொடி போன்றவள் அவனைக் கண்டதனாற் பழம்பூப்போல வெளுத்து நிறம் பிறிதானாள்.

"பெண்பாலவர்கட்குச் சிறந்த அணியாய் நீங்காத நாணும் திண்ணிய நிறையும் அழகிய மாமையுஞ் சேர்ந்த சாயலையுடையவள், 'தன் கண்ணாலே என் அழகையும் வளையையும் கவர்ந்த கள்வன் வடிவங்கொண்டு நிலமிசை வந்த ஐங்கணைக் காமனோ?' என்று கருதினாள். மற்றும், இவ் வேட்கையென்று உலகங் கூறுகின்றதன் இயல் இத்தன்மைத்தே போலும்! இதுவோ, இறந்துபடினும் சிறந்த குரவர்க்குங் கூறலாகாததாய்ப் பொறுத்தற்கும் அரிதாய், உள்ளேயிருந்து சுட்டெரிக்கும் கொடிய தீயாக இருந்தது. இவ்வொரு நோயே பிற நோய்களைப்போல மாற்றிலாததாயிருந்தது," என்றும் எண்ணினாள். மேலும், "மகளிர்க்கு நிறையிருக்கும்போது ஒரு குன்றியளவுங் காமம் இலையாயிருந்தது. காமமுண்டாயின் நிறை சிறிதும் இல்லாமல் இருந்தது. அதனை மறைத்தாலும் பசப்புப் பறையறையுந் தன்மையாயிருந்தது," என்று கூறி வாடிக் கடல்போலே காமம் மேலும் மேலும் அலைப்ப நின்றாள்.

**சீவகன் காதல்**

வஞ்சமிலாதவன், தன் கண்ணாலே, அவ்வாறு நெஞ்சங் கலங்கி, நிறையைப்போக்கி நின்றவளது அழகிய செங்கழுநீர் மலர்ந்த திங்கள்போலும் முகத்தை நோக்கினான். அப்போது அவளுடைய எதிர் நோக்கினால் நிகழ்ந்த காமத்தீ முதலில் அவனுக்கு எளிமையைத் தந்து, பிறகு பாம்பின் நஞ்சுபோலத் தலைக்கொண்டது. பூப்போலுங் கண்களைப் புருவமாகிய வில்லை வளைத்து எய்ததனாற் புண்ணுற்ற என் நெஞ்சிற்கு மருந்து யாதென்றாராய்ந்து குழைந்து, வேறு மருந்தின்மையின், இவளே மருந்தென எண்ணி, அவளை மீண்டும் பார்த்து, ஆண்டுப் பெறுதற்குக் 'கூட்டியுரைக்கும் குறிப்புரை'யாகிய நோக்காலே உயிரைப் பெற்றவனாகி, ஆற்றாமையிலே நின்றான். இங்ஙனம், காமமாகிய அழல்

சூழ்ந்து, உடம்பென்னும் விறகுடனே உயிரை முழுக்கச் சுடுதலின், அவளைவிட்டுப்பிரிய வியலாதவனாகி, வெண் புகையனைய ஆடையேந்திய விமலையின் தந்தையாகிய சாகர தத்தனுடைய கடையிலே வருந்தியமர்ந்தான்.

"நானத்தை வாட்டிய கருங்குழலாள், நீலக் காவி மலருக்கு நோய் செய்த கருங்கயற்கண் மலர்க்கொடியாள், என் உயிர்க்கு நோயைத் தந்த தெய்வம் என்று பேதைமை யுற்று நிற்பேனை, 'நீ என்னுற்றனை?' என வினவுவாரில் லையே! சிறியதொரு தெண்ணீர்க் குளத்திலே மலர்ந்த குவளைபோலுங் கண்ணின் இயலைக்கொண்டு, அதன் ஒரு நோக்கினாலே கடலெனப் பரந்த என்னிடமுள்ள அறிவை யெல்லாங் கவர்ந்ததொரு பெண்ணினியல் முன்னாளிலே பிறந்தும் அறியுமோ? கரியகுழலும், சிவந்த வாயும் கண் மலர்களுங் காதும் அரும்பென மிளிரும் முலைகளும் எனும் இக்கூற்றமெல்லாம் என் எளிய உயிரொன்றனை அழித் தற்கே! இங்ஙனம் விருந்தினராக வந்தவரை ஒரு நோக்கி னாலே பிணமாக நோக்கும் பெருந்திருவி எந்த நல்லோன் மகளோ? பேர்தான் கூற்றமோ? வேறோ? இவ் வண்டு மொய்க்குங் கூந்தலாளைப் பெண்ணெனப் பெயரிட்டழைத்த வர்கள் கூற்றமென்றழைத்தனராயின் தம்உயிரை விரும்பிய தாரணிந்த நீள்மார்பர் இந்நகரைவிட்டுத் தாமிருத்தற் குரியதோ ரிடத்திலே சென்றிராரோ?

"பசிய கண்களையுடைய மகர வடிவாகச்செய்த குண் டலமும் தோடும் திங்களனைய முகத்திலே விளங்கவும், செவ்வாயிலே சிறிது எயிறு தோன்றவும், தேனமர்ந்த குழல்தாழவும், சாய்ந்த கழுத்துத்தந்த பார்வை எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே! இவளுடைய ஒளி பொருந்திய முகத்திலுள்ளவை வாளோ? மாவடுவின் பிளவோ? கழுநீரோ? நீலமோ? தாமரையோ? நீண்ட வேலோ? அம்போ? கயலோ? ஆற்றல் மிகுங் கூற்றமோ? கண்ணோ? அறியேன்! கொல்லத் தொடங்கிவிட்டனவே!"

இங்ஙனம் கூறிப் பகைவரை வென்றவன் எவ்வாறு அவள் நலத்தைப் பெறுவதென்று நினைத்து வாடியிருந்

தான். அப்போது, சாகரதத்தனுடைய மாற்றமைந்த தகட்டுப் பொன் ஆறுகோடியளவிற் குறையாமல் விற்பனை யாயிற்று.

**சாகரதத்தன் வரவேற்றான்**

இங்ஙனம் விற்றதைக் கண்ட வணிகன் வியப்படைந்து, 'இவன் எனக்குச் செல்வம் மிகுதற்கு வந்ததிரு' என எண்ணிச் சீவகனை அண்மி, 'இனி இவ்வில்லம் நினக் கிருப் பிடம்' என்று வரவேற்றான். வரிபிசைக்கும் வண்டுகள் தேனைப்பருகி யுறையும் மலர்மார்பனாகிய சீவகன் மாமனு டன் ஒளிவீசும் பொன்மனையை அடைந்தான்.

"நம்பனே! நான் கூறுவதைச் சிறிது கேட்க! நான் இந் நகருள் நீண்டநாளாக இருக்கின்றேன். எனக்கு வாழ்க்கைத் துணைவியாய் அமைந்த கமலைக்கு, விமலைப் பெயராள்--பொன்மேனியாள்—திருமகளனைய இயலாள்— பூம்பாவை வந்து பிறந்தாள். அப்போதே கணிகள் ஆவன வெல்லாம் அறிந்து எழுதிவைத்தனர். அன்றிருந்து என் வணிகப் பொருளெலாம் போக்கிலாக் குளம்போலத் தேங் கியது. கணியை வினவினேன். அவன், 'இது உனக்குக் குறைவற்ற செல்வம் வருதற்குரிய ஒழுங்கேயாகும். மங் கைக் குரியான் வந்து நின் கடையில் அமர்வான். அப் போதே நின் பொருளெலாம் விலையாகும். அவன் வந்தா லன்றி விலையாகாது. நிகரற்ற அவனுடைய மார்பமே இந் நங்கைக்குப் பொருந்திய பூவணையாகும்,' என்றான், இவ ளுக்குப் பதினோராண்டுமுற்றிப் பனிரண்டாவது தொடங்கி யுள்ளது.' இப்போதுதான் விலையாகாத பொருளும் விற் பனையாயிற்று. வில்லாளியாகிய நினக்கே ஒல்கும் இடை யினாள் நலம் ஊழாயிற்று. இனி, இவளை ஏற்பாயாக!"

'எடுத்த கையிலே ஒரு தொடி வந்து தானே வீழ்ந் தாற்போல நமக்கும் இது வந்தது' என்று சீவகன் கருது மாறு இங்ஙனம் கூறித் தேற்றினான். திருமாநலத்தைச் செவ்வனே தோற்ற விமலையும் தோன்றல் உள்ளேவரக் கண்டதும் ஆவி பெற்றாள். 'இவளை ஏற்க' எனத்

தந்தை அவனுக்குக் கூறியதைக்கேட்ட அளவிலே ஆறுதலும் பெற்றாள்.

**திருமணம்**

அழகிய பொற்கொடியாளையும் பொற்குன்றனையானையும் பல்வகை மணவியங்கள் ஆரவாரிக்கப் பொன்மனையிலே அமர்த்தி இன்பத்திலே யீடுபடுத்தினர்.

கட்டிலில் அமர்ந்த அழகிய காளையும் தேனலர் மலர்க் கோதையும் விட்டு நீங்காமற் கேடிலராய் ஈருடம்பும் ஓருயிருமாயினர். அவர்கள் நுகர்ந்த இன்பத்திற்கு மூவுலகும் விலையுடையதாகும்.

இவன் கங்குலிலே புகுந்த கள்வன் எனக்கூறித் தப்பிச் செல்லாமல் மாலையாற் கையைப் பிணித்து, 'நீ வந்த வேலையைக் கூறு' என்றாள். 'நங்கையே! யான் பசித்து வந்தேன்' என்றான். 'எப்பொருளை விரும்புகிறாய்?' என்றாள். 'அழகுவடியும் மெய்யினாய்! நின் அழகாகிய அமிழ்தம் முழுதும்' என்றான். நின் அழகென்றதனால் அவள் சிவந்து நோக்கினாள். அவள் சிற்றடியை முடியிலே சேர்த்தி, 'என்மேல் ஐயுற்ற தன்மை என்?' என்றான். அவள் மறுமொழி நல்காதிருந்தாள். சீவகன் பெருமூச்செறிந்து, 'நின் பணியே செய்வேனுக்கு யாது அருளினையோ அதுவே என்பணி,' என்றான். பயிர்ப்பற்ற மார்பனே! நீ இனி இத்தன்மையன சிறிதுங் கூறாமல், அதனால் வரும் இறப்பினையுந் தடுத்து, இப்பள்ளியில் வைகியிரு,' என்றாள்.

வெள்ளியாற் செய்த அழகிய விளக்கின் ஒளி நெய்யின் இழுது உடைய மிக்கெரிதலின் செவ்வல்லியின் வடிவைக்கொண்ட ஒளி, வைகறையிலே, ஒளி மழுங்கியதைப் போலக் கூட்டத்தினால் மெய்சோர்ந்து பாவைபோலாயினள்.

காலையில் மங்கையர் எழுப்பிய மருதப்பண்ணையுடைய யாழும் குழலும் இந்நம்பி இந்நங்கையை யாவரும் வருந்தப்

பிரிவான் என்று இரங்கினபோல ஒலித்தன. நாட்கடன் கழிந்தது.

**சீவகன் பிரிவு**

அப்போது, அலங்கல் அணிந்த வேலினன் விமலையின் பூங்கோதையை அழகுறத் திருத்திச், சந்தனங்கொண்டு மார்பிலே தொய்யில் எழுதி, அவளுடைய அரும்பனைய விரலைக் கையினாற்பற்றிப், "பூவணிந்த நீண்ட குழலினாய்! மரந்தளிரென மயக்கும் மேனியாய்! என் தோழரைக் காணக் காவிற்குச் சென்று விரைந்து வருவேன். அது மெல்லென அம்பையெய்தாற் சென்றுவிழுந் தொலைவிலே யுள்ளது," என்றனன்.

உடனே, அப்பூங்கொடியின் மையெழுதிய கண்மலரில் ததும்பி வீழாமல் நின்ற நீர்த்துளியிலே கண்மணிப் பாவை நீந்தியது. அவன் அவளை மெல்லத்தேற்றிக் குழைய விட்டுப் போயினன்.

# ௧௨. சுரமஞ்சரி திருமணம்

### தோழர்கள் நகையாடல்

சீவகன் விமலையைப் பிரிந்து தான் தங்கியிருந்த காவினை அடைந்தான். அவர்கள் அவனுடைய மணக் கோலங் கண்டு, திருவடிகளைப் போற்றி, 'நீர் மணந்த தையல் யாவள்?' என்று வினவினர்.

"வண்டிருந்தாற் போன்ற பலவடங்களை யுடைய மேகலையணிந்த அவளைத் துறவிகள் கண்டாலும் காமத்தே கருத்தைச் செலுத்துவர். அவள் பெயர் விமலை. அரம் பையனைய அவள் ஊடினுங் கூடினுற்போன்ற இனிமையை யுடையவள்," என்றனன் சீவகன்.

தோழர்கள் வியந்து, 'ஐயன் காமனே!' என்றனர்.

புத்திசேனன் கூறுகிறான்:

"நீவிர் இங்ஙனம் வியத்தல் வேண்டா. குடிப்பிறந்த மகளிர் தம்மைக் குரவர் ஒருவர்க்குக் கொடுப்பாராயின், தம்மை யேற்றவர் நம்பும் பண்புடையாரல்லர் எனினும், குரங்கைப்போன்றவரெனினும், நெஞ்சுற அவரையேற்று வழிபடுவர். மற்றும், 'கன்னியராகிய, நலம் முற்றிய, மடந்தையரை மணம்புரிந்து கொடாது நெடுநாள் வைத் திருந்தால் பாவம் வந்து சூழும்; குடிப்பழியும் உளதாகும்,' என்று கருதிய குரவர்கள், வினவினார்க்குத் தாமே கொண்டு கொடுத்துத் தம் சுமை நீங்கி யிளைப்பும் தவிர்ந்த தென்றிருத்தல் குடிப்பிறந்து பழிநாணுவார்க்கெல்லாம் இயல்பாகும். ஆதலின், அங்ஙனமே நேர்ந்த இதற்கு நீர் வியத்தல் எற்றுக்கு?" என்றான்.

மேலும் கூறுகிறான்:

"நீ சென்ற வூரெலாம் தேன்குடம் விரிந்தன மாலை யாருடன் புதுமணம் பொருந்துகின்றனை. ஆயினும், இந் நகரிலேயே—நீ மணம்புரிந்த இங்கேயே—சிற்பநூலொ டிங்கு தவறாமல் இயற்றப்பெற்ற தெருவினிலே திங்க

ளனைய முகத்தியொருத்தி யிருக்கின்றனள். அவள், ஆடவர் தன் மனைக்கு அருகே சென்றாலும், அவர் பெயர் கேட்பினும், உயிர்விடுவேனென வெகுளும் இயல்பினள். அவளைச்சூழவிருந்து பணிபுரிவோர் சேடியரே. காமனே சென்றாலுஞ் சினந்து, காணமறுப்பாள்; உடம்பெரியும் என்பாள். நீ அவளை மயக்குறுத்தி அவள் அழகை நுகர்ந்தனையேல், யாங்கள் நின்னைக் 'காமனுக்குத் திலகன்,' என்று பெயர் கூறுவோம்."

**சீவகன் செய்த சூள்**

"பணி மகளிர் முயக்கத்தால் தளையவிழ்ந்து மலர்ந்த தாரும் நூலுமணிந்த மார்பனே! நீ கூறிய பெயரையுடையவளை மயக்குறுத்தாமல் விடுவேனேயாயின், சற்றும் அன்பிலாத இழிந்த பெண்ணை யான் கூடுவேனாகக் கடவேன். வண்டும் தேனும் வில்லிற்கொண்ட நாணாக, மலர்கள் அம்பாகக்கொண்ட காமன் கோயிலில், நீ கூறிய கொடியைக் கொணர்ந்து, வெண்ணூல் உண்ட நீலத்தைப் போக்கினாற் போல, அவள்கொண்ட புதிய கொள்கையை மாற்றி, ஆண் பெயரை அவளுக்கு ஊட்டுவேன். நீ நாளைக்கு அழகிய காமனுடைய பொற்சிலையைச் சார்ந்து மறைந்திரு."

என்று சூளுரைத்தான் சீவகன். பிறகு, மழைக் கண்களையுடைய அம்மாதினை மயக்கநோய் செய்ய விரும்பித் தன் பாங்கர்கட்குரைத்து எழுந்தான். அப்போது, பெருகும் பேரழகினாள் சுரமஞ்சரியின் மார்பினைத் தன் மார்புந் தாரும் தண்ணெனும்படிக் கூடுதற்கு வருந்தியெழுகின்ற உள்ளத்துடனே சென்றான்.

**சீவகன் சிந்தனை**

"வடம் சுமந்து எழுந்த கரிய கண்களையுடைய விருப்பத்தையூட்டும் முலைகள் கடைந்த பொற்செப்பெனக் கதிர்த்துப் பருத்துள்ளன. மடந்தையின் முகத்திலுள்ள குடங்கையளவினவாகிய கண்கள் என் உள்ளத்தே குடிகொண்டன. புகழத்தக்க அரிய மல்லிகைமாலையையேந்திய கருங்குழற் கயிற்றாலே என்னை யாத்துவைத்தலைக்கும் இவ்

வருளிலாள் அழகு என்னுள்ளத்தைச் சுட்டுக்கலக்குகின்றது. சில பரல்களையுடைய கிண்கிணி சிலம்பும் சிற்றடியினளின் அழகிய நலத்தை நுகரும் வாயில் அந்தணமுதியவனாக யான் செல்லலே தெளிதகவுடையது,'' என்று எண்ணினான்.

**மூப்புடை யந்தணன்**

வருத்தும் அரவின் தோலையுரித்தாலனைய திரைந்த மேனியன், வளைந்த வில்லனைய யாக்கையன், முப்புரி நூல் புரளும் மார்பினன்,—ஆகி மூப்பிலக்கண நூலிலே கூறிய வாறு முதிர்ச்சியை வரைந்தாலனையனாகத் தோன்றினன். மற்றும், வெண்ணரை தோன்றிய மெய்யும் தெறித்த புள்ளியும் நுண்ணிதாய்க் கிழிந்த ஆடையும் வளைந்த நோக்கும் பொத்தற் குடையும் உடையனாக வலிமைக்காக ஒரு கோலினையூன்றிப் பெண்ணலம் விழைந்த பேய்போலவும் ஆயினன். இங்ஙனம், உறுதியாகிய யாழைப்போன்ற மிடறுகிய தோட்டியினாலே, ஆடவரை வெறுத்த தூயநெஞ்சினளாம் சுரமஞ்சரியின் நலத்தை வசப்படுத்தும் பாகனாகி, முதுமையாகிய முகபடாத்திலே மறைந்து, அவளுடைய காவல்மிக்க மனையை அடைந்தான்.

**சுரமஞ்சரி மனையில்**

ஊன்றுகோலின் வலிமையாலே மிகவும் குனிந்து தளர்ந்து ஏங்கிவரும் முதியவனைக் காவலர்கள் கண்டு யாரென்று வினவினர். 'முன்னாளில் இளம் பருவத்திலே பாற்சோற்றையே விரும்புவேன். எனினும், இந்நாளில் என்னை விரும்பும் மகளிர் தருவனவற்றையே காதலுடன் ஏற்றுக்கொள்வேன்,' என்று அவர்கள் முகத்தை நோக்கி முதியவன் கூறினான்.

கேட்ட காவலர்கள், 'முதுமையினாலே செவி கேட்கவில்லைபோலும்! பித்தரைப்போல மனத்தில் தோன்றியதை மொழிகிறார்! மேலும் பசித்திருக்கிறார்,' என்று முதியவனுடைய பசிக்கிரங்கிக் கையினாலே தொழுது,

'மெல்ல நடந்து செல்க,' என்று மனையினுள்ளே செல்ல விடுத்தனர். முதியவன் மகளிர் காக்கும் வாயிலை அடைந்தான்.

அப்போது அவனைக்கண்ட காவல் மகளிர் பூமாலையுடன் கூந்தல் தாழ்ந்து பொங்கி வண்டுகள் ஆர்ப்ப, மணி மாலையும் பிற அணிகலன்களும் பிறழ ஓடிவந்து, 'இது நுமக்குத் தீது; மீண்டு போமின்!' என்றனர். அவனோ அதற்குச் சிறிதும் விடைதராமல் ஊதினுற் பறக்குந் தன்மையுடன் அண்மையில் வந்து நின்றான்.

அம்மகளிர் வாளும் நஞ்சூட்டிய அம்பினைத்தொடுத்த வில்லும் உடையராய் நடுக்கத்துடன் வந்து, முதியவனை அச்சுறுத்தி அமிர்தம் புளித்தாற்போலத் தம் இன்சொல் வெஞ்சொல்லாகக் கழறிச் சூழ்ந்தனர்.

அவர்களிற் சிலர், 'இது பாவம்! நோமாறு மொழியாதீர்! முதிய பார்ப்பனர்! தொடினுங் கடிதுற இறப்பர்போலும்! ஓவியர் வரைந்த பாவையனைய நம் நங்கையிடம் இவர் நிலையைக் கண்டவாறு கூறி, அவள் ஏவியதைச் செய்வோம்,' என்றனர்.

அங்ஙனமே சிலர் சென்று, 'கையில் வளையலும் கரிய குழலும் வியப்பூட்டும் அரிபரந்த கண்ணும் நையும் இடையும் உடைய நங்கையே! ஒரு பார்ப்பான், ஆண்டு பல கடந்து முதிர்ந்தவன், இறந்துபடுந் தோற்றத்தினனாக வந்துளான். செய்யவேண்டுவதை நொய்தின் உரை!' என்றனர்.

சுரமஞ்சரி, 'அவனிடஞ் செல்வோம்; வருக,' என்றாள்.

அகிற் குழம்பாலே மெழுகப்பெற்றதும் பலவகை நறுமண மலர்மாலைகள் தூக்கப்பெற்றுத் தேன் பிலிற்றுவதுமான பொன்னிலத்தினின்றும் வரையிலிருந்திழியும் மயில்போல வெளிவந்தாள். சிற்றடிகளிலே கிண்கிணியுஞ் சிலம்புஞ் சிலம்ப, மேகலைகள் மிழற்ற, மகரந்தப் பொடியுடன் தேனுங்கலந்து சேறாகிய கோதையின்மேல்

வண்டுகள் எப்பக்கமுஞ் சூழ்ந்து முரல, மலர்க்கொம் பொன்று நடை கற்பதைப்போல வந்தாள்.

குமரியாட வந்தேன்

அவள் முதியவனை அணுகி, 'வந்த வரவு என்னை?' என்றாள்.

'வாட்கண் மடவரலே! நினைவை வாட்டுகின்ற 'திரு நீர்க் குமரியாட' (திருமகளின் இயல்பையுடைய குமரியுடன் ஆட) வந்தேன்,' என்றான் முதியவன்.

அவள், 'அதனால் ஆய பயன் என்?' என்றாள்.

அவன், 'முந்தி வந்து நலிகின்ற இம்முதிய மூப்பு ஒழியும்,' என்றான்.

தேன் விரிந்து கமழுங் கூந்தலாள் வாய்விட்டு நகைத் தாள். 'உன்னையன்றி வேறெவரேனுங் குமரியாடி மூப் பொழிவார் உளரோ?' என்றாள்.

அவன், 'துறையறிந்து சேர்ந்து தொழுது ஆடுவார் இலரே,' என்று (நின் நோன்பையறிந்து மாற்றிக் கூடுந் துறையறிவார் பிறரிலர் என்று) கூறினான்.

அவள், 'நீர் உலகோர் அறியாத் துறையெலாம் அறி வீர்போலும்,' என்றாள்.

அவன், 'ஐயமில்லையே,' என்றான்.

'செத்தமரம் பெருமழையால் தளிர்க்கும் எனும் இவர் பித்தர். இவருற்ற பசிப்பிணியைப் போக்குவோம்,' என எண்ணிய சுரமஞ்சரி அவனை யழைத்துக்கொண்டு மாடத்திற்குச் சென்றாள்.

பணிப்பெண்களை அழைத்து, 'பவளக்கொடியைத் துணித்தாற்போலும் வாயையும் தாமரைமலரனைய கண்க ளையும் அடிகளையும் உடைய இம்முதிய வடிவம் நம்மால் அளிக்கத்தக்கது; மேலும் கொடிய பசிமிகுந்துளது; ஆதலால், அளியாதுவிடல் கொடிது. விரைவில் உணவு சமைத்துக் கொணர்க!' என்றாள்.

**உணவு**

பிறகு, அம்முதியவனுக்குத் தன் கையாலேயே நறுமண நெய்யூட்டித், தூயநீரால் அவனை யாட்டி, மெய்மிளிர வெள்ளாடையும் சிறந்த பொன்னுலியன்ற பூணூலும் ஆழியும் அணிவித்துத் தக்க இருக்கையிலே அமர்த்தினுள். உடனே, திங்களும் மீன்களுங் கூடினற்போலப் பொற்கலங்களை ஒளியுறப் பரப்பி இனிய உணவையும் கறிகளையும் படைத்தனர். அவன், 'இத்தகைய சுவைமிக்க உணவை எங்குங் கண்டிலேன்,' என்றுரைத் துண்டுமுடித்தான்.

உடனே, 'தமிழ் தழுவிய சாயலவர்,' ஏந்திய மணமிகு நீரைக்கொண்டு வாய்பூசி யமர்ந்து, அமுதமனைய முகவாசம் ஐந்துடன் வெற்றிலையும் கவுளிற் கொண்டான்.

**மறைவல்லேன்**

அவனைச் சுரமஞ்சரி நோக்கி, 'நீவிர் யாது வல்லீர்?' என்று வினவினுள். அவன் மாற்றுருவில் வல்லேன் என்னும் பொருள்பட, 'மறை வல்லேன்,' என்ருன். அவள், வேதத்தில் வல்லவனெனக் கூறியதாக எண்ணி, 'எவ்வளவு கற்றீர்,' என்ருள். அதற்கவன், என் எண்ணம் முடியுமளவும் என்ற கருத்தை யுள்ளடக்கிப், 'பொருள் எய்தும் வரையில்,' என்ருன். அதனை அவள், 'மறை தான்கருதிய மெய்ப்பொருளை உணர்த்தும் வரையில்,' என்று கூறியதாக எண்ணி, 'இக்கலைகளையெல்லாம் நீர் கற்ற காலம் எவ்வளவோ?' என்ருள். அவன், 'மேலும் வினவும் விடையும் பெருகின் உண்மை வெளியாம்,' என்று கருதி, 'அக்காலம் நினைவிலேன்,' என்னும் பொருள்படச், 'சிந்தையிலேன்,' என்ருன். அவள் அதனை, 'நினைந்திருந்திலேன்,' என்றுரைத்தாகைக் கருதி, 'இந்நிலவுலகிலே இத்தகைய கலைவல்லான் இல்லை,' யென்று புகழ்ந்து நோக்கினுள்.

'இனி இவள் நம்மைப் போகுமாறு சொல்வாள் போலும்,' என அவள்நோக்கின் போக்கினை எண்ணிய முதியவன், சிறிது துயில்வோன்போலக் கண்களை மூடித் தலையைச் சாய்த்தான். அவள் அதுகண்டு நகைத்தாள்.

முதுமூப்புடைய சாமி அவளை நோக்கி, 'வாடைக் காற்று மிகுதலால் நெஞ்சுநோம், அதனால் இதோ துஞ்சுகிறேன்,' என்னும் காமநோய்ப் பொருள்தோன்றக், 'காலும் மிக நோம்; கண்ணும் துயில்குற்றேன். இதற்கு என்செய்வேன்?' என்றான். அவள் நடையினாற் கால் நோகிறதென்றும் உறக்கம் வருகிறதென்றுங் கூறினதாகக்கருதினாள்.

ஆகையால், மதுவார்குழலி தனது பட்டுக்கச்சாற் பிணிக்கப்பெற்ற கட்டிலிலே 'வருத்தந்தீரத் துயில்க,' என்று காட்டினாள். காமக்கடலைக் கடைய விழையும் அவனும் அதன்மேல் மெல்லெனப் படுத்தான்.

அவ்வளவிலே ஞாயிறு பகற்பொழுதுடன் மேலைத் திசையிலே வீழ்ந்து கலங்கிப்பட்டது. உடனே, மாலைக் காலத்துடன் திங்கள் எழுந்தது. பின்னர், மகளிர் தம் கணவரைத் தழுவித் துயிலும் இராக்காலம் வந்தது. மாடங்களிலே துயிலும் அணையிடத்தே அகில் எழுப்பிய புகையும், மாலைகளுக் கூட்டிய அகிற்புகையும், மகளிர்தம் கூந்தலுக் கூட்டிய அகிற்புகையும், ஆடைக்குப் புகைத்த அகிற்புகையும் எழுந்து மலைமீது முகிலெனப் பரவின.

அப்போது குற்றமற்ற இளமகளிர் தூயதாகச் சமைத்த பாலடிசிலைச் சிறிதே அயின்று, அழகிய நறிய மணமாலைகளுஞ் சிறியவாக அணிந்து, உள்ளத்தைப் பிணிக்கும் நறுங்கலவையும் தோடும் அணிந்து, யாழின் நரம்புகளைத்தடவி யின்னிசை யெழுப்பினர். அந்நிலையிற், பூஞ் சதங்கையினையும் ஒருபுறமாலையினையும் சிகையினையுமுடைய ஆடவர் தம் தோளினும் பெரிய மார்பினும் மணமிகு கலவையை மெழுகிக்கொண்டு, தங்காதலியரின் இனிய பவளச் செவ்விதழ்களின் அமிர்தத்தைக் கருப்பஞ் சாறெனப் பருகித், தாம் அணிந்த வளமிகு மலர்மாலைகள் குழையுமாறு தழுவிக் களித்தனர்.

**சீவகன் பாடினான்**

இனி, அணங்கனையாள் சுரமஞ்சரியின் பொன்னறையிலே இனிய அமளியின்மேல் இருக்கும் சீவகன் தான்

னினைத்திருந்த காந்தருவ மணத்தை முடிக்க எண்ணி, நிலை பெற்றதோ ரிசையினை இனிமையுண்டாகப் பாடினன். மகளிரும் அதனை விரும்பிக் கேட்டனர்.

கேட்ட மகளிர் அவ்விசையினைக் காமனது மணிக் குரலேயென்றும், மருட்டுகின்றதென்றும் மயங்குவார். அங்ஙனமன்றி, இயக்கரால் இசைக்கப்பட்டு வந்ததென்று தம் பின்னும் முன்னும் இயக்கருளரோ என நோக்குவார். பெரிதும் அறிவு கலங்குவார். இப்பாட்டுடையான் சுரமஞ்சரியின் உள்ளத்திற் பதிவான சீவகனேயென அவன் பெயரை வாழ்த்துவார். அம்பனைய கண்ணினராகிய அவர்கள் தம் அடியில் அணிந்த சிலம்புகள் இடை வருந்துமென அரற்றவும் அமையாராய்ப் பூங்கொம்புபோல ஒதுங்கியும் மணமலர் மாலை யேந்தியும் நம்பியின் இசையை விரும்பிக் காண ஓடிவந்தனர். எனினும், சீவகன் தம் கட்புலனிற் காணப்படாமலும் இனிய இசையினாலும் அவர்கட்குக் காமனேயாயினன். இங்ஙனம், மகளிர் கருத்துத் தன் கருத்தைப்போலவே தன்னிடம் கவர்ச்சியுற்றதைக் கண்ட சீவகன் மேலும் அவர்களைக் கவரவெண்ணிக் கொன்றை மாலையணிந்த இறைவனது மிடற்றிலெழுந்த சாமகீதத்தை நன்றாகப்பாடினான். கள்ளமூப்பினையுடைய அந்த அந்தணன் இசைத்த கனிந்த இசையின் வழியே, பறவைகளின் ஓசையறிந்து எழுப்பிய வேட்டுவனது இசையின் வழியே உள்ளம் வைத்து ஓடிய மயிலின் குழாம்போல ஓடிவந்தனர்.

அவர்களைப்போலவே கனிகளின் சுமையினால் வாடிய அழகிய கற்பகக் கொம்பினைப்போன்ற சுரமஞ்சரியும், தண் பிறையனைய பூணணிந்த சீவகன் இசைவலையிலே போய் விழுந்தாள்.

அவள் தன் இசையிலே மயங்கிச் சிலம்பரற்ற, மேகலை யார்ப்ப வந்து நிற்பதைக்கண்ட சீவகன், 'நான் பெரிதும் முதியவன். என்னால் என்ன முடியும்?' என்றான். சுரமஞ்சரி நகைத்து நாணுற்றுத் தோழியின் புறத்தே மறைந்து, மின்னுக்குழாத்திடை மாணிக்கக் கொடிபோல் நின்றாள்.

### மைந்தர் ஒழிக!

அப்போது முதிய அந்தணன், 'நீங்கள் என்னையொழிய இளையவன் ஒருவனைக் கண்டால் என் செய்வீர்?' என்றான். தோழி, 'மது விளையுங் கண்ணி புனைந்த மைந்தர் பெயரும் ஒழிக!' என்றாள். அந்தணன். 'இங்ஙனம் நீங்கள் உரைத்ததற்குக் காரணம் இவளையெவரும் பேசினார் இல்லையென்றோ? இவள் வருந்துமாறு அவர்களியற்றிய தீமை வேறேதேனும் உண்டோ?' என்றான்.

தோழி, 'இவள் சுண்ணத்தைச் சீவகன் பழித்தபிறகு, ஆடவரைக் காய்ந்தனள்,' என்றனள். அந்தணன், 'இவளுக்குத் தீயவன் ஆகிய அவன் இறந்தனன் போலும்,' என்றான். மாதர்களெல்லோரும் ஒருங்கே நின்று, 'சீவகன் நூறும் புகுக!' என்று வாழ்த்திப் பிறகு, 'நாங்கள் ஆழ்ந்தறிந்தோம், ஐயன் வாழ்ந்திருக்கிறான்,' என்றனர்.

"சீவகனுக்குற்றதுகேட்டு இவள் கலங்கிப் பித்தேறி மயங்கினாள். யாங்கள் திகைத்துக் காந்தருவதத்தையிடம் எம் தத்தையைத் தூதுவிட்டோம். அது கயல்நெடுங் கண்ணாள் தத்தையின் பொலிவைக்கண்டு வந்து கூறியது. அதன் சொல்லாலே வருத்தம் நீங்கினோம்," என்று தாம் ஆய்ந்தறிந்ததையும் விளம்பினர்.

### இன்னும் பாடுமின்

மற்றும் பூங்கொம்பனையார், "அடிச்சியாரும் ஆடவரைக்காணேன் என்று நெஞ்சிற்கொண்டதனை நீக்கி, நும்மிடம் முகங்கொண்டு முனிவு தீர்ந்தார். ஆதலின், நீரும் எம்மிடத்தே அன்புடையீராய் யாம் மகிழ ஓரிசையைப் பாடுமின்! நீர் என்பட்டுவிடினும் பாடல் கேளாமல் நும்மைப்போக ஒட்டேம். அதற்கு, இவளைத் தொட்டுச் சூளும் இட்டேம்," என்றனர்.

அந்தணன் 'சுரமஞ்சரியின் அழகு முதலிய யாவற்றையும் தனக்கு நல்கின் இன்னிசை பாடுவேன்,' என்னும் பொருள்தோன்ற, 'ஆடமைத் தோளியீர்! பாவை பொற்பேபற்றி மற்றெனக்கு நல்கின் பாடுதும்,' என்றான்.

அவர்கள், 'இப்பாவையாள் பொன்னுயிருப்பதொரு பேயைப்பிடித்து நல்கிற் பாடுவேம்,' என்றான் என வுட்கொண்டு 'பொன்னல்லாத பேயுங் கண்ணிற்படாது. மற்றும் பொன்னுலாகிய பேயும் உலகில் இல்பொருளாகும். எனவே, இதனைப்பற்றித் தருவதாகவுரைப்பது தவறாகாது,' என முடிவுசெய்தனர். ஆகவே, சுரமஞ்சரியும் சீவகன் கருதிய பொருளை ஓராமல், 'இல்லாததனைக் கொடுப்பதாக ஒப்பலா,'மென்று நினைத்து ஒப்புக்கொண்டாள்.

**சீவகன் இரண்டாமுறையும் பாடினன்**

எனவே, வயிரவொளி யுமிழும் புத்தணி மகளிரில், உயிரோவியமனைய சுரமஞ்சரியின் களங்கமற்ற முகத்தை நோக்கியவாறு இனிமை நிறைந்த அமுதம் ஊற நரம்பிற் பயின்று மறையாத பாட்டைப் பாடினன்.

**மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்குக் கூறுதல்**

"தொடித்தோள் வளைநெகிழத் தொய்யில் முலைமேல்
வடிக்கேழ் மலர்நெடுங்கண் வார்புயலுங் காலும்;
வார்புயலுங் காலும், வளைநெகிழும், நந்திறத்த(து)
ஆர்வமுறு நெஞ்சம் அழுங்குவிக்கும் மாலை!"

"ஐதேந் தகலல்குல் ஆவித் தழலுயிராக்
கைசோர்ந் தணலூன்றிக் கண்ணீர் கவுளலைப்பக்
கண்ணீர் கவுளலைப்பக் கையற் றியாமினையப்
பண்ணீரும் வேலிற் புகுந்ததால் மாலை!"

"அவிழ்ந்தேந்து பூங்கோதை ஆகத் தலர்ந்த
முகிழ்ந்தேந் திளமுலைமேற் பொன்பசலை பூப்பப்
பொன்பசலை பூப்பப் பொருகயற்கண் முத்தரும்ப
அன்புருகு நெஞ்சம் அழுங்குவிக்கும் மாலை!"

இங்ஙனம் பண்ணினுக்கரசன் வானவர் இசையைப் பாடினன். மகளிர் சோர்ந்து மயங்கிய மயிலைப்போன்றனர். அப்பொழுது, சுரமஞ்சரி முதிய அந்தணனைப் புகழ்ந்து, "நாளைக் காமன் கோயிலையடைந்து வழிபட்டு இப்பாட்டை

யுடைய சீவகனைத்தரல் வேண்டுமெனப் பணிந்துவேண்டு வேன்,' என்றெண்ணினாள். அவளும் அவளுடைய தோழியரும் இந்த வேட்கையிலேயே முழுகியிருக்க, நீனிறக் கடலிலே அணிந்த திலகமேபோலக் கதிரவன் தோன்றினான்.

**காமன் கோட்டத்திலே**

அப்போது, சோர்வின்றிச் செல்லும் எருத்தைப் பொன்மணியுஞ் சதங்கைமாலையுங் கண்ணியும் புனைந்து, நெற்றியிலே மின்னும் பட்டமணிந்து, நெய்யும் பாலும் வெறுப்பவூட்டி, வண்டியிற் பூட்டி ஒரு மடந்தை கோல் கொண்டு செலுத்தச் சுரமஞ்சரி தன் தோழியுடன் அவ் வண்டியிலேறினாள். முதிய அந்தணனும் வந்தான்.

அவள் வருகையறிந்த ஆடவர்கள் அவள் கண்ணிற் படாமல் விலகினர். வண்டி காமன் கோட்டத்தையடைந்தது. சுரமஞ்சரி இறங்கினாள். முதிய அந்தணனை மணவறையிலே தான் காமனைப் பரவுவது தெரியாவண்ணம் மறைய இருத்தினாள். மாலையும் சாந்தமும் விளக்கும் நறும்புகையும் பணிமகளிர் ஏந்தித் தன்னைச் சூழ்ந்து நிற்பக் காமனைப் பரவினாள்.

தையலாள், இடமுழந்தாளையூன்றி, ஒளிமிகு மாலையுங் குழலும் வலத்தோளிலே விழுமாறு கமுகின் கனுவையனைய கழுத்தை வலத்தே சாய்த்து, அழகிய நிலத்திலே தலைபடிய வணங்கி யெழுந்தாள். இரு கைம்மலரையுங் குவித்துக் கூறினாள்:

"தாமரைக் கண்ணையும் செவ்வாயையும் பொற்குழையையும் உடையாய்! ஒரு வரங் காதலித்தேன். பூமலி மார்பனே! அவ்வரம் நான் சீவகன் மார்பைத் தோய்தலாகும். அதனை அளித்தனையேல் நினக்கு மாணிக்கமகரமும் அம்பும் சிலைக்கரும்பும் தேரும் ஊரும் பொலியத் தருவேன்."

காமன் சிலைக்குப் பின்னர் மறைந்திருந்த புத்தி சேனன் இவ் வேண்டுகோளைக் கேட்டான். 'மட்டவிழ் கோதையே! உன் மனமகிழ்வுறுங் காதலான் சீவகனைப் பெற்றனை! நுண்ணிடை வருந்த இனி நில்லாமற் செல்க!' என்று காமன் கூறுவதேபோற் கூறினான். அவ்வஞ்சனை மொழியை உண்மையென்றே—காமனே வாய்விட்டுக் கூறியதாக—எண்ணிய அப் பொற்கொடியாள் பின்னரும் காமனை வழிபட்டுப் பரவி மீண்டாள்.

சிற்றடிகளிலே குடிகொண்ட பொற்சிலம்புகள் ஒலிக்கத் தனியே தான் முதிய அந்தணனை மறைய இருத்திய மண அறையினருகே சென்றாள். அங்கே முதிய அந்தணனுக்கு மாறாகக் காளை சீவகனைக்கண்டு திடுக்குற்றாள். அவள் கடைக்கண் அவனை நோக்க, மலர்க்கொடியென நாணி நின்றாள். அச்சத்தையும் காமத்தையும் ஊட்டும் வேற்கண்ணாள் அலங்கலுங் குழலுந்தாழ, விளங்குங்குழை கதிர்பரப்ப, ஓலை மின்ன, அன்பு முதிர்ந்து உள்ளம் உருகி நின்றாள்.

"மாணிக்கக் கலாபத்திலே யிழைத்த நீலமணி உந்திக்கு நேரே நீனிறக் கதிரை உமிழ்வதேபோல இவளுடைய அழகிய வயிற்றிலே கோலம்புனைந்த மயிரொழுங்கே என் திண்ணிய நிறையைக் கவர்ந்ததெனின், ஒழிந்த உறுப்புக்கள் என்னை என் செயா?" என்று தனக்குத் தானே கூறிக்கொண்ட சீவகன், அவளை நோக்கி, "நின்னடியைப் பரவ (நீ ஒரு தெய்வமெனக் கருதி) வந்தேன். இப்போது மானிட மகள் என்றே துணிந்தேன். இனி, நின்னைத் தீண்டிலேன் எனின் உய்யேன். அருள்வாயாக!" என்று அவளை நெருங்கினான். அப்போது காமன் எய்தலாற் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி, நாகை அணையும் விடை போலத் தானணிந்த தார்குழைய அவளைத் தழுவினான்.

கலையணிந்த கார்மயிலனையாளும், மலைவென்ற மார்பினனும் இனிய தமிழிற் கூறிய இயற்கைப் புணர்ச்சியாகிய இன்பம் நிலைபெற முறைமைப்படி நுகர்ந்தனர்.

இன்ப நுகர்ச்சிக்குப் பின்னர், அவள் மெய்குளிரத் தடவிக்கொடுத்து மேகலை முதலிய அணிகளைத் திருத்தித், தாங்கள் இன்பம் நுகர்ந்த இடம் மலர்பரப்பிக் கிடந்த தாகையால், அழகிய பொற்சிலம்புகளிலே படிந்த மகரந்தப் பொடிகளைத் துடைத்து, முன்போலவே கோதையைக் குழலில் அணிந்து அவளைத் திருத்தினான்.

"வானிலே நிறைந்து கமழும் மதுவையும் சாந்தையும் ஏந்தி, அம்மதுவைத் துளித்தலின் மொய்க்கும் வண்டும் சுரும்பும் தேனினமும் நுகரும் கோதையாய்! நின்னையறிந்த காமன் நினக்குத் தன் கைவில்லையும் சேமவில்லையும் நேரே வளைத்துத் தந்தான். மற்றும், குறைவறப் பண்ணிக் குருதியைத் தோய்த்து, உறையை நீக்கி, அழகு சான்ற இரண்டம்புகளையும் கொடுத்துவிட்டான். என்னையும் அவற்றிற் கிலக்காக்கி உயிருடன் இருக்கவும் விரும்பினனே! அவன் இரக்கமிலான்!

"தேன் சிந்துங் கண்ணியணிந்த பூங்குழலையுங் கரும்பனைய இனிய மொழியையுமுடையாள் அழகுக்கு வானமும் நிலனும் முற்றும் விலையாகுமோ! மழையின் மின்னுக் கொடியனைய இடையினளைப் பெண்மைக்கு ஓர் அணியாக வேண்டிப்போலும் படைக்கும் பெரியோன் படைத்தான்!"

என்று சுரமஞ்சரியின் நலத்தைப் பாராட்டினன். அவள் நாணி நிலத்தை நோக்கியவாறு மலர்களைச் சுமக்கவியலாது வளைந்த மலர்க்கொம்பேபோல நின்றாள். அவளைத் தன் மணிக்கடகக் கையாற் றழுவியெடுத்து மடிமீதிருத்தி, 'நாளை நின்னலத்தை நுகரேனாயின் அறங்கெட நிலத்தையாளுங் கட்டியங்காரனைக்கடவேன்! இனி, நீ தோழியருடன் செல்க!' என்றான். அவள் தன் ஒளிவீசும் மோதிரமணிந்த மெல்விரல்களைக் கூப்பி அடிவணங்கி நின்றாள். 'நங்கையே! நடுங்கல் வேண்டா! செல்க!' என மறுமுறையுந் தேற்றினன். அவள் செம்பொற் கிண்கிணியுஞ் சிலம்பும் மிழற்ற, மேகலை ஒலிப்பத் தன் ஆயத்தையடைந்தாள்; சீவகனிடத்தே தன் அன்பு நிற்கத் தான் மட்டும் சிவிகையிலேறிப் பொன்மனை புகுந்தாள்.

**சீவகன் காமதிலகன்!**

இனி, வானவில் மழைபெய்யக் கற்கவேண்டி நீர்த் துளிகளை நாட்கொள்வதேபோலத் தேன்துளிக்கும் மாலை யணிந்த மார்பினனாகிய சீவகன் தான் தங்கிய பொழிலை யடைந்தான். புத்திசேனனும் மற்றைத் தோழர்களும் அவனை வரவேற்று, 'நம்பி காம திலகனே' என ஒப்புக் கொண்டனர்.

**திருமணம்**

பிறகு, சீவகனைச் சார்ந்தவர்கள், வில்தோற்கும் புருவத்தினள்—அமுதுந் தேனுங் கலந்தெழுதப்பெற்ற பூங் கொடி மலர்ந்தனைய நுண்ணிடையாள்—சுரமஞ்சரியின் உறவினரையடைந்து சீவகனுக்கு அவளைத் தரல்வேண்டு மென மகட் பேசினர். அம்மொழி கேட்ட குபேரதத்தன் வெப்பமிகு தேனை வாய்க்கொண்டவன் அதனை உமிழவோ உட்கொள்ளவோ இயலாமல் திகைப்பதைப்போல, "நோன் பிலாளாகிய நங்கையின்பால் நல்வினையிலாதேன் செய்வ தென்?" என்றெண்ணிக் கலங்கியிருந்தான்.

இனி, சுரமஞ்சரி தன் கருத்தை அறத்தொடு நிற்றல் வாயிலாகப் பெற்றோருக் கறிவிக்க எண்ணி, ஞாயிறு போல ஒளிவிடும் தூணைத்தழுவி நின்று, கற்பாகிய மாலையை வீசி நாணாகிய வண்டை ஓட்டியவளாய்ச் சொற் குற்றமின்றித் தோழிக்கு அறத்தொடு நின்றாள். பவளப் பாவை யனையாளின் கற்பின் திறன்கண்ட தோழி மகிழ்ந்து தலைவியை மாலையணிந்து பணிந்து வாழ்த்திச் சென்று, செவிலிக்குக் கூறினாள். செவிலி சென்று, தேன்வளர் கோதையணிந்த நற்றாயாகிய சுமதிக்குச் செப்பினாள். நற்றாய், 'நெருநல் இரவு கனவிலே அழகிய பொய்கை யொன்று வற்றக்கண்டேன். நம் நங்கையின் கன்னித் தன்மை வற்றுவதுபோலும் அக்கனவு,' என மொழிந் தாள்.

பிறகு, நற்றாய், கெண்டையும் வில்லும் பிறையுங் கிடந்து, இனிமைகொண்ட கொவ்வைக்கனியும் முத்தும்

அணிந்து, தூங்கும் குண்டலமுடைய் திங்கள்போலும் இது எனப் புகழப்பெறும் முகத்தினளாகிய சுரமஞ்சரி யின் தாதையை அடைந்து கூறினன் :

"போர்க்களத்திலே அழலும் வேலனே! நம் சிறுமி யாகிய பேரறிவினள் தானே காவலிட்டுக் காத்துக் கொண்ட இந்தக் கற்பு, தன் ஆய்ந்த சுண்ணத்தைச் சீவகன் சான்றுகாட்டித் தீதென்று கூறினதைக் கருதியெழுந்தது போலும்! இது நமக்குத் தேன்மழை கடலிற் பெய்தது போலே ஆயிற்று."

குபேரதத்தன் அதனை விருப்பத்துடன் ஏற்றான். சுற்றத்திற்கெல்லாம் உணர்த்தினன். யாவருக்கும் அவர் விழைந்தவாறு அடிசிலும் ஆடையும் விழுமிய கலன்களும் மாலையும் சந்தனமும் குறைவின்றி நல்கினன். பல் இயங் களும் குழமி ஆர்ப்ப நல்ல நாளிலே சீவகற்குச் சுரமஞ் சரியை நல்கினன். பரியகம் சிலம்பு கிண்கிணி ஆகிய காலணிகளை யணிந்த அடிகளையுடைய நாடகமகளிரும் யாழ்வல்லாரும் ஆகிய அரிவையர் நூற்றெண்மரையும் ஒன்றரைக்கோடி பொன்னையும் மகட்கொடையாக நல்கினன்.

இனி, மாசற்ற மணியும் முத்தும் வயிரமும் செம் பொன்னும் அலங்கலும் பொருந்திய குன்றனைய சீவகனும் மணிக்கொம்பனைய சுரமஞ்சரியும் பழுதற்ற இன்பக் கட லிலே அழுந்தித் துறக்கம் புகுந்தவர்கள்போன்று மகிழ்ந் தனர்.

சீவகன் தன்னைத் தழுவிய கை சிறிது நெகிழ்ந்த போது, இவன் பிறமகளிர் தழுவ வேண்டுமென நெகிழ்ந் தானெனக் கருதிக், 'கங்கைநீர்போலப் பலரும் திளைக்கும் நின் மார்பினை வேண்டேன். இனி யென்னைத் தழுவ வேண்டா!' எனப் புலந்து விலகிநின்றாள். அப்போது அவ ளுருவம் பளிக்குச்சுவரிலே தோன்றியதை அவளெனவே நினைத்து, 'முல்லையங் கோதையே! யான் ஒன்றும் பிழைப் பிலேன்; முனியாதே,' எனக் கலக்கத்துடன் கூறி அவள்

சிற்றடியைத் தொழுதான். அதுகண்ட வட்டிகையால் தீட்டிய பாவை போல்வாள், 'என் நிழல் அப்பளிக்குச் சுவரிலே சிறிது ஒளிமிகத் தோன்ற அவ்வுருவம் என்னி னுஞ் சிறந்ததென்று கருதி அதனையே நோக்கினிரோ?' என்று காமத்தினால் மனம் நொந்து, கண்களை யிடுகக் கோட்டி நோக்கியவளாய்க் குண்டலம் இலங்கவும் கூந்தல் கோதையுடன் அவிழ்ந்து சோரவும் ஊடிநின்றாள்.

அதுகண்ட சீவகன் ஒருபிடி யிடையினளை நோக்கி, 'நங்காய்! பளிக்குச் சுவரிலே தோன்றிய நின் நிழலை நீ யென்றே கருதி ஒட்டி நோக்கினேன்,' என்று கூறினான்.

அவள் ஊடல் தணியாளாய்க், 'கிழவனாக என் காவல் மிக்க இடத்து வந்து பாடியிருப்பக் கண்டேன். பளிங்கிற் றோன்றிய பாவையை ஒரு படத்திலே எழுதவிரும்பிப் போனும் இமையாமல் நோக்கியிருப்பக் கண்டேன். இங்ங னம் ஓரூரிலே இரு முறைமை நிகழ்வதால், இத்தகைய காமத்தை யொழிக!' என்றுகூறி அழுதாள். அவள் கண்ணீர் சீவகன் உயிரை வாட்டியது.

எனவே, இவள் ஊடலைத் தீர்ப்பதெங்ஙனமென்று சிறிது ஆராய்ந்து, 'சிறியவர் செய்த தீமையைப் பெரியோர் வெகுளாமற் பொறுப்பாரல்லரோ?' என்றுகூறி, அவள் சிலம்பிலே தான் அணிந்த அலங்கலின் தாது அவிழுமாறு தன் தலையைவைத்து வணங்கி, அவளூடலை நீக்கினான்.

இங்ஙனம் யாழை வென்ற கிளவியினாளின் அமிழ்த மனைய புலவியை நீக்கி, விதையில்லாத கனிந்த காமச் செழுங்கனியை நுகர்ந்து, திங்களைக் கலந்த ஞாயிறுபோல மகிழ்ந்தான். விளங்கும் வெள்ளிய அருவி யொலிக்குங் குன்றிலிருந்து கொணர்ந்த தகர விறகிற்றீயிலே அகிலும் தேனும் வெல்லமுங் கூட்டியிட்டுக் குற்றமின்றி வளர்ந்த புகையினையுடைய அமளிமிசை மகிழ்ந்த சீவகன் அவளை நோக்கிக் கூறுகிறான்:

"கயற் கண்ணினாய்! நீ கவலையுறாதே! சிலநாள் என் அலுவலாக நின்னைப் பிரிவேன். பிரிந்தால் நின் அழகைத்

தாங்கி யிருப்பாயாக! அஃது அருமையென்றும் அறி வேன்."

சுரமஞ்சரி அதனைக் கேட்டுப், 'பெரும! நீ விரும்பு வதையே யான் விரும்புவதல்லது, என் விருப்பமெனத் தனியே உண்டோ? நின் மனம்போலவே என் மனத்தை யும் ஒருமைப்படுத்திச் செல்கின்றேன். நின் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சி,' என்றாள்.

சுரமஞ்சரி நாணுடனும் நடுக்கத்துடனும் மொழிந்த தேனனைய இம்மொழியைக் கேட்ட சீவகன், 'கோதாய்! நின் அழகு வருந்த யான் வைகியிரேன்,' என்று கூறித் தழுவிப் பிரிந்துசென்று தோழரை யடைந்தான். பிறகு அவர்களுடன் தன் மனையை அடைந்தான்.

**சீவகன் அரண்மனையில்**

அங்கே, சுநந்தை சீவகன் உண்மைநிலையை யுணராமை யால் மிகவும் வாடியிருந்தாள். அவன் ஊர்ந்த புரவியை நோக்குவாள், களிற்றை நோக்குவாள், பொன்னாலாகிய தேரை நோக்குவாள்! கலங்கி விம்மி, 'என் மகன் யாங் குளான்?' எனக் கதறுவாள். இரவும் பகலும் இங்ஙனம் அழுத கண்ணீரினாலே கையைக் கழுவியவாறு துன்புற்றுத் தீயிற்பட்ட மெழுகென வுருகிய சுநந்தையின் மெலிவை மாற்றினான் சீவகன்.

ஒற்றரும் உணராவண்ணம் அவன் வரவை மொழி யின்றிக் கைக் குறிப்பினால் உணர்ந்த உறவினர் குழுமிச் சீவகனைத் தழுவிக் கொண்டனர்; பிரிந்திருந்த துக்கம் பீறிட மோதிக்கொண்டனர்; சோர்ந்தனர். இங்ஙனம், 'நம்பி! நம்பி!' என வுருகி யாரவாரித்தனர். பிரிந்த உழுவலன்புடையாரைக் கண்டபோது பிரிவினால் அடைந்த துக்கம் பீறிடும் என்பதற்கு இது சிறந்த சான்றாயிற்று.

கந்துக்கடன் இந்நிலைகண்டு திடுக்கிட்டான். கட்டி யங்காரனுக்குத் தெரிந்துவிடுமெனக் கலங்கினான். விரைந்து அந்த ஆரவாரத்தை யடக்கினான். அவனால் ஒலியவிந்த

கடலென ஓய்ந்தது மனை. நிகழ்ந்த அழுகைக் குரலும் கந்துக்கடனின் தந்தை யிறந்த நாளாகையால் எழுந்ததென நகரத்திலுள்ளார்க்கு விளம்பிவிட்டனர். இனி, எவரும் உண்மை யுணராரெனத் தெளிந்து மகிழ்ந்தனர்.

காந்தருவதத்தை தன் கணவனைக் கண்டு மகிழ்ந்தாள். அவன் அடியிணைகளில் அன்புற வணங்கினாள். புலவி யில்லாத இனிய மொழியால், 'அடிகளே! சென்று எங்கை குணமாலையைக் காண்மின்,' என வேண்டினாள். அவள் விரும்பியவாறே குணமாலையைக் கண்ட சீவகன் முதலில் மங்கல முறைப்படி மணமிகு தேனுறு மாலையையுங் கண்ணியையும் தரித்துக், குங்குமத்தையும் அணிந்தான்.

குணமாலை கண்ணீர்வாரத் துடிதுடித் தழுதாள். "அடிகளே! தீவினையுடைய என்னைத் தீண்டன்மின்!" என்றாள். அவன் மேலுந்தொட, 'வேண்டா, யான் பாவியேன்,' எனக் குமுறினாள். சீவகன், 'காவியனைய கண்ணாய்! கவலை யுறுதே! யான் பிழைத்ததெல்லாம் நின் தவத்தினாலேயே,' என்று ஆறுதல் கூறினான்.

மற்றும், "அரிவையே! நின் அன்னமனைய நடையும் நோக்கும் சாயலும் அழகும் கிளர்ச்சியும் மின்னனைய நுண்ணிடையும் முகமும் பிற வுறுப்புக்களுந் தோன்ற என்னுள்ளத்தே எழுதப்பெற்றதனால் எப்போதும் பிரி வின்றியே யிருக்கின்றன. எனினும் நின் மெய்யைத் தழுவாமற் பிரிந்த ஒவ்வொரு நாளும் ஒவ்வோரூழியே போல என்னை வருத்தின. இன்னும் வருத்தாதே," என்றான்.

இவ்வாறு, அவள் மகிழுமாறு வேறு பலவும் விளம்பி, அவளுடன் அன்றிரவு துயின்றான். மறுநாள் கந்துக்கட னிடம் மேல் நிகழ்வனவற்றைத் துணிவுடன் கூறிச் சுற்றஞ் சூழத், தாவிச்செல்லுங் குதிரை வாணிகனுகக் கோலங் கொண்டு தன் மனையினின்றும் வெளிவந்தான்.

## கங. மண்மகள் திருமணம்

**விதேய நாடடைதல்**

சீவகனும் அவன் தோழர் முதலியோரும் சீவகன் மாமன் கோவிந்தராசன் நாடாகிய விதேய நாட்டை நோக்கிப் போயினர். செல்லும் நெறியில் நால்வகை நிலங்களும் நெருங்கி வளமுற்றிருந்தன.

அவர்கள், குடம்போன்ற பால் நிறைந்த-மடியையுடைய எருமைகள் சென்ற நெறியெல்லாம் பால் வடிதலால், தாமரை யிலையின்மீது சொரிந்த பாலை அன்னம் குருகு நாரையாகிய வற்றின் பார்ப்புகள் பருகி வாழும் மருதநிலத்தைக் கடந்தனர்; புரிவினையுடைய வளை சூல் முதிர்ந்ததால் அலறிக் கூவியீன்ற கதிர்வீசும் முத்துக்களை உழக்கியவாறு, ஆயிரம் சங்குகள் சூழும் வலம்புரிகள் ஆயிரத்துக்குள்ளே மேயும் சலஞ்சலத்தைப் பார்த்த அன்னச் சேவல் அது தன் பெடையென மயங்கிச் சென்று தழுவிப் பெடையன்மை யறிந்து வருந்தித் திரும்பிச் செல்வதைப் பார்த்தவாறு நெய்தல் நிலத்தைக் கடந்தனர்; உயர்ந்த கொன்றைமர நீழலில் மணிவிளக்கெறியக் கோடுகளையுடைய கலைமானும் பெண்மானும் துயில, அக் கொன்றையின் அருகிலே மலர்ந்த முல்லை மலர்களை-மகளிர் முகநகை பருகும் ஆடவர்போலப் பருகுதற்குக் காரணமான முல்லைக் கானத்தை மணம் எதிர் கொள்ளக் கடந்தனர்; குளிர்ந்த கங்கை நீரைக் குழவித் திங்கட் கோட்டின்மீது வீழ *ஒற்றைச் சடையை விரித்துச் சூலமேந்தி யேற்கும் இறைவனைப் போல, அருவிநீர் தன் மருப்பில் வீழக் களிறு நின்றுடுங் குன்றின் சந்தனச் சாரலிலே பெண்களின் சாயலையுடைய தோகைகள் உலவும் குறிஞ்சி நிலத்தைக் கடந்தனர்; வெம்மையாற் பூக்களை யுதிர்த்த கடம்பின் கிளையிலே,

---

*கங்கை தோன்றும் இடமாகிய இமவானிற் பதுமை யென்னும் பொய்கையில் நீர் விழுந் தாழ்வரையில் உருத்திரப் படிவமிருத்தலின் சூலமேந்திய இறைவன்போல என்று கூறியதாக நச்சினார்க்கினியர் நவில்வர்,

ஊனை வைத்தாலனைய சூட்டினையுடைய சேவற் கோழிகள் பருந்துடன் சேர அமர்ந்து கவர்த்த குரலை யெழுப்பும்- கொடிய அழலை மிதித்தாலனைய-பாலை நிலத்தைக்கண்டு அந்திப்போதிலே கதிரவன்மேல் மூடிய திங்கள்போல மெய்ம்முழுதுஞ் சந்தனத்தை யப்பிக்கொண்டு தம் பாய் மாவை விரையச் செலுத்தினர். நிலையிலாவுலகில் நிலை பெற்ற புகழை விரும்பியவன் நிதியம் போன்றும், பரத் தையர் காமம் போன்றும், முனிவரின் வெகுளி போன்றும் விரைவிற்போமாறு அப் பாலை நெறியைக் கடக்க விரும்பிய அவர்கள் ஒரு முழுத்தத்திலே கடந்தனர்.

குயவரிடமுள்ள புதுக்கலம் போன்ற கனிகளை யுடைய ஆலமரமும் பொன்போன்ற பூங் கொத்துக்களை யுடைய அசோக மரமும் பொருந்தி, முன்னர்ச் செவ்வி யுடனிருந்து, பின்னர்க் காம்பு கழலுதலாற் சிலம்பி வீழ் வனபோல மதுவைக் கலந்து மலர்களைச் சொரிகின்ற மகி ழும் மயங்கி, கதிர்த்த தண்ணிய பூணி, கம்புள் என்னும் பறவைகளும் சிறுசின்னம்போலொலிக்குஞ் செறிந்த குரலை யுடைய நாரைகளும் வண்டானங்களும் காணப்படுகிற ஆற் றின் கரையிலே இளைஞர்கள் இளைப்பாறிச் சென்றனர்.

பிறகு, செறிந்த இலைகளையுடைய பலவின் கனிந்து வீழ்ந்த சுளையையும், முதிர்ந்து விழுந்த வாழைக் கனியை யும், ஆங்கு வாழும் புள்ளிகளையுடைய அலவன் நிறைந்த சூலையுடைய பெட்டைக்கு நல்கி, அதன் நோயைத் தணிக்க நந்தினையும் ஆமையையும் மிதித்து மலரை வழியாகச் செய்து இடரைக் குறைக்கும்-மிகுந்த நீர்வளமுடைய- விதேயநாட்டை அணுகி, வேந்தனுக் குணர்த்துமாறு முன்னே ஆட்களை விடுத்தனர்.

**வரவேற்பு**

தன் தங்கையின் மகன் வருகின்றானென்றறிந்த கோவிந்தராசன் மகிழ்ந்து, வீடுகள்தோறும் வில்லைப் பிடிக் கும் விரல்களைப் போல நெருங்கி நின்று ஒருங்கே எதிர் கொள்க வென்று, ஏட்டில் எழுதித் திருவெழுத்திட்டு நாட்

டினுக் கறிவித்தான்; தன் பணியாளரையும் ஏவினன். அவர்கள், 'செந்நெல் சிறுபயறு, சேதா நறுநெய், தீங்கன்னல், கதலியோடைந்து' ஆகிய நாட்டிலமிர்தையும், 'ஓர்க்கோலை, சங்கம், ஒளிர்பவளம், வெண்முத்தம், நீர்ப்படும் உப்பினோடைந்து' ஆகிய கடலமிர்தையும், 'தக்கோலம், ஏலம், தகைசால் இலவங்கம், கர்ப்பூரம், காதியோடைந்து' ஆகிய வரையமிர்தையும், 'அரக்குலண்டு, செந்தேன், அணிமயிற் பீலி, திருத்தகு நாவியோடைந்து' ஆகிய காட்டிலமிர்தையும் குவித்து, முல்லை நிலத்தே சென்று வரவேற்றனர்.

ஊர்தோறும் பூணணிந்த மகளிர் முருக்கிதழ் திறந்து தேனூறு மொழிகளால் ஏத்துவார்; மலர்களைத் தூவி வழிபடுவார்; வரையுமிழும் ஆவிபோல மாடத்திலே நறும் புகை யேந்துவார். ஆடவர்கள் குலைக்கமுகும் வாழையும் நடுவார். இவ்வாறு நாடு வானவர் நாடென விளங்கியது.

பாடும் அருவி வீழும் பயன்மிகு மலைபோன்ற மாடங்களையுடைய நகரத்திலே வாயிலிலும் அரண்மனையிலும் பலருங்கூடும் அம்பலத்திலும் நாடகமாடும் அரங்கத்திலும் காலையிலும் மக்கள் திரண்டு சீவகனைக் காணத் தொடக்கனர்.

பல வொளிவிடும் ஆரத்தையும் பூண்களையும் பல வகையாக அணிந்த மகளிர் நுதலிற் சூட்டிய பட்டம் ஒரு புறம் விளங்கியது. அண்ணலைக் காண விழைந்து சுண்ணத்தையும் நெற்றிச் சூட்டினையும் கண்ணியையும் சொரிந்து குலையுங் குழலையுடைய மகாரை யெடுத்துக் கொண்டு, சிலம்பொலிக்க ஆர்வத்துடன் வருகின்ற மகளிரின் வனப்பு ஒருபுறம் விளங்கியது. விளங்கிய நலத்தினையுடைய கொடியை யிகழ்ந்த சாயலினையும் கதிர்த்த நலத்தையும் உடைய மங்கையர் ஓடி வரும்போது, இடை முரியுமென்று நடுங்கின கிண்கிணிகள் அம் மடந்தையரின் காலைக் கட்டிக்கொண்டு கூவும் ஒலி ஒருபுறம் கேட்டது. இடை தளர வந்து மாடமிசை தங்கிய இளமகளிர் கண்கள் இவனைக் காண விழைதலின் அலமருங்காட்சி ஒருபுறங் காணப்பெற்றது. மின்னுங் குழையணிந்த மகளிர் கோதையுங்

தாழுமாகப் பொன்னாலாகிய மாடமிசை புதையும்படிக் கூடியவர் தோற்றம் புள்ளிகளையுடைய தோகை மயில்களைப் போல் ஒருபுறம் காணப் பெற்றது. பாடல் மகளிரும் பல்கலனணிந்த ஆடல் மகளிரும் தெருத்தோறும் சீவகனைக் காண ஓடி வரும்போது சிந்திய கலன்களின் ஒளிசெயும் காட்சி ஒருபுறம் காணப்பெற்றது. இங்ஙனம் குழையணிந்த மகளிரும் மைந்தரும் காதலுடன் இவனைக் காணத் தெருக்களிலும் மாடங்களின்மீதும் நெருங்கி மலர்த்தாதுகள் பரப்பினாற்போல நின்றனர்.

அத் தெருவிற் சேனைக் கடலிடையே, யானையின் எருத்தத்திலே, இந்திரகுமரனைப் போலே, மானக்கவரி வீச இருந்த செல்வனைக் கண்டு மகிழ்ந்த நகர மக்கள்,

"தேமலர் அங்கண் திருவே! புகுதக!
மாமலர்க் கோதை மணாளன்! புகுதக!
காமன் புகுதக! காளை! புகுதக!
நாம எழில்விஞ்சை நம்பி! புகுதக!"

"மின்னேப் வரைகொன்ற வேலோன்! புகுதக!
இன்றேன் கமழ்தார் இயக்கன்! புகுதக!
வென்றான் புகுதக! வீரன்! புகுதக!"

என்று வாழ்த்தி வரவேற்றனர்.

தெருக்களில் எம்மருங்கினும் துடியிடையும் தொண்டைச் செவ்வாயும் வடுவகிர் கண்ணுமுடைய மகளிர், எரி மணிப் பூணும் பொற்கலையும் பொற்சிலம்பும் மின்குழையும் கோதையும் உடையராய், இடித்த நறிய சுண்ணப் பொடியினையும் மணங்கமழ் மாலையையுங் கண்ணியையுஞ் சிதறி வாழ்த்தினர்.

சிலமகளிர் சீவகன் ஊர்ந்து வரும் பிடியை நோக்கி, வண்டுமுரலும் மாலையை நீட்டித்தொழுது, 'இரும்பிடியே! நின்னடையைக் கற்ற எம்மை விரும்பி, எம் கருங்கண்ணாற் காமனையைய சீவகனைக்கண்டு மகிழ மெல்ல நடப்பாயாக!' என்று வேண்டினர்.

சிலமகளிர், 'மயிர்வாய், சிறுகண், பெருஞ்செவி, பெருந்தாள், குற்றமற்ற திரண்ட கை ஆகியவற்றையுடைய சிறுபிடியே! நின் கேள்வனுகிய ஐராவணத்தோடே யாம் சூளுருமல் எம் ஐயன்—எம் உயிர்க்காவலன்—ஆகிய சீவகனைக் கொணர்ந்து அவன் எமக்குதவுமாறு நிற்பாயாக!' என வேண்டினர்.

பிடி தம்மைக் கடந்து நில்லாமற்போனதை நோக்கிய சில மகளிர், 'பெண்மைக்கழகு மென்னடையென்பதனை யெண்ணுமல், கடிய நடையைக் கற்ற பிடியே! நீ கணவனை யடைவையோ? நீ பிடியலை! பாவியாவாய்,' எனப் பூண் பிறழச் சாய்ந்து நோக்கி வெறுத்துக் கூறினர்.

சிலர், 'ஒளிமிகு மணிமாலை யணிந்த இளம்பிடியே! பெறுதற்கரிய அழகின் அரசனை—நம்பிசீவகனை—நாளைக்கு எம் சேரியிலே எம் தெருவிலே கொணர்வாயாக! கொணர்ந்தாற் பொரிக்கறியையுடைய கவளத்தை நினக்குத் தருவோம்,' என்பார்.

இவ்வாறு எல்லோரும் வாழ்த்தி நிற்க, விளக்கமான பாற்கடலிடைப் பொங்கி வெள்ளிய அலையெழுவதைப் போல, வெள்ளொளி ததும்பும் மாடங்களின் உச்சியிலே வெண்கொடிகள் அசையும் தெருவிலே சென்று, இளஞாயிறு கருங்கடலுச்சியிலே யிருப்பதைப்போல அரண்மனையின் வாயிலை அடைந்தான் சீவகன்.

ஆங்கே, அரண்மனை மங்கையர் தாமரைமலரின் வட்டத்திடையே குவளை விரவி மலர்ந்ததேபோலக் குழையொளிரும் முகமும் கயற்கண்ணுந் தோன்ற மெய்ம் மறைந்து மழையிடை மின்னுத்திரள்போல நின்றனர். பட்டத்தரசிகள் சுடர்விடும் கூரிய வேலேந்திய ஏந்தலைக் கண்டு, இத்தகைய மகனையடைந்தோமேயென மகிழ்ந்து, தேன் மிகுந்திருப்பதால் வண்டுகள் கொப்புளித் துமிழ்ந்து பிறகு நிறையப்பருகி மகிழுமாறு தாம் அணிந்த மலர்மாலையிலே மறைந்து நின்றனர்.

கதிர்விடும் மாணிக்கக்கொத்தை யீன்ற பொற்கொடி போன்றாளாகிய அழகுத்துறை முற்றிய இலக்கணை யெனும் நங்கை, தானணிந்த அலங்கலவிழ்ந்து தாதுசோர, இடையிலே மணிவடம் மின்ன, இடக்காற் சிலம்பின்மேலே பஞ்சார்ந்த வலத்திலுள்ள சிற்றடியை ஊன்றித் தோழியைத் தழுவி நின்றாள். அவள் தன் கரிய மழைக்கண்களால் மலர் மார்பினனை நோக்கினாள். அவ்வளவிலே அவனும் அவள் நெஞ்சிலே புகுந்து மூழ்கி மறைந்தான்.

'வானிலே வாழ்கின்றவர் மனம் பேதுறுமாறு, ஆங்கிருந்த அமுதக்குடங்கள் இங்கு இவள் மார்பிடையே வந்து தங்கினவோ,' என்று சீவகன் அவளை நோக்கின அளவிலே, கண்வழியே சென்ற காமனையை அவன் மனத்திலே அப்பொன்னனாள் மூழ்கினள்.

**மாமனும் மருகனும்**

இங்ஙனம் அரண்மனையை அடைந்த சீவகன் கரிய மலையினின் றிறங்கும் புலிபோல, மாலையணிந்த பிடிமிசையிருந்து கீழே யிறங்கினான். அங்கே, மன்னவர் முடிகள் தேய்த்து விளங்கும் தன் மாமனுடைய பூங்கழலணிந்த அடிகளில் தன் முடியைச் சேர்த்து வணங்கினான். பொன் மலைபோலத் திரண்ட தன் தோள்களாற் கோவிந்தராசன் தன் மருமகனை யிறுகத் தழுவினான். அப்போது மாமனுடைய கண்களிலிருந்து சொரிந்த முத்தனைய நீர்த்துளிகள் மருகனுடைய அகன்ற மார்பை நனைத்தன.

வேந்தன் தன்னை மறந்து, சச்சந்தன் உற்ற நிலையை எண்ணி அழுதான் என அறிந்தவுடன் அரண்மனையிலுள்ளாரின் தடங்கண்களெல்லாம்—மலையிடையே மயிலின் திரள் அழுவனபோல—மாரியைப் பெய்தன. பகைநரம்பின் ஓசையுங்கேளாத அரண்மனையிலே, நலம்வாடி, எங்கும் அழுகுரலே மிகுந்து, கடலொலிபோலக் கதறுதல் கண்ட விசையை தானே அவ்வழுகையை நீக்கினாள்.

**சூழ்ச்சி**

பிரிவின் ஆற்றுமை விலகியது. பின்னர், மாணிக்க மும் பொன்னும் பவழமும் பதித்துச் செய்த பொற் றட்டிகள் சூழ்ந்துள்ள சித்திரகூடம் ஒன்றை, எங்கும் மலர்மாலை நாற்றி நறுமணப்புகை கமழ, ஏத்தாளிகள் வெற்றிப்புகழைப் பாடக் கோவிந்தராசன் முறைப்படி யடைந்தான். அங்கு, மணியால் ஒளிமிகச் செய்த அடைப் பையும், செம்பொற் படியகமும், விளங்கும் பொன்வாளும், உச்சியை மணியால் வேய்ந்த கலசப்பானையும், கவரியும் ஏந்திய மகளிர் அவற்றை அரியணையின் அருகே வைத்து விட்டு நீங்கினர். சீவகனும் கோவிந்தராசனும் அமைச்ச ருடன் அமர்ந்தனர்.

அமர்ந்தவுடனே, தமக்குரிய வாழ்நாள் குறைந்தவர் கட்குத் தோன்றுமல் மறையும் அருந்ததியென்னும் விண் மீனினுஞ் சிறந்த கற்பினையுடைய புதவியெனும் அரசி பெற்ற நம்பியாகிய, கடலனைய படையைக்கொண்ட சீதத்த னுக்குக் கோவிந்தராசன் அரசினை நல்கிய நகரைக் காக்க வென அமைத்தான். பிறகு, பகைவனின் ஒற்றர்கள் அறியாவகையில் மறைவாகவே, சீவகனுடைய தோழர்க் கெல்லாம் அணிகலனும் விருந்தும் ஆடையும் போன்ற வற்றைச் சீவகனுக்கு நல்கியவாறே அவரவர் விருப்பப்படி நல்கித் தலையளி செய்தனன்.

இவை போன்றவை முற்றிய பிறகு ஏற்றின் தோல் போர்த்த முரசமும் கடலொலியும் நாணுமாறு முழங்கிக், 'கட்டியங்காரன் நம்மைக் காண்பதே கருமமாகத் துணிந்து வரவிடுத்த ஓலையில் உள்ள பொருளை யுரைமின்,' என்றுன். அவன் ஆணைப்படி விரிசிகன் என்பான் அவ்வோலையை யெடுத்து மேலேயிருந்த இலச்சினையை நீக்கி, மன்னனைத் தொழுது படிக்கின்றுன் :

**"விதேயத்து மன்னன் காணுமாறு கட்டியங்காரன் விடுத்த ஓலை,**

"ஒரு பொய்ப்பழி இவ்வுலகிலுள்ளோர் அறிவைக் கெடுத்து என்மேற் கிடந்தது. அரசனாகிய தானும் அதனைப் பொய்ம்மொழியெனக் கருதாமல் மெய்யெனக் கொண்டனன். இனி என் நெஞ்சம் பிளந்து காட்டித் தெளிவித்தாலும் தெளிவார் இல்லை. எனினும், தான் தெளிவானெனவே நம்பித் தெளிவிக்கின்றேன்.

"அடுகளிறாகிய அசனிவேகம் யானைக் கூட்டங்கள் அஞ்சியோடப் பாய்ந்து, கொடிகளையுடைய நெடுந்தேர்களைப் பொடிசெய்து, உளையமைந்த புரவிகளைக் குத்தி, எழுது கொடியமைந்த மார்பராகிய வீரரை வானுலகுக்கனுப்பிச் சுழன்றது. அது பொறாத சச்சந்தமன்னன் நூறு பாகரை யேவினான். அவர்களையும் அக்களிறு பிளந்து உயிருண்டது. எனவே, தானே சென்று அதனையடக்கி, அதன் மேலேறிச் செலுத்திவந்து, கந்திலே சேர்த்து, உறுதிபெறக் கட்டும்போது அது கூற்றெனப் பிளிறி வீழ்த்தியதனாற் சச்சந்தன் ஆயுள் இளகியது.

"இனி, விதேயமன்னன் உலகர் கூறும் பழியை நினைத்திராமல், என் மொழியைத் தெளிந்துவிடிற் பழியும் நீங்கும். தனக்கு யான் என் உயிரையும் தருவேன். இனி, எனக்கு இறைவன் தானேயாவான். ஆதலின், இந் நிலக்கிழமையை விரும்பிக் கடுக வருக!"

இவ்வாறு விரிசிகன் படித்தான்.

மணிப்பூண் அணிந்த சீவகன் அவ்வோலையின் உட்பொருளைக் கேட்டு நகைத்துத், தானே கூற்றுவனைக் கையால் விளிக்கின்றனன் என்று கருதி, 'நால்வரீர்! இவனைக் கொல்வதற்கு நுண்மதியினால் ஆராய்ந்த சூழ்ச்சி இது போல்வது வேறில்லை,' என்றான்.

கோவிந்தராசன், 'எவரும் நான் கூறுவதை உள்ளத்திலிருந்து உமிழ்தல் வேண்டா. கட்டியங்காரன் கள்ளத்தால் நம்மைக் கொல்லக் கருதினான். நாமும் அவனைக் கள்ளத்தாலேயே உயிர்வாங்கக் கருதினோம். நீங்கள் யாம்

கட்டியங்காரன் விரும்பியவாறு நட்புக் கொள்கிறேம் என்பதை முதலில் தெரிவித்துப், பிறகு, படைகளைத் திரண்டு வருமாறு முரசறைக!' என்றான்.

**முரசறைதல்**

"நம் காவலன் பகையைவிட்டுக் கட்டியங்காரனோடு உறவுகொண்டனன். இனி நீர் அந்நாட்டுடன் நெல்லும் பொன்னும் வழங்குதலை மேற்கொள்க! இனி, இறைவன் விரும்பானெனச் சொல்லும் நா நும்முடையவல்ல!" என்று முதலிற் கூறி முரசறைந்தனன் வள்ளுவன்.

பிறகு, 'பகைவருடலைப் பிளந்து சுளித்து நின்றழலும் வேழமும், கொடியணிந்த அழகிய தேரும், புரவியும் ஆகியவற்றைப் பண்ணுறச்செய்து, மள்ளரெல்லோரும் கழலணிந்து வாளை வலத்திலேந்திக் கடலும் நாண நாளைத் திருநகரிலே பரவிக்கூடுக!' என்று இரண்டாவதாகக் கூறி முரசறைந்தான்.

முரசறைந்த மறுநாள், காற்று மோதிய கடல்போலச் சங்கும் முழவும் முரசும் ஆர்ப்பக் கூற்றுவன் சினந்தெழுந்தாற்போலப் படைகள் நிலம் நெளிய ஈண்டின. அதனாற் பாற்கடல் பரவினாற்போல வாளொளி நகரெங்கும் பரவியது. அப்போது, விதேய மன்னன் படைகளைக் காணுமாறு, புதைந்த இருள்கெடப் பொங்கிக் குங்கும நிறக் கதிர்களைப்பரப்பி உதயமால்வரையின் நெற்றியிலே எழுந்த இளஞாயிறுபோல, வெள்ளொளிபரவிய சுதை தீற்றிய அரண்மனையின் மேனிலையிலே வெண்குடை நீழலிலே வந்தமர்ந்தான். அவனருகிலே நின்று ஏனாதி யாழியணிந்த படைத்தலைவன் படைகளைக் காட்டினான்.

## படைகளின் தோற்றம் :

**க. யானைப்படை**

பனைபனைய தடக்கை, பின்கால், முன்கால், வால், கொம்பு என்னும் ஐந்துறுப்புக்களினாலும் கொல்வன

கடற்சங்கும் ஆவின்பாலும்போன்ற வெண்மையான நக முடையன, பெரும்புலி முழங்கினால் மாறுகொண்டு பிளிறு வன, பெரிய மலையைப் பிளக்குந் திறலுடையன, ஏழுமுழ முயர்ந்தன, துதிக்கையும் கோசமும் வாலும் ஆகிய மூன்றுறுப்பும் நிலந்தோய்வன, தீயுமிழும் அஞ்சாத நோக்கினாற் சிறந்தன, கவிழ்மணிகள் இருபுடையுமுடை யன, தம் நிழலைக் காணினும் வெற்றியானைகளென அந் நிழலொடு மலைவன, மழையெனப் பொழியும் மும்மதத் தன—ஆகிய யானைகள் மூவாயிரத்தறுநூறு; புகழும் பருந் தும் ஆர்ப்ப மதம் பொழிவன இரண்டாயிரம்; கவுளை வண்டுகள் இகழுமாறு மதஞ்செறிந்தவை இரண்டாயிரத் தைந்நூறு; களிற்றுக் கன்றுகளும் இரண்டாயிரத்தைந் நூறு.

கனன்றெழும் தீக்கும் அஞ்சாத இந்த யானைகளின் மேல் ஏறினவர்கள் எறிகோல், வாள், வில் என்னும் மூன் றினும் குறைவறப் பயின்றவர்கள்; கூற்றொடும் பொருப வர்கள்; யானைகளின்மீது வான்வழியாகப் பறக்கவேண்டி னும் பறக்குந் திறலுடையவர்கள்; முன்புரிந்த போர்களிலே மெய்ம்முழுதும் படைக்கலங்கள் பாயுமாறு போர் புரிந்த வர்கள்; கோடிபொன் ஊதியங் கொண்டவர்கள்.

உ. குதிரைப்படை

பந்தியிலேயே யிருந்து குங்குமநீர் கலந்த பனிநீராடும் நம்பிரான் எனும் பெயர்பொருந்திய பரிகள் பன்னீராயி ரம்; பொற்கலனையணிந்த, வெண்மயிர் சூழ்ந்த புரவிகள் அறுபதினாயிரம்; தம்மேல் இருந்தெய்த கணையைப் பின் னிடச் செல்லுந்தகையன, வெள்ளிக் கலனையுடையன, வாயிற்பூட்டிய கடிவாளத்தை நெகிழவிடின் நிலமிசை நில்லாமற் பறப்பன—ஆகிய, பைங்கதிர்க் குமிழையுடைய கவரியை நெற்றியுச்சியிற் கட்டப்பெற்ற குதிரைகள் அறு பதினாயிரம்.

இவற்றைப் பண்ணுறுத்து ஏறிச்செல்வோர், மூங்கி லனைய கரும்பின் பூப்போல வெண்ணிறக் குந்தமும்,

வாளும், அரவின் தோற்றமேபோலும் வில்லும் பிறவும் முற்றக் கற்றவர்; குறையொன்றும் இல்லாதவர்; உயர் குடிப் பிறந்தவர்; ஆயிரம் போர்க்களங்கண்டவர்; பால் நிலவுபோல ஒளிவிடும் பூணுடையவர்.

௩. தேர்ப்படை

மாளவநாட்டுப் பரிகள் தறுகண் ஆண்மைய; தாமரை மலரனைய நிறத்தன; குற்றமற்ற நல்லியல் பொருந்திய வெண்மையான குளம்புடைன; சிந்துவின் கரையிலிருந்து வந்த குதிரைகள் பறைபோலக் கனைப்பன; நாவற்கனி போன்ற நிறத்தன. பாரசூரவம், பல்லவம் எனும் நகரங் களிலிருந்து வந்தவை வீரமிகுந்த ஆற்றலுடையன; முற் றிய தேனின் நிறத்தன; நிலமிசைத் தேர்செலின் பழியா மென நாணிப் புயலிடையே வானிற் பறப்பன. மாரட்ட நாட்டின் புரவிகள் மயிலின் கழுத்துப்போன்ற நிறமுடை யன. கடல்கடந்து கலத்தினில் வந்திறங்கிய பாய்மாக்கள் கிளிநிறமுடையன; பவளநிறக் குளம்புடையன. இத்த கைய குதிரைகளைப் பண்ணுறுத்திப் பூட்டப்பெற்ற—வெண்மதியமனைய ஆழிகளையுடைய—தேர்களின் தொகை இருபதினாயிரத்தறுநூறு.

இவற்றில் அமர்ந்திருக்கும் வீரர்கள், விற்பயிற்சியும் நொச்சிமலர்போன்ற நிறமும் கதிரவன் ஒளி கடலிடைப் பரவினாற்போன்ற ஒளியும் உடைய வாட்பயிற்சியும் பிற எறிபடைப் பயிற்சியும் உடையராய்த் தம் பகைவரைத் தப்பாமற் கூற்றினுக்கிடுந்தகையினர்.

௪. காலாட்படை

காலாட்படையிலுள்ள வீரர் தம் ஆண்மையால் எயிற் றுப்படையுடைய புலியைப்போன்றவர்கள்; வில், வாள், வேல் ஆகியவற்றின் பயிற்சியைத் தம் பக்கலிலே பிறர் கற்குமாறு சிறந்தவர்கள்; பல நூற்கேள்வி தங்கிய மனத் தினர்; யாவராலும் அறியப்பட்டவர்கள்; வேலைக்கொண்டு பகைவரது யானைப்படையின் சீற்றத்தைக் கெடுப்பவர்கள்;

வருத்திக் கொல்வதிற் காலனையும் கடிய நோய்களையும் ஒப்பவர்கள்; செருக்கினுற் கடலைத் தூர்க்கவும் மலையை அகழவும் வல்லவர்கள்; உலகறிந்த ஆண்மையினர்; நும் மவர்களாற் சிறப்புப் பெற்றவர்கள். இவர்கள் நான்கு நூறுயிரவர் உளர். இவர்கள் முகிலிடை மின்னும் திங்களும் ஞாயிறும்போலக் கூரியவேலும் வாளும் சிங்கத்தின் தோலைப்போர்த்த கேடகமும் பரப்பிக் கொடுந்தொழிலையுடைய கூற்றுவனும் தனக்கென ஓர் அரணையடையும்படி எங்கும் பரவியுள்ளனர்.''

இங்ஙனம் ஏனுதி படையைக் காட்டியவுடன் அரசனும் ஐராவணம் என்னும் யானைமீதேறினன். படைவீரர்கள் 'அரசன் வெல்க!' என வாழ்த்தினர்.

**படையெழுச்சி**

படைகள் புறப்பட்டன. சிறிய வெள்ளிய சங்குகள் முரன்றன. திண்ணிய முரசுகள் பெருங்கடலென முழங்கின. செல்லும் நெறியிலே புள்ளும் பிற நிமித்தமும் நன்மையே அறிவித்தன. கோவிந்தராசனின் வலக்கண் பலமுறையுந் துடித்தது.

யானையிடத்தொலிக்கும் மணியொலியும், ஐவகைக் கதியினுஞ் செல்லுங் குதிரைகளின் கழுத்திற்கட்டிய கிண்கிணியொலியும், 'கல்' எனப் படையிடையே எழும் ஒலியும் வாளொளியுடன் செல்லும் பெருங்கடலைப்போன்றது அப் படை.

வரிசையாகச் செல்லும் முழுமதியனைய வெண்குடையினுலும் அழகிய குஞ்சிகளாலும் பிச்சங்களாலும் நிழல் தரும் சோலையாகி, யானைகள் சொரியும் மும்மதத்தாற் பாலைத்தன்மை நீங்கி மருதத்தன்மை உண்டாகியது.

பெடையொடு கூடும் மயில்கள் யாவும் ஆர்த்தெழுதலாலும், மானினங்களெல்லாம் கன்றுடன் கலங்கியோடுதலாலும் படைக்கஞ்சிய காடும் மலையும் குடி போவனபோல இருந்தன.

**ஏமாங்கதம் அடைந்தனர்**

முழவைப்போல ஒலிக்கும் அருவியையுடைய மலையுங் காடும் பல கடந்து, மண்ணிடப்பட்ட முழவின் ஒலி மாறாத ஏமாங்கதத்தை அடைந்து இராசமாபுரத்தின் மதிற் புறத்தே தங்கினர் யாவரும். அப்போது வானளாவிய நிழலையுடை பொன்மதிலையே விளக்கமான நிலங் காவல் கருதிய சீவகன் அரண்மனையாகக் கோவிந்தராசன் கருதினான்.

**இராசமாபுரத்தில் தீய நிமித்தங்கள்**

அப்பொழுது, கட்டியங்காரனின் இன்பக் காதலியரின் வலக்கண்கள் துடித்தன. அவர்கள் பொல்லாக் கனாக்கண்டனர். மன்னனுக்கு மேனியொளி கருகியது. அரண்மனையிலே பகற்போதிலேயே கூகைகள் அஞ்சத்தக்க குரலாலே குழறின. முரசுகள் ஒலியடங்கின. வானத்தினின்றும் குருதிமழை பெய்தது. மண்ணும் விண்ணும் அதிர்ந்தன. நிலமதிர்ந்தது. வெள்ளிடி யிடித்தது.

**கட்டியங்காரன் காணிக்கை**

இந் நிமித்தங்களாற் கூற்றுவன் (சீவகன்) வந்து மதிலின் புறத்தே தங்கியிருப்பதை யுணராத - இறந்தபின் பொன்னுலகாள விருக்குங் - கட்டியங்காரன், 'இனிக் கோவிந்தராசனையுங் கொன்று யானே யிங்கு வீற்றிருக்கின்றேன்,' என மகிழ்ந்து, வெற்றிவேழம் இருநூறும், காற்றைப்போல விரையுந் தேர் நூறும், விரைந்து செல்லும் பரிகள் ஆயிரமும் பொற்படைகளாலே அணிந்து கோவிந்த ராசனிடம் போகவிட்டான்.

அவற்றைக் கண்ட கோவிந்தராசன் கட்டியங்காரனின் பெரும்படைக்குத் தன்னுடைய சிறுபடையே நிகராகுமென அறிவித்தற்கு விரும்பி, வேழங்களில் வாரிமணாளன் என்னும் வேழத்தையும், தேர்களிலே விசயம் என்னுந் தேரையும், புரவிகளிற் புவனவேகம் என்னும் புரவி

யையும் அணிந்து போகவிட்டான். அவற்றைக் கண்ட கட்டியங்காரன் மகிழ்ந்து, 'யான் முன் களிற்றுடன் போக விட்டவற்றிற்கு இரட்டித்த சிறப்புடையவற்றைக் கோவிந்த ராசன் வரவிட்டான்,' என்று புகழ்ந்தான். இனி, விதேய மன்னன் கட்டியங்காரனோடொருவனாக விருந்து, அன்பெனுங் கூரிய வாளாலே அவனுயிரை வாங்க வஞ்சனையாலே சூழ்ந்த செய்தியைக் கூறுவோம்.

**இலக்கணை சுயம்வரம் - திரிபன்றி யெய்தல்**

கோவிந்தனுக்கு அன்புமிக்க ஒப்பில்லாத மகள், பித்திகை மாலை பணிந்தவள், நோக்கினாரை உயிரோடும் போகவிடாத திருமகள் ஒருத்தி யிருந்தாள். அவள் பெயர் இலக்கணை. அவட்குக் கணவன் என்பான் எய்தற்கரிய திரிபன்றியை எய்த சிறப்புடையவனேயென முரசறைந்து தெரிவித்தான் கோவிந்தன்.

மதமிகு களிறுந் திண்ணிய தேரும் அழகிய புரவியும் பொற்சிவிகையும் நெருங்கிக் கலந்த இவைகள் நுரைகளாகக் கொண்டு, செறிந்த நீரையுடைய உலகப் பெருவெள்ளம் இராசமாபுரத்தே திரண்டதுபோல, அரசவெள்ளம் வந்து கூடியது.

**அரசர் முயற்சி**

தம்மை இலக்கணையின் அழகு கவர்தலால், அங்கு வந்த அரசர்கள் அன்றே வில்லை எய்யத் தொடங்குவாரும், கொடிய கணைகளைத் திருத்துவாரும், வில்லை வளைக்க எமக்கும் ஒருநாள் கூறுமின் என்பாரும், பல கணைகளை வழங்குவாரும், இவை யொன்றுமின்றிப் பரிவு கொள்வாரும் ஆயினர்.

மற்றும், அவ்வரசர்கள் பிறையனைய எயிற்றையும் எரியுங் கண்களையும் பெரிய வாயையும் நீண்ட மயிர்களையும் உடைய பொன்னாலான பன்றிகள் மூன்றும் எம்மை எய்வது அரிதென்று கூறுவதைப்போலத் திரிந்துகொண்

டிருக்கும் அவ்விடத்திலே வந்து நிறைந்து நின்று, கணை யையும் வில்லையுஞ் சேரப் பிடித்தவாறு, சக்கரத்தினுள்ளே பன்றிகள் திரிவதை நோக்கித் தலையை அசைத்துக் கொண்டு நின்றனர்.

அவ்வரசர்களில் தன் மார்பிலே பெழுதப்பெற்ற சந்த னத்தாலாகிய கொடியும் காதிலணிந்த பொற்றோடும் மணிக் குழையும் மின்ன வந்த வினிதை மன்னன் தன் வெஞ் சிலையை வளைய வளைத்து பொற்பன்றியின் நெற்றியிலே அம்புபட்டுத் துகளெழ அடித்தான். அத்தினபுரத் தரசன் நெற்றிப்பட்டம் மின்ன, வண்டுமுரலுங் கண்ணி சிந்த, ஒளிமிகும் பொற்கலனும் முத்துமாலையும் மார்பிலசைய வந்து, வில் குழைய வளைத்துப் பன்றி அதிர அடித்தான்.

காம்பிலியின் காவலன் மதுத் துளிக்குங் கண்ணி மணி முடியிலே அசைய வந்து, பன்றியை எய்யச் சக்கரத்தில் ஏறினவுடன் அப் பொறியினால் எறியப்பெற்றுப் பிற மன் னர்கள் நகைக்க வீழ்ந்தான். கோசலக் கோமகன் எய்த அம்பு வளைந்த வில்லினின்று புறப்பட்டு, வானிலே போர் புரிய நேரேசென்றது. அவந்தியரசன் தன்வில் ஊடியமகளிர் போல வளைக்க வாராமலிருக்க, அதனைப் பொறாமல், நாடு ஆரவாரிக்க முறித்துவிட்டு, அம்பைமட்டும் பிடித்துக் கொண்டு வாடிய மனத்துடன் மணமகன்போல நின்றான். மகத மன்னன் விடுத்த கணை, தேன் துளிக்குங் கோதை யாள் பிறன் மனைவியை விரும்பிய உள்ளத்தை உணர்வின் மிக்கான் தடுத்தவுடன் அது மீண்டாற்போல, ஆங்கி ருந்தோ ரெல்லோரும் இக்கணை பன்றியின்மேற் படு மென்று மருளுமாறு சென்று, அப்பொறியைத் தொட்டு விட்டு மீண்டது.

கலிங்கநாட்டுக் காவலன் தென்மலையாம் பொதியமலை யின் சந்தனமும் அகிற்குழம்புங் கலந்த கலவையைப் பூசி மணிவடம் ஒளிவிடும் மார்புடன் வந்து, மின்னென விட்ட கோலைப் பொறி விழுங்கக்கண்டு, வருந்தி வியர்த்து மெய் சோர்ந்து மீண்டான். முற்காலத்துக் கல் மழையைப்

பொற்குன்றுமே தடுத்து, இன்று மன்னுயிரைக் காக்குங் காசி மன்னன் தான் அணிந்த மணியணிகள் ஒளிவிட வில்லை வளைத்து விட்ட அம்பு சென்று திரிபன்றியின்மேற் சிறிது பட்டும் படாததுமாகித் திரும்பி, மக்கள் தம்மேலே வருமென்று நடுங்குமாறு சென்று மண்ணிற் புகுந்து மறைந்தது. போதனபுரப் புரவலன் பைம்பொற் சுண்ணத்தை மெய்ம்முழுதும் அப்பியவாறு வந்து, அரிதில் சக்கரத்தின்மீது ஏறி, அதன் விரைந்த சுழற்சியால் நிற்க முடியாமல், விழி சுழன்று சோர்ந்து, பலரும் ஆரவாரிக்குமாறு, ஞாயிறு தன் வட்டத்தினின்றும் நிலத்தே வீழ்ந்தாற்போல வீழ்ந்தான்.

பொதியமலைச் சந்தனமும் கடலில் வலம்புரிச்சங்கீன்ற முத்தும் நிறைந்த மார்பினன் பாண்டியன் எய்த அம்பு பன்றியை நோக்கிச்சென்று தலை வைத்தது. தானும் சக்கரத்தின்மேல் நிற்க வியலாமல் நிலத்திலே காலை யூன்றினன். விற்பயிற்சியிற் சிறந்த விசயன் என்பவன் தன் கணையை ஒருக்கணித்து நோக்கி, இடக்கைமேலே அழுக்கித் திருத்தி உருட்டியவாறு, சக்கரத்திலே குதித்துத் தன் வில்லிலே தொடுத்துச் சிறகமைந்த அப்பகழியை வாங்கினன். அவ்வளவில் வில் இரண்டாய் முறிந்தது. இவனும் கீழே குதித்தான். அவன் மற்றொரு சேமவில்லை உடனே எடுத்து வளைத்துக்கொண்டு, குண்டலம் இலங்கத் தாரும் ஆரமும் பிறழ மறுபடியும் சக்கரத்தின்மீது ஏறிப் பன்றி மூன்றுங் கூடுங் காலங்கண்டு, அம்பை நாணிலேபூட்டி இழுத்தான். அவ்வளவிலே நாண் அற்றது. விசயனும் தன் கருத்தைக் கைவிட்டுத் திரும்பினன். இவன் சீவகனிடத்திலே விற்பயிற்சி செய்தவன். ஊழால் இங்ஙனம் இவன் முயற்சி தோற்றது.

இங்ஙனம் அழகிய குதிரை பூட்டிய தேரையுடைய மன்னர்களெல்லோரும் இளைய மூங்கிலனைய தோளையுடைய இலக்கணையின் இன்பத்தை விரும்பத்தக்க தவம் தமக்கில்லையென்றறியாராய் அறிவு மயங்கி ஆறுநாட்கள் கடத்திவிட்டனர்.

**சீவகன் முயற்சி**

பிறகு, பனைபனைய துதிக்கைக் களிறுகளையுடைய மன்னர்கள் வணங்குதலால், அவர் முடியில் முரலும் வண்டுகளுந் தேனும் நிறைந்த மாலையின் மது மணக்குமாறு நனையும் அடியையுடைய சச்சந்தன் மகனாகிய சீவகன்- வெற்றிவேல் வலவன்- அவர்கள் நினைத்திரா வகையிற் பகைவருயிரை வாங்க எழுந்தனன்.

அப்போது களிறுகள் முகிலெனப் பிளிறின. தேர்கள் கடலென முழங்கின. புரவிக்கடல் போரை நினைத்துக் கனைத்தது. வாளேந்திப் புகைந்தது காலாட்படைக் கடல். சிறப்பொடு போர் முரசுகள் அலறின; சங்குகள் ஆர்த்தன. சீவகன் கரிய களிற்றின்மீது ஏறினன். இங்ஙனம் இவன் வேந்தர் குழுவிலே ஒளி மணிப்பூண் அணிந்த காமனே யென்னுமாறு தோன்றியதை நிலை கலங்கி நின்ற கட்டியங்காரன் நோக்கினன். புலியைக் கண்ட மான்போல நடுங்கி அறிவு முதலியன தத்தளித்து உயிர் நீங்கியவன் போலானன்.

"நான் அனங்கமால் கூத்தில் அகப்படப் பற்றிய புலியை வாளுருவிப் போக்கிய பிழைப்பும், வலிமிக்க திண்ணிய தோளான் மதனன் அவனைத் தப்பிவிட்ட பிழைப்பும் என்னை நலியும்! நலியும்!!" என்றுரைத்துத் தன் தடக்கையாற் களிற்றின் மத்தகத்திலே அறைந்து மெய் சோர்ந்திருந்தான்.

இனி, மைதீட்டி யழகுபெற மலர்ந்த மழைக்கண்களையும் கொய்த பூங்கோதையையும் உடைய மடமங்கையர், 'கொற்றங்கொள்க!' என வாழ்த்த, யானையினின்றும் இழிந்த சீவகன் பிறைபோலமைந்த வில்லை வளைத்து நாணெறிந்தான். அவ்வளவிலே பகைவரின் வாழ்நாட்கள் சேரக் கெட்டன. அப்போது, கனிமொழியாள் இலக்கணையின் அழகு வருத்த வந்து வில்லால் தோற்ற அரசர்கள் ஞாயிறுபோன்ற சீவகனைக் கண்டு நீலமலர்க் காடு

போற் பொலி விழுந்தனர். வில்லைத் தொடாத வேந்தர் இனிதே மலர்ந்த அழகிய தாமரைக் காடு போன்றனர்.

பொறியின் அருகில் வந்து நின்ற நெடுந்தகை, பொறியின் அமைப்பினால் ஒன்று வலமும், மற்றொன்று இடமுமாக விண்ணில் திரிகின்ற மூன்று பன்றிகளும், பண்புற ஒன்றாகக் கூடுங் காலத்தில், அவை சேர அற்றுச் சுழன்று விழுமாறு எய்ய வெண்ணி, அவை ஒன்றாந்தன்மை கூட்டுதற்கு நாடி ஒரு முழுத்த மளவும் நோக்கி நின்றான்.

அவன் நிற்பதின் உண்மையை உணராத-முன்பு வீழ்ந்த மன்னர்கள்-'பொறியின் மேல் ஏறத் தெரியாமலும் நகுவரெனும் நாணினால் விலக இயலாமலும், வில்லை ஊன்றி நின்றாலன்றி அற்றுவிடுமோ?' என நகைத்துத் தீயுமாறு சினத்தை விளைவித்துக் கொண்டனர்.

அப்போது, திகிரியின்மேல் உரலில் உள்ள-சிச்சிலிப் பறவையின் தலைபோன்ற மணிகள் வேய்ந்த உருவத்தையுடைய பன்றிகள் இடமும் வலமுமாகத் திரியா நிற்க, நம்பன் தன் விரலினிடத்து விரற் சரடுகளைக் கட்டி, வெஞ்சிலையையும் அம்பையும் ஏந்தி, முரலும் வண்டுகள் பொங்குமாறு குதித்து, அத்திகிரியை அடைந்தான். ஒள்ளிய வைரக் கலன்களும், அழல்போலும் மணிப் பூண்களும் பொன்னாணும் மின்ன-அழலைவென்ற திகிரி அவ்வழலையுடைய கொள்ளி வட்டம் போலச் சுழல அதன்மேலே மண்டல இருப்பாக - நின்றவன், அழலையுடைய ஞாயிறு தானிருத்தற்குரிய வட்டத்தினுள்ளே யிராமல் அதன் மேலே நின்றாற்போலக் காணப்பெற்றான்.

**திரிபன்றிகளை எய்தான்**

ஊழித் தீயையும் இடியேற்றையும் போன்ற சீவகன், அரிய தவத்தின் பயன்போல ஒடியாத வில்லில் அறாத நாணில் தொடுத்த அம்பினைத் திருந்திய முனிவரின் சிந்தை போல வில்லினுள்ளே ஆமாறு சாலவும் வளைத்துத் தனக்குப் பகையாய் இருந்த கட்டியங்காரன், பொறியும் நல்

வினையும் இயற்றற்கரிய பன்றிப் பொறியும் சேர அற்று, அவ்விடத்தே விழுமாறு எய்தான்.

**சீவகன் யார்?**

விளங்கும் பற்களையுடைய பன்றி அம்பினால் தாக்கப் பெற்று நிலத்திலே விழ, தெள்ளிய கடலும் முகிலும் பெருங்காற்றும் போல முரசங்கொட்டி ஆரவாரித்துத் தானை வீரர்கள் முழங்க, அங்கேயிருந்த கோவிந்தராசன் சீவகனுடைய குலத்தைக் கட்டியங்காரனுக்கு முற்பட அறைந்து, பிறகு யாவரும் அறிய விளக்கினான்.

**வான் மொழி**

* அப்போது வானிலே ஒருவன் தோன்றி மழையென முழங்கியவாறு, "தேன் மலர்ந்த அலங்கலையுடைய வேலேந்திய சீவகன் என்னுஞ் சிங்கம், வேல் நெருங்கிய சோலையில் இருக்கும் கட்டியங்காரன் என்னும் வேழத்தின் இனிய உயிரை விழுங்கும்," என்று கூறினான்.

**கட்டியங்காரன்**

அம்மொழி கேட்டவுடன், கட்டியங்காரன் கனன்று, "நீ விஞ்சையரிடம் கொடிய படைகளைப் பெற்று வந்தாயென்பதற்காக யான் அஞ்சுவேனா? எனது வலிமையை நின் தந்தையறிவான்; நீ அறியாய்! இனிப் போர்க்களத்திலே நின் பெருமிதத்தை யறுத்து, உன்னுடன் கூடி வஞ்சத்தினால் என்னைக் கொல்லச் சூழ்ச்சிசெய்த வஞ்சகனாகிய கோவிந்தனுடைய செருக்கையும் அழிப்பேன்," என்றான்.

**மதனன்**

சூரியகாந்தம் சூரியனைக் கண்டதும் அழலை எங்ஙனம் உமிழுமோ அது போலப் பெரும் புகழையுடைய சீவகன்

---

* "வானிடை யொருவன் தோன்றி மழையென முழங்கிச் சொல்லும்
'தேனுடை யலங்கல் வெள்வேற் சீவகன் என்னுஞ் சிங்கம்
கானுடை யலங்கல் மார்பிற் கட்டியங்காரன் என்னும்
வேன்மிடை சோலை வேழத் தின்னுயிர் விழுங்கும்' என்றான்."

புகழைக் கேட்டதும் கார் காலத்தில் முகிலிடையெழும் இடிபோலச் சினந்திட்டான்.

### கட்டியங்காரன் மக்கள்

பின்னர், கட்டியங்காரன் நால்வகைப் படைகளையும் தொகுத்தான். அவ்வளவிலே வேற்படை வீரராகிய அவன் மக்கள் நூற்றுவரும் சினந்தெழுந்தனர்.

### இருதிறத்தினும் படைகள் திரண்டன

**யானைகள்** அத்த மலையனைய தோற்றமுடையன; அம் மலையின் அருவிபோல் மத்தகத்திலே அமைந்த ஓடையின; முத்துக்களையுடைய மருப்பின; போர் முனையிலே எதிரிகளின் படைகளைப் பிளப்பன. வீரர்கள் வில்லையும் இரத்தம் தோய்ந்த பிறபடைக் கருவிகளையும் அவற்றின் மேலே அடக்கி ஏறலின், பெரிய வானிலே தவழ எடுத்த கொடிகள் காற்றடித்து இலை கிழிந்த வாழைக் காட்டைப் போன்றன.

**தேர்கள்** குடை நிழலுடையன; அம்பு படாதவாறு தூக்கிய தட்டிகளையுடையன; பொன்னாலான அழகிய இருக்கை யுடையன; எய்யுங் காலத்தில் அடிவைத்து நிற்றற்கும் எய்வதற்கும் உரிய அமைப்புடையன. இத்தகைய தேர்களைப் பண்ணுறுத்திய பாகர்கள் புரவிகளை நுகத்திற் பூட்டிக் கடிவாளக் கயிற்றைத் தேருடன் பிணித்துக் கட்டினர். தாற்றுக்கோலும் வாய்க்கயிறும் பற்றியவராய்த் தலைக்கட்டினை யுடையவராய் அமர்ந்தனர். தேர் வீரரும் ஆராய்ந்தெடுத்த வில்லையும் பிற படைகளையும் அமைத்துக் கவசமணிந்து வந்தமர்ந்தனர்.

**குதிரைகள்** பறந்து செல்லுஞ் செருக்கையுடையன; பரவிய போரிலே திரிவன; கவரி யணிந்த நெற்றியின; அவை பிறந்த இடத்தை யறிவதற்காகப் பெரிய நூலறிவினர் எழுதிவைத்த எழுத்துக்களைத் துடையிலே உடையன. அவற்றின் மேல் மிலேச்சவீரர்கள் கூரிய குந்தமும்

வில்லும் வாளும் பற்றி யேறினர். அவ்வளவிலே அப்பரிகள் கெச்சையும் கிண்கிணியும் ஆர்ப்பக் குமுறின.

காலாட்கள் மாலையுங் கண்ணியும் கமழும் முடியினர்; செறித்துக் கட்டப்பட்ட வீரக்கழல் ஆர்க்குங் காலினர்; வாட்பிடியைப் பற்றிய கையினர்; கவசமணிந்த மெய்யினர். மயிர் போர்த்த பரிசையையும், கண்ணுடி தைத்த கடகினையும், மயிர்க் கிடுகினையும், பிரப்பங் கொடியாற் செய்த பரிசையினையும், வலியமரப் பலகையினையும் நிரையாகப் பற்றிய அக்காலாட்படை போர்முகத்திலே புலிக் கடல் போலப் புகுந்தது.

#### படைகளின் எண்ணிக்கை

கற்பக மாலையணிந்த சீவகற்குப் பல பேயும் பருந்தும் சூழச் செல்லும் நிலம் நனையும் மதத்தினையுடைய களிறுகள் நான்கரைக் கச்சம்; தேர்களும் அவ்வளவினவே. புரவிகள் எழுநூறாயிரம். கரிய கடல் போன்ற காலாட்கள் ஏழுதேவ கோடி.

கட்டியங்காரனுக்கு நிழல்விடும் மணித்தேர் ஐந்தரைக் கச்சம்; நிழலைச் சீறிக் குத்தும் சினமுடைய யானைகளும் அவ்வளவினவே. அழகிய குதிரைகள் எழுநூறாயிரம்; வீரக் கழலணிந்த காலாட்கள் ஏழுதேவ கோடி.

#### போர் தொடங்கியது

குலமகளிர் தம் ஒப்பனையைக் கைவிடவும், அசையும் உளையையுடைய புரவிகளும் களிறும் இறக்கவும், தன் கணவராகிய மன்னர் இறத்தலின் நிலமகள் தன் மார்பிலே கையால் அடித்துக்கொண்டு வருந்தவும் சீவகன் சீறினன். அவன் வேலும் அழன்றது.

போர் முரசுகள் குணில் தாக்கக் குமுறின. வெண் சங்கும் பணையும் பரவி ஒலித்தன. பம்பைகள் வெம்பின. சிறுசின்னங்கள் தமக்கொப்பின்றி எழுந்தன. இவ்வாறு எங்கும் கடலொலிபோ லெழுந்தது.

முடிமன்னர் காலை ஞாயிறுகளாகவும், மிகுதியான களிறுகள் மரக்கலமாகவும், விரையும் புரவிகள் அலைக ளாகவும், ஒளிறும் வாட்படைகள் சுறுவாகவும் கொண்டு தம்மிற் சினந்த இருகடல்கள் போர்செய எதிர்ந்த கால முண்டாயின் அதனை பொத்தது இக்காலம்.

கழலணிந்த வீரர்கள் பிணித்த கச்சுடனும், முதுகி லசையும் அரிய கணைக ளடங்கிய அம்பறாத்தூணியுடனும் எதிர்த்து நின்று, வில்லிடத்தே அம்பைத் தொடுத்துச் சொரிந்தனர். அதனால் வானம் மறைந்தது.

நிணம் பொருந்திய மார்பும் தோளும் நெற்றியும் வருத்தும் அரிய அம்புகள் அழுந்துதலால், விரைந்துவரும் குருதியிலே தோய்ந்து, புதுப்புனலிற் போர்செய்யும் மாந்தரைப்போல அமரைமேற்கொண்டனர் வீரர்கள்.

அவர்கள் கூற்றென வெகுண்டனர். அதனாற் கண் கள் தீப்போலச் சிவந்து விழித்தன. அதனால், இமைகள் தீய்ந்தன. சீற்றம் மிகுந்த அவர்கள் தம் வாட்களைப் புகைந்து கனலும்படி உறையினின்றும் வாங்கினர்; எதிரி களின் மார்பைப் பிளந்தனர்; உயிரை ஒழித்தனர். பின் னர் வேலாற் பொருகின்றவரின் ஆரவாரம் மிகுந்தது.

தும்பை மாலையணிந்து பொருதற்கு வந்த ஆடவர்க ளின் ஒப்பற்ற அழகிய தலைகள், பனங்காட்டிலே காற்று வீசும்போது கரிய பனங்கனிகள் வீழ்தல்போல, அக் கண்ணிகளுடன் அற்று வீழ்ந்தன.

பந்தியில் நிற்றலை வெறுத்து முழங்குவன, பொன்னா லான தாரின, அம்பின் விரைவைத் தடுப்பன, கவரி நெற்றி யன, போருக்குதவும் இளமையின, தோற்றம் மிகுந்தன— ஆகிய புரவியும் புரவியுந் தம்மிற் பொருதலை மேற் கொண்டன.

கூரிய உளியாற் சிறப்புறத் தொழிற்பட்டு, நடுவி லமைந்த குறடுகள் சிறப்புடையவாய், அதனின்று இணைக்

கப்பெற்ற ஆர்கள் பளபளப்புடையனவாய், பொன்னால் வாய்ந்த விளிம்பினையுடையனவாய்க் காரில் ஒளிரும் மின்னல்போன்ற ஒளியையுடையனவாய் அமைந்த ஆழிகளாற் செல்லுந் தேர்கள் தம்முட் போர் தொடங்கின.

அஞ்சனம் எழுதப்பட்டும், கவளம் ஆர்ந்தும், கூற்றினைக் கொம்மை கொட்டியழைப்பனவாகிய—கொடிகளை யுடைய—யானைகளும் யானைகளும் முகிலூருங் குன்றுகள் குன்றுகளோடு பொருவனபோலப் பொருதன.

அரசரேறிய யானைகள் பெரிய கடலிற் பெருங்கலங்கள் நங்கூரத்திற் கட்டிய கயிறு காற்றால் அற்று, யாங்கணும் நிலை தெரியாமல் ஓடி, மாறுபட்டுப் பொருவனபோலக் கோடுங் கோடுந் தாக்கித் தீப்பிறக்குமாறு தம்மிற் பொருதன.

வீரர்கள் விட்ட கணைகள் வானில் நெருங்கி, ஞாயிற்றின் கதிர்மறைய இருளைப்பரப்பின. அப்போது மன்னரின் மணிமுடிகள் இருள்கெட வெயில் பரப்பின.

அப்பொழுது நிலமகள், தன் நற்பண்பினாலே, இக் கொடிய செயல்களைக் கண்ணினாற் காண்கிலேன் என்றுட் கொண்டு, பெரிய நிலமெங்கும் பரந்த இரத்தமென்னுஞ் செய்யதுகிலினாலே தன்னை மறைத்துக் கொண்டாள்.

குழையணிந்த தங்காதலியரின் கதிர்மணிக் கலனணிந்த மார்பினால் உழப்பெற்ற அகன்ற மார்பினர் பலர், இங்கு மலைக்குவட்டின் தன்மையையுடைய வேழத்துடன் பொருது, அவற்றின் கொலைக்கோட்டால் உழப்பெற்றுக் குருதியில் முழுகினர். மற்றும் பலர் தம்மை மணம்புரிந்த மகளிர் தம் மெல்லிய விரலாலே தொடுத்தணிந்த மாலையை யுடைய குடுமியை, இழுத்தோடுங் குருதிநீர் அலைப்ப, அக் குருதியிலே நெருப்புப்போல விழித்துக்கிடந்து, நிணத்தை யுடைய குடரைச்சூடிப், பிணந்தின்னும் இயல்பையுடைய பேய்க்குத் தம்மை விருந்து செய்தனர்.

*தோலாமற் போர்புரியும் மறவேந்தர்கள் தொடி யணிந்த தோளையுயர்த்தி, யானையின்மீதிருக்கும் வீரர்மேல் வெட்டியபோது, கவசத்தோடு அறுபட்டுவிழுந்த கால்கள், அலைமோதுங் கடலிலே கருநிறச் சுறுவினம் பிறழ்ந்தாற் போலக் குருதியிலே பிறழ்ந்தன. தாம் அணிந்திருந்த கருவியினூடே சென்று கணைகள் மொய்த்தலிற் சில யானைகள் நிணைவிழுந்து குருவிசேர்ந்த வரைபோன்று காணப்பட்டன. சில யானைகள் கொடியணிந்து அழகிய தேர் ஓடிய மோதிச் சக்கரங்களைச் சுமந்தெழுந்த தோற்றம் ஞாயிறு தோன்றிய வரைகள் போன்றிருந்தன. யானையின் கோலம் குருதி கொள்ளுமாறு அற்றுக் குடைமேலே வீழ்ந்துகிடந்த துதிக்கைகள், வானத்தில் உறையும் வெண் மதியம் அங்கிருந்து தவறித் தன்னைப்பற்றிய கரும்பாம் புடன் நிலத்திலே வீழ்ந்துகிடந்தன போன்றன. போர்க் களத்தில் முன்னரே கருநிறம் நீங்கக் குருதி பூசப்பட்டத னால், சாதிலிங்கத்தையுடைய பெரிய மலையைப்போல நெருங்கிய களிறுகள், அமரையுழக்கிச் சென்று பகைவர் யானைகளைப் பாய்தலின், உமிழுங் குருதி சாதிலிங்க அருவி போலத் தோன்றியது.

யானையைத் தலையணையாகவும், கொய்யுளைப்புரவி யைக் காலணையாகவுங் கொண்டு, வாளேந்திய கையுடன், தாம் உடுத்த ஆடையின்மேலே அரைஞாண் கிடந்து துளங்கியிலங்கச், செஞ்சோறுண்ட கடனீக்கப் பட்டுக் கிடந்த வீரர்களைக்கண்ட இனநரியும் ஓரியும் அஞ்சிக் குதித் தோடி விலகிநின்று அலறின.

தம் காதலியர்க்கு அமுதம் அளித்த கடற்பவளத் துண்டமனைய வாயை, அவ்வமிர்தை யுண்ண வுரிமை யில்லாத பறவைகள் உண்ணுமாறு கொடோம் என்பார் போல, வாயைமடித்துக், காதிலணிந்த தோடும் குழையும் நகத் தாமும் நகைத்தவாறு விஞ்சையர்போற் கிடந்தனர் சில வரைமார்பராம் வீரர்கள்.

---

* இங்குவரும் வருணனை பலவும் களவழி நாற்பதிலுங் காணப் படுகின்றன.

புலால் நாற்றத்தையுடைய நிணச் சேற்றிலே நின்று குடரைப் பற்றியிழுக்கும் குறுநரிகள், சங்கிலியை இழுக்கும் சினமிகு நாய்கள்போல் தோன்றின. இரைதேடுந் துன்பந்தீரத் தொடித்தோளைத் தூக்கிக்கொண்டெழுந்த பறவைகள் படநாகத்தைக் கொண்டெழுகின்ற கருடனைப் போன்றன.

வளைந்த பற்களையும் நிரையாகிய உளையினையும் உடைய சிங்கங்கள், பேரிடி தாக்குதலின் தாமிருந்த மலைகளோடு வீழ்ந்து குருதிபடிந்த நிலத்தே புரள்வனபோல, அரசுகள் தாம் ஏறிய யானைகளுடன்—அவற்றின் குற்றமற்ற மணியழுத்திய பொன்னோடை பொடியாம்படி பொருதலின்—களத்தே வீழ்ந்து புரண்டன.

குவளைமலரனைய தடங்கண்களையுடைய நீள்குழலார் தாமே சந்தனத்தைப் பூசி, மணிவடம் திளைப்பப் புல்லிய மார்பை வாள் புல்லுதலின், அவர்கள் நடந்துபோகின்றபோது ஒழுகும் குருதியிலே விளங்கிக் கிடந்த முத்துவடங்கள் செவ்வானத்திடையே இளம்பிறைபோலத் தோன்றின.

**விசயன் வெஞ்சமர்**

மேன்மேலுங் கருமைபெருகும் இருளைக் கெடுத்துக் கதிரைச் சொரியுந் தெய்வத்திங்கள் தன்னைக் கோள்வல்ல பாம்பு விழுங்குதலின், வானிற் சிறிது சென்று, பிறகு கடலிலே அழுந்தியதைப்போல, பேரமரைப் புரிந்த மதனன் விசயன் ஏறிய யானையின் நெற்றியிலே பாய்ந்து, விசயன் வாளால் வெட்டுண்டு படைக்குள்ளே வீழ்ந்தான். விசயன் வெற்றியுற்றான்.

மதனன் இளவல் மன்மதனென்னுங் காளை விசயனை நெருங்கி, மணி யொலிக்கும் புரவி பூட்டிய தேர்மேல் நின்று, வில்லாலே கணைமழை பெய்து தெழித்து ஆரவாரித்தான். விசயன் அவனுடைய தேரிற் கயிற்றையும் வில்லையும் அறுத்தான். மன்மதன் சீறி, வரையினின்று பாயும் புலிபோல, நிலத்திற் பாய்ந்து நின்றான். அவ்வாறு

நின்றவனுடைய நெற்றியை மாலைபோலச் சூழ்ந்துசென்று, அந்நெற்றியில் அழுந்துமாறு, விசயன் மூன்று பகழிகளை விட்டான். அவை மாலைபோல நுதலிற் சூடிநிற்கக்கண்ட மன்மதன் சினந்து, பவழத்தின்மேலே முத்தையழுத்தினாற் போலச் செவ்வாயிலே பற்களழுந்த வாயை மடித்து வாளை யுருவி, விசயன் ஏறியிருந்த யானையின்மேல் தாவிச் சென்றான். அவனைக்கண்ட யானை அவனைத் தான் ஏந்திய தண்டால் அடித்தது. அதனால் அவன் கவிழ்ந்து நிலத்திலே வீழ, அவ்யானை அவனை இரண்டு கூறுகுமாறு குத்திக் கொம்பிலே எடுத்தது. அப்போது, சிறிதுணர்வுபெற்ற அவன் தன் மெய்யைச் சிறிது திருகி வாளாலே அவ் யானையை வீசி அதன் கொம்பிலேயே மடிந்தான்.

**புத்திசேனன் போர்**

அரும்புகள் இடையிலே கலக்கப்பெற்று, அலர்ந்த வற்றிலிருந்து தேனிழியும் பைந்தாரும், மிகுதியான அணி கலன்களும் அணிந்த நான்மறையாளனான புத்திசேனன் கிளர்ந்தெழுந்து, திகிரிபோல வட்டமாகத் தேரைச் செலுத்தி மன்னரை வெற்றி கொண்டான். அப்போது அவன் முப்புரமெரித்த முக்கட்பெருமானைப் போன்றான்.

**தேவதத்தன் செரு**

பொன்னணிந்து, சண்பகம் பூத்த மலைபோன்றவனாகிய தேவதத்தன், பல்லுயிரையும் வருந்தாமல் விண் செலுத்த விரும்பி, இழிதருமதமுடைய வேழத்தின்மேல், நிலமதிர முழங்குஞ் சிங்கமென அமர்ந்து, மகதர்கோன் மேற் கடுகிச் சென்றான். அங்கே மகதனுடைய வீரர் அஞ்சியோடுதலைக்கண்டு நாணி மீண்டு தன் வேலை வைத்து விட்டான்.

**சீதத்தன் செய்த போர்**

விடுபூ அணிந்த முடியையுடைய சீதத்தனின் சீற்றங் கொண்ட வாள், அரசர்களிற் சிறந்த கலிங்கமன்னன் தலை மீது தாக்கியதால், அக்கலிங்கன் பொன்னால் விளங்கும்

குழையும் பிற அணிகலனும் முத்தாரமும் ஒளிசெய மின் விளங்கும் ஞாயிறு பிற கோள்களுடன் கடலிலே வீழ்தல் போன்று வீழ்ந்தான்.

**கோவிந்தராசன் கொண்ட போர்**

அடங்காத சீற்றமும் வலிமையுங்கொண்ட மாரட்டன் என்னும் பொற்குன்று, பொற்றுகள் பொங்கிட மார்பு பிளந்து களிற்றுடன் தாழ்ந்து வீழுமாறு, கொடிய வில்லுழவன் கோவிந்தராசன் என்னுஞ் சிங்கம் அழன்று நெருங்கிச் சென்று, வடிக்கணையினால் இடித்தது.

**உலோகபாலன் உருத்துச் செய்த போர்**

கோங்குமலர்ந்து உதிர்ந்து கிடந்த குன்றுபோல பொன்னாற் செய்த கண்ணாடி தைத்த யானையையுடைய பல்லவநாட்டு மன்னன், தேன் மணக்கும் விளக்கமான மாலையையுடைய உலோகபாலன் ஏறிய களிறு காம்பிலிக் காவலனூர்ந்த யானையுடன் மலைந்தது. அப்போது அவற்றின் கோடுகள் அழல்பொங்கத்தாக்க எழுந்த தீயால் சாமரைகள் வெந்தன. வீரனான உலோகபாலன் விண் மறைய வெங்கணைமாரி பெய்தான். அம்மாரியைக் காம்பிலி மன்னன் தன் குந்தத்தால் விலக்கிக் காற்றென முழங்கினான். மற்றும், அவன் தன் வில்லையேந்தி உலோக பாலன் நெற்றியில் அழுந்தும்படி எய்த அம்பை, உலோக பாலன் கையினாற் பறித்த அளவிலே பெய்த செந்நீர் அவனூர்ந்த களிற்றின்மேற்பாய அவன் காணப்பட்ட தோற்றம் உதயமலையின் உச்சியிலே ஞாயிறு ஒற்றைக்கதிரை மட்டும் நீட்டித் தோன்றியது போன்றான். பின்னர், உலோகபாலன் தன் வில்லை வளைத்துச் செலுத்திய கணைகள் காம்பிலி மன்னனுடைய—மகளிர் தழுவி மகிழ்ந்த—மார்பிலே முழுகின. காம்பிலிமன்னன் தன் தானை கலங்கியோடச், சிங்கம் வீழ்வதுபோலப் பட்டு வீழ்ந்தான்.

**நபுலன் நயந்த போர்**

பொலிவினையுடைய பூங்கோங்கமும் பொற்குன்றமும் என்னப் பொலிந்த மேனியுடன், அழகிய நிறமுடைய பரி

யின் மீதமர்ந்த நகுலன் என்பவன் மின்னிற வேலையேந்தி, நீர்வளமிக்க மகத மன்னனூர்ந்த களிற்றின் உச்சியிலே தன் கொய்யுளைமாவைப் பாயவிட்டான். அப்போது, அம்மகதன் கண்கள் இமைத்தன. அவ்வளவிலே அவனை வெட்டாமல், 'இவன்மேல் வந்தேனே,' யென்று வெள்கினான். பிறகு, 'நீ அஞ்சாதே, நின்னைக் காயமாட்டேன்,' என்றுகூறித் தேற்றி, ஒரு குன்றினின்றும் மற்றொரு குன்றின்மேற் பொங்கிப்பாயும் புலிபோல, அக்களிற்றினின்றும் மற்றொரு களிற்றின்மேல் தன் குதிரையைச் செலுத்தினான். அக்களிற்றின் மீதிருந்த வீரன் கையிலே படை ஒன்று மின்மையாற் கையைத்தட்டி மற்போருக்கு ஆர்த்தான். படையின்றி நிற்கும் அவனை வெட்டுதற்கும் நாணி—மைதீட்டிய படையனைய கண்களையுடைய மகளிர் வனப்பிலே யீடுபட்டுங் கைப்பொருளிலாததால் தன் மனத்தை வறிதே திருப்புகின்றவன் காமம்போல—வறிதே திரும்பினான்.

**விபுலன் விருப்பப் போர்**

நகுலன் வறிதே திரும்பியதைக் கண்ட விபுலன், நெருங்கிய இருளைப்போக்க மின்னையுமிழும் நெய்பூசிய கூரிய வாயையுடைய வாளைக் கண்ணைக்குத்துங் கழுகுகள் ஓம்புமாறு உயர்த்தி நின்று, 'மண் காவலை விரும்பாமல், இவ்வுலகிலே புகழ்நிற்க, விண்காவலை விரும்பும் வீரர்கள் இருக்கின்றீர்களோ?' என வினவினன்.

* அதற்கு விடைதருவாரின்மையின், வேலேந்திய விபுலன் மதவேழத்தை யெறியின், விலங்கையெறிந்தானென்பரென்று நினைத்து, வெற்றியின்மையின் அதனை வெட்டாமல் விடுத்தான்; முன்னர் பொருத வெட்டுக்காயமுடையாரை, அவர் தமக்கு நிகராயினும், பிறர் படைதீண்

* "வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான்;
எறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்;
மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையும் எறியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயிலுழவன்"

டிய எச்சிலென்று விடுத்தான். தனக்கிளையாரையும் நிக ரன்மையின் வீரத்திற்கு மாசாகுமென்று விடுத்தான். தன்னின் மூத்தோரையும் அறமன்மையின் விடுத்தான்.

பின்னர், 'இத்திறனிலே சென்றால் ஒன்றாயினும் பல வாயினும் ஒரே வீச்சில் எறிவதற்குப் பல போரினும் வென்றிகொண்டனவும் எனக்குப் பற்றுவனவுமாகிய வேழமாயினும் உளவோ?' என வினவியவாறு, பொன் மலையிலிருக்கின்ற புலியேறுபோலத் தான் அணிந்திருந்த தாரிலே வண்டுகள் ஆர்க்கும்படி, வலிமிகும் ஆயிரங்களிறு கள் இரியுமாறு, யானைமீ தமர்ந்து சென்றான்.

அப்போது, ஒப்பில்லாத உயர்ந்த தோட்டுடன் தாழ் குழையிலங்க, அரைநாணும் வட்டுடையோடும் ஒளிர்வாளி னோடும் ஒரு வீரன் வந்து, நீ எனக்கு நிகர்; என்னை வெட்டு' என்றான். அதனைக்கேட்ட—இவனே உலகிற் கெல்லாம் ஒப்பாயினவன் என்று கூற விளங்கும் ஆணழ கனான—விபுலன், 'முற்பட மார்பு கொடுத்தானென்னும் புகழை அடையக் கருதியதோ நின் எண்ணம்? அது இய லாது' என்னுங் கருத்துப்பட, 'அதுவோ?' என நகைத் தான் பிறகு, இனிய கடலிடத்தனவாகிய திரைமேலே இரண்டு இளஞாயிறுகள் தம்முள் மாறுபட்டுக் கையிற் பிடித்த மின்னோடு சுழன்று விளையாடுகின்றமைபோலப் பொன்னணினர்—அச்சந்தரும் வாளினர்—அழகிய தாரி னர்—கொடி எழுதிய மார்பினர்—ஆக, ஒப்பற்ற கேடகத் தைத் திரித்து, யானையைக்கொண்டு சாரிகையிலே திரிந் தார்.

அங்ஙனங் களிற்றொடு திரிதலிற் சோர்ந்து வெட்டக் கூடாமையின், வேற்போர் செய்யக்கருதி, 'நான் வந்தபின் நீ வந்தாய். ஆதலின், நீ எனக்கு விருந்தாயினை. எனவே, நீ முற்பட வேலால் எறி!' என்று விபுலன் தன் மார்பைக் காட்டினான். அவனும் கவசத்தளவு அறுமாறு எறிந்து, 'இனி நினது முறை,' என்றான். அப்போது விபுலன் எறிந்த வேல் அவன் மார்பினைப் பிளந்தது. அதனையும்

அவன் உணராமல் வானடைந்து நின்றான். அவனை அரமங்கையர் மலரைச் சொரிந்து தொழுதனர். இவ்வாறு முடிந்தது விபுலன் போர்.

**பதுமுகன் புரிந்த போர்**

மார்பில் நிரல்பட அணிந்த முத்துப்பூண்களாலே முத்துத் திரள்போல நிழல்விட்டு விளங்கும் மேனியை யுடைய பதுமுகன், பசும்பொன்னாலமைந் தொளிகாலும் ஓடையினையுடைய களிற்றின்மே லமர்ந்து, வேலையேந்திக் காமுகன் என்பவனைக் கண்டு சினந்தெழுந்தான். அப்போது, காமுகன் படைவீரர்கள் வந்து தாக்கவே, பதுமுகன் படை கெட்டது. அப்படையுடன் கெடாமல்நின்ற அஞ்சாத வீரர்கள் ஆற்றலும் ஆண்மையுந் தோன்றப் பொருது, ஆருயிர் வழங்கிக் கிடந்தனர். அவர் கிடந்த தோற்றம் காற்றினால் தாக்கப்பட்டுக் கடல் உடைந்தோட, அழகிய இளஞ் சுறாவேறுகள் எங்குங் கிடந்தாற்போலக் காணப்பட்டது.

இங்ஙனம், இளமகளிர் ஆடும் ஊசல்போலப் பொருது கெடுதலைக்கண்ட பதுமுகன் பொறாமல், தன் களிற்றை உந்திச்சென்று, காமுகன் களிற்றை நெருங்கி, முகிலின் இடையிலே திங்கள் நுழைதல்போலத் தன் ஆழியை யெடுத்து, அதன் நெற்றியிலே அழுத்தினான்.

அதனைப் பொருத பெருவலிகொண்ட காமுகன் *பிண்டிபாலம் என்னும் படையை யெடுத்து, அருவரையின் நெற்றியிலே பாய்ந்த தோகைமயில்போலப் பதுமுகனுடைய மதமிகு களிற்றின் தலையிலே அழுத்தினான். பதுமுகன் அதனைக் கண்டு சீறித் தன் தடக்கை வாளினாலே அவனை வெட்டினான்.

நெருப்பினைக் கக்கும் வேலனைய கண்களையும் சில்லரிச் சிலம்பினையுமுடைய மகளிர் விரும்புங் காமுகன் அவ் வெட்டினாலே பட்டான். அதனைக்கண்ட அவன் தம்பி

* பிண்டிபாலம்: தலையிலே மயிற்பீலி கட்டப்பட்டு எறியும்படை

கோமுகன், 'என் தமயனைக் கொன்றவன் இவன்,' என்று தன் விரல் நுனியாற் சுட்டியவாறு, மலர்மாலை மார்பனும் பொற்கவசம் ஒளிவிடத் தன் கொல் களிற்றினைக் கூற்றெனச் செலுத்திவந்தான்.

அவனைக்கண்ட பதுமுகன் கை தூணியிலே சென்றது; கண்கள் சிவந்தன. புருவங்கள் வளைந்தே நின்றன. வில்லும் வளைந்தது. அம்புகள் நேரே சென்றன. அவன் முன் நின்ற படைகளின் உயிர்கள் நீங்கின. மற்றும், கோமுகன் மேலே அம்புகள் அழுந்தி மெய்யை மறைத்து, அவற்றிற் சில ஊடுருவிப் போதலிற் குருதி மூடியதனால் அவன் மின்செறிந்த மலையிற் பவழம்போலத் தோன்றினான். கனிபோலுமினிய மொழியராகிய மகளிர் தழுவிச் சிவந்த மார்பனாகிய கோமுகன் பனிமலையிலே முளைத்த பெரிய பவழம்போலக் குருதிதோய்ந்த நுனிமருப்பினை யுடைய தன் களிற்றைச் செலுத்திவந்து, சுடுகணைகளைச் சீற்றத்துடன் சிதறினான். மேலும், எஃகுதலையுடைய பஞ்சுமலையை எரிமுகந்ததைப்போலத், தன்னிரு கையாலும் பெரிய கையையுடைய யானையாலும் பதுமுகன் படைவீரர் விரைந்தோடுமாறு செய்து, ஓடாது நின்றவர் உயிரைப் பருகிப் பெருவலிகாட்டி முழங்கினான்.

அங்ஙனம் பொருத செருக்குடன் கோமுகன் சங்கை வாயிலே வைத்து முழங்கினன். அதைக்கண்ட பதுமுகன் தன் வில்லை நன்றாக வளைத்துக் கையையும் வாயையும் ஒருங்கே சுருக்குக் கோத்தாற்போலக் கிழித்துப், பின்னரும் அவன் உளமுங் கிழிபட எய்தான். அவ்வளவிலே, கோமுகன் களிறு பிளிறிப் பதுமுகன் களிற்றைத் தன் மருப்பிறுமாறு,கோளகை உள்ளே புகக்குத்தியது; அதனால் தன் மருப்பை வெளியே யிழுக்கமுடியாமல் திகைத்தது. பதுமுகன் களிறு அக்களிற்றைத் திருகிக் குத்துதலின் முன்பு தைத்துநின்ற மருப்பு முறிந்து முத்தைச்சொரிந்து முத்தொழுகும் மலைபோலச் செற்றங்கொண்டுபட்டது. அப்போது, பதுமுகன் நித்திலவெண்டென்னும் பெயரையுடைய தன் களிற்றைத் திருப்பினான்.

**சிங்கநாதன் செய்த போர்**

பெண்களின் மயக்கிலே ஆழாத - பல்லவ மன்னனை உலோகபாலனுடைய பணியாளன் - சிங்கநாதன் என்பவன் தன் சிகையைக் கச்சாலே கட்டிக்கொண்டு, கொத்தாக அலர்ந்த தும்பையை அணிந்து, கையில் வேலேந்தி, 'இறைவன் கோவிந்தன் வாழ்க!' என வந்து நின்றான். அவனைக் கண்ட மன்னர்களின் வயிற்றிலே எரி தவழ்ந்தது. அவனும் போர்க்களத்திற் புகுந்தான். யானைக்கொம்பாற் செய்த கைப்பிடியின்கண்ணே புனைகதிரையுடைய மோதிரத்தைச் செறித்து, அக் கைப்பிடியிலே பொன்னாற்செய்த ஒளிமிகு வாளையேந்திக், கழலணிந்த காலுடன், 'நம்மை இறைவர்கள் நினைப்பது - கொண்டாடுவது - இத்தகைய வெற்றிகள் உண்டான நாட்களாலேயே,' என்று எண்ணி, உலர்ந்த புல்நிறைந்த காட்டை மூண்டஅழல் மேய்ந்தாற் போலப் பகைப்புலத்தை நீந்தினான்.

**கட்டியங்காரன் படைத்தலைவன் பூரணசேனன் போர்**

தாரணிந்த அகன்ற மார்பிலே குங்குமக்கலவை யணிந்து, ஆரமும் பூணும் மின்ன, இடையிலுடுத்த பட்டின்கண்ணே அழகுறக் கிடந்த பொன்னரைநாண் விளங்கப் பூரணசேனன் என்பவன் வில்லை யேந்தினான். இறைச்சியைக் கொத்தும் பட்டடைமரம்போலப், போர்க்கருவிகள் மேய்ந்து பசிதீர்ந்து மிகுந்த மார்பிலே தேன்துளிக்கும் மாலை தாழ அவன் மெய் வளைதலாலே, வில் வளைந்தே நின்றது. அப்போது, மகளிரும் மைந்தருந் திரண்ட போரிலே காமன் எய்த மணமிகு கணைகள்போல - இவனும் தடுக்க வியலாது தனியேநின்று பலர்மேலும்-கொடிய அம்புகளைச் சிதறினான். பிறகு, வில்லை வைத்துவிட்டு வேலை ஏந்திக், 'கட்டியங்காரன் உலக வூழியளவும் வாழ்க!' என்று வாழ்த்தி, 'இவ்வேல் உயிர்களை விரைந்துண்டு வயிறு நிறைவதாக!' என்று கூறிச் சீவகன் படைகளைத் தாக்கினான். யானைகள் வீழ்ந்தன. தேர்கள் பொடியாயின. எதிர்த்தவர்களைச் சீறிக், கண்கட்டு விஞ்சைபோற் பொறிபெனக் கொன்று குவித்துச் செல்லும் அவன், அலைகடல்

மிசை ஏறுகிய மீன்கள் ஓடப்பாய்ந்த சுறுவேறுபோலக் காணப்பட்டான்.

அவன், 'மகளிர் குழுவில் மாலைக்காலத்தின் ஆம்பல் போல மகிழ்ச்சியுற்றவர்கள், அழகிய வாட்போரிற் சேர்ந் தால், திங்களைக் கண்டு மயங்கும் தாமரைமலர்போல் ஆயி னர் எனின், உலகினர் வீரம் என்னுகும்?' என்று நகைத் துக்கொண்டு படைகளை யுழக்கி வருகின்முன்.

அப்போது, 'சடைமுடியையுடைய வீரபத்திரன் தக் கன் வேள்வியிற்கொண்ட வேல்போலுங் கண்களையுடைய மகளிர் தழுவிச் சிவந்த மார்பையுடைய கோவிந்தன் வாழ்க!' என்று போர்செய்து வருகின்ற சிங்கநாதன் பூரணசேனனை நோக்கி நகைத்து, வில்லை வளைத்தான்.

செந்நீரில் முழுகிச் செல்கின்ற பூரணசேனன், 'என் கையில் வேலுக்கு இன்னும் வயிறு நிறைந்ததில்லை - உன் னுயிரை ஊற்றி யுண்டால் நிறையும்,' என்று முழங்கி னுன்; சிங்கநாதன் எய்த கணைகள் மெய்ம்முழுதும் பாய்ந்து வாயிலும் நிறைந்து அம்பறுத்தூணிபோ லாயி னுன். மேலும், சிங்கநாதன் கணைகள் பாய்ந்து உயிர்நீங்கி வீழ்ந்த பூரணசேனன் கூரியபற்களையுடைய ஆளிபோலவும் மகளிர் தம் கைப்பட எடுத்தாடும் பொன்னுலான கழற் காய்போலவும் காணப்பட்டான்.

**நந்தட்டன் சேவகன் போர்**

ஒளிவிடும் பொன்னுல் ஆகிய கயிற்றினுற் குடுமியைக் கட்டிச், செந்நீரில் முழுகிய வேலையேந்தி, 'நந்தட்டன் வாழ்க!' என்று கூறிநின்ற நந்தட்டன் சேவகனின் வேலைக் கடக்கமாட்டாதவராய் நின்ற வேந்தர்கள் ஒலிக்குங் கட லின் எல்லையைக் காணமாட்டாதவர் போன்றனர். அப் போது, கட்டியங்காரன் படையிலுள்ள - யானையையன்றி வீழ்த்தாத - கருஞ் சிகையையுடைய ஒருவீரன் வெகுண்டு வெற்றிவே லொன்றை மின்னென விட்டான். அவ்வேல் விருந்தைச் செங்கண்மறவனை நந்தன் சேவகன் மகிழ்ந்து

மார்பிலே ஏற்றான்; மான் வயிறு நிறைந்தபொழுது நோக்கும் அச்சமுற்ற மருள் நோக்கினையுடைய மகளிர் கண்கள் போலும் அவ்வேலைப் பின்னர் விரைந்துபற்றி, 'ஒரு வேல் பெற்றேன்,' என நகைத்து, அவ்வேலை அழல்விட்டுச் செல்லுமாறு மின்னினும் விரைந்து செலுத்தக் கட்டியங் காரன் சேவகன் அதனை இமையாமல் ஏற்றான். மற்றும் அவன் விட்ட வேல்களையும் அங்ஙனமே மகளிர் வீசியமாலை போல ஏற்றுச் சாளரம்போல மார்பெலாம் கண்களாக நின்றான்.

சீவகன் தோழன் சலநிதி போர்

செவ்விமிக்க தாமம் அணிந்த மார்பனாகிய சலநிதி யென்பவன், புனையுங் கவிஞர் கற்பனையைக் கடந்து அழகு வீற்றிருந்த கயற்கண் மங்கையரின் மார்பிலே தேனைக் கொப்பளிக்குந் தாரினையும், கேட்டோர் செவிக் கிசைவு தாகிய கடல்போலுங் கேள்வியினையும் உடைய சீவகன் கழல்களை வாழ்த்திக்கொண்டு போர்முனையிலே புகுந்தான். அவன் யானைகள் வீழவெட்டியபோது வாள் வளைந்துவிட் டது. பிறகு, தன் நெஞ்சிலே செருகிநின்ற வேலைப் பறித் துக்கொண்டு, அப்புண்ணிலே அவ்வாளைச் செருகி, அதன் வளைவை நிமிர்த்துவதைக் கண்டு, யானைமீதமர்ந்து போர் புரிந்த மன்னர்கள் யாவரும் அஞ்சிக் குழுவுடன் இரிந் தோடினர். அவர்கள் ஓடுவதைக்கண்ட சலநிதி, நமக்கினி வெம்போர் இல்லையென்று கருதி, அக்கருத்தே தன் நெஞ்ச மெலாம் நிறைதலின், தன் மெய்யென்னும் எண்ணமிலா னாகி, அவனுடைய கையால் அவ்வாளை மார்பில் இருந்த புண்ணிலேயே பலமுறையுஞ் செலுத்தினான். அதனால், அவ்வாள் முழுகித் தசையைக் குத்திபெடுத்தது. இங்ங னம் சீவகன் நிலம்பெறச் சலநிதி புகழுடல் பெற்றான்.

சீவகன் செரு

ஒளிவிடும் மணிக்குவைபோல இருள்கெட விளங்கும் மெய்யினையும் செம்பொன் மார்பினையுமுடைய சீவகன் வில்லைக் கையிலேந்தி, மன்னருயிரைக் கொள்ளைகொள்ள

எண்ணி, அழகிய பரிமா விளங்குந் தேர்மீதேறினன். பெருங்காற்றின் முழக்கும் காரின்முழக்கும் கடலின் ஆரவாரமும் ஒன்றுகூடி, அவற்றுடன் அரியேற்றின் முழக்கும் கலந்ததென்னுமாறு, போர் விளைகின்ற களனியிலே வளையும் முரசமும் ஆர்க்கின்ற ஆர்ப்புடன் வீரருடைய முழக்கங் கலந்திடப் போர்த்தொழிலைத் தொடங்கினன்.

அரசருடைய முடியையும் பூணையும் முத்துமாலையையும் அரித்துக்கொண்டு, அவர்களுடைய முரசமுங் குடையும் மலர்த்தாரும் மயிர்பீலியும் சுமந்து, புரவிகளையும் தேரையும் இழுத்து, யானைகளையுந் தன்னுடன் மெல்ல வருமாறுகொண்டு, வெள்ளம்போலக் குருதிசெல்ல நம்பியின் வில் வளைந்தது. அது வளைந்தபொழுது, நிறம் மிகுந்த எரிகின்ற கண்ணையுந் திறந்த வாயையும் உடைய பெரிய பாம்புடன், நிலவுசூழும் இளம்பிறைகள் இரண்டு, மலையினின்றும் வீழ்வதுபோல யானைகளின் துதிக்கைகள் கொம்புகள் இரண்டுடன் அற்று, வீழுமாறு நிறைந்து தாக்கும் அம்புகளின் நிழலாலே அரசர்கள் மனங்கலங்கி மயங்கிப் போர்செய்ய முடியாமல் நின்றனர்.

**அரிச்சந்தன் அறிவுரை**

வீரர்களின் ஆண்மையையும் ஆண்மையின்மையையும் விளக்கும் நிலைக்கண்ணாடியாகிய போர்க்களத்திலே, உள்ளங்கலங்கிய மைந்தர்கள், காட்டை எரி கவர்ந்தாற் கவரிமான் ஓடுவதேபோல ஓடக்கண்ட கட்டியங்காரனின் அமைச்சனாகிய அரிச்சந்தன் ஒருமொழி யுரைக்கின்றான் :

“மைந்தர்களே! முகிலிடை மின்னனைய மங்கையர் தம் தூய மணிப்பரலுடைய சிலம்பணிந்த—பஞ்சூட்டிய—சிற்றடிகள் பாய்தலைக் கொண்ட குஞ்சியையுடைய மைந்தர்கள் தம் வீரத்தைப் பிறர்கொள்ள ஓடிப்போனால், ஆண்மை யாவரிடத்திருக்கும்? மான் கூட்டம் தலையிலுள்ள கொம்புகள் கழல ஆட்டங் கொடுக்கும் பொழுதே, அக் கொம்பின் மேல் உள்ள விருப்பத்தை விட்டு, அதனை வீசிவிடுங்

தன்மை போலவே, கழலணிந்த வீரர் உள்ளம் தம்முடம் பிற் கொண்ட வேட்கையாற் கலங்குமாயின், வேட்கையை விரைந்து நீக்கி, மின்போலத் தோன்றின இடந்தெரியாமல் மறைத்துவிட்டு, வன்கண்ணராவர். மற்றும், வீரர்கள் தம் மைப் புரந்த தலைவனுக்கு வீரந் தோன்றத் துணைபுரிந்து வீழ்ந்தால், அரமகளிராற் கற்பகமாலை சூட்டப் பெற்றுத் துறக்கத்தே அவர்களைத் தழுவுவர். இவ்வுலகிலும், பொன் னனைய சொல்மாலைகளை அணிவித்துப் புலவர்கள் புகழத் தம் வீரக்கல்லிலே புகழொளி பரப்பி நிற்பர்."

இங்ஙனம், உருகின இரும்பிலே எஃகினை வைத்தாற் போலப் படைவீரரை அவன் கூர்மையாக்கிய அளவிலே, அவ்வீரர்கள் கச்சையையும் கழலையுங் கட்டி, வாயிலே பொன்னாலாகிய சின்னம் ஒன்றையிட்டு, அச்சமின்றி முழங்கி ஆரவாரித்து அண்ணலாகிய சீவகன் கையிலுள்ள நச்சுக் கணைகளுக்குத் தம் நாளை இரையாக்க முன் வந்தனர்.

அவர்கள் மேற்கொண்டு வருதலைக் கண்ட சீவகன், ஒளிவிடும் பொற்றேரை யிமைப்பளவிற் செலுத்தினன். வடதிசையிலே யெழுந்த மேகம் வலமாகச் சென்று, குட திசையினை அடைந்து மின்னலை யணிந்து இடித்து மழை பெய்வதே போல, வில்லிலிருந்து அம்புக்கணை விடாது பெய்தது. அவ்வம்புகளால் அற்று விழுந் தலைகள், இறந்து வீழ்ந்த யானைகளின்மேற் பொலிவினையுடைய அம்புகளாற் கோக்கப்பெற்று, அந்த அம்புகள் நாளங்களாகத் திண்ணை களிலே பூத்த செந்தாமரை மலரைப் போன்றன. தலைகளி லிருந்த கண்கள் அம்மலரிலே வண்டுகளைப் போன்றன. இங்ஙனம் தலைகள் அம்புகளிற் கோக்கப்படுமாறு சீவகன் அம்பெய்தனன்.

**கட்டியங்காரன் மக்கள் நூற்றுவரும் பட்டனர்**

தம்முடைய படை வீரர்கள் படுவதைக் கண்ட கட்டி யங்காரன் மக்கள் நூற்றுவரும் சிங்கங்கள் போல முழங்கி யெழுந்தனர். அவர்களால் திங்களுடன் குன்றுகள்யாவும் ஒருங்கே நிலமிசை வீழ்ந்தாற்போல, மத்தகத்திலே சங்கு

கள் புரளக் களிறுகள் நிலமிசைப் புரண்டன; பொங்கும் புரவி வெள்ளம் புரண்டன; பொற்றேர்கள் பல முறிந்தன.

குங்குமம் போலுங் கதிர்களையுடைய இளஞாயிற்றுடன் சந்தனம் போலுந் தண்கதிரைச் சொரியும் பல திங்கட்குழு பொருவனபோல, முகிலிடை மின்போல வள்ளலின் தேருடன் நூற்றுவர் தேரும் மயங்குதலின், கொடிய வில்லுமிழுங் கணைகளின் நெருக்கத்தாற் கதிர் மறைந்தது.

அப்போது சீவகன், குருதிபோலும் மிகுந்த ஒளியையுடைய செம்பாம்பாலே கொள்ளப்பட்ட திங்களைப் போலத் தன் கையிலே வலம்புரிச் சங்கைப்பிடித்து, வாயில் வைத்து முழங்கின அளவிலே, கீழ் நோக்கி யெழுந்த ஒப்பற்ற காற்றின் முழக்காலே மக்கள் நடுங்கினர்.

பின்னர், வானூறு பெருங்கடலிற் பாய்வதே போலக் காளையாகிய சீவகன் ஏந்திய வில் ஆரவாரித்த மைந்தர்களின் வாயிலும் உடலிலும் ஆயிர முகமாக நிறையக் கொடிய கணைகளைப் பொழிந்தபோது, அக் கணைகளிற் சில அவர்களுடைய நெஞ்சைப் பிளந்து, உயிரை யுண்டன. குகைகளிலே சிங்கவேறுகள் கிடந்தாற்போலச் சிறுவர் தேர்மேற் கிடந்தனர்.

**கட்டியங்காரன் படுகிறான்**

உயர்த்திய வெண்குடைகள் வீழவும், எதிர்த்த மன்னர்கள் நீள்வானம் புகவும், பேய்க்கூட்டம் உவந்தாடவும், ஓரி கொள்ளைகொண்டு ஊனைத் தின்னவும், எங்குந் தலையற்ற உடல்கள் ஆடவும், களிறும் மாவும் கவிழவும் சீவகசாமியின் கண்கள் சிவந்தன; புருவங்களும் வளைந்தே யிருந்தன. அதனால், *பொய்கை போர்க்களமாகவும், புறவிதழ்

*" பொய்கை போர்க்களம்; புறவிதழ் புலவு வாட்படை; புல்லிதழ்
ஐய கொல்களிறு அகவிதழ் அரசர்; அல்லிதன் மக்களா;
மையில் கொட்டையம் மன்னனா மலர்ந்த தாமரை வரிசையாற்
பைய வுண்டபின், கொட்டைமேற் பவித்திரத் தும்பி பறந்ததே"

வாட்படையாகவும், உள்ளிருக்கும் புல்லிய இதழ் களிறாக வும், அவற்றிற்கும் உள்ளிருக்கும் சிறிய இதழ் அரசராக அவற்றிற்கும் உள்ளிருக்கும் அகவிதழ் அரசனின் பிள்ளைகளாகவும், அழகிய கொட்டை அரசனாகவும் மலர்ந்த தொரு தாமரை வியூகத்தை முறையே பருகியபின் அக் கொட்டைமேல் தூய சீவகத்தும்பி பறந்தது.

மேகலை முத்தங் கொள்ளும் இடையையுடைய கரிய முகிலிடையே மின்னனைய மகளிரின் மார்பு முத்தங் கொள் வதனாலே சந்தனம் அழிந்து தாரிலே தேன் பொங்கும்-மலை முத்தங்கொள்ளும்-மார்பினையுடைய கட்டியங்காரன் சீவகனைக் கண்டு சீறினான். வில் முத்தங் கொள்ளுந் திண் ணிய தோளையுடைய சீவகனும் அவனைக் கண்டு சீறினான்.

தன்மதத்திலே திளைத்த வண்டு சென்று தங்கிய காட்டிலுள்ள வேழங்கள், அவற்றின் நாற்றத்தாலே அஞ்சி மதஞ் செறித்துப் பிடியை மறந்து கெட்டுப் போதற்குக் காரணமான, வெல்லும் மதக்களிறாகிய கொடிய அசனி வேகத்தின் மீதிருக்கும், ஒளிவிடும் மாலையணிந்த வேந்தன் சீவகனை நோக்கி ஒரு மொழி யுரைத்தான்:

“நல்வினையுடையார் பகைவரிட்ட நஞ்சினைப் பருகி னும் அது அமுதமாகும். நல்வினை யில்லையேல் அழி வின்றி யிருக்க உண்ட அமுதும் நஞ்சாகும். இருவினையின் விளைவு இத்தகையதாகு மாதலின், அறிவுடையார், யான் இவனைக் கொல்வேனென்றும் இவன் என்னைக் கொல்வா னென்றும் பொருளல்லன நினைத்தலிலே அறிவைச் செலுத் தார். ஆதலின், இப்போது நினக்குக் கிடைத்த வெற்றி யும் நின் செயலென்று கருதற்க! மற்றும், அழியும் தீவினை யுடையாரை ஆக்குவார் யாவர்? உய்யும் நல்வினையுடை யாரை அழிப்பார் யாவர்? வினைமாற்றத்தாலே நின் கையால் என் மக்கள் பட்ட இந்நிகழ்ச்சி ஞாயிறு தன் தன்மைமாறிச் சந்தனத்தையும் பனிக்கட்டியையும் பயந் தாற் போலாயிற்று! நீ அவர்களைக் கொன்றது வெண் கதிர்த் திங்கள் தன் தண்மைமாறி வெம்மைபெற்று நடுங்கு மாறு சுட்டாற் போலாயிற்று! முத்துமாலை யணிந்த

பொன் விளக்கிலே பெய்த நெய்யுந் திரியும் மாண்ட பொழுதே அழகிய சுடர் அவிதல் அன்றித் திரி பொங்கி எரிதலுண்டோ? அவ்வாறே, இரு வினையும் அழிந்து விட்டால், செல்வம் அழியாதவாறு அதனைப் பிடித்துவைப்பார் யாவர்?"

இங்ஙனங் கட்டியங்காரன் உரைத்ததைக் கேட்ட சீவகன், கட்டியங்காரனுக்குப் போரிலே ஊக்க மூட்டினல்லன்றிக் கொல்வது இயலாதெனஎண்ணிப் பவளமனைய செவ்வாயிலே அழகிய முத்தனைய பற்கள் தோன்ற நகைத்து 'நீ அஞ்சினைகாண்,' என்றான். கட்டியங்காரன், 'வெல்லுந் தன்மை ஊழினாலுண்டாகும், அது கிடக்க, நின் கையிலிருந்து வரும் வேலைக்கண்டு இமைப்பேனானால், இப்போதுரைத்த அஞ்சினை யென்ற மொழியை அப்போதுரைத்து நகுதல் செய்வாய் தோன்றலே,' என்றான்.

இவ்வாறு கூறிய கட்டியங்காரன் பஞ்சனைய மெல்லடியினார்தம் பாடகத்தை யணிந்து, சிவந்து, அவர்கள் அழுத கண்ணீரைத் துடைத்தலின் அவர்களணிந்த மைக்குழம்பு பூசப்பெற்ற-கடகமணிந்த-தன் கையிலே வில்லை யேந்தி, இடியென முழங்கி, 'மறந்தோற்றேன் எனின், இல்லாளுக் கஞ்சி விருந்தின் முகத்தை வாட்டிய புல்லியனாகக் கடவேன்,' என்று வஞ்சினங் கூறினான்; மனம் புகைந்தான்; வில்வீரர் பரப்பைப் பிளந்தான்; சீவகனருகிலே களிற்றை யுந்திச் சென்று வெகுண்டு நோக்கிச் சச்சந்தனைக்கொன்றவாறே சீவகனையுங் கொல்லக் கருதி ஓரம்பைத் தொடுத்தான்.

அவ்வாறு தொடுத்த அம்பை வில்லை நன்றாக வளைத்து எய்வதன் முன்னரே, கூரிய வேலையுடைய சீவகன் அவ்வம்பும் சிலையும் நாணும் அற்று, அங்கேயேவிழும்படி எய்தான். அம்பும் வில்லும் அறுபட்டதைக்கண்டு சினந்து, அழகிய வாளைப்பற்றிச், 'சீவகன் தேரின்மீது பட்டு விழுமாறு பாய்வேன்,' என்று பொன்னுலகினின்று இழியும் வானவனைப்போல யானை மீதிருந்து பாய்ந்தான். அதுகண்ட

சீவகன் எய்த அம்புகள், மகளிர் செய்யும் இன்பப் போருக்கு நிலைக்களமாகிய கட்டியங்காரன் மார்பிலே பாய்ந்தன. அவ்வளவிலே அவன் உயிர் பிரிந்தது. எனவே, உருத்து விழித்துக் கண்டார் அஞ்ச வாய்மடித்துக் கரிய வானினின்றுந் திங்கள் வீழ்வதுபோலத் தன் இருண்ட ஆட்சியினின்றும் நீங்கி மண்மிசை விழுந்தான்.

**வெற்றி முரசு**

அப்போது, 'கட்டியங்காரன் என்னும் கலியாகிய அரசு வீழ்ந்தது. இனி, இப்பகைமைப் பண்பை விடுத்திடுக!' என்று வெற்றி முரசு கொட்டினர் அங்கே. அது கேட்ட வீரர்கள் ஆர்த்தனர்! மண்மகள் குருதியாகிய கண்ணீரைச் சொரிந்தழுது, கட்டியங்காரனிடமிருந்த ஆர்வத்தை விட்டனள்.

* கொடிய பாம்பு, கடல் சூழ்ந்த உலகம் அஞ்சுமாறு ஒளியுமிழும் ஞாயிற்றை விரைந்து அக்கடலின்மிசை விழுங்கிப் பலநாட் கழித்தபிறகு, அவ்விளஞாயிறு அரவின் வாயைப் பிளந்து போந்து நின்றாற்போலச் சீவகன் நின்றான்.

சுறாமீன் குழுவேபோல மள்ளர்கள் ஈண்டினர். அரசர்கள் சூழ்ந்தனர். வானின் உடுக்களைப்போல எங்கும் விளக்குகள் ஒளிவீசின. முத்தைச் சொரியுங் கடல் ஆர்ப்பதைப்போல நகரம் ஆர்த்தது. முதலில் மக்களையும் பிறகு கட்டியங்காரனையுங் கொன்று முறையாகக் கிடைத்த வெற்றிச் சிறப்பைக்கேட்ட விசையையின் கண்கள் முதலில் அரசனையெண்ணி நீர்நிறைந்து, பிறகு குளிர்ந்தன.

அழகிய முடியினையுடைய அரசரைக்கொண்டு, வாள்களென்னுங் குடத்தினால் குருதியாகிய மண்ணும் நீராலே மண்மகளை யாட்டுவித்துச் சீவகன் அவளை யடைந்தான்.

---

* "ஒல்லைநீ ருலக மஞ்ச ஒளியுமிழ் பருதி தன்னைக்
கல்லெனக் கடலின் நெற்றிக் கவுட்படுத் திட்ட நாகம்
பல்பகல் கழிந்த பின்றைப் பன்மணி நாகந் தன்னை
வல்லைவாய் போழ்ந்து போந்தோர் மழகதிர் நின்ற தொத்தான்."

## கஎ. பூமகள் திருமணம்

*சீவகன் நகரை அடைதல்*

கண்ணாடிபோலப் பகைவர் வீரத்தின் அழகை விளக்கும் மார்பனாகிய சீவகன், செவ்வரிபரந்து நீண்ட கண்களால் யாவரையும் நோக்கி வென்று, களவேள்வி முதலியன முடித்து, வென்றிக் களிறனையார் கைதொழ, வண்டுகள் தேனைவிரும்பிப் பருகும் மணங்கமழ் மாலைகள் தூக்கப்பட்ட வளநகரத்தை அடைந்தான்.

அவனைக்காண மலர்க்கோதை யணிந்த மங்கையர் கூடாரங்களிலும் மாடங்களிலும் மயில்போலக் குழுமினர்; கூட்டிலிருந்த புலியும் குகையிலிருந்த சிங்கமும்போன்ற சூரபன்மன் முதலிய பகைவர் மெலியக் கொலை வேலேந்திய முருகனைப்போன்ற சீவகனை யேத்தினர். 'திருமாலைப் போன்ற சச்சந்தனைக் கொன்றவன் தன்னுடைய மக்களோடு ஒன்றாக இம்மாலை நேரத்திலே படும்படி இவன் கொன்றான்; இனி, குணமாலைக்கு நேர்ந்த—சீவகன் இவளை மணந்து துன்புற்றானென்னும்—மாயாப்பழி இன்றே மாய்ந்தது,' என்றுரைத்தனர்.

மணியையுடைய மலையினின்று வீழும் அருவிபோல, மணியோடையையுடைய யானையின் நெற்றியிலே சுரபுன்னை மலர்களைச் சொரிந்து, மாடங்களின்மேல் நின்ற மடமங்கையர், வானுலகினின்றும் மலர் சொரிகின்ற வானமங்கையரைப் போன்றனர். மற்றும், நாவாய்தந்த புதிய பட்டினாலே தைத்த கொடிகளை நெடுமாடங்களின் உச்சியிலே கட்டினர்; அணிகலன் மின்னச் செம்பொற் கொடியோல வந்து வளைந்து சீவகனைத் தொழுதனர். சிலர், 'அம்பைச் செலுத்தும் வில்லேந்திய வீரர் வாழ்த்த உலகை இங்ஙனங் கைக்கொண்டால், இனி, இவனுக்கு நிகராவார் ஈண்டியாவருளர்?' என்றனர். சிலர், 'விளங்குங் கோதையே! ஐயனைக் கையால்தொழுது, கையில் வளையலைக் காண்கிலேம்,' என்றனர்.

இங்ஙனம், வானில் உயர்ந்த மணிமாடங்களின் மீதில் ஏறி, வாள் மழுங்க நீண்ட கண்ணினர் மலரைத் தூவி வாழ்த்த, மைத்துனராகிய மன்னர் புடைசூழச் செல்கின்ற சீவகன் மணிவண்ணனாகிய திருமாலைப் போன்றான். தெருவிலே நின்று பார்க்கும் மகளிரின் முகங்கள் தாமரை மலர் போலவும் கண்கள் கழுநீர் மலர்கள் போலவும் எங்கும் பரந்தன. யாழ்வல்லோனைக் காணவந்த மங்கையர் அணிந்த பூண்களையும் முத்துக்களையும் ஈன்று, பொன்பூத்து மலர்ந்த அந்நகர் அமராவதிபோன்றது.

கட்டியங்காரன் உரிமை மகளிர்

சீவகன் அரண்மனையடைந்தபோது, பூங்கோதை பெய்யப்பட்ட மதிலிடத்தே நின்ற—கட்டியங்காரனைச் சார்ந்த—மகளிரழகு, திங்கள் மறைந்த பின்னர் இளஞாயிற்றைக்கண்ட ஆம்பலின் குவிந்த மலர்த்திரளைப் போலக் கெட்டன. சீவகனுடைய வீரர்கள் அகன்ற கோயிலிலே புகுந்து, வானில் இடியோசைகேட்டுப் பாம்புகள் பதைப்பனபோலத் துடித்தஞ்சிக்கொண்டிருந்த கட்டியங்காரன் உரிமை மகளிரை விழித்து நோக்கிச் சினந்து, 'இவ்விடத்தினின்றும் ஏகுக,' என்று விரட்டினர். அதனால், இயற்றிய பாவையனையார்—சிலம்பொலிக்கும் மெல்லிய சிற்றடியார்--மலரிருக்கையின் மேலன்றி நடந்தறியாதவர்--மையார்ந்த கண்ணிலிருந்து, நீர்பாய்ந்துவர, வெய்தாகப் பொருமியழுது, வெய்ய வேறுநிலத்து நடந்து சென்று வெளியேறினார்கள். அப்போது, அவர்களுடைய வாடிய இலவ மலரையனைய சிற்றடிகள் நிலத்திற்பதிதலால் நெருப்புப்போலச் சிவந்து மரற்பழம்போலக் கொப்புளங்கள் தோன்றி வருத்தின.

அவர்களில், இனிய இன்பத்தில் ஈடுபடாத இளமங்கையரும், இன்பம் நுகர்ந்து நீங்கியவரும், இளஞ்சூலுடையாரும், பல திங்கள் கடந்தவரும், சூன்முதிர்ந்தவரும் ஆகப்பல திறத்தினரும் நிறைந்திருந்தனர்.

அவர்கள் 'சீவகனைக்கண்டு பெய்யும் முகிலிற்பிறழும் மின்போல மின்னிக், குலைந்த கூந்தலிலிருந்து மாலைசோர

ளைந்து வருந்திச் சோர்ந்து புலியைக்கண்டு நடுங்கும் பிணை மான்களைப் போன்றனர்.

சீவகன் தன் பணியாளரை நோக்கி, 'இம்மங்கையரில், வட்டமாகிய மலர்த்தாரணிந்த கட்டியங்காரனு லருள்பெற்றுப் பட்டம் பெற்றவள் யாவள்?' என்றான். "கட்டியங்காரனும் மக்களும் பட்டனர் பொருகளத்தில் என்று கேட்டபோதே, பட்டமணிந்தவள் 'அஃதோ?' என்று கூறி, வேலாற் பிளக்கப்பெற்ற மான்பிணைபோல வருந்தி வீழ்ந்து, சேல்மீன் சின்னீரிடைச் செல்வதுபோல மெல்லெனக் கண்கள்மேலேறிப் பிறழ்ந்து வீழ்ந்து பட்டாள்," என்றனர் உழையர்.

சீவகன் மற்ற மங்கையரை நோக்கி, "நஞ்சினையுடைய ஐவாய் அரவின் அழலனைய வெகுளி ஒன்றற்கு உயிருள்ளளவும் பொங்கி, உயிர் போயினபின்னர் நீங்கி விடுதல்போல, யானுங் கட்டியங்காரன் உயிர் போய பின்னர் என் வெகுளித் தீயைப் போகவிட்டேன். இனி, நீங்கள் 'கரிய கழுத்தையுடைய நாகங்கள் கருடன் வாய்ப்பட்டு உய்யாமை போல எமக்கும் இனி உய்தல் இல்லை கொல்?' என்று கருதி உள்ளம் வருந்தி உருகல் வேண்டா! துகிலுள்ளே மறையும் கழுவப்பெற்ற மணிபோல நுண்ணிய இடையினையுடைய மடவீர்! யான் நுமக்கு வருந்துவன புரியேன். ஆதலால், ஒள்ளிய நிறமுடைய கழுநீர்மலர் முத்துக்களையுமிழ்தல் போல நெடுங் கண்களிலிருந்து நீர்த்துளிகளை வீழ்த்தல் வேண்டா. உங்கள் வாழ்க்கைக்கு வேண்டுவன நல்குவேன். அவற்றைக் கொண்டு இங்கே வாழ்வை மேற்கொள்ளினுங் கொள்க. அன்றி, ஈங்கிருந்து பொன்னைக் கொண்டு சென்று புறத்தே வாழினும் வாழ்க! நுங்கள் உள்ளம் விரும்புவதியாது?" என்று வினவினான்.

அவன் வாய்மொழியைக் கேட்டு வான்முழக்கம் வாய்த்துக் கேட்ட மடமயிற் குழாம்போல மகிழ்ந்த, மிகச் சிவந்த பஞ்சணையையும் நெருப்பென மிதிக்க அஞ்சும் சிற்றடியார், 'எம் இருப்பிடஞ் செல்வேம்,' என்று கூறித் தம்

விருப்பம்போலச் சென்றனர். அங்கே, காதணிந்த குழையும் கடற்சங்க வளையும் குங்குமமும் மலர்மாலையும் சுமையென நீக்கிவிட்டு, குவளைத் தடங்கண்களிலிருந்து முத்துருட்டி விம்மியவாறு சண்பகமலர் வாடலை யொத்து நோன்பை மேற்கொண் டிருந்தனர்.

**அரண்மனையைக் கைப்பற்றல்**

வீரர்கள் மூங்கிலாற் செய்யப் பெற்றுப் பொன்னாற் போர்க்கப்பெற்ற கடிகையுடன் கூடிய கைவிளக்கை யேந்திப் பொற்புரிசை சூழ்ந்த அழகிய அரண்மனையையும் பொன்னறையையும் பிறவற்றையும் விரைந்தாய்ந்து காவல் கொண்டனர். பிறகு, திருமகள் வணங்க அரண்மனையிலே முருகனனைய சீவகன் புக்கனன்.

அவனுடைய மணமிகும் பூவணையைப் பனைபோலுந் தாமங்களைத் தூக்கி, மலைபெற்ற முகிலென நறுமணப்புகை நிறைந்து விம்மக் கலைபெற்ற சொல்லாராகிய மகளிர் காவல் கொண்டனர்.

**போர்செய்த வீரரைத் தலையளி செய்தல்**

முத்தமாலை நிழல் செய்யும் மார்பனான சீவகன் போர்க் கோலத்தை நீக்கிப் பொன்னால் எழுதப்பட்ட மார்புக் கச்சையும் கோலத்தையும் மாலையையு முடைய மகளிர் நீராட்ட ஆடித் தக்கவாறு கோலம் புனைந்து, தூசிப் படையையும் அழகிய தேர்த்திரளையு முடைய மாமனை வணங்கித் "தேவாசுரம், இராமாயணம், மாபாரதம் என்கின்ற போர்களின் வீரர்களைப் போலப் புண்பட்ட வீரர்களின் புண்களைப் போற்றிப் பாதுகாத் தருள்வீராக!" என்று கூறித் தானும் உடன்சென்று, அவ்வீரர்களை ஆதரவுடன் நோக்கித் தலையளிசெய்து, பிறகு பணியாளர் தன் அடிகளை வருடப் பள்ளிகொண்டான்.

**இரவு**

மலைகள் புண்பட்டாற்போன்று புண்பட்ட வேழமும் தேரும், இமைப்பளவிற் கண்காணாது விரைந்து செல்லும்

புரவியும், பண்ணவிழ்த்த யானை கொட்டாவிகொண்டாற் போல வாள் பிளந்த புண்ணையுடைய மார்பரும் இளைப் பாறினர்.

அழகிய துன்பந்தரும் புண்பட்டோர் வாய் அரற்றும் ஒலியும், இறந்தவர்க்கு மகளிர் அழுகின்ற அழுகைக் குர லொலியும், முரசின் அதிர்ப்பொலியும், திரண்ட வாயை யுடைய சங்கின் முழக்கினை லெழு மொலியும், கொலையில் வல்ல யானையின் செவியடிப்பும், யாழொலியும், பரவுவார் ஒலியுங் காதில் உற இறைவன் சீவகன் துயின்றான்.

இறந்தவருடைய தொடியணிந்த தோளையுடைய மக் ளிர் ஒருபுறம் துன்பக்கடலை நீந்த வென்றவருடைய மாவடு போன்ற கண்களையுடைய மகளிர் ஒருபுறம் இன்பக்கடலை நீந்தக் கதிரவன் கீழ்த்திசைக் கடலை நீந்தி அதன் உச்சி யிலே தோன்றினான். அப்போது சீவகன் கடு, நெல்லி, தான்றி ஊறின நீரிலே கருப்பூரத்தைக் கரைத்து மகளிர் ஏந்தத் தன் மலர்க் கண்களைக் கழுவினான்.

## திருமணம் (முடிசூட்டு விழா)

அணிகலன் அணிந்த சீவகன், பிறராற் பெறலாமென நினைத்தலும் ஒவ்வாத செல்வத்திற்கும் வென்றிக் கோலத் திற்கும் விளக்கமாகுமாறு அருகனை முடிதாழ்த்து வணங் கிச், செம்பொன்னை முகந்து வறியோர் கொள்ள வழங்கி னான்; பிறகு, புனைவுசெய்த மையைக் கண்ணுக் கெழுதி னான்; தளிர்த்த கோலமுடைய மகளிர் ஏந்திய மணிச்செப் பில் இருந்த வெண்பட்டெடுத் துடுத்தினான்; ஒளிமிகும் பஞ்சவாசத்தைக் கவுளிலே கொண்டான். கழுநீர் மலரை யேந்தினான். நோக்கினோர் காமனேயென்று கொள்ளு மாறும், வீரத்துடன் சேக்கையை அடையும் சிங்கம் போன்றும் பொன்னணையிற் பொலிவுபெற அமர்ந்தான்.

அவனைச் சூழப் பகைவரை வென்று புறங்கண்ட வேல் வேந்தர் அமர்ந்தனர். பழைமை பொருந்திய நான்கு தோழரும் நெடுந்தேரும் வலிமைமிக்க தம்பியும் மாம

னும் மதுக்கமழ் மாலையணிந்த வளர்ப்புத் தந்தையும் செழு நகரிலுள்ள பெரியோர்களும் நாட்டிலுள்ள செல்வர்களும் ஆங்கே விரைந்து குழுமினர். அழகிய திங்கள் பொழியும் நிலவைத் தொகுத்தாற் போல விளங்கும் வெள்ளி மலையி லிருந்து கலுழவேகனைத் தவிர்த்த விஞ்சையர் பலரும் வந்து வளமிகு மாநகரை இடங்கொண்டு இளங்கதிர்கள் திரண்டாற்போலப் பொலிந்து குழுமினர்.

யாவரும் வந்து சேர்ந்த பின்னர், அவர்கள் அமைச் சரை நோக்கி, 'இனி முடியணியும் விழாவைத் தொடங்கு மின்,' என்றனர். அமைச்சர்கள், 'முடியைப் பண்ணினாரும் முழுத்தம் அமைத்த கடிகையும் கண்ணனாரும் (புரோகிதர்) வருக!' என்றனர். அவர்கள் வந்து சேர்ந்ததும், வானவில் அமைந்து மால் வரையிலே குலவினாற் போல விளங்குந் தாரும், அருவி போல்வதொரு முத்தாரமும் மார்பில் அசைய, விளங்கொளி விரியும் இயல்பினனாகிய வானவன் ஒருவன் வந்திழிந்தனன். அவன் பிறகே, பொங்கி மெத் தென இலங்குங் குழலினர் பலர் மின்னுக்கொடியென இழிந்தனர். அவர்கள் மெய்யிலுண்டான தெய்வ மணத் தாலே திருநகரின் மணம் மறைந்தது.

விண்ணிலிருந்து சிறப்புடன் வந்த சுதஞ்சணனாகிய அவ் விஞ்சையன் பூமழை பொன்மழையுடன் பெய்யா நிற்கப் பருதி போலும் குடங்கள் நூற்றெட்டினால் பாற் கடல் நீரை முகந்து சீவகனை யாட்டி, நகர மாந்தர்கள் வியந்து கைவிதிர்க்குமாறு சீவகனைத் தொழுது, ஒளி விடும் நீண்ட பொன் முடியைக் கவித்தனன்.

அப்பொழுது வானவர் துந்துபி பொலி வானவர்க்கு முடிபுனை மங்கல மகிழ்ச்சியை யுரைத்தற் கெழுந்தது போல, வேள்விப் புகையுடனும் சுண்ண மணத்துடனும் எழுந்தது. அரம்பையர் நாவினாற் பாடினர்; யாழ் நரம்பு கள் இசைந்தன; மன்னர் காணிக்கை வைத்து வணங்கினர்; கடிகையர் மங்கலம் பாடினர்.

அழகிய மாணிக்கக் காம்பும் முத்துவடமுந் திளைக்கும் வனப்புடைய முழுத்திங்கள் இது வெனுமாறு வெண்குடை உயர்ந்து கவிந்து கடல் சூழ்ந்த பெருநிலப் பரப்பிற் கணி செய்தது. இங்ஙனம் ஒப்பற்ற பூமகளைச் சீவகன் மணந்தான். பிறகு, சுதஞ்சணன் தன் நாட்டை யடைந்தான்.

**சீவகன் திருவோலக்க மண்டபஞ் சார்தல்**

மின்னுகின்ற கடலின் திரைபோல மணிப்பிடியையுடைய கவரிகள் விரிந்து வீசவும், பொற்குடை நிழல் செய்யவும், பொன்னுலான கலங்கள் ஏந்திய மகளிர் போற்றி வரவும், பொற் கழலணிந்த அடியை எடுத்து வைக்குந்தோறும் மன்னர் முடிவணங்கி ஏத்தவும், திருமால் போலத் தான் வீற்றிருந்த அணையினின்றும் இறங்கி நன்னிலத்திலே அடியெடுத்து வைத்துச் சென்றான்.

மந்தார மலர்மாலை மேலே தொடுக்கப்பெற்றுத், தழுவ வாராத பெரிய மாலைகள் இன் புகையாற் கமழப்பெற்றுத், திருமகளையன்றிப் பிறமகளிர் சாராத செல்வம் மிகுந்த சித்திரமாமண்டபத்தே (திருவோலக்க மண்டபத்தே) சிந்தாமணிபோன்ற சீவகன் புகுந்தான். அம்மண்டபத்திற் பைங்கண்களையும் உளையமைந்த எருத்தினையும் பல மணிகள் ஆகிய எயிற்றினையும் பவளவாயினையும் உடைய அரியணையின்மீது, முடிமன்னர் சிங்கங்கள்போலச் சூழ மணமிகுமலர்த்தாரணிந்த சீவகன் மணிவண்ணன்போலவும், குழைகள் ஒளிவீச ஞாயிறுபோலவும் வீற்றிருந்தான்.

இத்தகைய சிறப்புடன் அமர்ந்த சீவகன், தம்பியை நோக்கி, 'ஊர்கள் தொறுமுள்ள சிறைக்கோட்டங்களை இடித்திடவும், முன்னர் நம் பகைவன் ஆண்ட நாட்டிலே பதினாறாண்டளவும் ஆறிலொன்றுட்பட வரி நீக்கவும் முரசறைவிக்க!' என்று முரசமும்நாண இடிமுழக்கென அறிவித்தான். பிறகு, அமைச்சரை நோக்கிக், 'கடவுளர்க்கும் கணிகளுக்கும் நான்மறையாளர்க்கும் விடுக்கப்பெற்ற இறையிலி நிலங்களை முன்போல இறையிலியாகவே

விடுமின்! பகைவனுற் பறிமுதல் செய்யப்பட்டு இழந்தவர் கட்கெல்லாம் முன்னினும் இருமடங்கு நிலம் விடுமின்,' என்ருன்.

இவ்வாறு சீவகன் கூறிய அளவிலே, நந்தட்டன் எழுந்து தொழுதுசென்று, முரசறைவானுக் காணையிட்டான். முரசறைவோன் முரசினை யானையின் எருத்தத்திலே அமைத்துப், 'பசியும் நோயும் பகையும் பொன்றுக! இன்றுள நீவிர் எல்லீரும் என்றும் உலகிலே யிருப்பீராக!' என்று வாழ்த்தி, 'இறைவன் இந்நாட்டிற் பதினாண்டு வரை வரியை நீக்கினன்,' என முரசறைந்தான். பின்னர், 'கண்பார்வை யற்றவர்க்கும் நோய்கொள வருந்தினவர்க்கும் கணவனுற் புறக்கணிக்கப்பட்ட மகளிர்க்கும் மனையும் பசுவும் நிதியமும் அரசன் தருவான்,' என்று முரசறைந்தான்.

இவ்வாறு அரசன் அருளப்பெறுதலின், நாட்டினுள்ள மக்களெல்லோரும் பகையும் நோயும் பசியும் நீங்கியொழிய, ஒருவனுக்கொருத்தியேபோல மனம் மகிழ்ந்து ஒளியுடனே வாழ்வு பெற்றனர்.

---

## கரு. இலக்கணை திருமணம்

**பிரிந்த காதலியரின் கூட்டம்**

சீவகன் நிலமகளை அடைந்தபிறகு, பணியாளரைக் கூப்பிட்டுத் தான் மணம்புரிந்துகொண்ட மகளிரை அழைத்துவரப் பணித்தருளினான். அவ்வாறே அவர்கள் கடத்தற்கரிய சுரம் பலகடந்து சென்று அழைத்து வந்தனர். வந்த மின்னையும் எழுதுகொடியினையும் போன்ற மகளிர் பெருமைமிக்க திங்களையும் பருதியையுங் கண்டறியாத மாடத்தினில், வண்டும் பறவையும் அஞ்சுங் காவலையுடைய சிவிகையினின்றும் வீடு கண்டவர்போன்ற மகிழ்வுடன் மயிலென இழிந்தனர்.

நிறைமிகுந்த அவர்களெல்லோரும் அவன் பிரிந்த அன்று சூடிய மாலையினராய், அணிந்த சாந்தினராய், வருந்திவாடிய மெய்யினராய், விழிகளிலிருந்து உவகை முத்துக்கள் தம் காதலனடிமேல் விழ வந்து வீழ்ந்தனர். அவன் அவர்களையெடுத்து மார்புறத்தழுவிக் கலக்கந் தவிர்த்தனன். அவ்வளவிலே, முன்னர்,-சின்னீரிடத்தில் வெருவக் கலங்கலுற்ற கயலிணைபோல—இவன் பிரிவிற்கு மயங்கிப் புலம்பி வாடிய வாட்கண்கள் பொலிவுற்று, உவகைக் கண்ணீரைச் சுமந்து செவியுற நீண்டு நின்றன; கோடையின் வாய்ப்பட்டுக் கரிந்தமுல்லை கார்மழையையேற்றுத் தழைத்தாற்போலத் தங்கணவனுடைய தேன்போல் மலர்ந்த மார்பைத் தீண்டின அளவிலே மெய் வாட்டமும் உளவருத்தமும் நீங்கி, ஒளி சிறந்தனர்.

அம் மங்கையரைப் பணிமகளிர் அழைத்துச்சென்று, சிலம்புமுதல் திலகம் அளவுந் திருத்தி, முடியிலே தேன் மணக்கும் நறிய மாலைகளைச்சூட்டி, மார்பிலுந் தோளிலும் குங்குமக் கலவையால் எழுதுகொடி யெழுதி, முத்து வடத்தையும் அணிந்தனர்.

இளங்களிக்கயல் மீன்கள் நஞ்சுமேய்தலிற் செருக்குவனபோலக், கண்கள் அலர்ந்து இறுமாந்து அஞ்சிப்பிறழ,

மணிமேகலை அற்று மணிகளைச்சிந்த, மெய்புகுவன்ன முயக்கத்தாலே நுண்ணிடை ஊற்றின்பம்பெற்றுக் கவின் பெற அவன் அவர்களைக் கலந்து மகிழ்ந்தான்.

**திருமண வினை : நாள் குறித்தல்**

இனி, இலக்கணை திருமணவினை மொழிவோம்.

கரையையுடைய அகன்ற பெரிய கடல் போன்ற நூல்களை முற்றுங் கற்றுக் கரைகடந்து, முகபடாம் அணிந்த யானையும் சிவிகையும் பெற்றவனாகிய கணி, இலக்கணையின் திருமணத்தை ஊழால் தானே முடிதலேயன்றி ஓரையானும் முடித்தற்குப் பொருந்திய நாட்களை அரசனுக்கு விரித்துரைத்தான்.

**முரசறைதல்**

சீவக மன்னனுக்குரிய நன்னாளிலே, ஓங்கிய வெள்ளி மலையென ஒளிவிடும்—மலர்மாலையும் திலகமும் அணிந்த—மாறுபடாத ஒழுக்கமுடைய—மதக் களிறுகள் நூற்றெட்டும் பண்ணுறுத்தப் பெற்றன. வெள்ளைத் துகிலணிந்து, வெண்சாந்தணிந்து, மஞ்சிகையெனுங் காதணியிலங்க, மாலைகள் சூடி, முத்தணிந்து வந்த முரசறைவோர் முரசினை அக் களிறுகளில் தலைமைபெற்ற களிற்றின்மேல் ஏற்றினர்.

முதலில், "நெடுநகர் வாழ்க!" என முரசறைந்தனர். பிறகு, "கேண்மின்! அரசன் திருவாய் மொழியாகிய இனிய இவற்றைக் கேண்மின்! முத்துவடமும் மணிமாலையும் பூணுமின்! சந்தனம் பூசுமின்! வாளனைய நுண்ணிடை வருந்தினும் நெற்றிச் சுட்டியணிந்து, நீவிர் விரும்பிய அருவிலைவண்ணப் பட்டணிமின்! வெண்பிறையனைய சிறு நுதலிலே பெரும்பட்டம் அணிமின்! மெய்யெலாம் ஒளிர் மணிக் கலன்களால் நிறைமின்! எழுநாள் வரையினும் பாற்சோற்றினையன்றி நும் உள்ளம் விழையினும் வேறுணவு கொள்ளன்மின்! பொருந்திய குலையுடன் வாழையுங் கமுகும் நடுமின்! தாமங்கள் தாழும்படி

தூக்குமின்! அகின்மணம் எழுப்பும் புகைக்குடங்களைப் பரப்புமின்! அரங்குதோறும் பாடலும் ஆடலும் இயற்றுமின்! பொலங்கொடிகளைத் தூக்குமின்! மன்னவனுக்குத் திருமணம் நிகழும் இவ்வெழுநாளினும் ஒழுக்கமற்ற சினக் களிறுகளை அகற்றுமின்!" என்று முகில் முழக்கென முரசறைந்தினர்.

**நெடுநகர் மங்கல நிகழ்ச்சி**

முரசறைந்தபின் ஆறு நாட்கள்வரை இவை நிகழ்வுற்றன நகரமெங்கும்.

பைங்கிளிப் பண்மொழியார் விண்ணிலே விளக்குப் போல நிலமிசை விரிந்துகிடந்த பூந்துகள்களையும் மணி முதலியவற்றையும் நீக்கிச் சாந்தினால் மெழுகி, இல்லுறை தெய்வங்கட்கு மலர்ப்பலி இட்டனர். அழகமைந்த வயிற்றினையுடைய ஆவின்பாலை உலைபெய்து பொங்கிய புகையினாற் பொலிந்து விளங்கிய இழின் எனும் ஒலிபெறு மாடங்கள் தம் புறத்தே துகில் போர்த்தன போன்றன. திருமகளனைய மெல்லியலாரின் அடியைப் பணிமகளிர் செம்பஞ்சினைக் கொண்டூட்டியபோது நிலத்தின்மீது சிந்திய சேறு செக்கர்வான் நிலமிசை வந்தாற்போன்றது. மணிக் காம்பு சேர்த்த திங்கள்போல விளங்குங் கண்ணாடியிலே பார்த்துப் பொற்கலத்தினாற் கோலஞ் செய்துகொள்ளும் மகளிரின் கோலத்தை நோக்கிய மாலைவண்டுகள் கண் மயங்கின.

தனக்கு நிகரில்லாத நகரின் தெருவிலே, வாயில் தொறும் மழையைப் போழ்ந்து வானத்தை யேந்துவ போலக் காணப்பெறுந் தோரணங்களிலே மலர்த்தாமங்கள் நாற்றப்பட்டன. மணிக்குடங்கள் நிரையாக வைக்கப் பட்டன.

ஆடல் மங்கையர் கிண்கிணியின் ஒலியும், பாடலொலியும், பண்ணிசைக்கும் யாழொலியும், பெருமை கொண்ட முழவின் ஒலியும் கூடுதலினால் மாடமாநகர் கடலொத்தது.

சிந்தூரப் பொடியும் பூந்துகளும் பொற்றுகளும் புகையுங் கெழுமி, இந்திரன்நகர் விழாவியற்ற இங்கே வந்தாற் போலக் காணப்பெற்றது.

நகரெங்கும் உள்ளமக்கள் பரவிச் சென்று விருந்தினரை வேண்டி யழைத்து வந்து கன்னலேயும் நெய்யையும் மிருதியும் பெய்து சமைத்த பாலடிசிலே யூட்டுவார்; துகிலேயும் அணிகலனேயும் கொள்க வென்று சுமக்குமளவு நல்குவார். பலவின் பழம், வாழைப்பழம், மாம்பழம் ஆகியவற்றின் சாற்றைக் கருப்பஞ் சாற்றுடன் கலந்து சமைத்த தேறலேயும் இளநீரையும் குடங்களிலே பூரிப்பார். கமுகங் காய்க் குலேயையும் ஆய்ந்த மெல்லிலேயையும் பச்சைக் கருப்பூரத்தையும் மக்கள் கொள்ளேயாகக் கொண்டுண்ணுமாறு மாநிலஞ் சுமக்கலா மளவின்றியும் ஈட்டுவார்.

மெய்க்கு நலந்தரும் தூமத்தையும், அதனை யொழிந்த நுகர் பொருள்களேயும் ஆடவரும் மகளிரும் ஏந்தி நிற்றலின், இப் புகழ்பெற்ற நகரிலே கற்பகமரமும் காமவல்லியும் இடங் கொண்டாற் போன்றன. குற்றமற்ற மக்களும் மாவும் கூடிய தொகுதியை யான் சுமக்கலேன் என்று நிலமகள் வாய் திறந்து பாலும் நெய்யுமாகப் பெருக அழுதிட்டாள் போலே யிருந்தது அப்போதைய நிலே.

அரண்மனையில்

கொடிகள் அசையுங் கோயிலின் வாயில்கள் எங்கும் மடல் அசையும் கமுகும் வாழையும் மடித்துகிலேயுடைய கண்ணடியும் நிறை குடமும் பூத்தன. மங்கையரின் கிண்கிணியும் மேகலேயும் பொற்சிலம்பும் ஒலிக்கும் அரண்மனையிடமெங்கும், மன்னர்தங் கோதையிலே தாது வேய்தலின் அம்மகளிரடி நிலத்தைத் தீண்டப் பெறுதலொரு செல்வம் நிறைந்திருந்தது. மற்றும், பொற்குழைகளும் தோடும் ஒளி கிளர்ந்து, சுண்ணமும் அகிலும் சாந்தும் பூவும் கமழ்ந்து, பூணும் முத்தாரமும் விளங்கி மேனிலைகையிகழப் பண்ணியது.

**மயிர்கழித்தல்**

வான் விரிந்து மீன் பூத்ததெனு விதானித்து, ஒளி விடும் அருங்கலன்களை யிடித்த பொடியாலே நிலமகளிடை போல நடங்கும்படி கோலமிட்ட இடத்தே அரசர்க்குரிய மகளிர் மங்கலமாகிய பெருந்தவிசை யிட்டனர்.

அழகுமிகும் பொற்காசும் மணியும் பொன்னும் வலம் புரி யீன்ற முத்தும் குவிக்கப்பட்டன. அட்டமங்கலம் இலங்கின. மணி விளக்குகள் எழுந்தன. தீம்புகைகள் கலந்தன. ஆயிரத்தெண்மர் கவரி யேந்தினர்.

மங்கலங் கூறுநிற்க, மங்கலங் கூறும் கணிவகுத்த முழுத்தத்திலே மன்னவன் மங்கலத் தவிசில் ஏறினன். அப்போது, அறுகும் அரிசியும் இட்டு மந்திரித்த பொற் கருவியை மஞ்சிகன் அரசனுக்கு மயிர் கழிக்க ஏந்தினன். மங்கல வாழ்த்துக் கூறப்பட்டது. இன்னியம் முழங்கின. ஏத்தொலியுஞ் சிறந்தது. சாமரைகள் ஒழுங்காக அசைந்து நிழல்செய்தன; சங்குகள் ஆர்த்தன. மயிர் கழித்தபின் அதனை மங்கையர் பொன்னகலிலே எடுத்துக் கொண்டு மண்டபத்தினின்றும் நீங்கினர்.

பின்னர், பாற்கடலில் முளைத்த பவளக் கொடிபோல் விட்டுவிட் டொளிரும் ஒளியினையுடைய இலக்கணைக்குப் பூங்கோயிலில் உள்ள திருமகள் ஒவ்வேனென்று வருந்து மாறு நல்ல நாழிகையிற் புருவம் ஒதுக்குவதாகிய மயிர் வினை மங்கலத்தை நிகழ்த்தினர்.

**சீவகன் நீராடல்**

மயிர்வினை முற்றிய பின்னர், வரையிலே துவலைபோல மதம் நிலத்தை நனைக்க, மின்னனார் மாலையைச் சூட்டித் தாம் அரைத்த சந்தனத்தை யணிந்த கோடுகளையுடைய வேழங்கள் ஆயிரத்தெட்டும், இயங்கள் இயம்ப, மண்ணுநீர் கொண்டுவர நிரைக்கப் பட்டன. வேற்கண்ணார் மலர் களால் மறைக்கப்பட்ட நீரை முகந்து, அழகிய சிறியவும் பெரியவுமான பல நிறமுள்ள குடங்களிலே நிறைத்து,

அவற்றை விண்மீனுந் திங்களுமெனக் கண்டார் மருண்டு நோக்கத் தேன் மணக்கும் மலர்மாலை புதைத்த குடை நிழலிலே களிற்றின் மேலேற்றித் திருவுடன் கொணர்ந்தனர்.

**ஒப்பனை**

பின்னர், பொன் கொண்டிழைத்த மண்டபத்தில, வெள்ளியா லியற்றப்பட்ட மணையில் அரசர்கள் போற்ற அண்ணல் சீவகன் அமர்ந்தான். அழகிய குழை ஒளிவிடும் படியணிந்த மகளிர், 'இமயப் பொற்குன்றம் போல நில மிசை நிலைபெற்று, நின் அடிநிழலிலே உலகமுழுதும் வைகத் தனிப்பேரரசராய் இலக்கணையோடு மன்னுவாயாக!' என வாழ்த்தியவாறு, மழையினுற் கவின் பெற்றுக் கிளைத்து வளர்ந்த அறுகினிலே நெய்யைத் தோய்த்து அரசன் முடியிலே வைத்தனர். பிறகு, பூசும் நீரனவாகிய துவராலும் மண்ணாலும் அல்லனவற்றாலும் தேய்த்து, நறு நீர் கொண்டு ஆட்டினர். அப்பொழுது மங்கல இயங்களெல்லாம் தம்மில் அளவொத்துத் திரண்டார்த்தன. மன்னர்கள் சீவகன் முடியிலே வார்க்கும் பொற்குடத்திலிருந்து வரும் நீர், ஞாயிற்றின் ஒளி மறையப் பால் வெண்மதி பொழியும் இனிய நிலவின் கதிர் போன்றிருந்தது.

நீராட்டிய பிறகு, மாமணித் தூண்கள் நான்கு நிறுத்தி, விளக்கமாக வெள்ளியினால் வேயப்பெற்று, ஆராய்ந்த மாலைகள் சூழ்ந்த வளமிகு மணிக்கூடத்திலே இளஞாயிறு போலச் சீவகனைக் கொண்டு சென்றனர். விளங்கிய பால் நிறத்தை மாற்றிய அழகினையுடைய கம்பலம் வேய்ந்த அணையையுடைய வெள்ளிக் கட்டிலின்மேலே முத்துப் பந்தரின் கீழ் அமர்த்தி ஒப்பனை செய்யத் தொடங்கினர்.

இருண்ட கருமணிபோல நிழல் விடுங் குஞ்சியை ஈரம் புலர்த்திய பிறகு, அகிற்புகை மணம் ஊட்டி, ஓவியம்போல அழகுற முடித்தனர். தாமரையின் அகவிதழின் அளவாகச் சந்தனத்தைப் பூசினர். சீவகனையன்றிப் பிறரணிந்தாற் பெறமுடியாத அழகைப்பெற்ற, சுரும்புகள் தேன் பருகுங் கண்ணியைக் குஞ்சியிலே முடித்தனர். மல்லரை வென்று

மலர்ந்த மார்பிலே, வானவில்லென ஒளிவிடும் முத்தாரம் அணிவித்தனர். கற்பகம் மலர்ந்து பரந்ததோ என்னுமாறு அழகினையுடைய பிற கலன்களைப் பூட்டினர். செந்நிறம் பொருந்திய—எலிமயிர் முதலியவற்றாற் செய்யப்பட்ட—பட்டினை ஆடையாக உடுத்தினர். இங்ஙனம் அணிவிக்கப்பெற்ற சீவகன் குழை சுடரத் தார் அசைய மடந்தையர்க்குக் காமனாயினன்.

ஒப்பனை முற்றிய பின்னர், மகளிர் ஒப்பற்ற வடம் அசைய வந்து, அச்சுதந் தெளித்துப் பிறகு, நறுமணப் புகை சுழற்றி, விளக்கையும் ஆடியையுங் காட்டினர். பிறகு, அளவற்ற கவரி வீசுங் காவலர், பெருங்கடல் ஒல்லென வெண்மையான அலைகளை வீசி எழுவதுபோல வேண் மயிர்க் கவரி பல ஏந்தி வந்து சூழ்ந்து வீசினர். அறுகையும் வெண்மலரையுங் கலந்த நீரினாலே இறைவன் அடியைக் கழுவினர். எடுத்த அட்டமங்கலங்களையுங் காட்டினர். இங்ஙனம் ஒப்பற்ற கைவினை மிக்கதான மணக்கோலம் முற்றியது.

**இலக்கணை நீராடல்**

ஊனில் நிமிர்ந்த கதிர்விடும் வேலை உறையிலிருந்து கழித்தாற்போலும் கண்களையுடைய திருமகள்போன்ற இலக்கணையைப் பாலென நிமிர்ந்த வெள்ளி மணையின்மேல், வானில் நிமிரும் மின்னுக்கொடி போன்றார் பலர்கூடி வாழ்த்தி அமர்த்தினர். "மலையில் விளைந்த மிகுபொன்னே! வலம்புரியில் விளைந்த ஒப்பற்ற முத்தே! கடலில் விளைந்த அமிர்தமே! செல்வம் பெறுக!" என வாழ்த்தினராகி, வளையும் முழவும் ஒலிக்க, அவள் ஐம்பாலிலே அறுகில்-தோய்த்த நெய்யை அணிந்தனர். வெள்ளணியணிந்த யானைகள் இரண்டின்மேற் கொணர்ந்த நீரைக்கொண்டு நீராட்டினர். அழகிய நுண்ணிடையாள் அவ்வாறு நீராட்டப்படுதலின் திருமகளைப் போன்றாள். அவ்வாறாட்டப் பெற்ற நீர் மணியும் ஆரமும் இளமணலிடும் எக்கராகவும் சுண்ணமுங் குங்குமமும் வண்டலாகவுங்கொண்டு, மல

ராகிய நுரையைச்சூடி, அணிகலன்களின் மணியை மணி யாகச் சிதறித் தேனினம்பாடப் பெருகியது.

**ஒப்பனை**

நீராட்டிய பின்னர்ப், பொன்மாலையும் மணிமாலையுந் தூக்கப்பெற்றுப் பவளத்தூண் நாட்டப்பெற்றுள்ள முத்து மண்டபத்தே அவளை அழைத்துச்சென்று திங்களின் ஒளியைக் கானும் வட்ட அணையிலே யிருத்தினர். மகளிர் பலர் அணிகலன், மாலை, ஆடை முதலியவற்றை ஏந்திச் சூழ்ந்தனர். மணங்கமழ் கோதையினையும் நைவளம் என்னும் பண்ணினும் இனிய மென்மொழியினையுமுடைய இலக்கணையை, அழகிய வளைந்த காலாழியையுடைய விலாசியென்பவளும், கைவளையணிந்த அலங்காரமாலை யென்பவளும் ஒப்பனை செய்யப் புகுந்தனர்.

களிற்றரசனது அணிபெற்ற வலக்கொம்பை அறுத்துக் குற்றமற்ற பொன்னைப் பதித்து மணியழுத்தி மணந் தங்கச்செய்த மங்கலமிகு சீப்பினை முகிலினின்றும் கழியும் மதிபோல உறையினின்றும் விலாசி யெடுத்தனள். எந் நூலின் திறனும் உணர்ந்த அவள் தன் கையினால் இருளை நூற்றாற்போன்ற வண்டுமுரலும் குழலை, அகிற்புகை யளைந்து, மணங்கமழுங் கலவையை யூட்டிக், கலக்க வாரி, முகத்துக்கேற்ப, ஏற்றின் இமில்போல முடித்தாள். திங் களைச் சூழ்ந்த மின்போல பட்டத்தைச் சேர்த்தினாள். அரும்பும் இலையும் இடையிட்டுக்கட்டின முல்லைச்சூட்டைக் கற்பினுக்கு அடையாளமாக மிலைச்சினாள். முத்துமாலையை உமிழும் மகரவாயான பணியை அணிந்தாள். கிளியின் வளைந்த மூக்கனைய உகிராலே மயிரைக்கோத்து வாங்கி அதனுள்ளே குவளைப்பூவைப் புறவிதழைக் கிள்ளிநெரித்து விளங்கப் பொறித்தனள். அழகிய நெற்றியிலே மணிச் சுண்ணத்தால் இலகிய திலகத்தை அப்பினள். கணவன் உள்ளத்தைப் பருகி மதர்த்த வாட்கண்ணை நிறமிகு மையி னால் புனைந்தனள். யானைக்கொம்பால் இயற்றப்பட்ட தோட்டினையும் அழகிய மகரக் குழையையும் காதினின்றும் நீக்கிவிட்டு, மின்னைச்சொரியும்—ஒப்பில்லாத வானவில்லை

உமிழும்—எரியும் ஒற்றை மணியினால் இயன்ற சூதம் பையை, வானமங்கையர் விழையச் சேர்த்தனள். வளைந்த வாளரம் அறுத்த சங்கவளை ஒலிக்கும் முன்கையில் நல்தரும் பவளம்போலும் விரலில் அழகிய மணியாழி மின்ன, அணிகலத்தைக்கொண்டு பணைத்த தோளிலும் கவின்பெறு கழுத்திலும் அணிந்த முத்துக்கள் நிலவினை நகைத்தன. மரகதமணியைத் தலையிலே அழுத்திய பெரிய பவழச் செப்புபோன்ற முலைகளை இடமாகக்கொண்டு, அழகு மலர்ந்து, தோளிலே கொழுந்து அசையும்படி, காமவல்லியாகிய கொடியை நன்கு மதிக்கச் சாந்தினால் எழுதினாள்.

பிறரால் சுமக்கலாகாத நாணினையுடைய நங்கையின் இடை வருந்துமாறு சுமக்கவியலாத பூணும் பொன் ஞாணும் முத்துவடமும் புரள அணிந்தனள். அதனைக் காமன் நோக்கி, வண்டுகள் குலவி இசைபாடும் மலர்க் கணையை எய்ய மறந்து, இங்ஙனம் கடியன காண்கிலேன் என்று கருதி, உருகி, இவள் மெய்யிலே மறைந்து (அநங்கனாகி) வேட்கையை விளைவித்தான். வானவில் பூப்பதைப் போல மேகலையை அணிந்து, நிறைமதியின் கதிரை விரித்துடுத்தாற்போல அழகுபூக்கும் கண்கொளாப் பட்டினை உடுத்தாள். ஒருகூறு கிம்புரி வடிவான குறங்குசெறியென்னும் அணியைத் துடையைக் கவ்வி நெகிழவும், பரட்டினைத் தழுவிக் கிண்கிணியுஞ் சிலம்பும் ஆர்ப்பவும் அணிந்து, அடியினும் விரல்களினும் அணிவன அணிந்து, பாம்பினுடைய சிறிய நாவைப்போலும் முன்றானையைத் தாழவிட்டாள்.

இங்ஙனம் விலாசி தன் ஒப்பனையை முடித்தபிறகு, அலங்காரமாலை வந்தாள்.

அவள், இலக்கணையின் அழகிய மலரடியுங் கையும் பவளவாயும் நுதலும் நாவும் ஒளிமிகும் உகிரும் கழுத்தும் உள்ளிட்ட உறுப்புக்களையெல்லாம் கண்டோர் வியந்து விரும்பும்படி செந்நிறம் எழுதினாள்.*

---

* இவ்வொப்பனை பிற்காலத்தில் இல்லை (தொல்.-செய்-80. நச்.)

இங்ஙனம் ஒப்பனைகொண்ட இலக்கணையை நோக்கிய மகளிரெல்லோரும் அவளை நுகர்தற்குரிய ஆண்மையை விரும்பிநின்றனர். அருளிலா மகளிர் அவளை அணிந்த வண்ணத்தை நோக்கின் படைத்தவன் நாம் படைத்த வடிவம் அன்றென மருள்வான்; மயக்கத்தை நீத்த முனி வரரும் மயங்குவர். இத்தன்மைய வடிவைக்கண்டால் மயக்க நோயையுடைய பிறர் எங்ஙனம் பிழைப்பர்!

பூண்கள் விளங்கி மின்னுமிழ்ந்து உலாவும் மேனியை உடையாள் தன் கண்களிலே மையெழுதியதற்குச் சிவந்து காணப்பெற்ற தோற்றம், நல்வினையுடையாரிடத்தே சென்று மீளும் நிலையற்ற திருவைத் தனக்கு 'ஒப்பாகக் கூறுதற்குச் சிவந்து சினந்தாற்போலிருந்தது. மற்றும், அத்தோற்றம் பொன்மலர்ந்த கற்பகமணிக்கொம்பு போன்றுமிருந்தது

வல்லவன் எழுத்துவடிவு தோன்றக் கட்டினவாகிய மல்லிகைமாலையைப் புனைந்தமுடி, இருளின் துண்டத்தை யும் நிலவுச்சுருளின் துண்டத்தையும் ஒன்றைவிட்டொன் றாகத் தொடுத்தாற்போன்றது.

'கோமகள் உருவமாகக் கூற்றம் வந்துளது! உம் உயிரைக்கொண்டு வாழ விலகிப்போமின்! போயினும், ஆங்கே உளம்வருந்துவதைக் காமின்!' என்று கலையுஞ் சிலம்புங் கிண்கிணியும் சாற்றின. 'உருளுந் திரைசூழ்ந்த உலகமெல்லாம் கெடுமெனக் கருதி, அணிந்த இவள் தோழியர் அருளிலராயினர். அவர் அத்தகையராயினும், யாம் உலகுகெடாமல் அருளுவோம்,' என்று கருதின போலக் கவரியும் சாந்தாற்றியும் வெண்குடையும் இலக் கணையை மறைத்தன.

இங்ஙனம் ஒப்பனை முற்றியபின்னர், அவளை நோக்கித் தோழியர், "கணவற்கு மெய்ம்முழுதும் இனிதாகிய கரும்பே! நல்லார் உறுப்பெலாங் கொண்டியற்றப்பெற்ற தேனே! இவ்வுலகில் இல்லாத மிக்க சுவையும் நலமுந்தரும் அமிர்தே! காம வேட்கையை விளைவித்து இனிய பண்ணைத் தோற்றும் மழலையாழே! கணவற்குச் செல்வந்தருந்

திருவே! நடை சிறந்த அன்னமே! சாயலுடையமயிலே! காலமன்றியுங் கேட்டோர்க்கு இன்பஞ்செயுங் குரலுடைய குயிலே! மன்னன் கண்மணிப் பாவையே! செவிலியர் கற்பித்த முறைதவறாமற் கூறும் பூவையே! மருண்டு நோக்கும் பிணைமானே! மெல்லிய அனிச்சத்தையும் அன்னத்தின் தூவியையும் மெல்ல மிதித்தாலும் வெம்மை பிறக்குமென்றஞ்சி, அவற்றை மிதியாத நின்னடியைப் பேணி வைத்து நடப்பாயாக!'' என்று வாழ்த்த அவளும் அங்ஙனம் நடந்தாள்.

திருமணப் பந்தரில்

தூய்மை சிறந்த நறுமணப புகைக்குடம் ஆயிரமாய், விளங்கும் பொற்றாண்க ளாயிரமாய், அழகிய குளிர்ந்த பந்தரிலே சமைத்த மணித்தூண் நாறுய்க்கொண்டு மாலை யாற் பொலிந்த திருமணப் பந்தரை வானவர் மகளென விரும்புமாறு இலக்கணை சேர்ந்தாள். அவளழகை நோக்கிய மன்னரின் கண்கள் ஒளி மழுங்கி அமையாராயினர்.

“நாம் இன்று கண்ணிறைற் கூற்றினைக் கண்டோம். அதன் இயலைக் கூறின் அழகிய செவ்வாய், ஒள்ளியநுதல், ஒருபிடி யிடை, மதர்வை நோக்குடைய பெருந்தடங்கண், தீஞ்சொல், ஆகிய உருவினையும் பெண்ணுடையையும் பேதை நீர்மையையும் உடையது. பிறர் மருளச் செம்பஞ்சி யணிந்த அளிய சிற்றடிகளாலே முடியிற் சிலம்பொலிக்கு மாறு மிதிக்க நோற்றான் சீவகனே! யாங்களெல்லாம் அதற்குத் தவம் செய்திலேம்'' என்று கூறி மன்னரெல் லோரும் மயங்கினர்.

இங்ஙனம் இலக்கணை யென்னும்—பூவுந்தியையுடைய அமுதயாறு, கோவிந்தனென்னும் பொற் குன்றிலே பிறந்து, கூர்வேலையுடைய சீவகனென்னுங் கடலிலே பாய வேண்டிப், பூங்கொடி நடங்கப் போந்து, குற்றமற்ற வேள்விச் சாலையாகிய மடுவிலே சிறிது பொழுது தங் கியது.

பூணணிந்த முலையின் சுமையைப் பொறுக்க வியலாத வருத்தத்தின் மேலும் நாண் அடுதலாலே இடை நடுங்கச் சாணளவாசு நீண்ட கண்கள் அலருங் குவளைபோலப் பொலிவு பெறும்படி நகை முகத்தைக் கையாலே மறைத்த தோற்றம் வானிடையில் அரவு சேர்ந்த திங்களைப் போன்றது.

**வேள்வி வளர்த்தல்**

முத்தை உமிழும் திரைகள் அங்கமாகவும், செறிந்த வடவை யங்கி முத்தீயாகவும், ஒத்தனவர்கிய கரைகள் வேள்வியாகவும் இங்ஙனம் ஒலி செய்யுங் கடல் நான்கும் நாணுமாறு வைத்த நான்மறைகளை நீந்தி, நற்றொழிலாகிய சாலிநெல்லை வித்தித் துறக்க வின்பத்தை விளைத்து வீடுணர்ந்த நீரராகிய அந்தணர், வேள்வித் திண்ணையிலே மணல், தருப்பை, சமிதை ஆகிய மூன்றினாலும் இயற்ற வேண்டியவற்றை யியற்றிப் பிரணீத பாத்திரம், புரோக்ஷணீ பாத்திரம் என்னும் இரண்டு மணியகலிலே நீர் பெய்து, ஆச்சியத்தாலி யென்னும் ஒரு மணியகலிலே நெய் பெய்து, பொன்னகலிலே புகை பெய்து, வைக்கு மிடங்களிலே வைத்தனர். பொற் கலத்தே நெற்பொரி நிறையப் பெய்து வைத்தனர். ஆன்பாலையும் நெய்யையுங் கலக்க வைத்தனர். அம்மியை வைத்தனர். பிரமனைத் தருப்பையால் முடிந்து வைத்தனர். மூன்று பொற்புரி வரையையுங் கீறினர். தென்கீழ்க் கோடியிலும் வடகீழ்க் கோடியிலும் பொய் தீர்ந்த ஆகார சமிதைகள் இரண்டையும் வைத்தனர். மந்திர முறைப்படித் தருப்பை நுனியை நறுக்கியிட்ட நெய்யைச் சிறு விரலாலே தருப்பையைச் சூழ்ந்து, அத் தருப்பையினாலே இருகையாலும் இடையறாமல் மும்முறை கழுவி, அதனைச் செந்தீயிலே யிட்டுத் தண்டிலத்தில் (ஓமம் புரிய அமைத்த இடம்) செந்தீக்கு அருகே வைத்தனர். சமிதை பதினாறையும் நெய்யையும் சொரிந்த அளவிலே சாண்மேல் எண் விரலகலமாகப் பரப்பிய தண்டிலத்தின் இடையிலே, அழற்கடவுள் அவற்றைக் கொண்டு, பொங்கி,

எட்டுத் திசையும் போற்றத் திருவிளையாட, வலமாகச் சுழன்று எழுந்தது.

**வேள்வி வலம்வரல்**

வெண்மையான துகிலில் தோன்றும் பொன்வட்டுப் போலக், கரையையுடைய முந்நீர்த் திரையிலே வியாழன் முளைத்த நேரத்தில், முழவும் சங்கும் முரசும் முழங்கி யார்ப்ப, வேலேந்திய மன்னர் ஆரவாரிக்க, அரசர் தலைவனை சீவகன் பொற்கலச நீரை அங்கையி லேற்றினன். அப்போது, நாகம் குளிர்மதியைக் கொண்ட கோளை விடுவிக்கின்றாற் போலத் தளிரனைய கோதையின் அழகிய தாமரைமலர் போன்ற முகத்தைச் சேர்ந்த ஒளிமிகு வளைக்கையை மாதர் விடுவித்தனர். செல்வன், அவள் இடக்கையைப் பற்றி எரியை வலங்கொண்டு பொற்கட்டிலில் ஏறினன்.

பின்னர், வானிலே தோன்றி விளங்கும் அருந்ததியைக் காட்டி, அறை வாயிலிலே பாலால் மலரடியைக் கழுவிய பிறகு, ஒளிவிடுங் கலத்திலே பாவைமார் ஏந்திய பாற்சோற்றைக் கண்ணாலே கண்டான். பின்பு, பொற்காம்பிலே முத்துவிதானம் புணர்த்தப்பட்டு, மணமலர் மாலை பல தாழ்ந்து, மணப்புகை விம்மிய மணவறையிலே அன்னத்தூவி பஞ்சி மயிர் முதலிய பதினைந்தாலும் படுக்கப் பெற்ற படுக்கையிலே புலி மயிலோ டமர்ந்திருந்தாற் போல அமர்ந்திருந்தான்.

**மணவறையில்**

தழைத்த கூந்தன் முடியையுடைய கொம்பனார், எலி மயிர்ப் போர்வையை வைத்து உருவு திரையை வளைத்தனர். அவ்வெலி மயிர்ப்போர்வை பனித்தலாற் பிறர்க்குக் குளிர் செய்வன; பஞ்சினும் மெல்லியன; நெருப்பின் கண் வேதற்குரிய மயிரை வேவாமற் குளிரச் செய்வன; தண்மையாற் கண் கொளாதனவாகும். மற்றும், வேற்கண் மங்கையர் மணியாற் செய்த வளையினையும் வெள்ளி

யாற் செய்த கைவினையையும் உடைய காளாஞ்சிகளை இரு வர்க்கும் பயன்படுமாறு இருபக்கத்திலும் வைத்தனர்.

அழகிய கருங்காலி மரத்தைச் சீவி யூறவைத்துக் காய்ச்சிய செங்குழம்பிலே கலந்த காயும், செம்பழுக்காயும் தேன்போல மெய்ம் முழுதையுங் குளிர்ப்பித்த இனிய நீரை யுடைய பசுங்காயும் ஆகிய இம் மூன்றையுங் கூட்டிக் கருப் புர முதலியவற்றைக் கலந்து வைத்தனர். அவற்றுடன் கை செய்யப் பெற்றுக் கமழுஞ் சுண்ணும்பும், உறைக்கும் வெள்ளிலையும் பெய்த பொற் செப்பை வைத்தனர். மாலை யிட்ட பெருமணிச் செப்பும், சுண்ணப்பொடி குற்றமறப் பெய்த பவளச் செப்பும், தாமம் அணிந்த கத்தூரிச் செப் பும், கலன்கள் பெய்த சலஞ்சலவடிவான செப்பும், தூய துகில்கள் வைத்த வலம்புரிச் செப்பும் ஆகியவற்றைக் காம முண்டாகும் இயல்பை நன்குணர்ந்த தையலார் காமவல்லி வளர்ந்ததே போல்வாள் ஆகிய இலக்கணை விரும்பும் பிற வற்றையும் ஏந்தினர்.

சீவகனாகிய கொழுவிய நீரையுடைய கரியமேகம் விரி கதிர் ஆரமாகிய மின்னை மின்னித், தாரெனும் இந்திரவில்லை வளைத்துப் பெய்த காமமாகிய மாரியாலே இலக்கணையின் உள்ளமாகிய பெரிய குளம் நிறைந்து, வாட்கண்ணாகிய கலிங்குகள் மையாகிய அமைந்த சேற்றினைச் சிந்தித் திறந் தன. அவள் காம இன்பம் ஆரத் துய்த்தலால் நைந்து பூக்கொய்து துவண்ட கொம்பைப் போன்றாள். அவள் வாட்டந்தீரப் பணிமகளிர் பவளத்தைக் கடைந்து அடியிலே ஏற்ப முத்தழுத்தித் தொழுதல் தகச் செய்த காம்பினை யுடைய, பொற்றகட்டை நறுக்கி விளிம்பிலே சேர்த்திப் பீலியிட்டுச் சிச்சிலியின் சிறகு நாணவகுத்த சந்தன ஆல வட்டத்தாலே வீசிக் குளிர்ப்பித்தனர். சீவகனும் சந்த னத்தாலே அவள் மார்பிலெழுதி மலரைச் சூட்டிக் குளிர்ப் பித்தான். இதனாற் கூட்டத்திற்கு நேர்ந்த இடையீடு பொறுது புலந்தவளை அடிதொழுதான். மகளிரும் குரல், யாழ், தாளமென்பவற்றுடன் பாடினர். அப்பாட்டினைக் கேட்டு, ஒரு பவளக்கொடி பவளத்தையும் முத்தையும்

பூத்ததொரு தன்மை பெற்றனள். இங்ஙனம் அவளுடல் தீர்த்துக் கூடினன்.

மயிர்களையுஞ் சடங்கு

இனி, வரைமார்பன் இலக்கணையுடனே கூடி நான்காம் நாள் செய்துகொள்ளும் மயிர் களையுஞ் சடங்கினைக் கூறுவோம்.

மலையுச்சியிலே வளர்ந்து முற்றின மூங்கில்கள் இப்படி அழகுடையனவல்ல என எழுதினவற்றை நட்டு விளிம்பிலே கச்சணிந்த தொழிற்பாடுடைய கம்பலமாகிய விதானத்தை நாக ருலகென்னுமாறு விரித்தனர். முத்தையுடைய கொம்பும் மத்தகமுமுடைய யானை இரண்டருகிலுமுள்ள திருமகளின் வடிவம் பொருந்தப் பொற்றுகளாற் கோலஞ்செய்த—நூன்முடி வுணர்ந்தவர்கள் எண்முழ அகலமாக இழைத்த மண்டபத்தை அமைத்தனர். அங்கே, வேற்கண் மடவார் உழுந்து, பயறு, உப்பு, அரிசி, அப்பம், அருங்கலங்களைக் கொழுந்துபடக் கூப்பி, ஆயிரம் மரக்காலிலே செந்நெல்லை வளம்பெற நிறைத்து, அவற்றிலே அறுகை யணிந்தனர்.

சில மங்கையர் செங்கயலிரட்டை, சாமரை, விளக்கு, கண்ணடி, கொடி, முரசு, தோட்டி, நிறைகுடம் என்னும் மங்கலப்பொருள்களெட்டையும் மணியாற் புனைந்தேந்தித் தென்கிழக்கிலே நின்றனர்.

வெள்ளிய வடிவையுடைய மாலையணிந்த மகளிருவர் மின்போல் ஒள்ளிய வாளை யுருவியவாறு வடகிழக்கிலே நின்றனர்.

கள்ளையுடைய அழகிய மாலையணிந்த சிலமகளிர் உழுந்து பெய்த அகலையும் ஏந்தி, அன்பினால் நெஞ்சுருகத் தெய்வத்தை நோக்கித்தொழுது தென்மேற்கே நின்றனர்.

மூங்கிலரிசி, மலர், நீர், அறுகு முதலியவை துளும்பும் மணித்தால்ங்கள் வடமேற்குத் திசையிலே நிறைந்திருந்தன.

வரையகலத்தைச் சீர்நிறையத் திருத்துதற்கு வார முறைமையாகத் திருமகள் நோக்கும் பொற்கருவி பஞ்சி யின்மேலே வடதிசைக் கண்ணே யிருந்தன.

பால் நுரையினைப்போலும் அணையிலே பைங்கதிர் களைப் பரப்பி இரவி திங்களொடு சார்ந்திருந்ததைப்போல வேலனைய கண்ணியுடன் மன்னர்பெருமான் இருந்தனன்.

குளநெல் காயும் முன்றிலின் கண்ணே கனி தேனைச் சொரிகின்ற சோலையில் மணி எரிய, அதனைத் தீயென்று கருதிய இளமந்தி கையைக் காய்ச்சுதற்கு நாடும் வனத்தில் இருந்த முனிவன் ஒருவன் சாபத்தினால், சுற்றத்தை நீங்கி நாவிதனாக வந்து தோன்றினான். ஆய்ந்த கேள்வியையுடைய அவன் மரபிலே பிறந்தவன், தொக்க நூற்கேள்விமுற்றக் கற்றவன், அலங்காரமென்னும் ஒரு நூலையும் எழுதியவன், அரசனாலே வரிசையுடனே யானையும் பெற்றவன், அழகுடையவன், தன் தொழில் மிகுதியால் நாவிதர்க்கேறு போன்றவன், வித்தகன் ஆகிய அவன்—பாவைபோல்வாள் ஒருத்தி முத்துவடமும் பூணும் நிழல்விட்டுத் தாழ ஒளி விடுங்குழைகள் காதில் ஊசலாட வந்து கரகத்திலிருந்து நீரைச்சொரியப் பாங்குடன் வாய்பூசி, வேந்தனை வணங்கி னான்.

'அரவின் நோக்குப்போல நின்பகைவரை நடுங்க நோக்கி, வச்சிரவண்ணனாகிய குபேரன்காக்க ஊழிகாலம் வாழ்வாயாக!' என்று அறுகையும் அரிசியையுங் கைக் கொண்டு, மன்னன் அடியினும் முடியினுந் தெளித்து, இலக்கணையின் உச்சியினுந் தெளித்தான்.

பிறகு, நூன் முறைப்படி வாக்குண்டாகப் பொன்னாற் செய்த மங்கலமான கத்தியை யெடுத்து நல்ல முழுத்தத் திலே அரசனின் வலக்கவுளிலே உறுத்தி, அகிற்புகை மணக்குங் குழலாள் இலக்கணையைக் குறித்து நோக்காமற் சிறிது நோக்கி அவளுடைய இடக்கவுளிலே உறுத்தினான். பிறகு, உறுத்தின அப்பொற் கத்தியை வைத்துவிட்டு, இரும்பும் எஃகும் ஓரளவாகக் காய்ச்சிய மயிர்க்கத்தியை,

மதிப்பாகம்போல விளங்குங்கல்லிலே தீட்டிப், பூவை அக் கல்லிலே நிறுத்தித், தன் தொடையிலே வைத்துப், பின்பு துகிலினில் துடைத்துத், தன் கையிலே தூயதாகப் புரட்டி, உற்றது தெரியாதவாறு முகத்தைத் தீண்டினான். ஏற்றியும் இறக்கியும் இடையொற்றியும் சந்தனத்தைப் போற்றிப் பூசுகின்றானென்னுமாறு ஒதுக்கி முகத்தைக் கோலஞ் செய்தான். அதனால், முகம் ஞாயிறுபோல விளங்கிற்று.

மலர்மாலையின் சுமையினாலும் இயல்பாகவுள்ள நாணத் தாலும், நாவிதன் முகத்தை நோக்குகின்ற இளிவரவாலும் தன் அடியை நோக்கிக் கவிழ்ந்த முகத்தை ஏதமிலையாம்படி மெல்ல நிமிர்த்தினாள். நாவிதன் ஒள்ளிய நிறமுடைய சிச்சிலிப் பறவைக்கு வெருவிய கயல் இரிந்தோடுதல்போல இணையாகிய கண்மலர்கள் வெருவிநிற்க, வானிற் குலாவிய வில்போன்ற புருவங்களைத் திருத்தினான்.

பின்னர், அந்த நாவிதன் மயிர்க்கத்திகை நீக்கிவிட்டுக், கத்தரிகையாற் செய்யுந் தொழிலை முறைப்படியியற்றி, மன்னன் திருவடிகளை வணங்கி வாழ்த்தித் தாருங்கண்ணி யும் அணிந்து நீங்கினான்.

**நீராடிப் புனைதல்**

அன்னப் பெடையை அஞ்சுவித்து இளைத்து நடக் கின்றாளென்று பிறரைத் தெளிவியாத நடையாளும், மன்ன ரின் குடையை அஞ்சுவிக்கும் வெள்வேலேந்திய வீரனும், வேந்தர்கள் மின்னும் மணிக்குடத்தே நீரையேந்த நீராடி, மலரும் துகிலும் சாந்தும் புனைந்தனர்.

**கடிமணப் பள்ளியில்**

மாரி நீரைச் சுமந்து உலகை வலமாக வந்து உயர்ந்து, சுடுமண்ணிலே சொரிய நிமிர்ந்த நறுமண ஆவிபோல நாறும் தளிர்மேனியும், துடிநுண்ணிடையும், பெருந் தோளும், துவர்வாயுங் கொண்ட பேதையை மலர்மார்பன் மலர்நிறைந்த கடிமணப்பள்ளியிலே தழுவிக் களித்துக்

காமக் கடலாழ்ந்தான். இலக்கணையோ, தன்னை விழுங்கிய மேகத்தைவிடாமல் தழுவிய மின்னுக்கொடி போன்ருள், இருவரும் தம் உடம்பு இது என்று உணரும் உணர்வறியாமல் ஒருவர் மெய்யிலே ஒருவர் மெய்மயங்கிக் களித்துச் சேக்கையிலே காமனின் அம்பணையிலே வைகினர்.

அப்பொழுது அவளுடைய மெய்யழகை நோக்கி மகிழ்ந்து கண்ணிமையாமற் காதலித்து நோக்குதலால், அவன் கண்கள் கரிந்து நீர் பெருகியது. அதனைக்கண்டு அவள், 'இதனைக்கேள்! பிறரை நினைந்தழுபவரைக் கூடுதல் அறியாமையாகும்,' என்று கூறிக் கண்கள் சிவக்கச் சீறி நோக்கினுள்; மெய்யினிற் சாந்தையழித்தாள்! மாலைகளைப் பிய்த்தெறிந்தாள்! அணிகலன்களைச் சிதறினுள்! செம் பொன் ஆழி மணிவிரல் நெரித்தாள்! விம்மினுள்! புருவங்கள் ஏறியும் இழிந்தும் முரியும்படி நொந்து, தாமரை மலரனைய முகம் வியர்த்து நின்ருள்.

அவளூடலைக் கண்ட சீவகன் வேருேருபாயத்திற்குச் சிறிதும் ஆறுதலடையாள் என்றுணர்ந்து, 'என் ஆவியிற்றதே!' என்று, அவளுடைய செம்பஞ்சியூட்டிய சிற்றடியைத் தழுவிக் கிடந்தான். அவளுக்கும் ஊடல் நீங்க வேண்டுமென்னும் எண்ணமுண்டாயிற்று. எனினும், முற்றும் நீங்காமல், சிவந்த தாமரையிலே கருமுத்தம் பொழிவதுபோற் கண்கள் மைகலந்த கருநீர்த்துளிகளைச் சிந்தின.

அவள் மனம் இரங்கியதுகண்டு, இனி மொழிதற்கு இடமுண்டாயிற்றென்றெண்ணி, 'நீ பணிந்த அணிகலன் நின்னைச் சார்தலாற் குலவி அழகின் கொழுந்தை யீனுவதற்குக் காரணமான கொம்பே! நின்னைவிடாமல் நோக்கியதாற் கண்கரிந்து நீர் பொழிவதை நீயறியாமல் மறைக்கவொண்ணுமோ?' என வினவினுன். அதற்கவள் தன்னுள்ளம் வெளிப்படாமல் நிறுத்தி விடைகொடா திருத்தலின், நிறையழிந்து, 'தேன்காள்! வண்டுகாள்! யான் முற்பிறப்பிற் செய்த தீவினையின் விளைவை நமக்

கன்றி வேறியார்க் குரைப்பேன்? நீங்கள் நங்கையின் காலை வருடி வரந்தருமாறு கூறுமின்,' என்றான்.

ஆண்டிருந்த பூவையுங் கிளியும் அவன் கூறியதைக் கேட்டுக் கூட்டின் வாயிலே முகத்தைவைத்துப் பார்த்தவாறு, தமக்குள்ளே, 'பறவைகளாகிய நாமும் நம் சேவல் இங்ஙனம் வணங்கி ஊடல் தீர்க்குமிடத்துத் தகாதென்று மனமுருகி யிறந்துப்படுவோம். இவளோ, சிறிதும் இரங்கிலாள்! இவள் மனம் கல்லோ? இரும்போ? அறிகின்றிலோம்,' என்றன. மற்றும், 'நங்கையே! பாவையே! இவன் சிறிதுந் தவறிலன். இனி நீ அருள்வாய்!' என வேண்டிக்கொள்வோம் என்றுங் கூறின.

அப்பறவைகளிற் பூவை கிளியை நோக்கி, "யான் இனி நமக்குக் கிடைக்கும் பயன் கருதிக் கூறுகின்றேன். பேதைக் கிளியே! யாம் கிடைத்த சோற்றை யுண்டு நாடொறும் கூட்டிலே பிணிப்புண்டு வருந்திக் கிடக்கின்றேம். இத்தகைய யாம் இவட்குச் சீற்றம் நீங்க அறிவுரை கூறின், இப் பொற்றொடியாள் மூன்று நாட்கள்வரை உணவினைக் காட்டாள். ஆதலால், நின் வாயைப் பொத்தியிரு!" என்று கற்பித்தது.

எனினும், நற்பண்புடைய கிளி, பூவையின் மொழியைக் கேளாமற், "பரத்தையரே சூழ்ச்சியால் தேனைவாங்கும் கோதைபோலப் பொல்லாதவராவர். வேல் தைத்து நின்ற களிறுபோலக் கணவன் வருந்தவும் நெஞ்சுருகாமல் இருக்கிறாள். கணவன் செயல் பழியையுடையதாயினும், அது தீர அடிபரவினவனுக்கு வரங்கொடுத்தல்வேண்டும். அவ்வாறு செய்யாமையின், நிகழும் இதனைக் கண்டு உயிர் வாழேன். யானும், இவ்வாறு மயங்கியவள். என்னைப் பெற்ற தாயெனக்கொண்டிராமல் நான்றுகொண்டு சாகக் கடவேன்," என்று கூறி நூலாலே கழுத்தை யிறுக்கியது. இலக்கணை இதனைக் கண்டு இதனுடைய அன்புடைமையாலே மருண்டு நகைத்தாள். அவனும், அது கண்டமைந்து, 'வரம்பெற்றேன். கிளி வாழிய!' என்று கூறி அவளைத் தழுவி அழகைப் புகழ்ந்தான் :

"நீலமே! நீ இவள் கண்ணைப்போலாக வேண்டுமென்று நிறைநீர்ப் பெருங்கடலிலே ஒரு காலாலே நின்று உயர்தவம் புரியினும் இவ்வரிவையின் கண்ணை ஒவ்வாமல் நின்றனை. இஃது உண்மையென யான் தெளிவிக்க வேண்டா. இங்ஙனம் ஒவ்வாதிருக்கவும் களித்து நாணமின்றி நகுகின்றாய். நின்வண்ணம் கரும்புறம் அல்லவோ? அது நினக்குத் தகும். கள்ளுண்பார் சேரியிலே நிற்றலின் இக்குணம் பொருந்தியதுபோலும்!" என்று புகழ்ந்தான்.

பிறகு, அவள் கிளியை நோக்கி, 'நங்கையே! நீ வணக்கமிகு சொல்லாலே வளைத்து எம்மை அகப்படுத்தல் வேண்டா. கிளி பூவையென்னும் மாண்பிலாரை வளர்ப்பார் எத்தகைய இளிவரவும் பெறுவார்,' என்று நகைத்துக் குன்றனையானுக்கு நகைமுக அமுதத்தை யீந்தனள்.

**உலா**

இவ்வாறு ஏழு நாட்கள் கழிந்தன.

எட்டாம் நாள் ஒப்பனைசெய்யும் மகளிர் சீவகனுக்கு மலர்சூட்டும் சுண்ணமும் அணிந்து, சிந்தூரப்பொடியைப் பூசி, ஒள்ளிய பொன்னூலையும் தாரையும் பூட்டிக், குண்டலமும் அழகுறப்பெய்த பிறகு, முத்துவடத்தையும் இட்டனர். பின்னர், ஆனிரை நடுவே ஏறனைகிய அவன் பால்நுரைபோன்ற புத்தாடை புனைந்து, மானிரை மருளும் நோக்கினராகிய மகளிரின் ஊனையும் உயிரையும் உண்ணும் ஒருவனானன்.

சுநந்தையின் மகனாக முன்னர் உலகத்தாற் கருதப்பட்டவன் இப்பொழுது, பொன்முக படாத்தினையும் மும்மதத்தினையும், அனந்தனெனும் பாம்பனைய நீண்ட கையினையும் உடைய யானைமீதமர்ந்தான். அப்பொழுது, கவரிகள் வீசப்பெற்றன. சங்குகள் ஆர்த்தன. அவன் ஏறிய யானை சூளாமணியென்னும் பெயரினது; பெரிய பிடிகள் நூறுசூழப் பெருவரைபோல் நிற்பது; கரும்பும் நெல்லுந் தின்று கருப்புரம் அணிந்த கந்திலே பிணைக்கப்பட்டு

நிற்பது. அத்தகைய யானையின்மேல் மன்னர் வணங்க அவர்கள் முடிமீது காலைவைத்து ஏறிய அவன் பொன்னாலே சட்டத்தைச்செய்து, வெள்ளியாலே வேய்ந்து, வைரத் தாலே வட்டத்தை நிறைத்து, அதன்மேலே முத்து மணி களையழுத்தி, விலையிடற்கியலாத முத்துமாலைகள் விளிம் பிலே நாற்றப்பெற்றுப் பவளக் காம்பையுடையதொரு குடைநிழலிலே பருதியைப்போலக் காணப்பெற்றான்.

மடலையுடைய பனங்குழாம்போலே பிச்சங்கள் நிரைந் தன. மன்னர்கள் களிறுகளில் ஏறிப் பக்கத்திலே சூழ்ந்து கவரியை வீசப் பலவகை இயங்களும் ஆர்ப்பக் கடல்போலப் படைவெள்ளஞ்சூழ மறுகிலே வந்தான். அமரிடை முழங்கி அடிநிலம் அறுதலை அருவருத்துப் பிடரிமயிர் சிறகாகத் தோன்ற எழுந்து பறப்பனபோலப் பாய்ந்துசெல்லும் பரிகள் மழைத்துளிபோல எண்ணற்றுப் பரவின. பொற் றேர்கள் நிறைந்தன. இடைநிலமின்றி யானைகள் ஈண்டின. காலாட்கள் சூழ்ந்தனர்.

அப்போது நகர மக்களெல்லோரும் இலக்கணையின் கணவனைக் காணப்போந்து, வானம் கடலிலே பெய்த ஒலி போலத் திரண்ட அரவத்துடன் தெருக்களில் ஈண்டுதலின் நகர் பொலிவுற்றது.

ஒள்ளிய இலையையுடைய சூலம் தெளிந்த நீர்நிறைந்த முகிலைக் கிழிக்கும் மாடத்திற்கட்டின கொடித்திரள்களா லும் வளமிகு நறுமணப் புகையினாலும் தெள்ளிய சுண்ணப் பொடியாலும் தேனையுடைய மலர்த் துகளாலும் கதிரவன் மறைபடுதலின் பறவைத்திரள் பகற்பொழுதைக் காணமல் வருந்திக் கூட்டினைச் சேர்ந்தன.

ஊடின மகளிரின் மேகலையைக் கணவர் பற்ற, நூலற் றுச் சிந்தின மணிகளை நெருப்பென்றஞ்சிய அன்னப்பற வைகள் நிலத்தையடையாமற் போயின. அவற்றை யிந்திர கோபப்பூச்சியென எண்ணிய மயில்கள் குத்தி, அவையல்லா மையால் வருந்தின. அந்நிலை கண்ட அம்மணிகள் நகைத் தாற்போலக் காணப்பெற்றன.

**உலாவினைக் கண்ட பொதுமகளிர் :—**

**வேட்கை பிறவாப் பருவத்தார்**

சீவகன் வரவைக் காணவந்த பேதைப் பருவமகளிர் தம் பிள்ளைத் தன்மையாறே வெள்ளைநோக்குடன் காண்டற்குக் காதல் மிகவும், கிண்கிணி மிழற்றி யார்ப்பவும், பொற்றோடு பிறழ்ந்து வீழவும், துள்ளிச் செல்லுந்தோற்றம் காமவின்பத்தை நுகர்ந்தறிதற்குக் காமனே பெண்ணாய்ப் பிறந்தாற்போன்றார்.

**வேட்கை பிறக்கும் பெதும்பையர்**

பெதும்பைப் பருவ மகளிர், காமன் தன்னெறி உலகிலே முன்னரே வளரும்படி மகளிரின் முலையிரண்டுமோங்கி வளர்கின்றாற்போல அரும்பிய முலைகளிலே முத்தத்தை யேந்திப், பொன்னிலே வந்து தாக்குகின்ற நீலமணிபோலக் குழல்பொங்கி முதுகிலே புடைக்கும்படி ஓடி மனம் கலங்கி நின்றனர்.

**வேட்கை பிறந்து மயங்கினர்:** (மங்கையர் முதலியோர்)

ஒளியை வீசும் மணிமாலையையுடைய மங்கையர், அழகிய நிலவுவீசும் முற்றம் தாம் நீங்குவதால் வறிதாக ஓடிவந்து, துண்டமான பிறைபனைய நெற்றியையுடைய தோழியைத் தழுவிச் சீவகனை நோக்கி மயங்கி நின்றவர்கள், ஒளியை வீசும் பொற்கொடி மணியைப்பூத்த தன்மையைப் போன்றனர்.

கூரிய நகத்தால் எழுதின சந்தனத்தையுடைய அழகிய முலைகள் தம்மை நோக்கினாரை உயிருண்ணுங் கூற்றுவனைப்போல நோக்கிக் கண்கரிந்து விம்ம, ஒரு கையினாற் குலைந்த கூந்தலையேந்தி, நள்ளிருளிலே விளக்கிட்டாற் போன்ற ஒளியுடன் நிறைந்தனர். அவர்கள் அணிந்த மேகலைகள்ளை மறைந்துண்ணும் மக்கள் தாம் கரப்பினும் வெளிப்பட்டு விடலைப்போல வண்ணப் பட்டிலே ஒளித்துக் கிடப்பினும் சிறிது தோன்ற, அவர்களின் கண்கள் சீவக

னுடைய புதிய அழகை மறைந்திருந் துண்ண மாலையணிந்த பவளக் கொம்பைப் போல நின்றனர். அவர்களுடைய படாமுலைகள் பெரும் பொருளையும் அறநெறிச் செங்கோலையும் உடைய பெருமகன் ஆக்கம்போல மார்பிடமெங்கும் நிறைந்திருந்தன. அவர்களுடைய இடையோ பொருளாகிய அறவுரை கேளா அரசனைப் போலச் சுருங்கி நைந்து வருந்தின. திங்கள் பலவும் முகிலிடைத் தோன்றிய மின்னை வீசுங் குண்டலமும் பொன்னோலையும் அழகிய நெற்றிப் பட்டமும் அணிந்து, இருளைச் சுமந்து, நிலத்தைப் பூத்து நிரைத்தனபோல அவர்களுடைய முகங்கள் விளங்கி மேனிலத்தே நிரைத்தன.

சில மகளிர் செம்பாதி குறையாகப் பூணணிந்திருந்தனர். அவ்வளவிலே சீவகன் வந்து விட்டதால், முன்னரே அவற்குக் கொடுக்கக் கட்டி வைத்திருந்த கோதைகள் தம்மிற் பிணங்க ஓடிச் சென்று செம்பாதியணியாத நாணத்தாலே ஒரு பாதி மறைய நின்றவர்கள் அண்ணல் ஒரு பாலிலே கொள்ளப் பெற்ற மங்கையைப் போன்றனர். சில மகளிர், அவனைக் காணும் விழைவின் விரைவினாற் கூந்தலில் அணிய வேண்டிய பொன்னரிமாலையைக் கழுத்தி லணிந்தவாறு, கூந்தலில் வைத்துக் கொண்டதாகக் கருதி, அது நீங்கலாகவே கூந்தலை முடித்துக் கொண்டனர். பிறகு கண்ணாடியைப் பார்த்தவுடன் உண்மையுணர்ந்து நாணிப் பொன்னரிமாலையை யெடுத்துக் கூந்தலிலே அணிந்து சென்றனர். இக் காலக் கடப்பால் இடங் கிடைக்காமல் வருந்தினர். இவர்கள் கண்ணாற் சீவகனைக் கண்டு காமத்தீயின் கொத்து நின்று எரிந்து சுடுதலால் மார்பிடமெல்லாம் வேங்கை மலரையும் பொன்னையும் வித்தினாற் போலும் பசலை சுடர்ந்து விளங்க நின்றனர்.

**கற்புடை மகளிர்**

தம் அழகிய கை சிவக்கும்படி உகிரைச் சீவிப் பஞ்சாலே சிவப்பூட்டி, அகில் மணக்கும் அலங்கலை யணிந்து, மாவடுவனைய கண்கள் கயல் சின்னீரை யெதிர்ந்தாற்போல

உவகைக் கண்ணீரரும்ப, முகிலிடை மின்னென நோக்கி இவ்வரசனைக் காவலனுகப் பெற்றேமே யென்ற மகிழ்வுடன் இடைதுவள நின்றனர்.

சில மகளிர் முனிவர்களின் தலை போன்ற தலையையும் கண்ணியையு நெற்றியிலே உடைய சிறு பிள்ளைகள் சேர்தலாலே ஈன்றணிமையாற் பாலூறித் தேமாவின் வடுவை ஒடித்தாற் போலப் பிலிற்றிப் பாயும் முலைகளுடன் கண்ணை ஒருக்கணித்து நுனித்து நோக்காமல் நாணி நின்று கற்பகப் பூங்கொம்பு போன்றனர்.

சில மகளிர் விளக்கமான அணிகலன்கள் ஒளிவிட, முல்லை மாலையணிந்த கூந்தல் சோர, விலக்கப்பட்ட காம மில்லாதவராய், 'இனி மேலும் எடுக்கும் பிறவியெல்லாம் நீ காக்கும் உலகிலே இங்ஙனம் இனிது வாழ்வேமாக' என்று நினைத்துச் சுவரிலே தீட்டப்பெற்ற இனிய பாவை போல நின்றனர்.

இங்ஙனம், நாகரும் பொன்னுலகத்தவரும் பரவி வந்து விரும்பி நிற்பவர் போலே, நகரமெங்கும் தேன் கமழும் அலங்கலும் மாலையும் ஒளிவிடும் இழைகளும் நிறைந்து மயங்கி வாயிலெங்கும் குவளையுந் தாமரை மலரும் பூத்து முகில்கண்ட மயிலன்னாரும் மைந்தருங் கலந்து நின்றனர்.

கோதைகள் நாற்றப்பட்ட குடையின் நிழலில் வைகும் சீவகன் ஞாயிறுக நாற்காதமளவும் அகன்ற நகரமாகிய பொய்கையெங்கும் மாதரார் முகங்களாகிய தாமரைகள் மலர்ந்தன. அவற்றிற் கண்களாகிய குவளைகளும் பூத்துப் பேதுறு கின்றனபோற் காணப் பெற்றன.

கற்புறு மகளிர், 'வீரமகளும் திருமகளும் நின்னை விட்டுப் பிரியாம லுறைதலின் தாம் பெண்மையைப்பெற்ற ஊதியத்தை யடைந்தனர். அவர்களினுங் கற்பின் மேம்பட்ட யாமும் நின்னை அரசனுகக் காணப் பெறுதலின் இன்று கண்பெற்ற பேறும் பெற்றேம். நீ முந்நீரும் நிலமும் பெற்ற ஆயுளைப் பெற்று மன்னுக!' என்று சீவகனை வாழ்த்தி அவன்மேற் பூமழை தூவினர்.

**பொது மகளிர்**

பிறமகளிர், சீவகன்மேற் சுண்ணத்தை வீசிச் சொரிவார்; வணங்கி மாலையை வீழ்த்துவார்; சந்தனமும் நீருங் கலந்து தேன் துளிக்கும் அழகிய பூப்பந் தெறிவார்; வளைகள் ஒலிப்பக் கண்ணிகளை யெறிவார்; பசுங் கூட்டையும் பனிநீரையும் சேர்த்துத் துருத்தி முதலிய கருவிகளாலே தெளிப்பார்; நம்பி முன்னர்ச் சூரைத் தடிந்த முருகனே என்பார்; ஐங்கணைகளையுடைய காமனே போலும் என்று வருந்துவார்; கந்துக்கடன் வளர்த்த சிங்கம் இவன் என்பார். அவர்கள் உள்ளங்கள் களித்தன.

சில மகளிர் வண்டுகள் முரலும் கழுநீர் மாலை தாழும்படி சீவகனுடைய ஒளிவீசும் முடியும் திருந்திய பட்டுடையும் தம்மை விடாமற் பிணிக்கும் கயிறாகக் கருதி நின்று தம் கண்ணாலே காமத்தைக் கூறி வேண்டுவர். சில மகளிர், 'வண்டு முரலுந் தாரான் அழகைக் கண்டபிறகு, என் மாமையும் கை வளைகளையும் கண்டிலேன்,' என்பார். சில மகளிர், 'ஒண்டொடியே! இவன் உருவைக் கண்டு வாழ்வாராகிய மகளிரே சாலவுந் தவமுடையராவர்,' என்பார்.

சிலமகளிர், 'கொழித்து ஒலிக்கும் கடலை வேலியாகவுடைய உலகப் பெண்டிருள் சீவகனைப் பெற்ற விசையை செய்த தவமே உலகினை விளக்கி விளக்கிட்டது,' என்பர். சிலமகளிர், 'அற்றன்று; தேன்பிழியையுடைய கோதை--சுழித்து நின்று மாறுத கற்பினையுடைய—சுநந்தையே பெரியளாக நோற்றாள்,' என்பர்.

சிலமகளிர், 'சந்தனமணிந்த மார்பு கிழியுமாறு அழுந்தத் தழுவிடும் நங்கையரே நல்வினை செய்தவர், அல்லாதவர் நங்கையரல்லர்; கூந்தல் முதலியவற்றைச் சுமந்து வருந்துதற்கென்றே பிறந்த பொய்த்தோற்றமுடையவர்,' என்பார்.

சிலர் இடம்பெற அகன்று நீண்ட பெரிய மலர்த் தடங்கண்களென்னும் குடங்கைகளாலே முகந்துகொண்டு பருகுவார். சிலர், 'குவளை முற்றும் மலர்ந்ததொரு

கொம்புபோலே உடம்பெலாம் நிறைந்த கண்களாயின், வேறெவர்க்கும் இன்றி, இவன் மெய்யெலாம் அடங்க அக்கண்களிடத்தே வந்து நிறைய அதனை யிட்டுவைத்து நுகருங்கள். அன்றி, இவ்விரண்டு கண்களாலும் நுகர வியலாது,' என்பர்.

**மாந்தர்**

'சிலர், 'யாளி முலையைவிட்ட அன்றே யானையின் தலை நிலத்தே புரள, அதன் கோட்டை வாங்கி யுண்டதே போலத், தன்கையிலே வில்லேந்திய அன்றே பகைவரை வென்ற நம்பியின் குடைநிழலிலே இவ்வையகம் உறங்குக!' என்பர்.

சிலர், 'இவன் இந்நகரச் சுடுகாட்டிலே பிறந்தவாறும், தன் குலத்திற்கு ஒப்பாகாத வணிகன் இல்லத்திலே வளர்ந்த வாறும், தம் ஒழுக்கத்திற்கு உவமையில்லாத அரசர் தொழப் போந்தவாறும் கண்டால், நல்லறிவுடையோர் தவஞ் செய்யாதிருப்பது எங்ஙனம்?' என்பர்.

சிலர், 'பெருமையாக முழங்குந் திரையையுடைய கடலையும் மலையையும் நீந்தி வருந்தினும் ஒருவனுக்குத் திருமகள் அருளின்றேற் பொருளீட்டம் இல்லை. ஒரு முழமும் செல்லுதல் இலராயினும் அவர் திருமகள் அரு ளுடையராயின் பொருள் தானே வழிவினவி உழந்து அவரிருந்த ஊர்க்கே வரும். ஆதலால், தவம் வாழ்க,' என்றார்.*

சிலர், †'நஞ்சைப் பருகினும் தவம் இருந்தால் நவை யில்லை. (ஏனெனிற் கட்டியங்காரன் சச்சந்தனைக் கொன்

---

*" பெருமுழங்கு திரைவரைகள் நீந்திப்பிணி யுறினும்
திருமுயங்கல் இல்லையெனின் இல்லைபொரு ளீட்டம்;
ஒரு முழமுஞ் சேறலில ரேனும்பொருள் ஊர்க்கே
வரும்வழிவி னையுழந்து வாழ்கதவம் மாதோ."

†" நஞ்சுகுடித் தாலும்நவை யின்றுதவம் நின்றால்;
அஞ்சியொளித் தாலுமரண் இல்லைதவம் உலந்தால்;
குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வர்தவம் மிக்கார்;
அஞ்சலிலர் என்றும்அற னேகளைகண் என்பார்."

றும் அரசாண்டிருந்தான்) தவம் அழிந்ததெனில் அஞ்சி ஒளித்தாலும் அரண் இல்லையாகும். (ஏனெனில், தவம் உலந்த கட்டியங்காரன் தாமரை வியூகத்திலிருந்தும் இறந்தான்) தவம் மிக்கார் யானையின் கோட்டிடை யகப்படினும் உய்ந்துபோவர். (எங்ஙனமெனிற் கட்டியங்காரன் சீவகனைத் தன் களிற்றுக்கிட முயன்றும் சீவகன் தப்பினான்) எனவே, அறனே ஆதரவென நம்பினோர் அஞ்சலிலர்,' என்பர்.

**அருகன் கோயில் வழிபாடு**

வளைந்து நிலத்தே தழுவிக்கிடக்குந் தாழையின் அரும்பு அலருங் கரையையுடைய கானலிலே சங்கு முத்தையீன்று கவலையின்றித் தானேபோய் மேயுங் கடலையுடைய சீவகன் இங்ஙனம் நகர் வாழ்த்தச் சென்று பொன்மதில் சூழ்ந்த மணங்கமழும் அசோகினீழலிலே அமரும் அருகப் பெருமான் கோயிலை நோக்கிச் சென்றான்.

அருகே நின்று மயில் அகவ, அன்னம் ஏங்க, குயில் கூவக் குருகினம் முட்டையிடும்—வளைந்த முள்ளையுடைய தாழை தன் வெண்மையான இதழ்களிலிருந்து தேனாகிய சுமையைச் சொரியும்—மலர்கள் நிறைந்த காவிலே படைகளை நிறுத்திய கனைகழலான் அருகப் பெருமானின் கோயிலை யடைந்தான்.

அங்ஙனம் அடைந்தவுடன் கதவுகள் திறந்தன; திசைகளெங்கும் மணம் பொருந்தி நிறைந்த அகிற் புகையால் மறைந்தன. அவ்வளவிலே மன்னன் வலம் வந்து, 'பிறவாத நின்னைப் பெற்றேனாதலின், இதற்கு முன்பிறந்த யான் இனிப் பிறவேன்,' என்று முடிதுளக்கி இறைஞ்சி ஏத்தித் தொழுதான்.

**தேவபாணித் தாழிசைக் கொச்சக ஒருபோது**

"திருமறு மார்பனை திலகமுக் குடையினை
அருமறை தாங்கிய அந்தணர் தாதையை
அருமறை தாங்கிய அந்தணர் தாதைநின்
எரிபுரை மரைமல ரிணையடி தொழுதும்."

"உலகுணர் கடவுளை யுருகெழு திறலினை
நிலவிரி கதிரணி நிகரறு நெறியினை
நிலவிரி கதிரணி நிகரறு நெறியைநின்
அலர்கெழு மரைமல ரடியிணை தொழுதும்."

"மறுவற வுணர்ந்தனை மலமறு திகிரியை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வனை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வ! நின்
நறைவிரி மரைமலர் நகுமடி தொழுதும்."

பகைவரை வென்ற சீவகன் இறைவற்கு விளக்கிட வென நூறூரையும், வழிபடற்கு நான்குகோடி பொன்னை யும் கொடுத்தான். சேவித்தற்கென நூறு களிற்றையும் நூறு தேரையும் சேர்த்தான். மற்றும், வாடாத மாலை களில் சேர்ந்திருக்க மணிமாலை, முத்துமாலை, சந்தனம், பவழமாலை, மலர் ஆகியவற்றைத் திருவடிகளிலே ஏற்றி வலஞ்செய்து சென்று அரண்மனையை அடைந்தான்.

**சிறப்பியற்றல்**

பின்னர், நிலமகள் கொழுநனை சீவகன் நாமகள் புகழத் திருமகளைக்கூடி, வேந்தர்சூழ, ஒட்டாத மன்னவர் ஊர்ந்த யானைகளின் மருப்பைப் பிளந்துசெய்த மணிக ளிழைத்த கட்டிலிலே வீற்றிருந்தான்.

'இவன் எவ்வளவு தவஞ் செய்தா'னென்று உலகம் புகழக் கந்துக்கடனுக்குப் (வணிகர்க் கரசுரிமையின்றே னும்) புதிய முறையில் அரசுரிமை நல்கி நாட்டையும் கொடுத்தான். தன்னை வருந்தி வளர்த்த அன்னையாகிய சுநந்தைக்கு நல்ல 'தேவி'ப் பட்டத்தையும் கொடுத்தான். தனக் கிளையனாகிய நந்தட்டனை மன்னர் புகழ இளவரசாக்கி னன். பின்னர், 'எனக்காக நல்கவேண்டும்' என வேண் டிக்கொண்டு குறுநிலமன்னர் பெண்களை விபுலனுக்கு மண முடித்து நாடுகளையும் நல்கி, இனிதாக உறைக என ஆதரவு செய்தான். காதலுடைய தோழர்கட்கு, உலகில் மற்றோர்க் கில்லாத பழைய அரசிணையும் ஏனுதி மோதிரத்தையும் செம்பொன்னாற்செய்த பட்டத்தினையும் கண்ணியையும் நிதி யையும் நல்கினன். மற்றுந் தனக்கென உழைத்தவர்கட்கு

அமைச்சர்களைக்கொண்டு வளமிகு செல்வமும் நாடும் நல்கி ஞன். தன்னை வளர்த்த செவிலித்தாயர்களை வரவழைத்து, அவர்களுடைய சுற்றத்திற்குச் சிறப்புச்செய்து, அவர் களுக்கு அவர்கள் கொள்ளும்படி உலகிற் கிடைத்தற்குரிய வற்றை யெல்லாம் நல்கி, நாடொறும் ஆயிரம்பொன் கிடைக்கக் கெடாத ஊர்கள் ஐந்தினைக் கேட்டவர் வியக்க நல்கினன்.

மந்தியைக் கையாலே தழுவிக்கொண்ட மகவைப் போலத் தன்னிடம் அன்பு நெகிழாமல் முன்னுளிலே படைக்கலம் பயின்ற பொற்றேரையுடைய மைத்துனர்கட் கெல்லாம் வளநிதியும், பரியணிந்த தேரும், குதிரையும், களிறும் நல்கினன். அழகிய தேரையுடைய கோவிந்த னகிய மாமனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களை யெல்லாம் ஆராய்ந்து கொடுத்தான். உலோகபாலனுக்கு ஒழிவில்லாத கறவைப்போல ஆயினன். தனக்குற்ற பேரிடர்களை நீக்கிப் புணையான தோழன் சுதஞ்சணனுக் குக் கோயிலொன்றமைத்து, அவனுருவைப் பொன்னுல் இயற்றி, அக் கோயில் வழிபாட்டிற்காக ஒருரையும் உவந் தளித்து, அவன் வரலாற்றைக் கூத்தாக இயற்றி நடத்தி ஞன். ஊன் விளையாடும் வேலேந்திய மிகுவலிபெற்ற சீவகன் முன்னுளில் தான் விளையாடியிருந்த தகைசான்ற ஆனுக்கு மணமாலை யணிந்து, மேடை கட்டிப், பசுக்கள் அதன் நிழலிலே இளைப்பாறுவது அறமாமென்று கருதி ஐந்தூரை அதற்கு இறையிலியாக இனிதளித்தான்.

மணம் கமழும் குழலிலே தேன் துளிக்கும் மணமாலை யணிந்த எட்டுக் காதலியரும் ‘அரசியர்’ என்னும் பட்டம் பெற்றனர். அப்போது, குணமாலை முதலிய எழு மகளி ரும் விஞ்சையன் மகள் தத்தையை வணங்கினர். குங்கு மக் குன்றனைய சீவகன் அவர்கட்கு ஐந்தரைக்கோடி பொன் கொழிக்கும் நாடுகளை வாழ்க்கைக்காக நல்கி, அண் மையிலே பயன்பெற நாடொறும் ஆயிரம் பொன்னுக் குரிய நிலப்பகுதியை உணவுக்குஞ் சாந்துக்கும் இறையிலி யாக ஆக்கினன்.

அரசியல்

சீவகன் செய்த திருத்தத்தால் யானையின் மும்மதம் ஆடிய காடுகள் எல்லாம் மானனைய நோக்கியரின் வாயிலிருந்துமிழ்ந்த மது நிரம்பியது. கோடை நிறைந்து பேய்த்தேர் பரவிய பாலைநிலம் குவளை நிறைந்து பால் போன்ற வெண்ணிற அன்னங்கள் உலவின. நிலமகள் இவன் செய்யும் அறத்தினால் வான்மழை வழுவாமற் பெய்து, விளைவுமிக்குத் தன் எல்லையைக் கடந்தது. எங்கும் உணவுச்சாலைகள் பெருகின.

இவனுடைய வெள்ளைத் தனிக்குடை இனிய நிழலையும் தண்ணளியையும் உடையதாய் வானளாவிக் கடலை எல்லையாகக்கொண்டு நிழற்றலால், 'உத்தரகுரு' என்னும் இன்ப நிலனும், வானவர் வாழும் பொன்னுலகும், நாகருடைய நாகவுலகும் இந்நாட்டைக்கண்டு நாணித் தம் பெருமையை விட்டன. வண்டுகள் தேனைப் பருகிப் பாண் முரலும் கூந்தலையுடைய கயற்கண் மங்கையரும் அவர்தம் காதலரும் தாம் நுகரவேண்டிய யாவற்றையும் நுகர்ந்து முதுமை பெற்று, மக்கட்கு இயன்ற ஆயுளில் இடையூறின்றிச் சேர்தலாலே பண்டையூழிபோல நிலம் பொலிவுற்றது.

போரை விரும்பும் செவ்வொளி நிறைந்த வேலினையும், பொற்கழற் காலினையும், திருமகள் நாடும் பைந்தாரினையும் உடைய சீவகனது செவ்வியைப் பெறுமையால், தம் பெருநாட்டிலிருந்து கொணர்ந்த இறைப்பொருளாகிய அருங்கலன்களைச் சுமந்து, பெயர்ந்து செல்லும் இடமும் பெறுமல் ஒரு நிலையிலே நின்று, அரசர்கள் வருந்திச் சேவைக்குக் காத்திருக்கும்படி அவன் வெற்றி மேம்பட்டது.

மற்றும், வலையர் முன்றிலிலே வாளை துள்ளிப்பாயவும், வேடர் குடிசைகளிலே மான்கூட்டம் சென்று தங்கவும், கொலை தவிர்ந்து, பற்றுள்ளம் இன்றி, இவ்வூழியிலே உலகம் தன்னிலை திரிந்து 'உத்தர குரு'வாகுமாறு மாற்றிச் செங்கோல் செலுத்தினன் சீவகன்.

**தேசிகப் பாவை**

முன்னர், பதுமையை மணந்தபோது, சீவகனைக் காவிற்கூடிய தேசிகப்பாவை யென்பவள், பதுமையை வரவழைத்தபோது தன்னையும் வரவழையாமையாற் சீவகன் தன்னை மறந்துவிட்டானென்று கருதினாள். மற்றும், அவள் இந்நகருக்கு வந்தவுடன் தன்னைப்போலவே அநங்கமாலை யென்பவள் சீவகனால் விரும்பப்பட்டவள் என்றறிந்தாள். எனினும், அநங்கமாலையைச் சீவகன் காதலிக்கவில்லை யென்பதையும் அநங்கமாலை கட்டியங்காரனாற், 'காக்கைபோலத் தாதுகக் குடையப்பட்டவள்' என்பதையும் அவள் அறியாள். அதனாலும், தான் நேரே சீவகனைக் காணவந்ததாகக் கூற வெள்கியும் அநங்கமாலையின் தூதியாக நடிக்க விரும்பினாள். எனவே, ஓலையொன்றைத் தானே எழுதியெடுத்துக்கொண்டு சீவகனைக் காணவந்தாள். சீவகன் தனியேயிருக்குஞ் செவ்விநோக்கிக் காவலனிடங் கூறினாள்.

காவலன், 'அடிகளே! செந்தாமரை மலரைப்போன்ற முகத்தினாள்—குளிர்ந்த நறுமணமலர்க் கோதையனையாள்—ஒருத்தி தோழியர் தன்னைச் சூழ்ந்துவர வந்து நம் அகன்ற வாயிலிலே நிற்கின்றாள்,' என்று சீவகனை வணங்கிக்கூறினான். சீவகனும், 'அவள் விரைய வருக!' என்று பணித்தான். அவ்வளவிலே, மருவும் இனிய சாயலாள், அரிய விலைபெற்ற நல்ல அணிகலன் வெளியே தெரியும் போர்வையணிந்து, அன்னம் நாண அடிபெடுத்துவைத்துச் சென்று, தன் பழைய உருவம் ஒவ்வாதவாறு இடைவளையவளைந்து மன்னனடியை வணங்கினாள். பிறகு, மெல்விரல்களைக் கூப்பியவாறு, முறைமைப்படி ஓலையை நீட்டினாள். ஞாயிறுபோல விளங்கும் இறைவன் அதனையேற்று நோக்கினான்.

"அநங்கமாலை தன் அடியிலே வணங்குவதை அடிகள் கண்டருளுக!

"கொடிய வேலாணுகிய கட்டியங்காரன் சினந்து, அரங்கினின்றும் அகற்றி அரண்மனையிலே சிறைவைத்தான். நான், 'மணங்கமழும் பைந்தாரினையும் வேலையுமுடைய கந்துகன் மகனே! அழலிற் காய்ந்த—பசுமணிகள் இழைத்து விளங்கும்—பொற்கழலினுய்!' என்று எப்போதும் அரற்றிக்கொண்டிருந்தேன். அது பொழுது என்னை விடுவித்தான். யான் என் குடிலையடைந்தேன்.

"அங்கு யான் ஆடிய நாடகத்தினை நீ பார்த்திருக்கின்ருற்போல எழுதி, 'மன்னர் மன்ன! திங்கள் வெண்குடையாய்! மகளிர் காமத்தை மறந்து நீங்குதியோ? பெரியோரின் நட்பைப்பெற்ருர் பின்னர் அதனை விடுவரோ? மன்னர்க்கு நட்பின் இயல் இல்லையென்று உலகுக்கெலாம் சாற்றவோ? மகளிர் ஆவி அவர்களைக் கைவிட்டுப்போக அமையுமோ?' என்று கூறி அவ்வுருவைத் தொழுது காலங்கழிக்கின்றேன். எனினும், என் கண்கள் துயிலறியாமல் நீரையே பொழியும். கையிலிருந்த வளைகள் கழலும். மார்பும் பசந்தது. இவ்வாறு வருந்துதற்கு யான் நின் அறமே நிழலாக உலகினைக் காக்கும் வெண்கொற்றக் குடைக்கு அயலலேனே? வணங்கா மன்னர் நிணம்பொழியும் வேலேந்திய—மறமே நிழலாகிய யானையையுடைய—வேந்தனே! வந்த என் தோழியாகிய வாமலேகை வருந்தாமற் கூறி, இன்றே விடுத்தருளுக!" என்று படித்தான்.

### தேசிகப்பாவையை மகிழ்வித்தான்

இம் முடங்கல் தேசிகப்பாவையே யெழுதியதென்பதையும் வந்திருப்பவளும் அவளே யென்பதையும் அறிந்து அவள் இவ்வாறு நடித்ததற்கு மகிழ்ந்தான். பிறகு, அவளை அருகே அழைத்து அமர்த்தித் தாளமிடுதலால் அவள் கையில் அணிந்த வளை ஒலிக்கவும் அவள் குரலால் யாழும் குழலும் ஏங்கவும் பாடச்செய்தான். பாடி முடிந்தபிறகு, அவ்வினிய மொழியாளை—மலர்க்கொடி போன்றவளைத்—தன் தோள்களாரத் தழுவி, வல்லான் எண்ணிப் புனைந்தியற்றிய அமளியின்மேல் அமர்ந்தான்.

தேசிகப்பாவை குறுநகையுடன், 'என்னை இங்ஙனம் அருளுமாறு என்கொல்? யான் அநங்கமாலையின் தோழி யல்லலேனோ?' என வினவினாள். "இவன் செல்வ மயக்கி னால் என்னை யறியான் என்றெண்ணி என்னறிவினை நாற்றி னச்சக்கும் அறிவிக்கக் கருதி, நின் பேதமையினாலே இவ் வாறு கூறினை. இந்நடிப்பு வேண்டா. யான் நின்னை மறப் பேனோ?" என்று சீவகன் கூற, அவள் உள்ளத்தே உவகை பிறந்தது. அதனைக் கண்ட மன்னன் அவளைத் திருமகளைத் தழுவினாற்போலத் தழுவி மகிழ்ந்தான்.

தேசிகப்பாவை அவனுக்குக் கூட்டத்தினாலே மகிழ்ச் சியை யுண்டாக்கினதோடமையாது, நரம்பின் ஓசையைத் தப்பாத நல்லிசையையுடைய யாழும் குழலும் முழவும் ஒலிக்கவும் கிண்கிணியுஞ் சிலம்பும் ஆர்ப்பவும் அரங்கின் மீதாடல் காட்டி மகிழ்வித்தாள். அக்கூத்தினைச் சீவகனே யன்றி அவனைச் சூழவிருக்கும் மன்னருங் கண்டு மகிழ்ந் தார்கள்.

* இங்ஙனம் யாழ் வேந்தனாகிய சீவகன், எரிபொன்னா லாகிய பூணை வேலியாகக்கொண்ட இளமைக் கழனியிலே, தன் சாயலாகிய ஏரானே உழுது, வனப்பை வித்தியதால், அஃது இசையுங் கூத்துமாகிய நிறத்துடனெழுந்து, பின் னர் ஈன்ற காமமாகிய விளைவின் பயனை இனிதின் நுகர்ந்து உறைந்து வந்தனன்.

---

* இளமையங் கழனிச் சாயல் ஏருழு தெரிபொன் வேலி
வளமையிங் குருவ மென்றோள் வரம்புபோய் வன்பு வித்திக்
கிளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம
விளைபயன் இனிதின் துய்த்து விண்ணவர் துறையும் போழ்தே.

# ௧௩. வீடு பேறு

## ௧. விசையை துறவு

**சீவகன் ஆட்சி**

நெய்யில் தோய்ந்து, சினத்தீயினூற் போர்க்கப்பட்டுச் சென்று, போர்த்தொழிலை மேற்கொண்டு, நிணத்தைச் சிறுதுளியாக வாயினின்றும் வெளியிட்டு, மண்ணுதற்குரிய நீரிலே ஆடி, மலரை அணிந்து, புல்வுநாறும் இயல்பினையுடைய வேலேந்திய சீவகன் முகிலிடை முழங்கும் இடிபோலக் கொடைமுரசு முழங்கப் பொற்பூண்களை வரைவின்றி நல்கி, மாநிலத்தைக் காத்துவந்தான்.

**அருகன் கோயில்**

எட்டுக் கன்மங்களினின்றும் நீங்கி, எட்டுப் பண்புகளாலும் உயர்ந்த அருகனுக்குப் பொருந்திய கோயில், வேந்தன் ஏவலால், முகிலைக் கிழித்து, வானில் விண்மீன் பூத்தாற்போல மணிகள் நிறைதலால், விண்ணினும் மேம்பட்டு மண்ணிற் கோயில்கட்குத் திலகமாய், வரிவண்டுந் தேனும் பண்பாடும் பிண்டிப் பொழிலிலே அமைந்தது. அதற்குக் கழனிசூழ்ந்த ஊரை இறையிலியாக விட்டுத் திருவிழா இயற்றிப் பாட்டுங்கூத்தும் அரசன் ஏவலால் அமைச்சர்கள் ஏற்படுத்தினர்.

**விசையை நன்றியறிவு**

இனி, விசையை தனக்கு அல்லியரிசியாலாகிய உணவும் கீரையும் காயும் நெல்லும் கொழுவிய பழமும் கிழங்குந் தந்து துன்பத்தை நீக்கிய துறவிகட்குக் கைம்மாறியற்ற இயலாமையால், தான் அருகன் கோயில் அமைத்து வழிபாடு செய்த பயனையெல்லாம் நீர்பெய்து கொடுத்தாள். மற்றும், அருளுடைமையால் யாவர்க்கும் இனியளாகிய அவள் தனியே துயருற்றுத் தாழ்ந்து வீழ்ந்த சுடுகாட்டில், இடரைநீக்கிப் பின்னூட்டிக் காப்பாற்றிய இனிய மொழியாளாகிய தெய்வத்திற்கு அவளிருக்கும் சுடுகாட்டிலே கோயி

லெடுப்பித்தாள். தான் துயருறும்போது பையப்பைய வீழ்ந்த மயிலைத் தானிருக்கும் மாடத்திலே தான் எப்போதும் காணுமாறு ஓவியமாக எழுதுவித்தாள். சீவகன் பிறந்த இடமாகிய சுடுகாட்டினை மாற்றிச் சாலையாக்கினாள். தோழர் ஐந்நூற்றுநால்வரும் சீவகன் ஒருவனுமாகிய இவர்கள் ஆக்கத்தைக் கருதி ஐந்நூற்றைந்து குழந்தைகட்கு ஆவின் பாலும் வெண்ணெய் உருக்கிய நெய்யை மிகப்பெய்து சமைத்த வண்ணச்சுவை அடிசிலும் ஊட்டும் பணியைக் கோவிந்தன் எந்நாளும் மேற்கொள்ளச்செய்தாள். இங்ஙனம் தன் கடமையையெல்லாஞ் செய்து முடித்ததனாலே பரிவுநீங்கி மகிழ்ந்தாள்.

**சுநந்தை**

இந்த இடைப்பட்ட நாட்களிலே கந்துக்கடன் அழியா நிலையை அடைந்தான். சுநந்தை கைம்மை நோன்பு மேற்கொண்டாள்.

**ஒருநாள்**

ஒருநாள் சுநந்தை விசையையை அடைந்து கைகுவித்து வணங்கினாள். அவளை விசையை தழுவி, 'மாண்பு மிக்க சிறுவர்களைப் பெற்றீர்! வம்மின்!' என வரவேற்றாள். விசையை சீவகனைமட்டும் பெற்றும், வளர்த்தவள் சுநந்தையாதலாலும், சுநந்தை மேலும் சிறுவர்களைப் பெற்றதனாலும் அப்பேறில்லாத விசையைக்கு அவளை வரவேற்கும்போது நாணங் கலந்திருந்தது. மற்றும் சீவகனை வளர்த்துக் குருமரபை விளக்கினவள் சுநந்தையேயாதலின் அவளிடம் விசையை மிகவும் நன்றியறிதலுடன் நடந்துகொண்டாள்.

அற்றைநாளில், மறைமொழி யொன்றை நவில்வன போலக் காதளவுநீண்டு மலர்ந்த, செவ்வரி பரவிய கண்களையுடைய அழகிய பூங்கொம்புகளைப்போன்ற மருமக்கள் எண்மரும் விசையையின் அடியை வணங்கினர். அவர்களைத் தனித்தனியே எடுத்துத் தழுவி, 'உலகாளுஞ் சிற

வரைப்பெற்று அருகப்பெருமானைத் தெளிமின்,' என வாழ்த்தினாள். அவளுக்கு எண்மரையும் பார்த்தவுடன் தான் கண்ட கனவு நினைவுக்குவந்தது. 'நீங்கள் என் கங்குற் கனவிலே பிண்டிக்கன்றின் முடியிலே எட்டு மலர்மாலை களாய்ப் பொலிந்து தோன்றி வந்தீர்! இனி, எங்கும் என்னைப் பிரியற்க!' என்று கூறி மெய்ம்முழுதுங் கண்கள் மலர்ந்தவளைப்போல ஆர்வமுற அவர்களை நோக்கி மகிழ்ந்தாள். பிறகு, தன் மகனை, 'மணங்கமழும் பைந்தாரணிந்த மன்னனே! இவண் வருக!' என அழைத்தாள்.

போரிற் சிங்கவேறனையான், அன்னை யழைப்ப துணர்ந்து, பலரேத்தச் சென்று, விசையை அடியிலே மலரைத்தூவித் தன் முடிபட வணங்கி, அண்மையில் இருத்தற் கஞ்சி, மெய்ந்நடுங்கி, இரண்டு விரற்கிடை தொலைவில் உள்ள ஒரு தவிசில் அமர்ந்து, 'எனக்கிசைக்கும் பணிவிடை இனி எங்கே,' என வினவினான்.

**சீவகற்கு அறவுரை**

அப்போது இறைவி தன் மகனை நோக்கிக் கூறியவை:

"விளங்கும் பூணணிந்த மார்பினாய்! பகைவரை வென்ற கூரிய வேலேந்திய சீவக சாமியே! நின் தந்தைக் குற்ற தீங்கைப் பிறர்கூற அறிந்தனையென்று கூறுவர். எனினும், யான் அதனை விளக்கிக் கூறுகிறேன்.

"பாம்பினால் விழுங்கப்பட்ட ஒளிவிடுந் திங்களைப் போல நின் தந்தை பெண்ணின்பத்தாலே விழுங்கப்பட்டு, வெளிவராமல், 'இவன் காமத்தாற் கெட்டான்,' என்று பிறர் கூறும் புன் சொல்லுக்கு நாணுமல் அந்தப்புரத் திலேயேகிடந்தான். அதுகண்ட—அத் தீங்கைத் தம் அறிவினால் வெல்லுதற்குரிய—அமைச்சர், 'நுண்ணறிவு போன்று தோன்றாது நுணுகிய இடையினரின் கண்வலைப் பட்டபோதே அது பாம்பைப்போலக் கொடிய தீமைசெய்யும். பேரறிவுடையோர் பெண்மையைப் பெண்மையாக நினையார்,' என்றுகூறி அண்ணலைத் தெருட்டி நுண்ணு

லாகிய தோட்டியினால் அழுத்தினர். எனினும், அரசன் அம் மொழிகளை யுட்கொண்டு தெளியாமற், பாகர்கள் தோட்டியினால் தொடக்கவும் நில்லாத களிறுபோலக் காமத்தினாற் பொங்கிவிட்டான். அவனைத் தெளிவிக்க முடியாமல் அமைச்சரும் அகன்றனர்.

"வேந்தன், வெள்ளம் கல்லணையைக் கடந்து கடலை யடையப் புறப்பட்டாற்போல, அறிஞரின் சொல்லணையைக் கடந்து, வில்லைச் சிறைப்படுத்தினாற்போலக் காணப் பெறும் புருவங்களின் கீழே விளங்கும் வேற்கண்களினாற் சிறைப்பட்டுத் துணை முலைகளைவிட்டு நீங்காமல், நாட்டையும் நகரத்தையுங் கட்டியங்காரன் காவலிலே விட்டான்.

"இங்ஙனம் பெருமகன் செய்த தவறினாலே, ஒளி பெறும் வாளேந்திய சுற்றமெல்லாம், களிறு மென்று உமிழப்பட்ட கவளம்போலத் தகர்ந்து நில்லாமற் போய்விட்டனர். அரசன் தனியனானான்.

"கட்டியங்காரன் மன்னன் நிலைமை உணர்ந்தான். குயவன் நாணைக்கொண்டு கலங்களை அறுக்குமாறுபோல, மன்னரைக் கீழறுத்துத் தன் சுற்றமாக்கிக்கொண்டு, அந்தப்புரத்தை முற்றுகையிட்டுப் பேரிடிபோல முழங்கினான். அரசன் நின்னை நினைந்து தொழிற்பாடமைந்த மயிற்பொறியிலே என்னைப் போகவிட்டுத் தான் துறக்கம் புகுந்தான்.

"எனவே, 'வெளிறு விதைத்து வச்சிரம் விளைக்க' இயலாமைபோலத் தீவினையை விதைத்து நல்வினையை விளைவிக்க இயலாது. ஆகையால், வேந்தனாகிய நீயும் காமத்தைத் தடுத்து உலகைப் புரத்தல் செய்வாயாக! இனி, யான் துறவுபூண்பேன்."

அன்னையின் துறவுமொழியைக் கேட்டதும் சீவகன் மயங்கி வீழ்ந்தான்.

உடனே, மாதரார் பலரும் துணுக்குற்றுக் குளிர்ந்த நீர் தெளித்துப் பொற்பிடியமைந்த சாந்தாற்றிகளால் வீசி

யதால் தெளிந்து, வளர்ந்தெழு சிங்கம்போல மலர்மாலையும் அணிகலன்களுஞ் சோர எழுந்து, ‘அடிகள் எனக்கு முன்னர் அருளியது யாது?’ என்று வினவினன்.

**விசையை விளம்புகிறாள்**

“நாம் பிறந்து பெற்ற வாழ்நாள் இவ்வளவென்பதனைச் சிறிதும் அறிந்திலம். எனினும், வாழ்வோம் என்னும் அவாவிலே அழுந்துகின்றோம். அவ்வாழ்வு இத்துணைத்தென அறியக்கூறிக் கூற்று நம் உயிரைக் கறந்துண்ணும்போது, கண்ணைப்புதைத் தழுவதல்லது, தவஞ்செய்ய விரும்பினும் இறந்தநாளை யாவரே மீட்க வல்லார்? நம்மால் இயலாது. அக்கூற்றின் ஏவலாற் காலம் என்னும் பாம்பு, கட்டித்தயிராற் கலக்கப்பட்ட சோறுபோல நம்மை இனிதே உண்டு விழுங்கும்போது, இமைத்தகண் விழித்தலின்றி இறந்துபடும் நாம், அக்காலத்தை நினைத்துத் தினவு தின்ற இடத்தே சொறியப்பெற்றார்போல உணர்ச்சியுற்று நடந்துகொண்டால் ஊதியம் பெரிதும் பெற்றவராவோம். இங்ஙனம், இடங் கிடைத்தபோதே தவம் புரியாமல் நாமும் சுற்றத்தின்மேற் காதல் கொண்டிருப்போமெனின், அக்காதல் வடுவுடைத்து; எங்ஙனமெனின், காற்றினால் அடிக்கப்பட்ட மழைக்குழாம் சிதறிப்போகுமாறுபோல, தீவினையாற் சிதற அடிக்கப்பட்டுச் சுற்றமெல்லாம் வெவ்வேறே போவதல்லது உடனுறையும் பழக்கம் இல்லை. ஆதலால், எம்மிடத்துக் காதலை, நீ விடுவாயாக!”

சிறிது பொறுத்து யாவரையும் நோக்கிப் பொதுவான அறத்தைப் புகலத் தொடங்கினள்:—

“முருந்துபோன்ற வெள்ளிய பற்களையும் முற்றிய அணிகலன்களையுமுடைய மகளிரிருக்குமிடத்தையே வைகியிருந்து, கால விடையீடு தெரியாமல் இளமைக் கள்ளுண்டு, கருந்தலைகள் வெள்ளைத்தலைகளாய் மூப்பதற்கு முன்னே, அரியதவம் புரிமின்! தானம் வழங்குமின்!

“உடம்பிலிருந்து பற்றும்நோய்த் தீயிலே உயிரைப் பெய்து, உணர்வு நெய்யாகவும், ஆற்றல் துவையலாகவுங்

கொண்டு கூற்றுக் குடித்துவிடும். அவ்வாறு, குடிலைவிட்டுப் பிரியுமுன்னரே, நற்பண்பைக் கைக்கொண்டு, கொடுத்துண்ணுமின்!

"உடம்பினை நடத்தும் பாகர்களே! இவ்வுடம்பாகிய வண்டி தொழில்செய்து வருந்திப் பழையதாய்விட்டால், புதிய அச்சொன்றினையிட்டுச் செலுத்த அறியோம். இவ்வாறு இழந்தோர் பலர். துன்பமென்னும் நீர்நிறைந்த யாற்றிலே இவ்வண்டி அழுந்தி அச்சுக் கெடுமுன்னே, வளவிய தவத்தைக் கூலியாகப் பெறுமின்!

"பிறந்தவர்கள் எல்லோரும் மிகுதியும் அவாவுடையராகி, இவ்வுலகைத் துறந்து புகழ்பெறார். இரந்தார்க்குத் தாம் உண்ணும் உணவிலே ஒரு சோற்றுப் பருக்கையும் கொடார். அவர்கள் அறத்தினைச் சிவப்பென்றோ கறுப்பென்றோ அறியார். ஆசை பொருளற்றது. அதனை விடுவீர்களாக!

"முல்லையரும்பைக் குவித்தாற்போன்ற இனிய பாற்சோற்றை மகளிர் ஏந்த, நல்ல பொரிக்கறிகளுடன் நாளெலாம் பொற்கலத்திலே விரும்பி யுண்போர், அல்லல் மிகப்பெற்று, 'ஓட்டிலே கீரையைப் பெய்யுங்கள்,' என்று வேண்டிப் பெற்றுண்பதைக் கண்டும், செல்வ வுறவினரே! உலக வாழ்விலே பற்றுக்கொண்டு வருந்தன்மின்! செய்யத்தகுந் தவத்தையே கைக்கொள்ளுமின்!

"இனிமையுறக் காய்ச்சிய பாலை அழகிய பொற்கலத்திலே மனம் பொருந்தி யுண்ணுத அரிவை, ஐயோ! முன் செய்த வெவ்விய வினையால் நிலைமை வேறாகிப் பசி வெதும்பி வருத்துவதால், ஓர் அகலைக் கையில் ஏந்திக் கொம்பைப்போல நுடங்கிப், 'பிச்சை யிடுமின்!' என்று வேண்டி நிற்பதைக் கண்டும் செல்வத்தை விரும்பன்மின்! நமரங்காள்! அறத்தையே நினைமின்!

"அழகிய மெல்லிய துகிலை உடுப்பின் வாய்விட்டழுவதுபோல வருந்தும் இடைப்பாகத்தைப் பிறர் அணுகா

மல் அருவருக்கும் சிறுதுணி ஒரு பாகமும் ஒருகை ஒரு பாகமுமாக மறைத்துக்கொண்டு, மேனோக்கிக் கீரையை உருவி, அதனை யிடுவதற் கொன்றுமின்மையால், 'ஐயோ! வினையே! நீ என் செய்தனை?' என்று விம்மி நாடொறும் அழுவாளைக் கண்டும், நமரங்காள்! செல்வத்தை நணுகன்மின்! தவத்தை அணுகுமின்!

"கருமை பொருந்திய நீண்ட முடியிலே வண்டுகள் முரல மெல்லிய மல்லிகைமாலையணிந்து, கையிலே திரண்ட வேலினையேந்திக் காரிகையார் மயங்கக் காமன்போற் சென்றவர்கள், பின்னர், ஐதிரண்டு இருமல் ஒலிக்க, நெய் திரண்டாற்போல உமிழ்ந்து, ஒரு தண்டினையூன்றி நிற்றற்குக் காரணமான இளமை நிலையாதுகாண்."

**சுநந்தையுடன் துறவு**

இங்ஙனம் இயம்பி முடித்தாள். அதனைத் தனக்கு நன்மையாகக் கருதிய சுநந்தை, 'ஐயனே! இறைவிகூறிய இம்மொழி நன்றேயாயினும் தீதேயாயினும் ஆகுக. அதனையே யானும் மனம் பொருந்தி ஒருப்பட்டேன். எனவே, யானும் துறப்பேன்,' என்று கூறினாள். சீவகன் அதனைக் கேட்ட அளவிலே மறுத்துச் சொல்லுஞ்சொல் சிறிதுமின்றி, எரிதவழ்ந்த வெண்ணெய்க் குன்றுபோல உருகி நின்றனன்.

உடம்பைவிட்டு உயிர் போமாறுபோல இன்றி, இங்கு ஒருயிரைவிட்டு இரண்டு உடம்புகள் போவதேபோல, அன்னையிருவரும் சீவகனைவிட்டுச், சிறந்த துறவினையுட்கொண்டு பல்லக்குகளில் ஏறினர். அங்கிருந்த அரசிகளின் கண்கள் மாரியேபோல நீரைவடித்தன. அன்னையரின் பல்லக்குகள் ஆயிரம் பல்லக்குகள் தம்மைச் சூழச் சென்றன.

விசையை அழகிய மயிற்பொறியின்மேற் சென்ற நாளினும் மிகுதியாகப் புன்மையுற்றுக் காற்றால் மோதப்பெற்ற கடல்போல அழுகுரலில் மயங்கிய நகரம் சீவகனைப்

போலவே செயலற்றுப்போய் அவர்களைப் பின் தொடர்ந்தது.

இங்ஙனம் யாவரும் வருந்தச்சென்ற விசையை, நெய் நிறைந்தெரியும் விளக்கைப்போன்ற குற்றமற்ற சிறப்பினை யுடைய பம்மையின் தவப்பள்ளியை நணுகினாள். ஆங்கே, பம்மை அரிய தவ வொழுங்கையுடைய மகளிர் குழுவாகிய புறவிதழ்சூழத் தான் அவ்விதழ்களின் நடுவே அகவிதழ் போல அமர்ந்து அறங்கூறிக் கொண்டிருந்தனள். விசயை பல்லக்கினின்றும் இழிந்து சென்று, கைகுவித்துத் தொழுது, அடிகளே! எங்களெல்லோரையும் பிறவிக்கடலி னின்றுங் கரையேற்றுவீர்களாக!' என வேண்டினாள்.

அதுகேட்ட பம்மை "தையலாய்! அருந்தவம், நிறைந்த விறகிலே நெருப்புப்போலக் கொடியது. ஆத லால், நீ மேற்கொட லியலாது. அதனைவிட்டு, ஐம்பொறி யும் வென்று அவா நீங்கின இடத்திலே தானத்தை வித்தி, அது முளைக்குமாறு ஒழுக்கமாகிய நீரை எப்போதும் பாய்ச்சினால், அது உத்தரகுருவிலே முளைத்துப், பல புகழையும் ஈன்று, பிறகு, வானுலக இன்பத்தை விளைக் கும்," என்றாள்.

விசையையோ, 'அடிகளே! அறவுரை பின்னர்க் கேட் போம். இப்போது, துறவினை யருள்வீராக!' என்று வேண்டினாள்.

**துறவுக் கோலம்**

பம்மை விசையையின் மனவுறுதிக்கு மகிழ்ந்து அங் ஙனமே ஒப்பினாள். உடனே ஆங்கிருந்த தவமகளிர், துற வுக்குச் செய்வனவற்றை ஆராய்ந்து, தவப்பள்ளியை அழகு செய்து, மலர் மாலைகளைத் தூக்கி வானத்தை மறைத்து, அழகுற இருக்கை யமைத்து, நறும்புகை யிட்டு, விளக் கேற்றினர்.

பிறகு, நூல் முறைப்படி, விசையை சுநந்தை ஆகிய இருவரின் சிற்றடிகளையும் பாலினாற் கழுவி, வெண்மை

யான மெல்லிய கோடித் துகிலால் மார்பினைச் சூழக் கட்டினர். வண்டுகள் முரலும் மாலைகளையும் அணிகலன்களையும் எடுத்தெறிந்து, பால் நிலவனைய அழகிய துகிலையணிந்து, வேனிலான் வரும் வழியை வெள்ளிய முட்களால் அடைத்தனர்.

பின்னர், நன்னிறமுடைய தவிசின் மேலே கீழ்த்திசை நோக்கியிருந்த தாயரிருவரும் அல்லாத மகளிரும் அழகிய மயிரை நீக்குவதற்கிருந்த மயில்திரளைப் போன்றனர். உடனே, இறைவன் கூறிய நூலின் துணிந்த பொருளைச் சிந்தித்துத் துறத்தலை விரும்பினவர்களின், மணியாலியன்ற சீப்பிட அது பொறுமற் சிவக்கும் நெற்றியைச் சார்ந்த கூந்தலை ஆரியாங்கனைகள் (துறவுபூண்ட மகளிர்) முற்றும் பறித்தனர். அங்ஙனம் பறித்த அழகிய மயிரினை உருக்கிய பொற் கொம்பனைய மகளிர் ஆயிரவர் பள்ளியில் வீழ விடாமல், தட்டுகளிலே யேந்திக் கொண்டுபோய் அடக்கினர். அவர்கள் பழைய மயிரை வீழ்த்திய தோகை போன்றனர்.

இவ்வாறு, முற்றுமுணர்ந்த இறைவனூலிற் கூறிய அமுதத்தைப் பொருந்தினவர்கள், பொற்குடத்திலே அழகிய கிடைத்தற்கரிய மணியை வழிய நிறைத்தாற் போல, என்பினாலாகிய உடம்பை எண்ணற்ற பண்புகளாலே நிறைத்துப், பல்லுயிர்க்கும் அருளைப் பரப்பித் தவத்தைப் பேணினர்.

பல வுறுப்புக்களையுடைய அருகன் நூற் பொருளைத் தெரிந்தெடுத்துக் கொண்டு சேமித்து வைத்த நெஞ்சினையுடைய அவர்கள் தமக்கு மயக்கம் இன்மையாலே, பலரும் உரைக்கும் புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் மகிழ்ச்சியும் வருத்தமும் இன்றி, எரிகின்ற விளக்குப் போலத் திகழ்ந்து திலகமாயினர்.

**மன்னன் வணக்கம்**

இவர்கள் நிலை யிங்ஙனமாக, அலைமணிக் கவரியுடைய குதிரை பூட்டிய தேரும் களிறும் புரவியும் நிலம் நெளியுங்

கடலனைய காலாட்களும் பொருந்திய நால்வகைப் படையும் பரவி மலரை யேந்திவரச் சீவகமன்னன் தானும் சில மலர்களை யேந்திச் சென்று சிறப்புற வாழ்த்தி விசையையின் இலவமலரனைய சிற்றடிகளிலே முடியை வைத்து வணங்கினான். பிறகு, "அடிகளை முன்பு காண்டற்கு வேண்டும் நல்வினை யிலாதேன் கண்களால் எப்போதுங் காணுமாறு சில நாட்கள் இந்நகரினுள்ளே உறைவீர்களாக!" என்று வேண்டினான்.

அம் மன்னனுக்கு விசையை ஒன்றும் மறுமொழி கூறாது பாவை போலிருந்தாள். அவள் நிலை நோக்கிய பம்மை, 'காவலனே! நீயும் எம்மாற் காதலிக்கப் படுகிறவனல்லை. நினக்கு யாங்களுஞ் சுற்றமல்லேம் என்றே நங்கை வாளாவிருந்தனள்,' என்று கூறினள். அதனைக் கேட்ட மன்னனும் பட்டத் தரசியரும் மாலைகளைப் பிய்த்தெறிந்து கண்ணீர் வார அழுதனர்.

பின்னர், அரசன், 'அடிகளே! யான் அடிகளுக்குச் சுற்றமல்லேனெனினும், இறைவன் அறத்தைத் துணிந்து நிற்கின்ற நிலையை நோக்க, அதனாற் காதலனாவேன்,' என்று கூறினான். தவமகளிர் யாவரும் கண்கனிந்துருகி விசையையை நோக்கி, 'இனி மறுமொழி கொடுப்பிற் குற்றமொன்று மின்று நம்பிக்கு இன்மொழி யியம்புமின்,' என்றனர்.

அதற்கிசைந்த விசயை, 'முத்தார மணிந்த மார்பினையும் சந்தனமணிந்த திண்ணிய தோளினையும் மணங்கமழ் மாலை பூண்ட வேலினையும் உடைய வேந்தனே! நீ விரும்பியவற்றை யாமும் விரும்பினேம்,' என்று வலிய எழுப்பிய உரையாலே மறுமொழி கொடுத்தாள். அரசன் மகிழ்ந்து ஒரு மொழி யுரைத்தான்.

" அடிகள் என்னிடத்து யாதொரு வருத்தமும் உற்றவரல்லர். ஆதலின், அவர் துறக்கலாம். சுநந்தயம்மையே! வருந்தி வளர்த்தலின் நீயே எனக்குத் தாய். இதற்கு முன்னர் யாதுங் கொடியை அல்லையாயினும், இப்போது

துறந்தனை யாதலால் எனக்குச் சுடுதுயர் இழைத்தனை! அங்ஙனம் இழைத்த நீ சாலவுங்கொடியை!''

என்று கூறித் தாய் முன்னர் ஒரு சிங்கவேறு அமர்ந் தழுவதுபோல அழுதான்.

அதுகண்ட சுநந்தை, 'இது வரையிற் கணவனையும் இழந்து மகனரசைக் கண்டு துறவாமல் மகிழ்ந்திருந்தாள் என்ற பழி நிகழ்ந்து போகட்டும். இனி, திருமகளனைய இந் நங்கை இப்போது துறந்தும், யான் இன்னும் நின் அரசை உவந்திருப்பேனெனின், உண்டாம் பழி எனக்கு எப்போது நீங்கும்? இதனை உணர்வாய்,' என்று மன்னன் மனங்குளிரக் கூறி, 'இனி அரண்மனை சென்று உலகினைக் காப்பாயாக!' என்றுரைத்தாள்.

அப்போது, விசையை நந்தட்டனை நோக்கி, 'நும்மை யாம் துறந்திலம். அதனாலே, நீ நொந்து வெறுக்க வேண்டா,' என்று நவின்றனள். தூணை யிடிக்குந் திண்ணிய தோளானாகிய நந்தட்டன் அதனைக் கேட்டுக் கற்பகம் மலர்ந்தது போல மகிழ்ந்தான்.

பின்னர், 'துறவு பூண்ட இந்த அன்னையர் தம் தூய மலரடிகள் என் முடிமலரின் மிசைய வாருக!' என்று அவர் தம் நிலைக்கேற்ப வுரைத்து வாழ்த்திப், பாலனைய தூய ஆரியாங்கனை இவர்களைப் புரக்குமாறு வேண்டுவ செய்து, பள்ளியினின்றும் போந்து தன் அரண்மனை புகுந்தான் அரசன்.

குங்கும மணிந்த கொடியனாராகிய—மாவடுவகிரனைய கண்களையுடைய—அரசியர் மாமியரிடமிருந்து விடை பெற்றுச்சென்று, பல்லக்குகளில் ஏறி, ஒளிமிகு மணிக் குடை பின் செல்ல, அலைகடல் போல வாள்வீரர் காப்பச் சென்று, அரண்மனை புகுந்தனர்.

இனி, அழகினை உலகெலாம் புகழும் சச்சந்தன் பெரு மாட்டி—தொழுதகு தெய்வம் போன்றவள்—பாவையனை யாள்—மழை மொக்குள் போலும் இன்பத்தைத் தீதென

நீக்கி, ஆசையை விலக்கி, வீடுபுகும் நெறியிலே செல்கின்ற இறைவன் நூலிற் கூறிய தவத்தை மேற் கொண்டிருந் தனள்.

## உ. நீர் விளையாட்டணி

விசையையும் சுநந்தையும் இவ்வாறு தவத்தை மேற் கொண்டாராக, இனி, முரிகின்ற அலை முத்தைச் சிந்து கையினாலே அதற்கு வெருவிச் சிறையடித்துக் கொள் கின்ற அன்னம், பரவிய கதிர்களையுடைய திங்களாகவும் கடல் வானாகவும் அது சிந்திய முத்துக்கள் வானிற்பூத்த மீன்களாகவும் கொண்டு பகலிலேயே பிணித்த இதழை மலர்த்தும் ஆம்பலையுடைய கடற்கானற் சேர்ப்பனாகிய சீவ கனுக்கு நேர்ந்ததைப் பார்ப்போம்.

அமைச்சர்கள் அரசன் துறவு பூண்டுவிடுவானோ என அஞ்சி முத்துமாலை யணிந்த, மயிர்முடியையுடைய அழகிய உருவத்திற் சிறந்த மகளிரின் இன்பத்திலே அவனை மனங் கொண்டு மகிழுமாறு மயக்க எண்ணி வாவிநிறையச் சந்த னங்கலந்த நீரை நிரப்பினர். அவ்வாறு நிறைக்கப்பட்ட மாடத்தையுடைய நீரணி வாவியிலே நொய்ய தெப்பங்களை நிறைத்து, அழகிய மாலை, சாந்தம், புனைவுடைய மணிச் சிவிறி, சுண்ணம் ஆகியவற்றை அம்மகளிர்க்கும் மன்னற் கும் படைக்கலமாக அமைத்து, 'அழகிய இந்நீர் வாவியை இறைவனே! கண்டருளுக!' என்று பணிவுடன் தெரிவித் துக்கொண்டனர்.

அரசனும் பார்த்து மகிழ்ந்தான். பின்னர், மலையர சன் மகளான காந்தருவதத்தை கட்டியங்காரனாகவும், ஒழிந்த மகளிரெல்லோரும் அரசன் படைஞராகவும் வகுத் துக்கொண்டு, மலர்மாலையுஞ் சுண்ணமும் மணிச்சிவிறியும் ஏந்திப் புணையின்புறத்தைத் தழுவித் தூநீரிலே போர்த் தொழிலைத் தொடங்கினர்.

அப்போரிலே மாலையை வாளாகக் கைக்கொண்டு வீசியும், சதங்கை மாலையைச் சுழல்படையாக் எறிந்தும்,

கண்ணிகளைக் கணையமாக முன்னே மிதக்கவிட்டும், தொங்கல் எனப்படும் பெரிய மாலைகளைத் தண்டாகச் சிதறியும் மகளிர் தம்மிற் கலந்து போரிட்டனர்.

அப்போது பைந்தொடிப் பாவையாள் தத்தை குங்குமங்கலந்த நீரைச் சிவிறியிலேந்தி ஆயிரந் தாரையை இறைவன் படைமகளிர்மேற் பரப்பினள். அத் தாரைகளைப் பொறுக்கவியலாமல் அம்மகளிர் எல்லோரும் முகிலிடை முழுகும் மின்கொடிகள்போலக் கண்கள் சிவக்க நீரிலே முழுகினர். அங்ஙன முழுகியவர் நீரிடையே சிறுபோதேனும் இருக்கவியலாதவராய் நீரகத்துச் செய்த பல நில மாடத்திலேறிப் பாய்வார், வானிலிழியும் மயில்களைப் போன்றனர். நீரிற் சிறிது தங்கித் தலையை வெளியே தூக்கிப்பார்க்குந் திருவனையார் முகங்கள், கடலிலேழுனைத்த பால்சொரியுந் திங்களைப்போன்றன.

இங்ஙனம், சிலமகளிர் தோற்றுப்போகப் பின்னர் வந்து பொருத மகளிரிற் சிலர், தத்தை எறிந்த கண்ணிக்கு அஞ்சிக் கால் தளர்ந்து சோர்ந்தனர். சிலர் தம்மீது விழுந்த சுண்ணத்திற்குஞ் சாந்திற்கும் அஞ்சித் தொழுது வேண்டிநின்றனர். சிலர் தத்தை வீசிய மலர்மாலைக்கு வாடிக் கண்பிறழத் தளர்ந்து வெண்ணெய்போற் குழைந்து நின்றனர்.

மற்றும், வேந்தனருகே அணியாக நின்ற மகளிர்மேல் தத்தை குங்குமநீரைச் சிவிறியாலே சொரிந்தாள். அது பொறுத அம்மகளிர் கூந்தலை ஒரு கையாலேந்தித் துகிலை மற்றொரு கையாற்பற்றிப் புகுமிடங் காணாராய் வேந்தனைச் சரணடைந்தனர். அவனும் அவர்களுடைய விம்முறு துயரம் நோக்கிச் சீறிச் சிவிறியை ஏந்தி முகிலானது மழை பெய்வதைப்போலக் குங்குமநீரைச் சொரிந்தான்.

அப்போது தத்தையைச் சார்ந்த மகளிர் சந்தனத் தளிர்விரவிய அழகிய மாலையை வீசினர். மற்றும், கண்ணியாலும் சாந்தாலும் எறிந்து அவனை எதிர்த்தனர். அரசனும் மற்றொருமுறை சிவிறியில் தாரையை வெய்தாமாறு

முறுக்கினன். அதற்கு ஆற்றாமல், முன் போர் உடற்றிய தத்தையின் படைமகளிர் துகிலுந் தோடும் மாலையுஞ் சிந்திக்கெட்டுச் சிதறி வழியல்லா வழிகளில் ஓடினர்.

ஓடிய மகளிர் அன்னங்களாகி அழகிய தாமரையின் அகவிதழிலே தங்குவர்; அழகிய மயிலாகக் கூந்தலை விரித்து மறைத்துக்கொண்டு குனிந்துநிற்பர்; நீரிலே உடம்பை மறைத்துத் தாமரை மலர்போல அம்மலருடன் முகத்தைப் பொருந்தவைத்து நிற்பர்; ஒளிவிடும் மேகலையையுந் தோட்டையும் திறையாகக் கொடுத்து வேந்தனடியைத் தொழுதுநிற்பார்.

இங்ஙனம் தன் படை யுடைவதைக்கண்டு பொறாத தத்தை, ஒன்பது தாரையாக ஓடி மன்னனுடைய உறுவலி மார்பிலே பாயுமாறு சந்தனத் தாரைகொண்டு தாக்கினாள். மன்னனும் குலிகத்தாரையை முழுவலியோடு முறுக்க எண்ணினன். எனினும், அத்தாரைகளை அவள் மென்மையான மெய் தாங்காது என அஞ்சிச் செவ்விதாகத் தூவாமல் நெகிழ்ந்துநின்றான். அவ்வாறே சாந்தாலும் அலங்கலாலும் சுண்ணத்தாலும் அகப்படுக்க அஞ்சினன். அது கண்ட அவள் தன் கூந்தலில் இருந்த மாலையை எடுத்து அரசனுடைய முன்கையைப் பிணித்தாள். அப்போது அவளுடைய ஆடையைப் புனல் கவர, அரசன் நகைத்தான். அவள் வெள்கி அவனைத் தழுவிக்கொண்டாள். அப்போது அரசன் மின்னுச்சேர்ந்த ஞாயிற்றைப்போன்றான்.

அங்ஙனம் நீரணி விளையாட்டு நிகழ்த்திய பின்னர்த் திருவனையார் விம்முகின்ற அகிற்புகையிலே மேவி உடம்பிற்கு வெப்பத்தையூட்டி, விரையத் தமது மணங்கமழுங் கூந்தலையுலர்த்தி, அழகிய மலர்த் தொழிலையுடைய எலிமயிர்ப்பட்டினை யுடுத்தி, அனிச்சமாலையை முடியிலே சேர்த்தியிருந்தனர்.

## ௩. இருது நுகர்வு

இம்மகளிருடைய அழகிய நீர்க்கோலம் சீவகனுடைய உள்ளத்தே காமத்தீயை மூட்டிவிட்டதால், அவர்களுடைய அழகிய மென்மையைக் கண்களால் நுகர்ந்து விளையாடலை மேற்கொண்டான்.

**முதுவேனில்**

முதுவேனிற் காலத்தே ஞாயிறு கொதித்தலின், அதற்காற்றுமல், மேனிலத்தே தேக்கிய குளிர்ந்த சந்தனச் சேற்றிடை உலவிப், பின்னர், பால்நிலவின் கதிர் பொழி தரு பள்ளியிலே மகளிருடன் கூடியிருந்தான். அப்போது, அவர்கள் மெய்ந்நலமாகிய குளிர்ந்த பொய்கையிலே முழு தும் மூழ்கலின், அதற்கஞ்சி அவர்களுடைய கண்கள் நீர் சுமந்து இரங்கின; புருவக்கொடி நீ வருத்தினையென்று தொழுவனபோல வளைந்தன; மயிர்முடியில் அணிந்த முத் துக்கள் அம்முடி அழுவதைப்போலச் சிந்தின. ஐங்கணை யேந்திய காமனுக்குங் காமனை சீவகன், எழுத்தின் வடி வமைந்த பாட்டையும் கூத்தையும் கேட்டும் கண்டும், பழுத்த பல மணியணிந்த கற்பகக் கொம்பனையாரின் வளை யணிந்ததோளினைத் தழுவியும் முதுவேனிலைக் கழித்தான்.

**கார்**

நீர் குலுங்கும் வயிற்றினையுடைய நிழல்விடும் முகில் நிலங்குலுங்க முழங்கலால், பல்கலையணிந்த அழகு குலுங் கும் மகளிர் அஞ்சி இறைவனைத் தழுவிக் காரிற் குலுங்கும் மலர்க்கொம்பெனக் கவின்பெற்றனர்.

மற்றும், அம்முகில் மழைபெய்தலிற் குளிர்ச்சிக் கிடைந்து, கீழ்நிலத்தே யிழிந்து, இனிய அகிற்புகை கமழுஞ் சேக்கையிலே யிருந்து, அரசனுடைய மார்பி லணிந்த தார் பொருதலால் தங்கள் மார்பிலணிந்த சாந் தழியவும், மேகலையும் சிலம்பும் ஆர்க்கவும் அவனுடன் கலந்து மகிழ்ந்தனர்.

அக்காலத்தே, அச்சமுற்ற மானினது நோக்கம் விடாத நோக்கியரான மகளிர், காமநுகர்ச்சியாளருக்குக் கார்

காலத்தே கூறிய தேனிறாலனைய தீஞ்சுவையுடைய அடையும் ஆவின் முதிர்ந்த பாலமுதும் அல்லாமல் வேறெதனையும் நுகராராயினர்.

**கூதிர்**

கார் கழிந்தது; கூதிர் வந்து குலவியது. அக்காலத்தே கருங்குவளைக் கண்ணினார் தங்கள் மார்பினுக்கு வெம்மையூட்டும் அகிற்சாந்தமும், வெம்மைமிக்க தேறலும், மலர் மாலையும், நறுமணப் புகையும், சுண்ணமும் விரும்பினர். அவர்கள் நிலையறிந்த காமனும் அரசன்மேல் ஐங்கணைகளையும் அழுத்தினான். அதனால், வேந்தன் அவர்கட்கு அப்பொருளை நல்கி, வண்டுறாத தொங்கல் அணிந்த அழகரும்பும் மடமங்கையரைக் கடலமிர்தெனவே கருதி அக்காலமெலாம் நுகர்ந்தான்.

அந்நாட்களில் ஒருநாள், சேடியர் தனக்குக் கொடுப்பதற்காக ஏந்திய தேறலைக் குழைமுகத்தை யிடப்பக்கங் கோட்டி நோக்குங் குணமாலை, அதனுள்ளே தன் முகமாகிய திங்கள் தோன்றக்கண்டு, அதனைத் திங்கள் என்றே கருதித் தன் முகத்திற்குப் பகையாந்தன்மைகெட விரைந்து பருகினாள். பின்னர், வானைநோக்கியபோது திங்களிருப்பதைக் கண்டாள். உடனே, கண்கள் சிவப்பேறச் சினந்து, 'நான் பருகும்போது உருகி ஒளித்துப்போய் என்னை உள்சுட வருத்திப் பசலை நோயொடும் இன்னும் இருக்கின்றனையே!' என்று ஊடினாள். சீவகன், அதுகண்டு அவளைத் தன் மார்புறத் தழுவி, 'நங்கையே! நின் முகவொளி அங்கே சென்று பரத்தலால், அத் திங்கள் உள்ளே கறுத்து அழகிழந்து தேய்ந்துவிட்டது. அது நினக்கேற்ற அழகிய திங்களோ? அன்றே. ஆகையால், மங்கையே! நின் மனத்தினால் வருந்தாதே,' என்றுரைத்து ஊடலை நீக்கினான். அவளும் தெளிந்து அவனுடன் கூடினாள்.

**முன்பனி**

முன்பனி வந்தது. முன்னர்க் கூதிர்க்காலத்தே குளிருக்கஞ்சி மேகலையையும் முத்தையும் நீக்கிய மகளிர்,

தாமரையை வாட்டும் பனிப்பருவங்கண்டு, எங்கும் கிடைத்தற்கரிய தொழிற்பாடமைந்த எலிமயிர்ப் போர்வையை—விம்மும் நறுமணப் புகையூட்டி—அணிந்தனர். மற்றும், அக்காலத்திற்கேற்குமாறு கூந்தலிலே புகையும், சாந்தம் பூசிய மார்பிலே பச்சிலையால் தொடுத்த மாலையும் கொண்டனர்; அளிந்த இனிய பழமும், எலுமிச்சம்பழ நீரிலே யூறிய சிவந்த இஞ்சியும், கருப்புக்கட்டி முதலியவற்றைக் கூட்டி முறுகலாகப் பொரித்து அமைத்த பொரியும் அவலும், தேனும் மகிழ்ந்து நுகர்ந்தனர்; சிறு சண்பகத்தை நீக்கி மல்லிகை மாலை யணிந்தனர்.

திருமகள் வருந்தும் அழகினர் இங்ஙனங் கோலஞ் செய்த நலம் அவர்கள் அன்பனை வருத்தியதால், அவனும் தன் மலர்த்தொங்கல் அவர்கள் மார்பிலே அழுந்தத் தழுவி, இவர்களின் மென்மையான மார்பு நொந்ததுபோலும் என்று கூறிக், கூட்டத்தின்போது, சிலம்பின் இரங்கும் இனிய குரலைச் செலுத்தி எழுப்பியதாற் காம இன்பம் அக்காலத்தே நிலைத்தது. இவ்வாறு முன்பனிக் காலம் முற்றும் நீங்கிப் போய்ப் பின்பனிக்காலம் அவர்கள் எதிர்கொள்ளவந்தது.

**பின்பனி**

அப்போது, எத்தகையரும் ஒப்புமையில்லாத அம்மகளிர், வெள்ளிலோத்திர வெண்மலராற் கட்டிய மாலையும், அரத்தத்தின் நிறத்தை அள்ளிக்கொண்டு, கண் நுழையாத இழையையுடைய துகிலையும், சிவந்த மணிகளால் ஆகிய அணிகலன்களையும், சிவந்த நெருப்பையுண்ணும் செவ்வெலிமயிராற் செய்த—அந்த நெருப்பினளவு வெம்மையையுடையன என்றாராய்ந்த பொலிவினையுடைய—மன்னர்களாற் கொண்டுவரப்பட்ட கம்பலங்களையும் மகிழ்ந்து தாங்கினர்.

அவர்கள் நாடொறும் கூத்தின் சுவையை நுகர்ந்தும் மிடற்றுப் பாடலின் சுவையை உள்ளத்தே நிறுத்திப் பருகி, யாழ் முதலியவற்றிற் பண்ணை நுகர்ந்தும் ஒன்

பொன்மாடத்திற் கீழ்நிலையிலே தங்கினர். அவர்கள் தலைவனுடன் புரியும் இன்பப்போரிலே சிலம்பும் கிண்கிணியும் சிறுபறையாகவும், மேகலை அரிப்பறையாகவும் ஆர்த்தன. அவர்கள் மார்பிலே பூசிய குங்குமம் செங்கல் வாய்ச்சியாற் செங்கல் செத்தும் மக்களுடைய கழுவாத மெய்போலத் தோன்றின.

**இளவேனில்**

வாடைக்காற்றானது, குளிர்ந்த சங்கினையீர்ந்த துகள் போலத் தன் காலத்தே மலர்ந்த குரவமலரில் தேனைக் கொப்புளித்துத் தன் காலமுடிவில் மலர்ந்த மரவமலரில் உள்ள தேனை வயிறாரப் பருகி நடந்துகொண்டிருந்தது. வாடை போகாநிற்கக் காமன் விடுகின்ற தூதாகத் தென்றல் வரவினை நோக்கி, அதனால் இலையுதிர்த்து வயா நோய் கொண்ட மரங்கள் அக்காமனுக்கு விருந்தேந்தி இணரீன்று அலர்ந்தன.

இளியென்னும் பண்ணைப்பாடும் பிரசம் என்னும் வண்டு யாழாகவும், கரிய கண்களையுடைய தும்பி குழலாகவும், களிப்பையுடைய குயில்கள் முழவாகவும், மணமிகும் பொழில்கள் அரங்காகவும் கொண்டு, கணவனைப் பிரிந்த தளிரனைய மடவார்கள் தம் கணவரைப் பிரிந்ததனால் தம் வளை கழன்றதனையும், மாமைநிறங் கெட்டதனையும் அவர்களுடைய கணவர்க்குத் தெரிவிக்கத் தூதுசென்ற பாணன் யாழ்மேல் வைத்துப்பாடும் பாட்டைப் பாட்டாகக்கொண்டு, இளவேனில் என்னுங் கூத்தன் புதிதாக ஆடலைத் தொடங்கினன்.

அப்போது, விளையாடும் விருப்பினாற் கூந்தலிற் கத்தூரிகலந்த எண்ணெயைத் தேய்த்து, நெல்லிக்காயை அரைத்து அச்சாந்தினைக்கொண்டு நீராடி, அமிர்தம் உயிர்க்கும் தேன்கலந்த அகிற்புகையூட்டி, வகிர்ந்து, புழுகின் குழம்பை வார்த்து, உகிராலே நீக்கி, அங்கே கருப்பூரப் பொடியை அணிந்தனர். முன்னர், முன்பனிக்காலத்தே, ஐம்பாலில் யானை மருப்பிலே சுற்றி யானைத் தடக்கை

போலப்புனைந்த அழகையுடைய மல்லிகைமாலையை அடக்கி, அதனருகே வகை மாலையையும் வைத்தவர்கள், இவ்விள வேனிற் காலத்தே அம் மயிரினைத் திரளமுடித்து, அதனுள்ளே சிறந்த கழுநீர் மாலையைச் செலுத்தி, அது கொள்ள அழுத்தி, ஆங்கே குவளையினது செவ்வி பொருந்திய தாதையும் உறுத்தினர்.

இடையொடு பகைகொண்டார்போலே நறும்புகையூட்டிய வண்ணப் பட்டுடுத்தினர். அதன்மேற் பொன் மேகலையை வளைத்தனர். நாயின் நாவனைய சிற்றடிமேல் ஒளியுமிழும் கவுள்களையுடைய கிண்கிணியும் சிலம்பும் சுமத்தினர். இரண்டு கணுக்களுக்கும் நடுவாகிய பெரிய பச்சைமூங்கில் தண்டைப்போன்ற கணைக்காலிலே தொழிற் கூறுபாடுகொண்ட பரியகஞ்சூழ்ந் தழகுபெறச் சேர்த்தனர். ஒழுக நோக்குகையிற் பிடியின் கையைவென்று, திரட்சியாலும் சருச்சரை யின்மையாலும் பஞ்சியாலும் கடைந்தனபோலத் திரண்ட துடைகளைக் கடித்துக்கிடந்து கவின்வளரும் துடைசெறியென்னும் அணியும், ஒளிவிடும் முலைகளின்மேற் பூசின சாந்தின்மேலே செக்கர்வானிற் பிறைபோலக் கிடந்தசையும் கதிரையுடைய முத்துமாலையும் இந்திரவில்லையுமிழ்ந்து ஒளியுடன் விளங்கின. திரண்ட முன்கையிடத்துக் காந்தளைப்போன்ற விரலின்மேற் சிறிய மணிகளழுத்திய மிகவும் விலைபெற்ற மோதிரம் ஒளிசெயவும் பெரிய தோளிலே குழிந்த கேவணங்களிலே அழுத்தப் பெற்ற சாலவும் பெரிய மணிகளையுடைய வாகுவலயம் தழுவவும், தோளிலே தாழ்ந்திலங்கும் மகரகுண்டலமுந் தோடும் காதில் விளங்கவும் அணிந்தனர். நாணைத் தன்னுள்ளே அடக்கி ஒளிவிடுந் தாலியையும் சுடர்விடும் அழகிய மாணிக்கத்தையும் பேணிக் கழுத்திலே அணிந்தனர். பெரிய கண்களுக்குக் கரிய மையை விருந்தாக இட்டனர். முத்துக்களைப்போன்ற நிரையையுடைய பற்கள் கடுக்காயைச் சுட்டுப் பொடிசெய்து தேய்த்தலால் ஒளியுமிழ்ந்து விளங்கியதால், தோண்டிய நிரையுடைய சுடலிற் பவளம் போன்ற வாயைக் கொவ்வைக்கனிகள் வணங்கின.

கதிர்வேலும் குவளை நிரையும்போன்ற கண்களை யுடைய அம்மகளிர் ஒப்பனைமுற்றி மாலையையும் அணிந்த பிறகு, பஞ்சவாசங் கலந்த வெற்றிலையை மென்று, காலிலே சிலம்பும் கிண்கிணியும் இடையிலே மேகலையும் இரங்கக், கொய்சகம் நிலத்திலே துவளச்சென்று சோலை மயிற்கூட்டம்போலக் காவில் இருந்தனர். ஆங்கே, ஒரு மணிவண்டே மலர்களின் நலத்தையெல்லாம் பருக மலர்ந்த செந்தாமரைப் பொய்கைபோல, அழகிய வேலேந்திய மன்னனே பருகுமாறு தம் புதுநலனைக் காவிலே கொடுத்த மழைக்கண் மகளிர், பணி நிரையப் பண்படுத்திய பிடி களில் ஊர்ந்து நாட்டுப்புறங்களிற் சென்று, அழகிய கழனி களிலே விளையாடிப் பருத்த தாளையுடைய செந்நெலின் கதிரைச்சூடி, அரசன் தம் நலத்தைப் பாராட்டத் தங்கினர்.

பின்னர், அக் கனிவாயார் வரம்பிலாத குங்குமச் சேற்றிலே எழுந்து, நானநீரை வார்க்க வளர்ந்து நிறம் பெற்ற குவளைமலரைக் கலந்து உண்ணற்கினிய மதுவை மணியழுத்தி விளிம்புபிரம்பாற் கட்டின வள்ளத்திலே அர சன் ஏந்த, அதனைப், பூமாலையும் முத்துமாலையும் புறத்தே தாழப் பருகி மகிழ்ந்தனர். பிறகு கழுநீர் மலரை மெல் லிய உகிராற் கிழித்து மோந்து காட்டி, 'இம்மலர் வடுப் படுத்தி மோந்தும் இனியமணமே தருதலைப்போல எம்மை யும் உகிர் முதலியவற்றால் வடுப்படுத்தி, நுகர்தல் எமக்கு வருத்தமாகாமல் இன்பமேயாம்,' என்னுந் தம் கருத்தைப் புலப்படுத்தினர். இளமைச்செவ்வி மிக்க மகளிர்க்கு இத் தகைய வடுப்படுத்தி நுகரும் புணர்ச்சி இன்பஞ்செயும் என்னுங் காமநூல்.

## ச. புதல்வர்ப் பேறு

ஒள்ளிய பொற்கொடிபோன்ற அம்மகளிர் இங்ஙனம் தாம் கருதியவாறு எல்லா நிலத்தினும் விளையாடி, இளமை யிற் சிறந்த மன்னன் வடிவழகையெல்லாம் உள்ளத்தமைத் துக்கூடி மகிழ்ந்தனர்; எல்லோருங் கருத்தரித்தனர். செவ்வாய் விளர்த்துத், தோள் மெலிந்து, முலை முகங்கருகி,

வயிறு கனத்து, அனிச்சமலரும் சுமையாகித் தம் மென்மைக்கு ஒவ்வாத பஞ்சணைமேல் தங்கினர்.

பத்துத் திங்களும் கடந்தபிறகு, மூங்கிலனைய தோள்களையுடைய அம்மகளிர் வலம்புரிச்சங்கு முத்தீனுவதைப் போலக் களிற்றுக் கன்றுகளைப்போன்ற மக்களைப் பெற்றனர். அப்போது முரசங்கள் வாயில்கடோறும் வகைபெற முழங்கின. தனிச் செங்கோல் மன்னன் மகிழ்தூங்கி வரைவின்றிப் பொன் சொரிய உலகமேற்று மகிழ்ந்தது.

காடியை வார்த்துப் பிரமிச்சாறும் கண்ட சர்க்கரைத் தேனும் நறுநெய்யும் இவற்றுடன் பொன்னையும் தேய்த்துக் குழவிகள் கொள்ளுமாறு மருந்தாகச் சிலநாட் கொண்டு வாயுறுத்திப் பின்னர்த் தேனிலே அதிவிடயத்தையும் திப்பிலியையும் தேய்த்து நாடோறும் வாயுறுத்தி வாயும் கண்ணும் உகிரால் அகற்றி, உண்ணாக்கை யுரிஞ்சி மூக்கை யுயர்த்தினர்.

அந்நாளில், தோழனாகிய சுதஞ்சணன் அங்கேவந்து, யாழுங் குழலும் முழவும் அரங்கெல்லாம் பரவி யொலிக்க, இவ்வுலகில் இதுவரை ஆடாத சீவகன் வரலாறாகிய கூத்தை ஆடிச் சென்றான். அரசன் வெள்ளிமலையிற் கலுழவேகனுக்கும் தன் சுற்றமாகிய பிற மன்னர்க்கும் மிக்க உவகையாம் மக்கட்பேற்றைச் சொல்லிவிடுத்தான். அவர்கள் கேட்டு விண்பெற்றார்போல் விருப்புற்றனர்.

பிறகு, கணிகள் திரண்டு கோள்கள் தத்தம் நிலத்திலே நிற்பதையும், உச்ச நிலையையும், தாழ்ந்த நிலையையும், பகை நிலையையும், உறவுநிலையையும், அவற்றின் தசைகளையும் முன்னே நிறுத்திக் குற்றமற்ற சாதகம் எழுதினர். பன்னிரண்டாம் நாளிலே அக்குழவிகட்குச் சச்சந்தன், சுதஞ்சணன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந்தன் என்னும் பெயர்களையிட்டனர்.*

---

* தரணி: உலோகபாலன். தத்தன்: விசையையின் தந்தை. பரதன்: அச்சணந்தி. இப்பெயர்கள் அரசியரின் திருமண வரிசைப் படி அமைந்தது.

அவ் வரசமக்கள் ஐயாண்டுகள் கடந்தவுடன் மையோலை பிடித்துக் கலைகள் கற்றனர்; படைக்கலம் பயின்றனர்; கொய்பூ மாலையும் குழலும் மின்னுகின்ற பொற்றோடும் குண்டலமும் அசையாமல், அசைந்து செல்லும் மனஞ் செருக்கிய பரிகள்மீது அடித்தேறி வெகுண்டேர்ந்தனர். அப்போது சீவகமன்னற்கு அரசேற்று முப்பதாம் ஆண்டு நிறைந்தது.

## ரு. சோலை நுகர்வு

மலர்ந்த கொடியனைய் மங்கையரும் மன்னனும் சேர்ந்து வீற்றிருந்த ஒருநாள், பூவிடும் பெட்டியைத் துகிலால் மூடிக் கையிலே ஏந்திவந்த மல்லிகைமாலை யென்பவள் அரசனை வாழ்த்தி, 'குடவரையனைய அழகிய குங்குமங் கலந்த தோளாய்! வேனில் வேந்தன் நின்னைக் காணத் தொடுத்தற்குரிய மலர்களைக் கையுறையாக ஏந்திப் பொழிலிலே வந்தனன். அவனைக் காண்டற்குரிய அவ்விடத்திற்கு எழுந்தருள்க,' என்று பணிவுடன் கூறினள். அரசனும், 'அங்ஙனமே,' என்று கூறினன். உடனே, முடிமிசை முத்துக்கள் மின்னும் முகிழனைய முலைப் பரப்பெல்லாம் சுணங்குதோன்றிச் சிதறிய மார்பையுடைய அரசியர் சூழவும், கொடியவாளைக் கையிலேந்திய கன்னியர் புகழ்ந்து கூறிக் காவல் செய்யவும், அணிகலன் ஒளிசெய்யவும், இடியனைய குரலையுடைய அரியேறு போல்வான் பொழிலிலே புகுந்தான்.

அப்போது, விளங்கும் பொன்னூர மார்பினனும் இந்திரன் தன் உரிமைமகளிர் சூழக் கற்பகக்காவினைக் காணப் புகுந்தவாறுபோல், அசையும் பொற்கொடியனையாரும் அரசனும் புகுந்து விளையாடினதால் அப்பொழில் ஒளிசிறந்தது.

அப் பொழிலிடமெங்கும் மகளிர் புலவியின்போது தம் கூந்தலிலிருக்கின்ற மலர்களைச் சிதறுகின்ற தன்மை போலக், கருங்குயில் கொம்பிலமர்ந்து தாதுபொங்கக் குடைய, நீள்மலர்கள் மணலில் வீழ்ந்து மணலைப் போர்த்

தலினாலே கலவிக்குப் பரப்பிய ஒளிவிடும் பொற்கம்பலம் போன்றது. நூல் அறுந்து பொன்மணிகள் கம்பலத்தே வீழ்ந்து கிடப்பதேபோல், அக் கம்பலத்தினைப்போன்ற மலர்ப்பரப்பிலே தேனும் வண்டும் மொய்த்துத் தேனைப் பருகித் துயின்றன. அப் பூம்பள்ளியிலே மயில் கிடந் தெழுகின்றது. துயில்கொண்டெழும் மகளிரைப்போன்று காணப்பட்டது. அக்காட்சியைக் கண்டு மகிழ்ந்தவராய், அன்னப் பறவைகள் கூட்டமாக எழுந்தோடச் சென் றனர்.

அப்போது, அரசன் அரசியரை நோக்கி, "அஞ்சொ லீர்! இம்மரங்கள் தீவினைகளைத் தம்மிடத்தே யில்லாமல் வேரறுத்து அவற்றை வென்ற உலகுணர் முதல்வராகிய இடபதீர்த்தங்கரர் தோன்றிய அக்காலத்தின் மரங்கள் போற் பயன்பட்டு நின்றன. ஆகையால், நீங்கள் காதலாற் காணவேண்டிய இடங்களெல்லாவற்றையுஞ் சென்று காண்பீராக!" என்றான்.

அரசியர் அரசன் பணித்தவாறே, வானவர் மகளிர் போல நீண்ட கயிற்றையுடைய ஊசலில் ஆடியும், கானவர் மகளிர்போல மணமிகு மலர்களைக் கொய்தும், தேன் துளிக்கும் குன்றில் ஏறிக் குன்று எதிரொலிசெய்யக் கூவி யும் மயிற்குழாம் வேறு வேறு பிரிந்து செல்வதுபோலச் சென்றனர்.

அங்ஙனம் பிரிந்து விளையாடிய மங்கையர் இளைப் படைந்தபின்னர், நெடுவரையிலிருந் திழியும் அருவியில் ஆடி, மிக்க மதத்தை நுகரும் வண்டுகளைப் பைந்தளிராகிய கவரியை எடுத்துப் பிடி மகிழ்வுடன் ஓட்டச் சந்தனச் சோலையிலே நின்ற பெருங்களிற்றை நோக்கித் தாமும் அங்ஙனங் கூடுதற்கு அரசனை விருப்புடன் நோக்கி நின்றனர்.

அவர்கள் குமரி வாழையின் துகில்போன்ற மெல்லிய குருத்தை எடுத்து, அதிலே சிறப்புத்தொழில் தோன்ற உள்ளே கயற்பிணக்கும் அதனைச் சூழக் காமவல்லியுமாகச்

செம்பொன் மோதிரமணிந்த கைவிரல் உகிராற் கிள்ளி அதனை முலைமீது அணிந்து நின்றனர். அப்போது அவர்கள் தெய்வமகளிரைப் போன்றனர்.

அம்மகளிர், கடைகின்ற தயிரிலெழுந்த குரலைப் போன்ற குரலையுடைய வேங்கையைக் கண்ட பசுவின் கன்றுகள் கவரியை அணுகிப் பாலுண்பதைக் கண்டு நிற்பார். புடை திரண்டெழுந்த அழகிய முலையின் சுமையைப் பொறுக்கலாற்றாமல் நடை மெலிந்து, தம் நடைக்கு முன்னர்த்தோற்ற அன்னத்தின் நடையை விரும்பி நிற்பார்.

இவ்வாறு நின்றவர்கள் அரசனுடன் கூடவெழுந்த வேட்கையாலே, அரசன் இங்கு வரவேண்டுமென்று கருதி, யாழைப் பண்ணுறுத்தி, அவனுடைய நுண்ணிய செவியிலே விழுமாறு, தலைமையோடு கனிந்த காமத்தைத் தூது விட்டுப் பாடினர்.

அரசன் அப்பாட்டைக் கேட்டு வந்து, பிடி மயங்கும் நடையையுடைய அம்மங்கையரின் பேரழகு குழையுமாறு தழுவித் தொடுத்த, மலர்க்கண்ணியைச் சூட்டி, வண்டுகள் தேனுண்ண மலர்ந்த மாலையைத் தேனொழுக அணிந்து, அழகிய தாரிலுள்ள மலர் அலரத் தழுவினான். அப்போது அம்மகளிர் மலர் போன்றனர். அவன் களிவண்டு போன்றான்.

குழைந்த தாரினையும் நெகிழ்ந்த உடையினையும் உடைய கொற்றவன், தன்னுடன் கூடிய மங்கையரின் நலத்தையெல்லாம் விழைவற நுகர்ந்து, இனத்திலிருந்து திரும்பிய ஏறுபோலத் திரும்பிச்சென்று, பழத்தினின்றுந் தேன் பெருகி வழிந்து சோரும் ஒரு பலாமரத்தின் அடியிலே அமர்ந்தான்.

ஆங்கே, களவொழுக்கத்தை விழைந்த கடுவன் ஒரு மந்தியை அழைத்தது. அம்மந்தி வந்தபிறகு, தொலைவிலுள்ள ஒரு பொதும்பரின் ஒரு பக்கத்தே மறைந்து அவ்

விளமந்தியை அக்கடுவன் ஆர்வத்துடன் விடாது தழுவிக் களி கூர்ந்தது. பிறகு, அவை அங்கிருந்து நீங்கித் தம் இனங்களைச் சேர்ந்தன. அக் கூட்டத்தினை அக் கடுவனின் காதல் மந்தி கண்டிருந்ததனால், அக்கடுவனை நோக்கிப், 'பரத்தையரைத்தோய்ந்த மார்பம் தகவுடையதன்று. ஆகையால், அதனைப் பத்தினி மகளிர் தீண்டார். எனவே நீர் தெண்ணீரிலே குளித்து வம்மின்!' என்றது. அது கேட்ட கடுவன், 'நீ கூறியதை யான் உளத்தினும் உன்னியதில்லை. மற்றும், உயர்ந்த மலைத்தேனைப் பருகியவர் வருத்துகின்ற எட்டியையும் வேம்பையும் வாய்க் கொள்ளார். யான் அத்தன்மையேனென்பதை நீயே கூறுவாய்' என்றது.

அதற்கு அம்மந்தி மறுமொழி தராது கடுவனை நுண்ணிதாக நோக்கியது. கடுவன் அஞ்சி, 'இனி இங்கே என்னை இவ்வாறு நோக்கி என் செய்தனை! எனக்கு வாழ்நாள் நீங்கியது. அதனை இங்ஙனஞ் சிறுபோது நின்றால், நீயுங் காண்பாய்,' என்று மந்தியின் மனம் நடுங்குமாறு கூறியது. அம்மந்தி, 'நின் ஏவற்றொழில் செய்தற் குரியேன் செய்த தொரு வருத்தமாகிய இதனை ஒழிக!' என்று எடுத்துத் தழுவிக் கொண்டு தன்னைத்தானே பழித்தது.

இவ்வாறு குற்றத்தைக் கண்ணுற்கண்டும் தன் காதலன் ஊடலைத் தெளிவிக்கத் தன் பெண்மையால் தன்னைப் பழித்துக் கொண்டு தெளிந்த மந்தியைப் பெரிதும் மகிழச் செய்ய விரும்பிய கடுவன், திண்ணிய பலாமரத்திலே இனிமையைத் தேக்கி வைத்திருக்கும் பெரிய பழமொன்றைப் பிளந்து, கையாற் கோதுகளைப் பிரித்து விட்டு ஆராய்த லுடைய சுளைகளை அது தின்னக் கையிற் கொடுத்தது.

**மன்னன் மனமாற்றம்**

அவ்வாறு பலாச்சுளையைப் பெறும் மந்தியைக் கடுவனோடு ஓடுமாறு துரத்திவிட்டு, அக்கனியைப் பணியாளனொருவன் உண்டான். அதனை நச்சுவேல் மன்னன் நோக்கித் தன் அன்புறு மனைவி தன்னைக் கூடுகின்ற கூட்டத்தை மற்றவனிடங்கண்டாற் போல, உடம்பு தோன்றுங்

காலத்தே உடன் தோன்றிச் செறிந்த காமத்தையும் மேல் வரும் மூப்பையும் வெறுத்து நின்றான்.

"கைப்பழம் இழந்த மந்தி அரசிழந்த கட்டியங் காரனைப் போன்றது. அவற்றை ஓட்டிவிட்டு இப்பழத் தைக் கொண்ட பணியாளனும் கட்டியங்காரனை ஓட்டி அர சைக் கைக்கொண்ட என்னைப் போன்றான். மற்றும், வலி மையால் வாங்கி, நுகர்தற்குரிய இப்பழத்தை நுகர்ந்து இவனடையும் இன்பம், இன்று யான் நுகரும் இன்பத் தையே சாலவும் ஒக்கும்" என்று அரசனுக்கு உண்மை யுணர்வு தோன்றியது.

மேலும் நினைக்கின்றான்:

மெலியவர் பெற்ற செல்வத்தை வலியவர் மேலைவரம் பைக் கடந்து வேரொடும் அகழ்ந்து பற்றிக் கொண்டு குறும்பு செய்யும் பிறவியின் நலிவைக் கண்டோம். ஆத லின், இச்செல்வத்தைக் கைவிட்டுத் துறத்தற்குரிய காலத் திலேயே துறவினை மேற்கொண்டு, தவம் புரிந்து, ஐம் பொறியும் அடங்கி, எதனாலும் நலிவில்லாத வீட்டுலகத்தை அடைவதே நல்லது போலும்.

"நல்வினையென்னும் அழகிய பொற் கற்பகம் மகளி ரென்னும் பல் பழங்களையுடைய மணிக் கொம்பை யீன்று, பரிசில் வண்டுண்ணப் பரிசிலைப் பூத்துச் செல்வச் சிறுவ ரென்னும் மாலைகள் தன்னிடத்தே தாழ நின்றது. இது தீவினைக் காற்றினாற் சாய்ந்து விழுந்துவிடும். இவ்வாறு விழுவதற்கு முன்னரே இம் மகளிரின் சேர்க்கை ஒழிவ தாக! வேட்கைத் தன்மையென்னும் நாவினாலே கொடிய காமமாகிய கள்ளை நிறையத் தேக்கெறிந்து பருகி, வீட் டினைத் தரும் நற்செய்கை சிறிதுமின்றி இன்பத்தே மயங் கினேற்கு, இந்த இருள் நீங்குமாறு வீட்டு நெறியிலே செலுத்தும் கைவிளக்காகிய அறவுள்ளத்தைக் காட்டிய இவர்கள் வானவராகக் கூடும்."

இவ்வாறு எண்ணிய வேந்தன் தோட்டியால் தொடக்கப்பட்ட மதயானை போலக் காம நுகர்ச்சியினின்று உள்ளத்தை மீட்டான்.

பின்னர் அம் முருகுலவு முடியினன் பெரிய மணிக் குழை ஒளிசெய, மைந்நிறவண்டு ஆர்ப்பப் பொதும்பரி லுள்ள தளிர் கவரிபோல் வீச, வேலைக் கையிலேந்தி, வீட்டுநெறியை விரும்பிய வுள்ளம் மகிழ்ந்து, வேனிற் காலத்தே மனவேட்கையடங்கிய காமனைப்போல நின்றான்.

அப்போது, தொழில் செய்வதற்குரிய மகளிர் தம் மயிர்முடியின் நடுவிலே உள்ள முத்துமாலை தாழ்ந்து நெற்றியிலே தடவநின்று, பைம்பொற்கட்டிலை யிட்டனர். அதிலே அவன் இருந்தபின்னர்ச் சிலர் நறுமணப்புகை யிட்டனர்; சிலர் இன்னிசை யெழுப்பினர். தேனையை யாழொலி யிசைத்தது. அவ்வாறு நிகழ மகளிர்சூழ இருந்தவன் பல கொடிகள் பூத்துச் சூழ்ந்த குங்குமக் குன்றம் போன்றான்.

அம்மகளிர் மெல்லத் தம் புருவத்தை வளைத்துக் கண் விலங்கிப் பிறழுமாறு பார்த்துச் செவ்வாயில் முள்ளனைய எயிறு விளங்க முறுவலைத் தூதுவிடுதல் முதலாகப் பிற காமக் குறிப்புக்களையும் கருவியாகக்கொண்டு, அவன் காம வின்பத்தை அள்ளி நுகருமாறு கனிவித்து நின்றனர். எனினும், முத்துவடம் தாழ்ந்த மலர்மார்பன் மனம் நெகிழாது துறவிலே ஊன்றி வைர வுள்ளத்தனானன்.

அப்பொழுது, கழிந்த நாழிகையைக் கணிகள் கூற, மல்லர் வந்து மன்னனுடைய உடம்பைப் பிடித்துவிட்டு நறுமணநீரிலே நீராட்டி விட்டனர். பின்னர் அரசனுக் குரிய முறையிலே வெண்டுகிலும் மாலையும் சாந்தமும் சிறந்த அணிகலன்களும் அணிந்து, மெல்லிய தோளினையும் காவியனைய கண்களையும் உடைய மகளிர் எப்பக்கமும் இருந்து போற்றி ஏத்தத், தூய நுண்ணிய துகிலாலான திரைகள் அணிந்து, நூறடி உலாவுதற்கேற்ற உணவு மண்டபத்தே புகுந்தான்.

நெய்வளம் கனிந்து, மணம் நிறைந்து, சிறந்த வறு வல்கள் பொருந்தித், தாளித்தல் சிறந்து, அறுசுவையுங் குறையாமல், வெம்மையுடன்கூடிய அடிசிலைச் சமையல் நூலுணர்ந்த—வீமனைப்போன்ற—மடையன் ஏந்த, வரை யனைய மார்பன் அச் சிறந்தவுணவை யுண்டான். பின்னர், நறுமணப் பொடியையும் சந்தனத்தையும் தன் கையிலே வாங்கி நீராலே நான்முறைப்படிக் கைகழுவி வாய்பூசி, மையெழுதிய மழைக்கண் மங்கையர் மணிச்செப்பிலே நீட்ட, ஐவகை முகவாசத்தையும் திசையெலாங் கமழ வாய்க்கொண்டு, சூழவிருந்தோரை நோக்கி, 'யாம் ஒப்பி லாத அருகப்பெருமான் கோயிலை வணங்குவோம்; எழுக!' என்றான்.

## ௬. அறிவர் சிறப்பு

அதனைக் கேட்ட அரிவையர் ஒருவேளை தடவிக் கொண்டால் ஓராண்டுவரையிலும் விடாமல்—பெரியவர் நட்பைப்போல—மணக்கும், கிடைத்தற்கரிய நறுமண நெய்யைத் தடவிக்கொண்டு நீராடி, அகிற்புகை யூட்டித், திருமகளும் விழையும் ஆடையும் அணிகலனும் அணிந்து கொண்டனர். பிறகு, நல்ல தவம்புரிந்த வீரரிருக்கும் இடத்தை விரும்பிச்செல்லும் பொற்றாமரையாள்போலக் கொற்றவனை யடைந்து, சிகழிகையிலே முத்துமாலை மின் னத் தொழுதுநின்றனர். அவன் அதற்கு மகிழ்ந்து, வாமன் கோயிலையடைந்து மணிமுடி தாழ்ந்து வணங் கினான்.

**தாழிசை**

"கடிமலர்ப் பிண்டிக் கடவுள் கமலத்
தடிமலர் சூடி யவருலகில் யாரே?
அடிமலர் சூடி யவருலக மேத்த
வடிமலர் தூவி வருகின்றா ரன்றே.

"முத்தணிந்த முக்குடைக்கீழ் மூர்த்தி திருவடியைப்
பத்திமையால் நாளும் பணிகின்றார் யாரே?
பத்திமையால் நாளும் பணிவார் பகட்டெருத்தின்
நித்தில வெண்குடைக்கீழ் நீங்காதா ரன்றே.

"கருமக் கடல்கடந்த கைவலச் செல்வன்
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் யாரே ?
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் வான்தோய்
திருமுந் தவிராழிச் செல்வரே யன்றே."

வானவர் உலகினும் இல்லாத வீட்டின்பத்தையே விழைந்த சீவகமன்னன் இவ்வாறு வாமன் வணக்கத்தாற் பெறும் பயனை அரசியர் உணருமாறு ஏத்தியபிறகு, வாய்ப் புடைய வண்ணமாமலர் சுண்ணம் குங்குமம் தூமம் மாலை என்னும் ஐந்தினும் புனைந்து வாமன் சேவடியை மல ரிட்டு வணங்கினான்.

## ஏ. அறவுரை

பிறகு, விளங்குங் குங்குமமார்பன், விண்வழியாக வந்து, அருகன்கோயிலை வலங்கொண்டு மலர்நிறைந்த பிண்டியின்கீழ்ப் பளிக்குக் கன்மிசையே நலங்கொண்டு நின்ற, முத்தும் மாணிக்கமும் கலந்த நிறத்தையுடைய சாரணரிருவரைக் கண்டு வாழ்த்தினான்.

அவன் தன் உரிமை மகளிருடன் அவர்களை வலம் வந்து வணங்கியிருந்த அளவிலே, தவமிகு சாரணர், மன் னனை நோக்கி, "இருநில மாளுதல் இன்பமாயுளதே?" என வினவ, அம்மன்னன் தான் இருநிலந் துறந்த தன் மையை உணர்ந்ததற்கு வியந்து போற்றினான். மற்றும், மருள் நீங்கிய அம்மன்னன், 'அடிகளே! பிறப்பறும் வகையை அறியாதேன் எப்பிறப்புக்களினும் செய்து கொண்ட தீவினையெனும் இருள்நீங்கச் சிலநாள் தவம் புரிந்து, பிறகு, எரியும் நீள் சுடராகிய ஞானத்தை அடை யும்படி அருளுமின்,' என வேண்டினான்.

**மணிவண்ணன் கூற்று**

சாரணரிருவரில் நூற்கடலாகிய மணிவண்ணன் என் னும் சாரணன் மன்னன் கூறியதைக் கேட்டுக் குளிர்ந்த திங்கள் தன் பரவிய தண்கதிரைப் பாற்கடலிலே நன்றாக விழுமாறு பெய்வதைப்போல மிகவும் நுண்ணிய நல்

லறத்தை மன்னனுக்குரைக்கத் தொடங்கிப், பல வகைப் பட்ட அறங்களுள் தீவிய தேனைப்போன்று சிலநாள் துறக் கத்திலே செலுத்துவனவாய் அறிவிலார் யாரும் புகல்ப வற்றையும், பெறுதற்கரிய திருமணியைப்போன்று, வீட் டைத் தருவனவாய் அறிவுடையோர் யாரும் அழுதெனும் படி பருகுமவற்றையும் நுவல்கின்றான்.

"பெரியோய்! தவத்தின் அருமையாற் கிடைக்கும் மக் கள் யாக்கையையும், அது தனக்குரிய நூறியாண்டும் நிலை பெற்று நில்லாமல் அழிவதையும், நல்வினையுடைய மெய்யி னின்றும் நீங்கிய நரகர் விலங்கு மக்கள் தேவர் என்னும் நாற்கதியின் துன்பத்தையும், தெளியும் பொருளையும், அப் பொருளின் துணிவையும் நிறமுடைய சீலத்தின் நிலைமையையும், கொடையையும், கொடையாலும் சீலத் தாலும் காட்சியாலும் பெறும் பயனையும் பெருமைமிகும் வீட்டிலக்கணத்துடன் கூறுவேன். அவற்றுள் யாக்கை பெறுதற் கரிதென்பதை முதலிற் கேள்.

### அ. பெறுதற்கருமை

அரசனே! நால்வகைத் தோற்றத்திலுள்ள பிறவி களைத் தப்பி இவ்வுலகிலே மக்கள் யாக்கையைப் பெறுதல், பரவிய வெண்மையாகிய அலைகளையுடைய வடகடலிலே நுகத்தடியிற் படுதுளையில், தென்கடலில் இட்ட வலியகழி சென்று நடுவுறப் பொருந்தினதென்னும் அத்துணை யரிய தாகும்*. மக்கள் யாக்கை பெறினும், நீருண்டென மொழிதற்கும் அரியவாய் மூங்கில் வெடித்தொலிக்குங் கானவரிடத்தினையும், மிகு பனியைக்கொண்டு குலைத்திடும் இடமாகிய குறும்புகளையும் நீங்கி, நீர் மண்டு வளமிகு தீம் புனல் நாட்டிலே பிறத்தல் அரிது. மற்றும், விலங்குகளை வில்லாலே கொன்று, வெண்மையான தசையைத் தின்

* 'வளைபயில் கீழ்கடல் நின்றிட மேல்கடல் வானுகத்தின்—துளைவழி நேர்கழி கோத்தென'—(திருக்கோவையார்-௬). இக் கருத்து மேலும் பெருங்கதை, இறையனார் களவியலுரை முதலிய வற்றினும் வந்துளது.

இன்ற பல்லையுடைய வேடர்களும் கடல் வாழ்க்கையுடைய பரதவர்களும் போன்ற எண்ணிறந்த இழிதொழிலையுடைய இழிகுலத்திலே பிறவாமற், பழைய நல்ல குலத்திலே பிறத்தலும் அரிது. அங்ஙனம் பிறப்பினும், பெருமழை பெய்தாற் பின்னர்க் குன்றினிடை அருவி இடையறு தொழுகுவதுபோல, உயிர்க்கிழவனை விடாமல் தொடர்ந்து, விடாதனவாகப், போக்குதற்கரிய இருவினை வயிற்றுத் தீயிலே இட்டு வைத்துக்காய்ச்சின் கருப்பத்தின் கண்ணே, அவ்விருவினையின் கட்டளையால் உறுப்புக்குறையும் வடிவைத் தப்பி, நல்வினையின் கட்டளையாலே உருவால் உயர்ந்த உடம்பைப் பெறுதலும் அரிது. அங்ஙனம் காமனைப்போன்ற மிக்க அழகை அறிவுடன் பெற்றாலும், அச் சுறுத்தும் நாற்கதியிலே செலுத்தும் குற்றத்தைத் தரும் பல நெறிகளினின்றும் நீங்கி, வாமனுடைய நூனெறியைக் குற்றமறத் தழுவி நடத்தல் யாவற்றினும் அரிதாகும்.

### ௬. நிலையாமை

இத்தகைய அருமையான யாக்கை யெடுத்தற்குப் பொன்னும் வெள்ளியும் புணர்ந்தனவெனச் சுரோணிதமும் சுக்கிலமும் வயிற்றகத்தே பொருந்திய பொழுதே மின்னும் மொக்குளும்போலக் கெடினுங் கெடும்; பிறகு, வெண்ணெய்போல் திரண்டபின்னர்க் கெடினுங் கெடும்; வெண்ணெய்போலத் திரண்டது பெரிதாகிக் கூன்புறமுடைய யாமையின் வண்ணம் எய்தியபொழுது வழுக்கினும் வழுக்கும்; வழுக்காமல் ஒள்ளிய மதிபோன்ற வுருவொடு அழகுறத் தோன்றிக் கண்போன்றவர் அழக் கவிழினுங் கவிழும்; அவ்வாறு அழியாமல் அரிய பொருளை யிரவலர்க்கு நல்கிப் பெயரிடுமளவிலே பெயரினும் பெயரும்; அன்றி, வழுவின்றிப் பொய்கையிலே மலரென வளர்ந்து கல்வி கற்கும்போது உறவினரும் நண்பரும் அழ முரியினும் முரியும்; அவ்வழிக் கெடாமற் கல்வி கேள்வித் துறையிலே சிறந்து, மாவடு வகிரெனுங் கண்ணியர் மனங் குழைந்து, தன் கொடைப் பண்பையுங் கோலத்தை

யுங் குழலினையும் அழகினையும் புகழ்ந்து காமனென் றேத்த ஏறுபோற் பீடுநடைகொள்வழி அவர்கள் இரங்க விளியி னும் விளியும்; அன்றி, மேகலையும் சிலம்பும் கிண்கிணியும் உடைய அரிவையரைக்கூடி விளக்கமில்லாத இன்பத்திலே யழுந்தியபொழுது, பல்கிளையும் முகம் புடைத்துக்கொண் டகங் குழைந்தழுமாறு கெடினுங் கெடும்; இன்றேல், கோதையரைக் கூடிக் குதலைமொழிச் சிறுவரைப் பெற்று மகிழ்ந்தினிதிற் கழிப்பினும் தம் சுற்றத்தார் கடலிடை உடைகின்ற மரக்கலத்தினில் இருந்து வருந்துவதைப் போல் வருந்தப் பேதுசெய்யும் பிணியெனும் பெரும்புலி பாய்ந்திடப் பிணமாகினுமாகும். இந்நிலையிலிருந்து பிழைப் பினும் தம் காமம் மெல்லமெல்லக் கழிதலால், தம் கொள் கைகள் குறைந்து, ஊமைகள்போல உறுப்புக்களின் குறிப் பினாற் கருத்தை யறிவித்துத், தூய்மையற்ற உடம்பாகிய குளம் ஒன்பது வாயிலாகிய வழிகளும் தம் வயத்தன்வாகா மற் சேரத் திறந்து பாய்ந்து, இவ்வுடல் முடிவில் ஆம்நிலை யிதுவென்று யாவருக்கும் அறிவித்துச் சுடுகாடடைதல் ஒருதலையாம்.

தேன் துளிக்கும் மலர்க்கணணி யணிந்த திருமுடியை யும் மேம்பட்ட குடையினையும் உடையாய்! இங்ஙனங் கூறிய நிலையாண்மை மக்களுக்கேயன்றி, இமையவர்க்குப் பகைவரை வென்று நலம்புரிந்த—திருமகள் பிற அரசர் பாற் செல்லாமல் தம்மிடத்தே யிருந்தும்—வளமிகு கையி லேந்திய ஆணையாழி முன்னினும் மிக்குயர்தற்குக் காரண மாகிய—சிறந்த பெருமன்னர்களுக்கும் உரியதேயாகும். அவர்களுளரும் பெயருமேனும் நாமறிய இந்நாள்வரை நிலை பெற்றிருந்தில. நீ யறிந்தனையேற் கூறுக!

## ௪௦. நரககதித் துன்பம்

செல்வ வேந்தே! வெவ்வினையைப் புரியும் மக்கள் தம் உயிரென்னும் நிலத்தே அதனை விதைத்து, அதன் விளைவை நுகரும் அந் நரகத்திலே, அந்நரகர் படுந்துன்பம் இவையென வுரைத்துமென்று நினைப்பினும் உள்ளம்

நடுங்கும். எனினும், அதன் தன்மையைக் கூறக் கேட்பாயாக!

தங்கள் உள்ளத்தை ஊழ்வினை செலுத்துவதால் ஓடிச்சென்று, அதன் பயனை நுகர்தற்குப் பொருந்திய முழுத்தத்திலே பனைமரத்தின் உச்சியிலே கனிந்த கனிகள் பெருங்காற்றாற் சேர விழுவனபோல விழுந்து, நரகத்தே சென்று அஞ்சத்தக்க துன்பத்திலே ஆழ்ந்து துயருழப்பர். அவர்கள் உணவோ நஞ்சாகும்.

முன்னர் ஐம்பொறிகளை அடக்காமல் தீவினையுடையராயிருந்த நரகர், பொங்கியெழுந்து ஈட்டி, வேல், குந்தம், கூர்வாள், அழலும் முனையையுடைய சுரிகை ஆகியவற்றை நட்டு நிரைத்து வைத்துள்ள நிலத்திலே அழுந்துமாறு வீழ்ந்து, அவ்விடத்தே ஊனைச் சிதறத் தட்டினாற்போல, எல்லாத் திக்கினுஞ் சிந்திக்கிடப்பர்.

முற்பிறப்பிலே விரும்பிய ஊனைத் தின்றதனாற் பிறந்த தீவினையின் கொடுமையாலே பைந்தொடி மங்கையர் ஆடும் பந்தெனத் தீயினின்றும் பொங்கியெழுந்து வீழ்ந்து திரும்பவும் அதனுள்ளே வந்து உருகி உடைந்து மயங்கிக் கிடப்பர்.

ஒன்றன் உயிரை வருத்தமுறுத்தும் மக்களின் உயிரை வருத்தும் ஆற்றைக் கேள்: தாம் செய்த தீவினையாலே உடம்பில் தைத்தால் முனை முரியாதவாறு வைரமாகிய முள்ளை முற்றும் நிரைத்து நீண்ட கிளைகளையுடைய இலவமரத்திலே யேற்றிக் கீழே துன்புறுத்தும் தீயை மூட்டுவர். மேலும், கழுவிலே யேற்றித் தாம் கொன்ற விலங்கின் மயிருக்கொன்றாக ஊனை அரிந்தரிந்து தீயில் இடுவர்.

மற்றும், உடும்பினத்தை வேட்டையாடினவர், துடியின் குரல்போலுங் குரலையுடைய, சங்கிலியாற் பிணித்து வைத்திருந்த, பெரிய வாயையுடைய செந்நாயைக் கொண்டுவந்து கடிக்கவிட, அவை வயிரவூசிகள் போன்ற கூரிய பற்கள் அழுந்தக் கவ்வி உதறிப்போடுவதால், ஆற்ற

மல் அலறி, இங்ஙனம் உடல் பொன்றினும் பொன்றாமல் துன்பம் உழப்பர்.

மேலும், வாளைமீனைத் தடிந்து தின்றவர்களை, இங்ஙனே வருகவென்றழைத்து, அவர்கள் வாயைத் திறந்து, உருக வெந்த செப்புப்பாளத்தைக் கொடிறுகொண்டெடுத்துப் புகுத்த, அதனைப் பொறாராய்க் கூவிக்கொண்டோடுகின்றவர்கள் ஓடாமல் நட்டுவைத்த ஊசிகள் உள்ளங்காலிலே பாய்தலாற், கால் நிலத்துடன் ஒட்டிக்கொண்டு, தறிவலையில் அகப்பட்ட மான்போலப் பின்னரும் துன்புறுவர்.

இன்னும், தன் காதல் மனைவி கரிந்து வருந்த விலக்கி, மாற்றான் மனைவியை எளியளென நம்பி, உலகியலைக் கடந்து விரும்பிப் பலரும் கடியவும், அதிலே செறிந்து படிந்து செய்த பாவத்தாலே, அக்கொடியோர் உலையில் ஒள்ளழலிலே உருக வெந்த செப்புப்பாவையைக், கண்டோர், 'ஆ! தகாது!' என்று இரங்கும்படி பணிந்து ஆற்றாமல் அலறுவர்.

மற்றும், வில்லால் விலங்குகளைக் கொன்றும், செழுங் கடலிலே வேட்டையாடி வலையைக்கொண்டு மீன்களை வாரியும், உடலில் வாழும் உயிர்களுக்குக் கூற்றமான கொலைஞரை நரகத்திற் கொழுவிய தழலிலே அழுத்திவிட்டு நாடோறும் நாடோறும் சுடுவர்.

மேலும், பாரிலுள்ளோர் செய்த தீவினைகளைத் தாமே கழுவுவார்போல, நரகபாலர் பலரும் பெரிய தடிகளையேந்தி, வலிய நோயைத்தருஞ் சீற்றத்தைக் காட்டி, அவர்களுடலின்கண் இனிக் கழிக்கக்கூடியது இல்லாமல் நறுக்கிவிட்டுச், சிலரைக் கரிய இருப்புச் சட்டியிலே பொரிப்பர்; சிலரைக் கண்ணிற் சுரிகையை நடுவர்; சிலரை நெஞ்சிலே சுமைமிகுங் கூரிய முளைகளை நட்டுப் பனையைப் பிளப்பது போற் பிளப்பர்.

இவ்வாறு தீவினையின் பயனை நுகரும்போது, தண்ணீர் வேட்கையாலே வறண்ட நாவை அசைத்தலாற்றாராய்,

மலரணிந்த பொய்கையினை நயந்து புக்கு நீரைப்பருகத் தொடங்கினால், அது சியாலுண்டான குழம்பாகியதால், வருத்தமுற்று, 'அந்தோ!' என்று கூவுங் குரலராய்த் தலை போன பனைத்திரளைப்போன்று நிற்பர்.

பலகறைபோன்ற பெரிய பல்லினையும் பசுங்கழல் போலும் ஆழமான பசிய கண்களையும் உறுதுயரையும் உடைய நரகர் நீர் வேட்கையுடன், நறிய மலர்மாலைகளைத் தூக்கி, மணநீரைப் பிலிற்றும் நீர்ப்பந்தரைக் குறுகினால், அப்பந்தர் சுடுநெய்யைச் சொரிந்த நெருப்பைப்போலப் பொங்கி அவரை உருகச் சுட்டிடும்.

வெந்து உருகிய செப்புக் குழம்பிலே நரகபாலரால் அழுத்தப்பட்டும், பொறியாலமைந்த ஊசலிலேற்றிக் கீழே நெருப்பு மூட்டப்பட்டும், செக்கிலேயிட்டு நீரெழ அரைக்கப்பட்டும், சுண்ணமாக நுணுக்கப்பட்டும் மந்தரமலையென மாளாத் துன்பத்திலே நாடோறும் வருந்துவர்.

மற்றும், பலருந் தாம் செய்த தீவினையாலே சென்று அழுந்தும் இந் நரகத்துள்ளே உழும் எருதுபோல வலியற்ற காலராய், அழுகிய செறிந்த சேற்றினுள்ளே விழுந்தும், ஆங்கிருந்தெழுதற்குப் புகைமடுக்கப்பட்டுஞ் செல்வர். அவர்கள் யாரெனிற் கூறுவேன் :

கொலைத் தொழிலிலேயே கன்றி நின்றவரும், உள்ளங் கொடியவரும், கடிய தொழில்புரிவோரும், 'இப்பிறப்பே யன்றி மறுபிறப்புமில்லை; உயிர்க்கிழவனென ஒருவனும் இல்லை,' என்பாரும், 'நல்வினை தீவினைகள் இல்லை,'யென்பாரும், 'தவமும் இல்லை; தானமும் பயன்தராது,' என்பாரும் தீவினையாகிய தேரிலூர்ந்து அந்நகரத்துட் செல்வர்.

## கக. விலங்குகதித் துன்பம்

வாளனைய பெரிய கண்களையுடைய பெண்களை வருத்தும்தாரினையும், அடர்த்தற்கரிய வேந்தர்களை அடர்த்த வலிமையினையும், வருத்தத்தைச் செய்யும் வேலினையும் உடைய வேந்தனே! எக்காலத்தும் நரகங்கள் எரியின்

தன்மையே உடையன! அந்நரகத்திலே பல்லுயிரும் உறும் துன்பத்தோடு ஒரு தன்மையேயாகும் விலங்குகளின் துன்பமும்.

தேனடையிலே மூங்கில் துளைக்க, அது தேனைச் சொரிந்து தினைப்புனத்திலே பாயும் குன்றிலே வென்றியையுடைய புலி முழங்க, அதனைக் கேட்ட இரங்கத்தக்க மானுறும் துன்பங்கள் நின்னிடம் அன்புசெலுத்தாத வேந்தர்கள் உறும் துன்பமேபோன்றன.

நிணம் துளிக்கும் வாயராய் நெருப்புச் சொரியுங் கண்ணராய் நஞ்சனைய பண்பராய் உள்ளோர் கூற்றுவனனைய கொலைத்தொழிலில் வல்ல நாய்களைச் செலுத்த, அதற்குக் கலங்கிய கூட்டமாகிய மயில்கள் தம் கழுத்தைச் சிறகிலே மறைப்பதை யெண்ணிப்பார்!

இவ்வுலகம் கண்ணுக்கினிய ஆட்டுக்குட்டியைக் குளிப்பாட்டி மஞ்சளைப் பூசி, மலர்சூட்டி அறுத்துக் கையிலே குருதியை யேந்தித்தூவி, 'வானவரே! மகிழ்ந்து உண்பீர்!' என்று கூறுங்கொடுமை நரகத்தினும் நான்மடங்கு கொடியதுகாண்!

மகளிர் அணியும் அக்குமணியைப் போன்ற மென்மையான சூலினையுடைய உடும்பையும், செங்கண்களையும் கோடுகளையுமுடைய வராலையும், புது நீரிலுள்ள வாளையையும் பொரிக்கறியாகச் சமைத்தற்கு வேறுவேறாக அறுக்கும்போது, அவை உயிர்விடுதற்கு வாயினை அங்காந்தழுகின்ற தீவினை யாவரிடத்தே செல்லும்?

தாம் செல்லுங் கதிக்குக் காவலாகிய நல்வினையை முன் செய்யாத விலங்குகளின் நிலை இரங்கத்தக்கது! தம்மை வருத்துந் தீவினை சென்று அலைப்பதனாற், கடல் அரணமாகாமலும் காடுகள் அரணமாகாமலும் குடல் அரணமாகாமலும் குன்றுகள் அரணமாகாமலும் மேலும் மேலும் உண்டாகுந் துயரத்தாலே பதைத்து வேகும்!

பாவத் தொழிலிலே முற்றியவர்கள் உழவுக்குரிய எருத்தைத் தம்முயற்சியாலே தாற்றுக்கோலாலே குத்திச்

சாகும்படி அடித்து ஓட்டி உழவுத்தொழிலை முடித்துக் கொண்டு விட்டபிறகு, என்னைக் கழித்துத் தசையை உண்ணும் காக்கையை ஓட்டுவாருமில்லாமற் புழுச்சொரியத் துன்பம் பொறுக்கவியலாமற் சாகும். கொஞ்சம் நீரையுடைய ஆற்றிலே இடுமணலிற் சகடம் அழுந்தும் போது, அதனில் இட்ட பொருள்களைத் தாம் சுமந்த பண்டத்தைக் கைவிடாது தாங்கும் ஆட்களைப்போலத் தாங்கிய எருதுகள் தம்மால் இழுத்துச் செல்லமுடியாத அந்நிலத்திலே மூக்கை ஊன்றியும் பக்கத்திலே ஒற்றியும் தாளாலே தவழ்ந்தும் இழுத்துத் தம் வலிமையை யிழந்து, உறுப்புக்கள் அழுகிப் புல்லுண்ணவியலாமற் சாகும்.

யானைகள், திங்களைப் பிளந்தாலனைய கூரிய தோட்டியாலே, தெறுழ மலர்போன்ற புள்ளிகளையுடைய நெற்றி பிளக்கப்பட்டும், பரிக்கோலின் நுனியாற் குத்துண்டும், அவற்றைப் பொறுக்கமுடியாமற் கரிய முகில் இடிப்பது போல் அதிர்ந்தும், கொடிய காமநோய் தம் உள்ளத்தைச் சுடுகையினாலே வெந்து பிடிகளை நினைந்தும், ஆழ நட்டுக் கந்துகள் இளகச் சுழலும்.

திருவை வளைத்த மார்பனே! சில விலங்குகள் எரி வளைப்ப வெய்ய புகையில் மூழ்கி இனிய உயிரைவிட்டுப் போம். யானைகளும் சிங்கம் வளைத்துக் கொல்வதால் உயிரைவிடும். மற்றும், மாந்தர் நீரிலே வாழும் சங்கை முழக்குவதற்கும், இப்பியை நீர்த்துளிபோலும் முத்திற்கும், கவரிமானை மயிர்க்கும் மனத்திகைப்பின்றிக் கொல்வர்.

நமக்குத் தமராகத் தகார் பலரும் வாளைக்கொண்டு விலங்குகளை விருந்திடுதற்கும் வேள்வித் தீயிலிடுதற்கும் கொன்றும், * யானையின் பசுந்தோல்போலத் தப்பாமற் கொல்லும் கட்டுகளையுடைய நீள்வலையிலே அகப்படுத்திக் கொன்றும் இங்ஙனமே விலங்குகளின் வாழ்நாட்களைத் தேய்த்துவிட்டனர்.

---

* யானையின் பசுந்தோல் பிறருடம்பிற் பட்டாற் கொல்லுமென்பர் நச்சினார்க்கினியர்.

இதுவரை கூறப்படாத பைங்கிளிகளையும் பூவைகளையும் ஆடவர்களே யன்றி மகளிரும் அவற்றின் கிளைகளினிடமிருந்து பிரித்துப் பொரியலிலே சேர்க்கக் கொல்வாரும் கூட்டுள் அடைப்பாருமாகி அவற்றிற்கு வருத்தமுண்டாக்குவர். ஆதலால், மகளிரும் புறத்தே போந்து நாய் வேட்டையாடாத அளவினரே யாவர்.

இங்ஙனம் வருந்தும் விலங்குகளாய்ப் பிறப்போர் யாவரென்னில், வளமிகு மலையனைய மாதவரைப் பழித்துரைக்கும் பலரும், பகுத்துண்ணாரும், தம் உடம்பை விலைபகரும் பரத்தையரும் இவர் போன்றாருமாவர்.

## கஉ. மக்கட்கதித் துன்பம்

வேந்தே! இனி, அகன்ற வரைபோலுந் தமது மார்பிலே பூசுவன பூசித் தம்மைக் கண்ணாடியிலே பார்த்துத் தம் அழகைத் தாங்காதவராய் மகிழ்ச்சி நிறைந்து, பெரிய இளமைச் செவ்வியினாலே இளமங்கையரைத் தழுவுவோருடைய துன்பங்களிலே சிலவற்றைக் கேட்பாயாக:

தாம் அன்னையின் வயிற்றுள் இருக்கின்ற காலத்து, அவ்விடத்திலுள்ள புழுக்கள் தாயின் ஈரலாகிய ஊனை மூடித் தமது (தமக்கென அடைந்த காலங்கள் தோறும் உறுப்புக்கள் திரள்கின்ற மலமாகிய தம் உடம்பைப் போர்த்த) போர்வையையும் மொய்த்துக் கொண்டிருக்கத் தாம் குடரைச் சூடியிருந்து, வெளிப்படுங் காலத்தில், நீரால் தூய்மை செய்யாக்காற் சேர்தற் கரிதாகிய பொல்லாத—நீரறாத—அள்ளலையுடைய—அருவழியிலே போந்த மக்கள் தம் தூய்மையை நினையாரோ? நினையாமையாற் போலும் தம்மை வியக்கின்றனர்!

உலக மக்கள், அழகிய சொற்களையுடைய மகளிரிடத் தெழுந்த அவாவாற் பிறந்த மயக்கம் மிகுதலின், அவரை அடைய நெஞ்சத்திலே வேலை யேற்கின்றனர்! அவர்க்குப் பொருள் கொடுக்கக் களவுசெய்து கழுவேறுகின்றனர்! அவரைக் களவாடி யானைக் கிடப்படுகின்றனர்! இவ்வாறு அவர்கள் அந்தோ துஞ்சினர்!

பண்ணுறுத்தப்பட்ட களிறுபோலப் பாய்விரித்த உயர்ந்த நாவாய், கண்ணிறைந்த கடலிலே மண்டிச்சென்று, காற்றுற் கவிழும்போது மக்கள் படுந்துன்பம், சென்று சேரவியலாத (நிகோதம் எனும்) நரகத் துன்பத்திலும் நான் மடங்குகாண்!

நின் பகைவர் நாட்டிற் குடிமக்களாகிய செல்வர், 'நீ தேடிய பொருளை அரசனுக்குத் தருக,' எனக்கூறி அவர்களுடைய முன்கையைக் கட்ட, அத் துன்பத்திற்குத் தளர்ந்து, அதனைப் பொறுக்கின்ற நுகத்தடியை முன்னர்ப் பூண்டவர்கள், பின்னர் அங்கே சேற்றில் நின்றும், வளாரால் அடிப்புண்டும், மேற்பல்விழக் கையால் அறைபட்டும், நுண்ணிய சாந்தரைப்பார் போல் முழங்கையாற் புண்பெற்றும், கை கால் களைந்து கண்கள் தோண்டப்பட்டும், செந்தீப் புகையிற் கிடந்தும் துன்பத்தே அழுந்துவர்!

மற்றும், மன்னர்க்குத் தாமாளும் நிலத்தைப் பரப்புடையதாக்கப் போதற்குப் போகின்ற காலையிலே அப்போக்குத் துன்பம்; அந் நிலப்பரப்பைப் பிறர் கொள்ளா மற் காக்கின்ற காவல்துன்பம். அவையன்றி அவர் விரும்பிய மகளிரைத் தழுவாராயின் கரையினையுடைய கடலே போல் துன்பம் பெருகும்.

இனி, ஊனையுடைய உடம்பென்னும் ஓங்கிய மரங்களையுடைய சோலையிலே சேர்ந்த பிணியென்னுஞ் சிவந்த தீக்கொடி, அச் சோலையை விட்டுப் போகாமல் தங்கி, அழகென்னும் மணமிகு மலர் வாடுமாறு அச் சோலையைச் சுட்டுத்தான் பின்னர் போகும்.

களைக்கொட்டின் பிடிபோலுங் கூனரும், குறளரும், ஆமை கைவீசி நடக்குமாறு போலுஞ் சிந்தரும், சீ விளைந்து வடியும் நோயையும் வருத்தும் பிற நோய்களையும் உற்றவர்களும் படுந்துன்பம் நம்மால் தெரிந்து கூறவியலுமோ?

மாந்தர்க்குத் தாம் விரும்பியவற்றைப் பெறுவிட்டால் துன்பம்! தம்மை விரும்பினவரைப் பிரிதலிலே துன்பம்!

பெருமைமிக்க இளமை கழிய, மூப்புவந்தடைதல் துன்பம்! இவையேயன்றி, எட்டிலெழுத்தை அறிதல் இன்றி இகழ்தல் முதலாக மற்றுமுள்ள இகழ்ச்சிகளெல்லாம் துன்பமே யாகியிருக்கும்!

## கங. தேவகதித் துன்பம்

வானவில் போலக் குலவிய தேன் துளிக்குந் தாரை யுடைய வானவர்தம் இயல்பைக் கூறின், அவர் கருவிலே சென்று பிறவார்! கால் நிலத்தே தோயப்பெறார்! அவருரு வம் எழுதலாகா! ஒளியை வீசி விளங்கும் அவர் நிறம் ஞாயிற்றினால் இயன்றதுபோலும்! அவரணிந்த, பல மலர் களாற் கட்டப்பெற்ற கண்ணிகள் வாடா!

அவர் தம் மகளிர்க்கு, அங்கையும் அடியும் தாமரை மலர்ச் செவ்வியை யொக்கும்; செங்கண்களும் தாமரை மல ரனைய; வாய் செவ்விய பேரொளியை யுடைய பவழத்தை யொக்கும்; விளங்கும் பற்கள் முத்தின் ஒளியைப் பெற் றவை. இவையேயன்றி, இவர்களுடைய அழகைப் பெற் றிலேனென்று திருமகளும் நோக்கி வருந்துமாறு பிற வுறுப்புக்களின் அழகும் வந்து திரண்டுள்ளன.

குவளைக் கண்ணியினையும், மார்பிலே தளையவிழ்ந்த கோதையினையும், நெற்றி மாலையினையும், ஒளிமிகு முடியி னுள்ள வைரக் கதிரினையும், சுடருங் குழையினையும், மார்பி லணிந்த அணிகலன்களில் நிலவினையும், மின்னொடு பொலிந்த நிறத்தினையுமுடைய அவ்வானவர் உணவாகிய அமிர்தத்தை விரும்பினால் உண்பது மனத்தாலேயாம்!

காமனுடைய பழமையாகிய மலரம்பு முன்னர்ப் புதைந்த அவர்களுடைய மலர் மார்பிலே, அவர்களுடைய தேவியர் தம் சிதறின செவ்வரி பரந்த, செவியுற ஓடி நீண்ட கதிர்த்த அழகினையுடைய மழைக் கண்களாகிய அம்பை வளைந்த புருவமாகிய வில்லிலே தொடுத்து எய்ய மயங்கிக் கலவம் மின்ன, மலர்ப் பாயலிலே வீழ்வர்.

மலர்கள் செறிந்த கொம்புபோன்று பொன்னணிகள் ஒளிவிடும் மேனியையுடைய, வேள் அம்பைச் செலுத்தத் தருங் கொடியன்னாரைத் தழுவி, அம்மகளிரின் பெருமை மிக்க விருப்பத்தையூட்டும் முலைகளென்னும் தாமரை யரும்புகளுடன் தமது தார் பொருது கிழிந்து அழகழியக் கூடி, அவரைக் கடலமிர்தமாகப் பருகி, அமைவிலராய், விருப்ப மிகுதியாற் கண்ணிமையாமல் தாழ்ந்து, உள்ளம் வெம்பிக் காய்ந்து கடைந்திடுகின்ற காமக்கடலை நீந்துந் தெப்பம் இவர்களேயென்று கருதி, அவர்களை நீங்கா துறைவர்.

பின்னர், அவர்கள் கற்பக மரத்தின் நீழலிலேயிருந்து நால்வகைக் கருவிகளுடனே இன்னிசைகள் நிகழத் திருவனாராகிய அரம்பையரின் கயற்கண்ணும் புருவமும் அரவஞ் செய்ய, ஒலிமிகும் மேகலைகளும் கிண்கிணிகளும் சிலம்புகளும் ஆர்ப்ப நிகழ்த்துங் கூத்தைக் கண்டும், செல்வத்துடனே கூடிய பிற விளையாட்டுக்களை நிகழ்த்தியும் அமைவிலராய், வெண்முகிலிடையே முளைத்த நான்கு பிறைகளையொப்ப வளர்ந்த மருப்பினாலே வெள்ளையானை முகிலுடன் போர் தொடங்கிக் குத்தும்படி, இனிதின் விளங்குந் தம் தோடும் குழையும் பொங்க அதன் மீதூர்ந்து, வெறுப்பிலராய் அக்களிற்றுடனே விளையாடியும் பொழுது கழிப்பர்.

அவர், இன்பம் நுகர்தற்கு வேண்டுவன தருகின்ற கற்பகக் காவைக் கண்டிருந்தும், இது நிலையாதென அறிந்து அரம்பையர் சூழத் தோள்வளையும் ஆரமும் மின்னச் சென்று, வாமனடியைத் தொழுது, மலரைத் தூவி வணங்கி, 'முனிவனே! இப்பிறவியை வேண்டேம். எமக்கு வீடே முடிவதாக!' என்று வேண்டுவர்.

மற்றும், அவர்கள் வாயளவும் நிறைந்த அமிர்தமுடைய குடங்களைப் போன்ற முலைகள் பாயக் கலந்தனராகி, மலங்களைத் திரட்டித் தமக்குள்ள ஆயுளை வீணே கழித்துப், பின்னாளிலே கதிர்போன ஞாயிற்றின் புலம்புபோற் புலம்பித் தம் அழகைப் போக்கி யிருப்பர்.

அவர்கட்கு உயிர்போகப் பதினைந்து நாட்கள் உளவாக விருக்கும்போது, கண்ணும் இமைக்கும்; மாலையும் வாடும். அவர்கள் தாம் நஞ்சினை யுள்ளேயுடைய அமிர்த மூண்டாரைப்போல, அங்ஙனம் பலநாளும் நுகர்ந்த இன்பத்தை யெண்ணிப் பயனின்றிக் காலம் போக்கினோமே யென்று பின் வருந்துவர்.

வேந்தனே! தாம் வானவராயிருந்தும் வேறொரு வானவராற் சினமுண்டும், அவரை யிறைஞ்சி யேவல்கேட்டும், அவ்வேவலை யியற்றியும், அவர்கள் அணிய மிகப் பெரிய பணிகளைச் செய்தும் வருந்துவது பெரிய துன்பம். அதனைவிட்டு மண்ணிடை மக்களாயும் விலங்குகளாயும் பிறத்தலுந் துன்பம். ஆதலால், எந்த யாக்கையை எடுத்தவர்கட்கும் அவ் யாக்கைகளெல்லாந் துன்பத்தையே தரும்.

### கச. நற்காட்சி

மணம் விரிகின்ற குளிர்ந்த பிண்டியின்கீழே மாணிக்க அரியணைமேல், வானவர் தொழுது சிறப்புச்செய்ய, இளஞாயிற்றின் எழுச்சிபோல உலகமெங்கும் இருணீங்க இருந்த எந்தையாகிய பெருமானுருடைய தாமரைமேல் தங்கின அடிகள் என் தலைமேலன! என் தலைமேலன!

உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம் என்னும் செம்பொன் மதில் மூன்றும், சந்திராதித்தியம், நித்திய விநோதம், சகல பாசனம் என்னும் முத்துக்குடை மூன்றும், நாகலோகம், பூலோகம், அலர்தூவி அடியேத்தும் சுவர்க்கலோகம் என்னும் உலகம் மூன்றும், நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்கம் என்னும் படை மூன்றும், சகசம், கர்மக்ஷயம், தெய்விகம் என்னும் அதிசயம் மூன்றும், அங்கம், பூர்வம், பகுசுருதி யென்னும் நூல்மூன்றும், நலங்கொண்ட இனிய பாலனைய குணக்கடலும் உடையார் நம்மை உடையார் ஆவார்.

மணங்கமழும் மணிமுடிமேல் நிறைந்த சூளாமணி போலும் முனிவர் தலைவன், அறவாழி வேந்தன், அவ

னுடைய தாமரைமேற் சென்ற திருவடியை யேத்தித் தெளியும் பொருள்களாவன சீலம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம் என்னும் ஐந்தும் இவற்றுடன் காலமுஞ் சேர்ந்த ஆறு பொருளும், சீலம், அசீலம், புண்ணியம், பாவம், ஆஸ்ரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோட்சம் என்னும் ஒன்பது பொருளும் என்பர்.

தம் செயலால் தமக்குரிய இருவினையின் பயனைப் பெரிய இன்பத்தையுடைய இந்திரனும் சிறு செய்கையை யுடைய குரங்கும் நுகருமென்றே உணர்ந்து, பிறர் இந்நிலை எய்துதற்கரியரென்று இந்திரனை மகிழாமலும், பிறர் இந்நிலை யெய்துதற் கெளியரென்று குரங்கினை வெறுத்து இகழாமலும், நல்வினை தீவினையின் தன்மை யித்தன்மைத் தென்று தெளிந்தவர்களே இறைவனுடைய *நாற்பத்திரண்டு நூல்களையுந் தெளிந்தவராவர்.

மிக்கோரை விரும்புதல், வெறுப்பில்லாமை, கெடாத பேரின்பமடையுங் கருத்திலே முதன்மைபெற்று நிற்றல், அறிவர்க்குச் செய்யும் வழிபாட்டுக்கு எதிர் விரும்புதல், அழிந்தோரைப் பழைய நிலையிலே நிறுத்தல், அறங்கூறுதல், சிறியோரினஞ் சேராமை, சினத்தை நீக்குதல், செருக்கை அழித்தல், அருக நெறியினர்க்கெல்லாம் இனியராதல் ஆகிய இத்தன்மைகளெல்லாம் பரமனூற் பொருளைத் தெளிந்த தெளிவாகும்.

நான் கூறிய பொருளைச் செறியத் தெளிந்தார் விலங்கிற் சேரார்; பெண்ணுகப் பிறவார்; இரத்தினப்பிரபை, சருக்கராப் பிரபை, வாலுகாப் பிரபை, பங்கப் பிரபை, தூமப்பிரபை, தமப்பிரபை, தமத்தமப் பிரபை என்னும் ஏழு நரகத்தையும் அணுகார்; பவணர், வியந்தரர், ஜ்யோதிஷ்கர் என்னும் கீழான மூன்று தேவர் குழுவைத் தீண்டார். இவற்றுள் நரகம் ஏழென்று அறியாமற் கூறினேன். அவ்வாறு நின்மனத்துக் கொள்ளாதே. ஆகாத நரகம்

* அங்காகமம் 12. பூர்வாகமம் 14. பகுசுருதியாகமம் 16. ஆக 42 நூல்கள்.

ஆறே. அதற்குக் காரணமென்னெனின், ஒரு சாரார் நல்வினை நிறைந்த போகபூமியில் விலங்காயும் பிறப்பர்.

கரு. சீலம்

காவலனே! விளங்கும் இயல்பினவாகிய புகழத்தகுந் திருமணியைக் கோத்தாற்போலும் எண்பத்து நான்கு நூறுயிரமாகப் பகுக்கப்பட்ட குணவிரதங்களும், நூற்றுக் கோடி மகா விரதங்களும், பதினெண்ணுயிரம் சீலமும் பண்ணவராற் காக்கப்பட்டன!

அவற்றுட் சீலமென்பன ஆற்றலொடு புரியும் போரிலே மன்னவர் மெய்யை மறைக்குங் கவசத்தைப் போன்றனவாய், நாடொறும் உண்ணின்று மயக்கும் ஐம்பொறிகளின் செருக்கையும் வாட்டிப் புறத்தேசெய்யும் தீவினையைக் குறைப்பன. நீலமணித் துண்டம்போன்ற *தம் சிகையை நூலிற் பணித்தவாறு தம் வண்கையினுற் பறித்தலின், இத்திண்ணிய பொறையுடைமை, பரவிய நிலத்தை இருகூறுக்கி, அவற்றில் ஒரு கூற்றைச் சுமந்து பொறுத்த தனையவென்று நினைத்துச் சீலங்களுள் இதனை முதன்மையாக விதித்தனர்.

நீண்ட அகன்ற வாளனைய கண்களையும் செவ்வாயையும் உடைய பிறர் மனைவியரிடந் தவறு செய்யும் மக்கள், பிறர் வாயிலிருந்து வரும் புறஞ்சொல்லாகிய கூர்முள்ளையுடைய மத்திகையால் தாக்கப்படுதலன்றி, அவளை முன்னர் நுகர்ந்தவர்கள் அவள் வாயினுமிழப்பட்ட தம்பலத்தைப் பின்னர் நுகரும் தம் வாயிலேற்றுத் தின்றும் மற்றும் இதுபோன்ற அரியவற்றையும் புரிவர்! †இவர்கள் உலகிடை ஆடவரெனப்படுவார்!

உலகினில் அறஞ் செய்வார்க்குச் சீலமாவன: ஒழுக்கத்தைக் கெடுத்தலேயன்றி உணர்வையும் அழிக்கின்ற கள்ளையும், புழுப்பயிலுந் தேனையும், பிறவற்றின் புண்ணு

* இது துறவின் பகுதி. † இஃது இல்லறத்தார்க்குக் கடியப்பட்டது.

கிய ஊனையும் நுகர்ந்து, வீடுபேருகிய சிறந்த பயனை இழக்கும் மக்கள் உணர்விலாத விலங்கனையர் என்று மேலோர் பழித்தவற்றை நுகர்தலை நீக்குதலேயாம்.

## கரு. தானம்

நல்ல நிலத்திலே விதைத்த விதைபோல நலம்பெற விளைந்து, பிறகு உலகிலே செல்வத்தையும் ஈனும் பெறுதற்கரிய தலைமைபெற்ற தானத்தின் இயல்பையும், கூறுமளவிற் களர்நிலத்தே விதைத்த விதைபோல விளைவு வீணுகிப் பின்னர் இன்பமும் மின்னெனத்தோன்றி மாயும் இடையான தானத்தியற்கையையும் இனி விளக்குவோம்.

மனவெழுச்சி யடங்கி ஐம்பொறியையும் ஆமைபோல அடங்க வாட்டிப், பொய் கொலை களவு காமம் அவா ஆகிய இருள் சென்று புகாமற் சீவபுற்கலம் முதலிய ஐந்தின் உண்மை வகையினை ஆராயும் சிந்தையாகிய விளக்கினை அவியாமல் எரியவிட்டுப் போற்றிச் செய்யுந் தவத்தை நுண்மையாகக்கொண்ட சீலமாகிய கதிரினையுடைய திங்களை யொப்பாராய், *மக்கள் வாய்ச்சியின் வாயை மயிர்க்கால்தோறும் உறுத்திச் செத்தினும், பூசற்குரிய சாந்தத்தை யேந்தி யப்பிப் புகழ்ந்து அடிவணங்கினும், இவ்விரண்டனையும் ஆராய்ந்து பழவினையால் நிகழ்ந்தவை யென்று தெளிந்து, செத்தினகாலத்தும் பணிந்தகாலத்தும் பிறரென்றும் நமரென்றுங் கொள்ளாராய், வைதலையும் வாழ்த்தலையும் உட்கொள்ளாராய், பாலனைய தண்கதிரையுடைய திங்கள் எல்லா மீன்களையும் அளித்தற்குச் சுழலுஞ் சுழற்சிபோல, எல்லோரையும் அளித்தற்குப், பல தாரினையும் அணிந்து பண்ணுறுத்தப்பட்ட களிறு அடங்கி மெத்தென நடக்குமாறுபோல, ஆகமத்திற்கூறிய வழியை உட்கொண்டு நுகத்தளவாகிய எல்லையை நோக்கி விழுமிய தவத்தினர் மனையிடத்து வந்தால், அவரைத்

* "தத்தமக்குக் கொண்ட குறியே தவமல்ல—செத்துக சாந்துபடுக்க மனமொத்துச்—சமத்தனுய் நின்றெழுகும் சால்பு தவமே—நுகத்துப் பகலாணி போன்று"—பழமொழி.

தொடியணிந்தகையால் தொழுது வாழ்த்தித் தூய அழகிய நிலத்திலே இருத்திப், பிறகு, காற்றுக்கு நடங்குங் கொம்பு போல வணங்கிக் கைதொழுது, அவரடியிலுள்ள புழுதியைத் துகிலால் துடைத்து, நீராற் கழுவியபிறகு, அவரைச் சந்தனம் அகிற்புகை ஆய்ந்த மலர்களால் அருச்சித்து, மேலும், மனம் வாக்குக் காயங்கள் தூயராய் நால்வகையுண்டியையும் கொடுப்பர்.

எதிர்கொளல், இடங்கொடுத்தல், கால் கழுவுதல், அருச்சித்தல், அடியில் வணங்கல், இனியமொழி கூறல், மனந் தூயராதல், செயல் தூயராதல், உணவு படைத்தல் என்னும் ஒன்பது வகையினல் மேற்கூறிய தூயருக்குக் கொடுக்க வேண்டுமென்று கூறப்பட்டுளது. இதுவே தலையாய தானம். குறைவில்லாத இனிய சோற்றை யாவருக்கும் அருளொடு நல்கல் இடைப்பட்ட தானம் என்பர். இவையன்றி, விலங்குகளைத் துன்புறக்கொன்று சோற்றிற் கலந்தூட்டியவர்க்கும், அவர்க்கு நல்ல பொருளை வழங்கினவர்கட்கும் விளையுந் தீவினைப்பயன் நம்மால் அறியலாகாதன.

## கள. தானப் பயன்

கூற்றுவன் நா கூப்பிடுவதுபோன்ற கூரிய இலைவடிவமுள்ள, நீர் ததும்பும் குடங்களிலுள்ள நீரால் ஆட்டப் பெற்ற, வேலேந்திய இறைவனே! ஒப்பற்ற நல்லோர்க்கு நல்கிய கொடையின் பயனை நீ அறியக்கூறுவோம். கேட்பாயாக!

விளிம்பிற் பிணித்த கடிப்பிற் சேர்த்த வாரை விரல் கோத்துக்கொண்ட கையாலே நெருக்கிச் செலுத்தி, மயிரையுடைய துருத்தியை அதன் வாயொலிப்ப ஊதுதலாற், பொடிசெய்த பொற்றாமரையனைய பொங்கும் அழலிலே எவ்வளவுநேரம் இரும்பு காய்ந்ததோ அவ்வளவில் உண்ணும் நீரைப்போலத் தப்பும்வழி யிதுவென்றுராய்ந் தறிந்த கொடையளவில் தோய்ந்த புண்ணியத்தை உண்டு, தனக்குக் கிடைத்த நாள் அறுதலின் உடம்பு இங்கே

ஒழியச்சென்று, இன்ப வுலகிலே (போக பூமியில்) ஒரு வயிற்றை அடையும்.

அவ்வுயிர் ஒன்பது திங்களும் (இருநூற்றெழுபது நாளும்) வயிற்றிலே யிருந்தபின்னர், அவ்வுயிரையுடைய வர்கள் துகிலிற் பொதிந்த மாணிக்கப் பாவை அத்துகிலி னின்றும் புறப்பட்டாற்போல, அவ்விடத்தே வருத்த மின்றி இரட்டைப் பிள்ளைகளாய்ப் பிறப்பர். அவ்வளவிலே தம்மை முன்னர்ச் சிக்கிக்கொண்டிருந்த பெற்றோர்கள் தம்முடம்பை விடுத்துப்போய் வானவராய்ப் பிறப்பர். அவர்களுடல் பரவிய முகிற்கூட்டம் தெளிவுற நீங்கினாற் போல மாய்ந்துபோம். இனி, அம்மக்களின் இயலை நோக் குவோம்.

பிறந்த அக்குழவிகள் மற்றவர்கள் எவரும் காப்பாற் றாமலே வளர்ந்துவரும்போது, நாற்பத்தொன்பது நாட் களுக்குள்ளே நீர்மைமிகும் உறுப்பும் கலையும் குணமும் நிறைந்திடுவரென்று நூல்கள் நுவலும்.

பின்னர், அவர்களிற் பாலையாழ்போலும் மழலைச் சொல்லாள், அவனை நீங்கிச் சென்று, ஒரு சோலை மீனை யரும்பித் திங்களையும் ஞாயிற்றையும் பூத்துள்ள தன்மை போல, மாலையும் கலனும் ஈன்று, வடகம் என்னும் அணி யுமீ துகிலும் தொங்கக் காலையும் இரவும் இல்லாக் கற்பக மரத்தின் நீழலிலே பன்மணிபூத்த கொம்புபோல நின்றாள்.

இனி, அரியேறனைய அக்காளை சாந்தம் எழுதிய குட வரையனைய தோளின்மேற் கிடந்த சாந்திலே அழகொளி ரும் குழைகள் தாழ்ந்து நக்கி ஒளிர, அணிகலன் கலந் தகன்ற மார்பிலே கற்பகமாலைகள் தாழ, வேனிலரசனைப் போல அக்கற்பகத்தைச் சார்ந்தான்.

அங்கே, தெண்கடலமிர்திலே செய்த பாவைபோலக், குண்டலம் மின்னப் பொன்னரிமாலை தாழ அவள் நிற்பதை மலர்மார்பன் ஊழ்வழியே சென்று கண்டான். அவ்வள விலே இருவருள்ளமும் காதலாற் கலந்தன. அதனால், தோன்றுபட்ட வுளத்தரானார்.

அப்பொழுது, காமத்தைக் கொப்புளித்துக் கொதிக்கும் முனையினையுடைய அம்பைக் காமன் சொரிய, நோக்குவோர் உயிரை வாட்டுதற்குக் கண்ணினையுடைய முகத்தே முத்தத்தைச் சூடி, வெய்யனவாகிய—மதம் பெய்து நிறைந்த—மணிக்குடம் இரண்டுபோல விம்மும்—அவள் முலையிரண்டும் அவன் மார்பிலே தாரோடு செறிந்தன.

அக்காலத்தே, 'நம் கண்கள் இமைத்தன. ஆதலாலே, நீர் என்னை இகழ்ந்தீர்,' என்று அவள் சீறினாள். அதற்கு அவன் அஞ்சி, 'அவை நின் வடிவழகையும் ஒப்பனைக் கோலத்தையும் நிறைய வுண்டு, அறுக்க வியலாமல் இமைத்தன,' என்றான். அவன் சிகையிற் சூட்டிய தாமம் அவளது சிலம்பிலே தோய்ந்தது. அவ்வளவிலே அவளுடைய நகைமுக விருந்தைப்பெற்றான்.

அவர்கள், இனிய அகில்மணம் கமழும் எழுநிலை மாடத்தையடைந்தும், பொன்மலர்க் காவினிற் புகுந்தும், மணியாழிசை கேட்டும், விருப்பத்துடன் நீரணி யணிந்து நறுமலர் செறிந்த மணங்கமழும் வாவியிலே ஆடியும், செல்வமிகு பழநலம் பருகிக் காம மாலையினாற் பிணிக்கப் பட்டனர்.

அங்ஙனம், தலையாய கொடைப்பயன்பெற்ற மலரனைய கடைக்கண்ணாளும் பொன்மலையனையானும் தாங்கள் விரும்பி நினைத்தவற்றையெல்லாம் கற்பக மரங்கள் ஏந்திநிற்க, அவற்றை நுகர்ந்து காலங்கழிப்பார்.

இடையாய கொடை யளித்தவர்களும் கருமபூமியிலே இருநிதிக் கிழமையிலே மயக்கமுற்றுக் காலங்கழிப்பர்.

இனி, ஐம்பொறியையும் அடக்காதவர்க்குச் செய்த கொடைப்பயனாற், பரவிய கடலிடையேயுள்ள பல தீவுகளில் ஒன்றிலே மக்களுடம்பும் விலங்கு முகமும்பெற்றுத் தோன்றிப் பழங்களை நுகர்ந்து வாழ்வார்கள்.

## கஅ. சீலப்பயன், காட்சிப்பயன்

அரசே! யான் முன்னர் உரைத்த சீலம் என்னும் மாணிக்கமாலையை அணிந்தவர் பதினாறுவகைக் கற்பத்தில் அமரராக வாழ்வர். காட்சிப்பயனைத் துய்த்தவர்கள் உலகெலாவற்றையும் ஒருகுடைநீழலில் ஒப்பக் காத்துத் தக்க இன்பத்தை யடைந்து பேரரசர்களாக வாழ்வர்.

## கசூ. வீடுபேறு

வீட்டின் இயற்கை அருகப்பெருமான் ஈட்டிய நூற்பொருளிடத்தே யுள்ளது. அதனைக் கூறுகிறேன்:

பொருள்களில் உண்மைப்பொருள் இதுவென அறிதல் ஞானம். அப்பொருளின் தன்மை யீதெனத் தெளிந்துவிடுதல் காட்சி. அங்ஙனந் தெளிந்த இரண்டையும் நீக்கமற விளங்கும்படி தன்னுள்ளத்தே நிலைபெறுவித்தல் ஒழுக்கம். இங்ஙனங் கூடிய மூன்று தன்மையும் நின்று சுடர்விட்டெரிந்த பேரழல் நீண்டகாலமாக வளர்ந்த இருவினையாகிய மரத்தினை நிரைசெய்து சுட்டெரித்துவிட, அவ்விரு வினைகள் தாம் நெடுங்காலம் பயின்ற உயிர்க்கிழவனைக் கைவிடுதல் வீடு (இன்பம்). ஆண்டுப் பெற்றபயன், அளவற்ற ஞானம், அளவற்ற காட்சி, அளவற்ற ஒழுக்கம், அளவற்ற வீடு. இவை அநந்த (அநந்தம் - அளவின்மை) சதுட்டயம் எனப்படும்.

முடிவில்லாத அறிவும் (ஞானமும்), முடிவில்லாத காட்சியும், முடிவில்லாத ஒழுக்கமும், தடையில்லாத இன்பமும் கூறப்பட்ட *பிறவும் தம்முடைய பண்புகளாலே மிகுந்து விண்ணவர் தொழுமாறு வந்து சேர்தலால் வீட்டுலகு என்பது ஒன்றுண்டு. அது யாவராலும் அறியப்பட்டது.

---

* பிறவாவன: நாமமின்மை, கோத்ரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு.

## ௨௦. பிறவிகள் அறவுரை

மாதவன் என்னும் பெயரைப்பெற்ற மலையினின்றும் அழகிய வரைகளையுடைய பவளம்போலும் வாயிற் பிறந்த குற்றமற்ற அறவுரையாகிய அருவி தொடர்ச்சியாக விழ, அவ்வருவியிலே சீவக மன்னன் துயரைச் செய்யும் மலங் கெடும்படி ஆடினான். இங்ஙனம் எல்லையற்ற இனிய அற வுரைகளைக் கேட்டபின்னர், 'அடிகளே! எம்முடைய பழம் பிறப்பையும், அப்பிறப்பில் யாம் தொகுத்த பாவத்தையும் விரைந் தருளிச்செய்க!' என்றான்.

ஒளிவிடும் அழகிய மணியை அங்கையில் ஏற்றால், அஃது ஆண்டுள்ளவற்றை விளக்குவதுபோல, நடுக்கமற்ற தவவிளக்கு விளக்குதலால் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என் னும் முக்காலத்தையும் உணர்ந்தவன் குற்றமற்ற உயர் மொழியை உரைக்கின்றனன் :

தாதகி என்றொரு நாடுண்டு. அந்நாட்டிலுள்ள ஊர் கள் கயல் பாய்ந்து பிறழ்வதால் மிகுதியான அன்னப் பறவைகள் அஞ்சி, விண்ணிற் பேரொளி செயும் ஞாயிற்றை வெண்மதி சென்றடைவது போல, அயலே அலர்ந்த தாம ரையைச் சென்றடையும் கழனிகள் சூழ்ந்து, வளமிக்குள் ளன. அங்குள்ளவர்கள் தம் கூந்தலுக் கூட்டிய புகையிற் பொருந்திய தென்றற்காற்று, ஆங்குள்ள கமுகம் பொழிலை யடைந்து, அதன் மணத்தையும் பொருந்தி, அந்நாடெங்கும் அம்மணங்களைப் பரப்ப, அவை வெண்முகிலென நின்றுல வும். ஆதலின், அந்நாடு நாடா வளமுடையது; நாகருல கின் ஒரு கூறெனுந் தன்மையை உடையதாகும்.

அந்நாட்டிற் பூமிதிலகம் என்றொரு நகரமுண்டு. அது அகிற்புகையும் துகிற்கொடியும் வானை மறைத்தலால், ஞாயிற்றையுந் திங்களையுங் காணமுடியாத வியல்புடையது; நிதிக் கிழவன் நீங்காதுறையும் பொன்னகரின் வளத்தைக் கொண்டது. அந்நகரத் தெருக்களும் காமவல்லி கிடக்கும் அமராவதி யெனும் பொன்னகரின் தெருக்களே போன் றவை.

அங்நகரி லுறையும் மன்னர் மன்னன் பவணமா தேவ னென்பவன். சங்கின்ற முத்த மொப்பாளாகிய சயமதி யென்பவள் அவன் மனைவி. இவ்விருவரும் பெற்ற நம்பி அசோதரன் எனப்படுவான். அவன் ஐங்கணைக் காமன் அன்னான்; அரசரேறு! அவனுக்கு உரிய காலத்திலே மங்கை யரை மணம் புணர்த்தினர்.

அசோதரன் அம்மங்கையரைத் தன் தார் குழையத் தழுவி, அவர்கள் அளித்த நலத்தைப் பருகி, இனிய நரம்பு களில் எழுந்த இசையும் கூத்தும் எனத் தோற்றியவை காளுங் காமப் பயிரை வளர்க்கப் பயின்று, அவர்களுடைய இதழளிக்குந் தேறலைப் பருகி, மூங்கிலனைய மெல்லிய தோளினையுடைய அம்மகளிர்க்குக் காமனுயினன்.

அவன் செவ்வரி பரவிய கண்களையுடைய அம்மாதர் களின் புலவி நீங்குமாறு தன் முடியிலே அணிந்த அலங் கலில், அவர்களுடைய சிற்றடி மலரைச் சிலம்பாகிய வண் டொலிக்கச் சேர்த்திப் பின்னர், அவரை உவகைக் கண்ணீர் துளிக்கத் தழுவி, நலத்தைத் துய்த்துப், பகைவர் அஞ்சக் காலம் போக்குவான்.

ஒருநாள், அவன் மங்கையருடனே நீர் விளையாடுதற் குத் தாமரை மலர்ந்த குளிர்ந்த பொய்கை யொன்றை அடைந்தான். அப்போது, ஆங்கிருந்த பார்ப்புகளுடன் கூடிய அன்னத்திரள் அஞ்சிக் கயல்கள் இரிந்தோடப் பொங்கி மேலெழுந்து விண்மறையப் பறந்து சென்றன.

தொடுக்கப் பெற்ற வெண்டாமரை மாலைபோல வானிலே பறந்துசென்ற அவ் வெள்ளையன்னங்கள், ஆய்ந்த முகிலாகிய ஆடையையும் திங்களாகிய கண்ணியையும் உடைய, வான மங்கையின் மேகலையை அவள்தன் சாயலைத் தோய்ந்த கணவன் அவளுடலைத் தீர்க்க நினைந்து பற்ற, அம் மேகலையில் மணிகள் அற்றுச் சொரிவன போல— வாளை துகைத்தலாற் கிழிந்த கூழை யிலையையுடைய குளிர்ந்த தாமரை சூழ்ந்த நீராவி மண்டபத்தையுடைய பகலில் தங்குங் கோயிலிலே—இறங்கின.

அவற்றில் அன்னப் பார்ப்புகள் பறத்த லாற்றாமல் அஞ்சிப், பொன் தட்டிடை வெள்ளிக் கிண்ணம் போலத் தாமரை மலரிலே புகுந்து ஒடுங்கி ஒளிந்திருந்தன. அவற்றை இளங்கோக்களின் தலைவணங்கிய அசோதரன் கண்டான்; அவன் உரிமை மகளிரும் கண்டனர். உடனே, 'பெரும! ஒளிக்கின்ற அப் பார்ப்புக்களைக் கொண்டு வர வேண்டுமென்று கஞ்சுகியிடங் கூறுக,' என வேண்டினர். காளைபோன்ற அரசிளங் குமரனும் அவ்வாறே அவனைக் கொண்டு அன்னப்பார்ப் பொன்றைப் பிடித்து அவர்கட் கீந்தனன் !

இமயமலையில் இருக்கும் பதுமையென்னும் பொய்கையில் தோன்றிய திருவைப் போன்ற அம்மங்கையர் மகிழ்ச்சியுட னதனைப்பெற்றுத், 'தாமரைப் பொய்கையில் வாழும் உனக்கு எம்மார்பகம் பொய்கையாக இல்லாவிடினும் பொய்கை போலவே இருக்கும்,' என இன்மொழி கூறி மார்பகத்தில் அணைத்துக் கையாலே தடவிக் கொடுத்துப் பாலுஞ் சோறும் புரிந்தளித்துக் காப்பாற்றி வந்தனர்.

இங்ஙனமிருக்க, ஒருநாள் கதிர்முடி யணிந்த மன்னர் மன்னன் இதனை அம்மகளிரிடையே கண்டான். 'இதனைப் பொய்கையினின்றும் பிரித்தவர்கள் யாவர்?' என்று வினவினான். உழையர், 'அசோதரன்' என்று கூறினர். 'கொலை வேலவனை விரைவிற் கொண்டு வருக!' என்றா னரசன்.

அப்போது, இளங்கோ முழவொலிக்க யாழிசைக்க, இடுகும் இடையினர் ஆட அதனைக் கண்டிருந்தான். ஏவலர் சென்று, நுமக்கு அரசன் கூறியது ஈதென் றிறைஞ்சிக் கூறினர். அவன் விரைந்து சென்று மன்னனடியைக் கையால் தொட்டுத் தொழுது, முடியாலும் வணங்கினான். பிறகு, அழகிய இடக்கை விரல்களால் வலத்தோளின் மணியிழைத்த தொடியைத் திருந்தப்பற்றி, வலக்கை விரலால் வாய் புதைத்து நின்றான்.

மகளிர் கவரி வீச வீற்றிருந்த வேந்தன் தான் அணிந்திருந்த குழை சுடர மகனை நோக்கி, 'அன்னப் பார்ப்பு

களைக் கிளையினின்றும் பிரித்தல் அருஞ்சிறை செய்தல் ஆகிய இரண்டும் நினக்குப் பயனைப் பின்னர் ஊட்டும் விதை போன்றவை. அவற்றைப் பற்றிக் கூறுகிறேன். இங்கே யிரு!' என அருகில் அமர்த்திக் கூறுகிறான்.

“அலங்கல் அணிந்த வேலவனே! பெரிய தீவினைகளை மறம் புரியும் உள்ளத்தின் வழியே சென்று, திரண்டு தம்மைச் செய்த உயிருடன் விரைந் தோடிப்போய், அவ் வுயிரைத் துன்புறுத்தும். அப்போது அவ்வுயிர் உறுந் துன்பம் பெரிது. ஆகையால், அவ்வினைக்கு அடிப்படையான உயிர்க் கொலையும் நினக்கு வேண்டா. இதுவே அறங்களிற் பெரிது. மெய்யுரையால் இவ் வையகத்தே புகழ் நிலைபெற மன்னும். மறுமையில் மேலுலகத்து மணிக்கோபுரங்களையுடைய கோயில் மன்னும். பொய்யுரையால் இம்மையிற் பழியும் மறுமையில் நரகத்துக் கோயில்களும் நிலைபெறும். இவ் விரண்டும் ஐயமிலாதன. ஆகையாற் பொய்யுரையும் வேண்டா; புறத்து நீக்குக! இனிக் கள்வின் வினைவைக் கேள். இவ்வுலகிலே தாமரை மலர் போலும் புகர்செறிந்த முகத்தையுடைய யானையின் முளைத்த எயிறுகளைக் கொண்டு கள்வரின் மார்பைக் குத்திப் பிளக்குமாறு செய்து மன்னர் கொல்வர். மறுமையில் நரகிலே கொடுந் துன்பங்களிலே அக்களவு செலுத்தும். ஆகவே அக்களவைக் கடிதல் கடனாகக் கொள்ள வேண்டும். தம் மனைவியராகிய மடநல்லார் மனம் வருந்தப், பகைவர் கழுத்தில் வைத்த வாள்போல் இன்னாதன செய்யும் பிறர் மனைவியரைச் சேரின், தாங்கற் கரிய துன்பத்திலே அழுந்துவர். ஆதலால், நடுங்கலைப் புரியும் காமத்தினைக் கைவிடுதல் நன்றாம்.

“ஆராயின், பல்வகை அருளும் நக, உலகம் நக, ஐம் பொறியும் நகப் பொருளும் நகத் தீயவழியிலே ஈட்டும் பொருள் சிறிதும் நற்பொருளன்று. அங்ஙனம் தீதாக ஈட்டாமல் நன்னெறியிலே யீட்டின், அப்பொருள் இம்மையிலே புகழை விளைவிக்கும் வித்தாகும். மறுமையிலே செம்பொன்னுலகம் ஏறுவதற்கு மயக்கமற்ற ஏணியாகும்.

"பொய்யொடு செறிந்த பொருளாசையையுடைய பரத்தையர் மாயத்தை யுண்டாக்கும் இன்பம்நிறையப் பெய்த கொள்கலமாகும். ஆதலின், அவர் சேர்க்கை பாவ முண்டாந் தீவினையாகிய துகளைச் செறித்தற்கு வழியாகும். அவர்களுடன் ஆடுதலையும், நடுநிலையைச் சுடும் நெருப் பாகிய வஞ்சகம் பழுத்த கவறாடுதலையும் ஒழிக.

"மற்றும், காமமுடையாரும், செற்றத்துடன் பற்றுத லுடையாரும், மாலையும் சாந்தும் புனைவாரும், பசியினால் இல்லத்திலே சென்று உணவு கொள்வாரும் ஆகிய இவர் கள் நமக்காதரவாள ரல்லர். ஆதலின், இத்தீப் பண்புக ளற்ற வாமனடியையே வணங்குக. பிற அடிகளை வணங் கற்க!

"நம்பியே! தன் கிளையுடன் கூடியிருந்த அன்னம், பூவை, கிளி முதலியவற்றையும் பலவகை விலங்குகளையும் பிறவற்றையும் அவை தம் கிளையினின்றும் நீங்கி வருந்தப் பிரித்து, இவ்வுலகிலே காவலிட்டு வைத்தவர்கள், மறுமை யில் தம் கிளைஞரிடமிருந்து நீங்கித் தாமும் பிறரால் காவல் செய்யப்படுவர். ஆதலால், நீ பிரித்துக் காவல்செய்த இதுவும் பொல்லாத செயலேயாகும்.

"அல்லித்தண்டற்று வீழ்ந்தபோதும் நூலறாது தொடர்ந்து நிற்குந் தன்மைபோலத் தம் உடல் உயிரை நீங்கிக்கிடந்தபோதும், எல்லையற்ற துன்பத்தையுடைய தம் தொல்லைத் தீவினையாகிய கொடியதீ அவ்வுயிரை நீங்காமல் தொடர்ந்துசென்று சூழ்ந்து தழுவிக்கொண்டு, அவ்வுயிர் சென்று புகும்உடலிலே தானும் புகுந்து, பின்னே நின்று அதனை எரித்துச் சுட்டிடும்.

"அறமுடைய வுள்ளத்தராய் ஆருயிர்க்கெலாம் அரு ளைச் செய்வராயின், அந்நல்வினை பறவையும் நிழலும்போல உயிருடன் ஓடிச் சிறிதும் மறப்பின்றித் தம்மாற் காத லிக்கப்பட்ட எல்லாவற்றையும் மனத்தில் நினைத்தபோதே கொடுக்கு மியல்புடைய கறவைபோலக் கொடுக்கும்.

"வேள்வித்தறியிலே கட்டின யாமை தான்கிடந்த குவளைமல்கிய பொய்கையையும் துணையையும் நினைப்பதே போல், அறிவில்லாதார் கடிய கயலனைய கண்ணையுடைய மங்கையர்பால் வைத்த காமத்தையும் பொருளையும் சிந்தித்து, உயிரை விடுவர்.

"எழிலேறுபோலத் தவமாகிய நெறியிலே வானத்தையடைந்து அதனையாளுஞ் செம்பொன்னாகிய உயிரையுடையார், சிறப்பற்ற கொலைத்தொழிலைப் புரியுங் காலனுடைய வைரவாளாகிய வலையிலகப்பட்டால் (பிறவி பெற்றால்), விழாவிற்குப் பிறகு கழிக்கப்படும் குவளைமலரேபோல இளமை நீங்கியபின்னர்க் கழிக்கப்படும் இயல்பையுடைய மகளிரையும் பொருளையும் நீக்கிப் பல நெறிகளையுடைய மலைபோல் தோன்றும் அறத்தையே செய்ய நினைப்பர்."

இவ்வாறு மன்னன் கூறிய அறத்தைக் துன்னிக் கேட்ட மைந்தன் அசோதரன் அஞ்சி ஆலங்கட்டிபோல நெஞ்சுருகி, மெய்வெந்து, பின்னர் உடுத்த துகிலிலே பற்றிய நெருப்பை விரைந்தணைக்குமாறுபோல, விரைந்து சென்று, உரிமையிடமிருந்த அன்னப்பார்ப்பை விடுவித்துக் கொண்டுபோய் அன்று பிடித்த பொய்கையிலே விடுத்தான். அதனால், முன்னர்க் கிளைப்பிரிவை வித்தியவாறு போலப் பின்னர்க்கிளைகளிடங் கூட்டத்தையும் வித்தினான்.

மற்றும், முன்னர் மகளிர் வாய்க்கொண்ட அமுதமே போல இருந்த அசோதரன், அறங்கேட்ட பிறகு, உடம்பிலுண்டாகிய கட்டிப்புண்ணைத் தீர்ப்பதற்குக் கொண்ட முயற்சிபோலத் தன் இளமைக்குரிய காமத்தினை வெறுத் தொழித்துப், பாவமும் இத்தகைய பெரிய தீமையுடையதென்று அஞ்சி, இவற்றை யெல்லாங்கொண்ட பிறவி நோய்க்குப் பெரிதும் அஞ்சினான். ஆகவே, 'நஞ்சிற்கு ஓர் இருப்பிடமாகக் காமமாகிய நஞ்சினை வைகலும் நுகர்ந்தேன்,' என்று, ஆளியாலே தாக்கப்பெற்ற யானைபோல வாய்விட்டுப் புலம்பி, 'அடிகளே! மகளிரைத் துறந்து தூய தவத்தைச் செய்வேன்,' என்றான்.

சிறுவன் மொழிந்ததைக் கேட்ட தேர்வேந்தன், 'உறுகளிற்றுழுவனே! உன் ஒளிபொருந்திய முடியுரிமையைப் பெற்று, அலைகடல் சூழ்ந்த நிலவுலகைக் காத்துப் பிறகு நின் மகனுக்கு நல்கிப், பிறகு, நீ துறத்தல்வேண்டும்,' என்றான்.

அதனைக்கேட்ட அசோதரன், 'அடிகளே! சிறையினின்றுந் தப்பிப்போகு மொருவனைத் தொடர்ந்துசென்று பற்றி, அலைத்துச் சிறையில் அழுத்துவோர் சுற்றத்தாரோ? பகைவரோ?' என்று வினவ, அதனைக்கேட்ட அரசன் பெருவிலைபெற்ற மணியை, மூன்று தன்மையுடைய நடுக்கடலிலே வீழ்த்தியவனைப்போன்று கலங்கினான்.

அவ்வரசன், 'கழிந்துபோன நம் பிறவிகளில் யாங்களெல்லோரும் இவற்குச் சுற்றமல்லேம். இனிமேல் இவனெடுக்கும் பிறவிகளினும் யாம் சுற்றமல்லேம். ஆதலால், ஈண்டுச் சுற்றமென்பதே இல்லை. இவனுக்கு நேர்ந்ததும் அது,' என்று கருதி அன்பாகிய தளை நீங்குமாறு நீக்கி விட்டான்.

நடத்துதற்குரிய நல்ல பொறியை உள்ளே அமைத்து வல்லவன் ஒருவன் செய்த பாவையினுள்ள அப்பொறி குலையுமானால் அப்பொறியைச் சார்ந்த பிற பொறிகளெல்லாங் குலைதல்போல, அரசன் மொழியாகியபொறி சோர்ந்தவுடன், நம்பன் தன்னுடைய ஐம்பொறிகள் புலன்களிற் செல்லும் வேட்கை விலக, இல்லின்கண் நல்வினையால் துய்க்கும் இன்பத்தையும் நீக்கி, இரண்டாயிரவர் அரசர்கள் சூழ்ந்துசெல்லத் துறவிலே சென்றான்.

வாலை நன்றாகப்பற்றிப் பிடித்துப் பறித்தகாலத்தும் தான் அளையைக் கைவிடாத உடும்பை யொப்பாரை யாதொரு காரணத்தாலும் இல்வாழ்க்கையினின்றும் விலக்க முடியாது. இங்ஙனம், அரிதாயிருக்கவும், அசோதரன் முற்பிறப்பினும் தவம்புரிந்து வருதலின், தந்தை கூறிய ஒரு சொல்லே துறவிற்குக் காரணமாகக்கொண்டு

அம்பின் அழகையழித்த கண்ணுரைத்துறந்து சென்று கடவுளானன்.

பிறகு, அகிற்புகை கமழ்ந்து தெய்வ மணங்கமழும் வண்டுலவும் மாலையினையுடைய அரசனும், தாமம் பொருந் திய ஐம்பாலையுடைய சயமதியென்னுந் திருவனையாளும், மற்றை அசோதரன் மனைவியரும் அச்சந்தரும் நாற்கதி யினுஞ் சேறற்கு அஞ்சி நற்றவத்தின் முடிவைக் கைக் கொண்டனர்.

இங்ஙனம் அசோதரனாக இருந்து கடவுளாகிய நீ தவத்திற்குக் கூறிய ஒழுக்கம் வெள்கத் தவஞ்செய்து, அத்தவத்தின் பயனாற், கற்பகமாலை புனைந்த *சாசாரன் என்னும் இந்திரனாகிச் சிறந்த இன்பமுடைய அழகிய வானுலகத்தை ஆண்டு, அவ்வானுலகிலே உடனிருந்த அழகியருடனே ஈங்கு வந்து தோன்றினை. மன்னனே! ஒளிபொருந்திய சிலம்பைப்போல ஒலிக்குங் குரலையுடைய அன்னப்பார்ப்பை முற்பிறப்பிலே பிரித்தனை, அதனாலே நீயும் இப்பிறப்பிலே கிளையினின்றும் பிரிந்தனை. மேலும், அப் பார்ப்பைச் சிறை வைத்ததனாலே இப்பிறப்பிலே நீயும் சிறைப்பட்டனைபோலும்!

இங்ஙனம், முகில் தவழும் மணிவரைபோலச் சலிப் பற்ற மாதவன் முதலிற்கூறிய அறவுரையாலே வேலை யுடைய சீவகன் அரசாட்சியை அஞ்சியிருந்தனன். அந் நிலையிலே அம்பு வீழ்ந்தாற்போல இவன் நடுங்கும்படி முற் பிறப்பின் வரலாறும் அம்முனிவன் வாய்மொழியாற் கூறப்பட்டது.

பின்னர், வாரணிந்த மணித்துடியை மருட்டும் நுண் ணிய இடையையுடைய மயிலனைய மாதர்சூழ வணங்கி நிற்ப, மாதவரின் சிறப்புற்ற பொன்மலரடியில் சீவகன் தன் முடிபட வணங்கி வாழ்த்தினன்.

பிறகு, நலமிகு திருமகளும் விரும்பும் தாமரைமலரை யுடைய நிலத்திலே, சாரணர் இருவரும் இருந்து, ஞாயிறுந்

* சாசாரன்—சகஸ்ராரன்.

திங்களும் நிமிர்ந்து செல்வதைப்போல வானிலே சென்றனர். அப்போது, அவர் திருவொளி வானெங்கும் சிறந்து பரவியது.

## உக. தாயத் தீர்வு

சாரணர்கள் சென்ற பிறகு, வஞ்சிக் கொடிபோன்ற தேவியரின் போரிலே அணிந்த புலவுகமழும் வேலனைய கண்கள் நீரணிந்த குவளைமலர்கள் போல நீர் மல்கி நின்றன. பொன்மலையின்மேல் நிலவு தன் கதிரைச் சொரிந்து அதனை மறைத்தாற்போல மலயச் சந்தனம் குலவும் மார்பினன், மின்கொடியனைய இடையினர் மெலியவும் அவர்கட் கின்னுரை கொடாதவனாய், மெல்ல அரண்மனையை அடைந்தான்.

அப்பொழுது, தேவியர் நஞ்சுபோலப் பெருமூச்சு விட்டு, முகிலிடைச் செல்லுந் திங்கள்போல முகவொளி மழுங்கவும், அணிகலன்கள் கரிந்து நையவும், அரசன் தோளாகிய அணையிலே துயிலாமல் ஆவின் மடி சொரிந்த பாலின் நுரைபோன்ற பஞ்சணையிலே வைகினர்.

வானம்பாடி முகிலிடைப் பிறந்த நீர்த்துளியையே விரும்பிப் பாடுமாறு போல, அரசனிடம் பிறந்த அளியைத் தவிர மற்றவற்றை ஊரைத்த லறியாத அம்மங்கையர்கள், வெண்மையான எயிற்றையுடைய பாம்பு விழுங்கிய மிச்சிலாகிய குறைமதிபோல ஒளிகெட்டு, மெலிந்து, ஒளிதரும் மணிகளால் அணிசெய்தலை விடுத்தனர்.

இனி, இனிய கிளிபோல மிழற்றும் மங்கையரின் கிண்கிணியும் சிலம்பும் ஒலிக்கவும், இரண்டழகிய கொழுவிய கயல் மீன்கள் நீரிற் குளித்துப் பிறழ்தல் போல உவகை நீர் சுமந்த கண்கள் பிறழ்ந்து கலாய்த்து அலமந்தாடவும் அவர்களுக்கின்ப நல்கிய சீவகன் துறவை மேற் கொண்டதைக் கூறுதும்.

**சச்சந்தனுக்கு முடி சூட்டல்**

துறவை மேற்கொண்ட சீவக மன்னன், 'சீவிய கொம்பு அழுந்தக் குத்திப் புலியுடன் போர் செய்து வென்ற பேரிடியென முழங்கும் சீற்றத்தையுடைய ஏற்றின் தோலைப்போர்த்த முரசு முழங்கும் தானையையுடைய நந்தனைக் கொண்டு வருக!' என்று ஏவலரை விடுத்தான். உடனே, குளிர்ந்த மலர்மாலை பணிந்த நந்தன் தொழுத வாறே வந்து குன்றமன்னன் அடியைப் பணிந்து, 'அரசர்க் கரசே! நினைவை அருள்க!' என்று நின்றான். சீவகனும் சீற்றமிகும் படமுடைய நாகத்தின் தலை நடுங்க இடிபோல முழங்கும் முரசும் நாணுறுமாறு இயம்புகின்றான்:

"ஊனுடைய கோட்டினையும் சுரிமுகத்தினையு முடைய நத்தை வரம்பிலே துயிலும் ஆனேற்றின் மேலும் செவ்வொளி பரவிய நாகின்மேலும் ஊர்ந்துபோய், இளந் தேரையையுந் தழுவிச்சென்று, குவளை மலர்ந்த கழனியிற் காடென மலிந்த செந்நெற் கதிரணையிலே துயிலும் நாட்டையும் வேல் மிடைந்த தானையினையுமுடைய அரசாட்சியை வருத்தமின்றி ஆள்வாயாக."

இம்மொழி கேட்ட நந்தன், 'கரும்பல்லாமற் காடொன்று மில்லாத கழனி சூழ்ந்த நாட்டையும், வண்டு முரலுங் கண்ணியையுடைய வானோர் துறக்கத்தையும், வீட்டையும் எய்தி வாழும் வாழ்வை வேண்டேன். அரும் பவிழ்ந்த அலரனைய நின் திருவடியை விரும்பி வழிபட்டு வாழ்வதொன்றையே நான் விரும்புகின்றேன்,' என்றான்.

இங்ஙனம் சீவகற்கிளைய—மலையென மருண்டு வண்டுந் தேனுஞ் சென்று மொய்த்து இமிரும் யானையையுடைய—நந்தட்டன் அரசாட்சியை விரும்பாமல், தான் விரும்புந் துறவையே வேண்டி நிற்பதைக் கண்ட சீவகமன்னன், 'இவ்வுடல் மேல்தோற்றத்தாற் பொலிவுடன் காணப்படினும், உள்ளே உறுதியுடையதன்று. எனவே, இப் பருவத்திலேயே துறத்தல் உறுதியாகும்,' என்றெண்ணினான். மேலும், 'இடியென முழங்கும் யானை நிலத்திலே வீழாமல்

தன்னைத்தாங்கும் மருப்பிலேயன்றி வேறோரிடத்திலே துதிக்கையை வையாது. அதுபோல நாமும் அரசினைத் தாங்கற்குரிய சச்சந்தனிடத்திலே இதனை வைப்போம்,' என்று கருதினன். எனவே, சச்சந்தனை அழைத்துவரப் பணித்தான்.

ஒளிவிடும் மணிமாலை யணிந்த மார்பினையுடைய சீவக மன்னனின் மக்களாகிய—எழுவனைய திண்ணிய தோள்களையுடைய—இளைஞர்களில் ஆண்டில் மூத்தவனும் மரத்தைத் தழுவும் மலர்க் கொம்பனைய தத்தையின் மகனும் ஆகிய சச்சந்தன் வந்தவுடனே வீற்றிருக்கச் செய்து முறையாற் கூறுகின்றனன்.

"வேந்தனே! வெள்வளை பரவிமேயுங் கடல்சூழ்ந்த உலகிலே கோல் வளையாமற் காப்பாற்றி, நின் குடைநிழலிலே துயில நோக்கி, நூல் விளைந்தனைய நுண்ணிய மொழியையுடைய அமைச்சரையும் அறத்தையுங் காப்பாற்றினால், அதனால் நினக் குண்டாகாத இன்பமே இல்லை. யானைக்கு நெற்கவளத்தை ஒழுங்காக அரிந்து நாடோறும் தின்பித்தால் அதன் வாய்ப்பட்டுப் பயன்றரும் உணவாகும்; அழிவும் இன்றாம். அங்ஙனம் இன்றிக் களிறு தானே கழனியில் மேயின் களிற்றின் வாயிற் புகாமற் போதலேயன்றி அழிந்தும் போகும். அதுபோல, அரசனும் இன்றை கொள்வதில் வல்லவனாய் முறைமைப்படியே கொண்டால் உலகும் அவன் வழி நின்று பயன்படும். மற்றும், உயிர்கட்கெல்லாம் உயிரெனக் கூறப்படுகின்ற நெல்லும் நீரும் சிறந்த உயிரல்ல. ஆராய்ந்து கூறின், புகைந்து பொங்கும் அழலைக் கக்கும் வாளேந்திய—வெண்குடையை யுடைய—மன்னரே நல்லுயிராகும். ஆரைத் தன்னிடத்தே கொண்ட ஆழியையுடைய தேரைச் செலுத்த வல்லவன் சமநிலத்திலே செலுத்தினால் பல நீண்டகாலம் தேர் நடக்கும். செலுத்தும் சமநிலத்தை அறியாதவன் செலுத்தினால் தேரும் முறியும்; அவனும் வீழ்வான். வேந்தரின் இயலும் அத் தன்மைத்தேயாம். *ஒருவனைச் சினந்து எறியுங்

*"களிறு கவுளடுத்த எறிகற்போல—ஒளித்ததுப்பினை" (புறநா-80)

கல்லைக் காதம் வருமளவும் கவுளிலே அடக்கி வைத்திருக்குங் களிறுபோலவே, வேந்தரும் ஆராய்ச்சித் திறனும் அருளும் உடையராகிப் பகைவர்மேற் கொண்ட சீற்றந் தோற்றாமல் (பொறுத்துக் கொண்டாரென்று பகைவரெண்ணுமாறு) காலம் வரும் அளவும் பொறுத்து, அவர் விரும்புவன வற்றையும் ஆராய்ந்து கொடுத்துத் தம் எண்ணத்தை மறைத்தலே நல்ல பொருளாகும். தீமையை விலக்கி நன்மையை உணரும் மகனே! புகழ் கெடுமே என அஞ்சிப் பொய் ஓரெழுத்தையும் கூறாதே. கலைகளாகிய கடல்களை நீந்தி, வெற்றிக்கொடி யேந்திய அமைச்சர்க்கு எப்போதும் அருள் செய்க! மற்றும், குடிமக்கள் பழியாமற் காப்பாயெனில், மன்னர் நின்னடியிடத்தே வீழ்வர்.''

இங்ஙனம் அரசியல் கூறிய சீவகன் சேலனைய கண்ணினையும் மானனைய மடநோக்கினையும் உடைய காதல் மிகுந்த குணமாலை முதலிற்பெற்ற காளையாகிய சுதஞ்சணனைச் சச்சந்தனுடன் கூடியிருந்து இளவரசாகப் பட்டங் கட்டினன். கூரிய அழகிய பற்களையும் கொவ்வைக் கனியனைய செவ்வாயினையும் அழகிய மயில் போன்ற சாயலினையும் உடைய இலக்கணை பெற்ற சிறுவன் சிங்கம்போன்ற கோவிந்தனை, 'நீ சொரியும் பொன் மழையை உலகம் நுகருமாறு பெருநம்பியாக இருப்பாய்' என்று சிறப்புச் செய்தான். (பெருநம்பி யென்பது ஓரரசனுக்குப் பின்னர் அரசனாக இருக்கும் உரிமை பெற உரியோர்க்குக் கொடுக்கும் பட்டம்.) தன் கழலை வணங்காத மன்னர், போருக்குப் பின் வணங்கிக் கொடுத்த திறைப் பொன்னால் விளங்கும் பூணினையுடைய நந்தட்டன் புதல்வனை அழைத்துக் குறுநில மன்னர்க்குரிய அரசாட்சியிலே நிற்குமாறு செய்து, தன் மகன் சச்சந்தனுக்கு, முடி சூட்டி வேந்தாக்கினன். பின்னர், மற்ற மைந்தர்க்கெல்லாம் புவியிற் புழுதி யெடுக்கும் தேரினையும் முத்து விளையுமாறு முதிர்ந்த அழகிய வைரக் கிம்புரியிட்ட கோட்டினையும் மும்மதத்தினையும் உடைய யானைகளையும் திரண்ட செல்வத்தினையும் நாடுகளையும் கொடுத்தான். மற்றும், தன் தோழரின் மக்களாகிய நூற்

கேள்விக்கு இடந்தந்த நுண்ணிய செவியினையும், நிலத்தைக் கொள்ளும் போரிடத்தே வேலுக்கு இடங்கொடுக்கும் மார்பினையும் பாற்கடல் போல நூற்கேள்வியினையும் உடையாரை, நாற்புறமுங் கடல் சூழ்ந்த வுலகினைக் காக்கும் சச்சந்தனுக்குக் கண்களாக இருத்தினன்.

இங்ஙனம், பகைமன்னருடைய மார்பாகிய கழனியில் உழுது திருமகள் தங்கும் வெற்றியை விளைத்த கோட்டினையுடைய மழகளிற்றையுடைய சீவகன் மலர் மலர்ந்த கொடியனைய மங்கையரை இல்லறப் பற்றினின்றும் விடுவித்தற்கு அரண்மனையை அடைந்தான். அப்போது, தூயவாக அலர்ந்த மாலையணிந்த மங்கையரின் வலக் கண்கள் துடித்தன.

## ௨௨. துறவுணர்த்தல்

பைம்பொன்னால் வளர்க்கப்பட்ட பனை திரண்டாற் போன்ற தோளையுடைய சீவகன் செம்பொன்னால் வேய்ந்து மணிகளால் முகடு இழைக்கப்பெற்ற அரண்மனையை அடைந்து, தத்தம் பொன் மிகுதியால் செல்வம் நன்றெனத் துணிந்திருந்த பாவை யனையாரை அழைத்து வருக என ஏவலரைப் பணித்தான்.

அப்போது முற்றிழை யணிந்த அம் மங்கையர் தின்னுங் கருப்பூரம் விளங்கும் திரண்டமாலை, தீம்பூ மிகவும் ஒளி செயும் மாலை, பூமாலை, பொற்றகட்டால் ஒப்பனை செய்த மாலை, முத்துமாலை, மின்னென்றே மயங்கும் ஒளிவிடும் மாலை, ஆகிய இம் மாலைகளினிடையே கிடந்த மாணிக்கக் கால் அமளிமிசை மணம் விம்மும் புகை நிறைவதனால் எங்கும் மணங்கலந்து, நுழையே போலத் தோன்றும் அணையின் மேலே மயில்களைப் போல இருந்தனர்.

அந் நிலையில் இருந்தவர்களிடஞ் சென்ற ஏவலர் வணங்கி, 'அரசன் திருவுள்ளம் நீங்கள் தன்னிடத்தே வருவதாக இருந்தது,' என்று கூற, ஞிமிறுகள் முரலவும்,

மின்னிடை வருந்தவும், விளங்கும் மேகலைகள் மின்னவும், பொன்னாலான கிண்கிணியும் பூவேலை செய்த சிலம்பும் ஒலிக்கவும் சென்று மன்னன் அடியிலே வணங்கி, 'வாழி' எனக் கூறி நின்றனர்.

சீவகன் அவர்களை நோக்கி, 'மயில் தன் கலவத்தைக் குவித்தாற் போலும் ஐம்பாலினையும் விளங்கும் மணி மேகலையினையும் நிலவை உமிழும் புதிய பூண்களையும் இலவ மலர் போன்ற வாயினையும் அழகிய கூரிய பற்களையும் உடையீர்! உங்களுடைய பரவிய வுள்ளத்தை ஒருமைப் படுத்தி வைத்து, உறுதியாகிய பொருளொன்றைக் கேண்மின்!' என்று கூறத் தொடங்கினான்.

அதனைக்கேட்ட வேயனைய தோளினர், அழலைச் சொரியும் வாயையுடைய ஆழியேந்திய அரசனின் துறவை யுட்கொண்டு, தம் அழகு மெலிந்து வாடி, அழலிலே வீழ்ந்த கற்பகமாலையைப் போன்றனர்.

**அரசன் கூறுகிறான்:**

"பிறைநுதல் கொண்ட மாலையனையீர்! ஆராயுமிடத்து வலம்புரியானது கடலிலே தோன்றுமல்லது, பெரிய குளத்திலே எப்போதும் தோன்றாது. அதுபோலக் கொடையாகிய தானமும் அரியதவமும் உலகிலே செல்வமுடையவர்க்கல்லது வறியருக்குண்டாக வழியில்லை. வெளிப்படையாக யான் கூறும் இதனைக் கருத்துடன் கேட்பீராக! நீரைச் சொரியும் அருவியை யுடைய குன்றிடையல்லது வைரம் தோன்றாது. ஆழமான நீரையுடைய குளத்தினல்லது குப்பையிலே குவளை மலராது. அவை போலத் தகுதியை யுடையவர்க்கல்லது தம்மிடமுள்ளதைப் பகுத்துண்ணும் பெற்றி மற்றவர்க்கியலாது. யாழிசை பரவிய அரண்மனையிலே அழகிய நெற்றியை யுடைய மகளிர் தெய்வங்கட்கெனத் தூவும் பெரும் பலியாகிய சோற்றைப்போல மிகுதியாக நல்குதல் வறியருக் கியலாதேனும், தத்தம் நிலைக்கேற்றவாறு மகளிர் தம் மனையில் தூண்கள் தோறும் உறையும் தெய்வங்கட்குத்

தூவும் பலியளவாக ஈவார்களாயின், அது பிறகு மேரு போல மிகுந்தன்மையதாம்.

"இங்ஙனம் வழியரின் வருத்தத்தை நீக்கி உயிரைப் பெற்று நிற்குமாறு உண்ணும் உணவு நல்குதல் துறக்கத்திற்கு வழியாகும். மேலும் உயிர்க்கொலை நீக்கித் தேனையும் ஊனையுந் துறப்பாரெனின் யாவராயினும் மண்ணும் விண்ணும் வந்து வணங்கும் என அறங் கூற வேண்டியதில்லை. நீங்கள் இவ் விரதங்களை முன்னரே உடையீராதலின் உமக்கு இதனை விளக்க வேண்டியதில்லை.

"பந்தையும் மாலையையும் கையுறையாகத் தந்து, தேன் துளிக்கும் பொழிலிலே மகளிர் தோள்மேல் விளையாடி உலகங்காக்கும் வேந்தர்களாய் ஈண்டிருப்பவர் முற்பிறவியிலே கள்ளுண்ணாமையாகிய ஒழுக்கத்தைக் காக்கும் சிற்றுதவியை யுடையரா யிருந்தவராவார்.

"முற்பிறவியிலே பிறர்க்குக்கொடுத்துண்பதை யறியாதிருந்தோர், இப் பிறவியிலே குளிர்மிகும் மாசித்திங்களில் அழுக்கினையுடைய சிறிய துணிகளை முள்ளாகிய ஊசியாலே தைத்த தையல் மொய்த்த ஆடையை உடையாகக் கொண்டு மண்ணோடு கையிலேந்தி, 'அம்மா! பிச்சை!' என்றிரங்கி வேண்டிச், செல்வர் மனையினருகிற் செல்லவுங் கூசிக் கூசி நிற்பர்.*

"காட்டிலே வல்லானொருவனால் துரத்தப்படும் கலைமானும் ஓட வல்லதாயின் அவனிடமகப்படாமல் தப்பியும் போம். எனினும், தீவினையிருப்பின் நாம் கூற்றுவனிடந் தப்பமுடியாது. அவன் நம்மை ஆட்டி உயிரைக் கைப்பற்றி விளைந்த தேறலைப்பருகுவது போலப் பருகி விடுவான்.

"தேன் அவிழுங் கோதையீர்! நல்வினையிருப்பின் வேடன் கையிலகப்பட்ட பறவை தப்பிப் போதலைப்போல

---

* "மாசித் திங்கள் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித் துன்னம் மூசிய ஆடை உடையாகப்
பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை அகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்."

அக் கூற்றுவனைத் தப்பிப் போதல் ஒல்லும். இவ் வறத்தினை அறிவுடையான் ஒருவன் சொல்வன்மையின் பயனின்றாகவுரைத்ததெனக் கொள்ளாதீர்! அதன் திறத்தை உலகியலால் தெரிந்து கொள்வீராக!

"சாதலும் பிறத்தலும் தேய்தலும் பெருகலும் யாக்கைக் குண்மையைத் திங்கள் அறியாதோரும் அறியுமாறு விளக்கி நிற்கும். அங்ஙனமிருக்கவும் நல்வினையைச் செவி வாயிலே புகுமாறு பெய்தாலும் அதனைக் கேட்டுப் பயன் கொள்ளாமல், அவற்றைக் கைவிடுவது தீவினையின் கூறேயாகும்.

"துளி நீராகிய சுக்கிலம் கருப்பைக்குள்ளே வீழ்ந்து பெரியதாகி நொய்ய தசைபரந்து தான் புகுந்த நெறியாலேயே வெளிப்பட்டு வந்து, அறிவுபெற்றுப் பேரறத்தை நன்றென நினைக்குமாயின், அது முற்றும் புலால் நிறைந்த குரம்பையினின்றுந் தப்பிப் போகுமாறு, கடல்போலப் பெரிய வீட்டின்பத்தையே விளைவிக்கும்.

"பால்போன்ற துளியாகிய சுக்கிலமும் பவளம் போன்ற குருதியும் பெருகி வளர்ந்து தசையாகத் திரண்டு நீரூறும் சிறுவாயில் வழியே தப்பி வெளிவந்த பிறகு, அறிவையுடையதாய் அறத்தை நன்றெனக் கொள்ளாதாயின், செல்லும் நெறிக்கு நல்வினையாகிய பொதிசோற்றைப் பெறாமலே சென்று, சேற்றுநீரையுடைய நரகக் குழியிலே அழுந்திக்கிடந்து அழுது கூப்பிட்டு, வெளிவரவியலாமற் கிடக்கும்.

"கரும்பெனத் திரண்ட தோளினையும் வேலனைய கண்களையு முடையீர்! யான் கூறிய திருத்தமாகிய நல்லறம் என்னும் பொற்கற்பகம் வீடேயன்றிப் பொருந்திய பொருளையும் இன்பத்தையும் மலர்தலால், வருந்த நேரினும் அறத்தினை மறத்தல் செய்யாதீர்.

"உலகில் மந்திரமும் மருந்தும் இல்லையெனின், செல்கிற ஐந்தலை அரவினை யெவர் தீண்டித் தம் வயப்படுத்து

வார்? மற்றும், நன்மணத்தால் சுரும்புசூழும் இயல்பில்லை யானல், மைந்தரும் மகளிரருகே சென்று அவரைத் தம் வயத்ததாக்குவாரிலர்.

"வெல்லும் வேலனைய கண்ணீர்! சிறப்புடையீர்! பொன்னனீர்! நீவிரெல்லீரும் முன்னர்ப் பாகுவெற்றிலை தின்று சிறப்புற்றிருந்தீர். இன்று எம் அருகேயிருந்து அவற்றைத் தின்னுமற் சிறுபொழுதேனும் சில சொற் பேசுதல் அருமை. அங்ஙனம் பேசினீரெனின் ஒருதுலாம் பொன் தருவேம்.

"பொன்னனீர்! நம்முள் ஆய்ந்து கூறுவோம். ஐயும் பித்தும் குருதியும் சிறுநீரும் மலமும் புன்தோலுமுடைய மெய்யிலே முன்னரே அணிந்த சந்தனமும் மலரும் சால வும் நன்ருக மணக்குமேனும் புதியவாகக் கையிற்கொண்ட சந்தனமும் மலரும் அணிந்தல்லது கூடவியலாது. நான் கூறியதிற் பொய்யுண்டோ? கூறுமின்.

"நாம் பிறந்தபோதே இனிச் செத்தேம் அல்லேமோ என், இதனை எண்ணி, நூல்கொண்டு தொடுக்கும்போதே வாடும் அனிச்சமலர்போலே தீவினையுற்றபோதே குறைந்து மயங்கித் தளர்ந்து பரப்பி நோக்கி நடுங்குவேம் என்றெண் ணிக் குற்றமற்ற அறிவினல் உண்டாகும் தனித்த சித் தத்தை நிலைபெறவைக்க அறியோம். ஆதலால், யாம் உய்தலெங்ஙனம்?

"நிழல்செயும் நீலநிற மணிபோன்ற ஐம்பால் அவ்வுரு வம் நீங்கிப் பாலென வெளுத்தும், விருப்பமூட்டும் நிமிர்ந்த முலைகள் பைபோலத் தாழ்ந்து தூங்கியும், வேல்போல மிளிரும் குளிர்ந்த கண்கள், இமையமூழ்கிக் குறைந்தும், மேனி ஒளிகெட்டும் போமாறு இனி மூப்பு நம்மிடத்தே வருமல்லவோ? அது வருமுன் துறப்பீராக!

"யானை கொட்டாவி விட்டாற்போல ஓசையெழும் தாளிப்புக் கமழும் சுவைமிகும் அடிசில உண்டவர்களே பின்னர் மதில்சூழ்ந்த நகரிலிடும் பிச்சையை ஏற்றலால்

எனக்குச் செல்வத்தில் ஆசையில்லை. மேலும், அரசாட்சியை அஞ்சினேன். ஆகையால், துறப்பேன்.*

## உரு. அந்தப்புர அழுகை

"இருவர் ஒன்றுகூடி ஒருவர்மேற் சினந்து பொங்கி எழுந்திருப்பின் அவ்வொருவர் வலிகெடும் என்று கூறுவனபோல அழகிய நுண்ணிய இடை வருந்தப் பருத்த—ஒளிவிடும் மணிக் கண்களையுடைய—முலைகளையுடைய பைம்பொன்னுலான கொம்பனையீர்! யாம் கழிந்த நாட்களெல்லாம் காதலராயிருந்தேம். அறங்கேட்ட பின்னர் ஏதிலேம் ஆயினேம்."

என்று சீவகன் சொன்ன அளவிலே கேட்ட தேவியரின் கண்களிலிருந்து இடையறாது சொரிந்தநீர் மார்பிலே வீழ்ந்தன. நிணந்தின்று செருக்கிச் சிவந்து மன்னருயிரை வாட்டிய நீண்ட வேல்போலுங் கண்ணாருடைய கண்களினின்றும் அங்ஙனம் வீழ்ந்த கண்ணீர், ஒளிவிடும் மணிப்பூண் பரப்பிலே பாய்ந்து குளமாய் நிறைந்து, தம்மைத் தாங்கிய பால்நிறைந்த நிமிர்ந்த முலைகளை வருத்தி, மலையினின்றும் வீழும் அருவிபோல அம் முலைகளினின்றும் வீழ்ந்தன. தீயைப்போல வெம்மைமிகு கொடிய சொற்களாகிய இடியேற்றினாலே தாக்கப்பட்டதனால், ஒளிமிகும் பூங்கொடிகள் மலரைச்சிந்தி நிலத்தே வீழ்ந்து கிடக்குமாறுபோலச் சீவகனுடைய சேவடிக்கீழ் வீழ்ந்து கிடந்து, கண்ணீர்வெள்ளம் ஆங்குள்ள கலங்களை நிரப்பக் குழல் அழுவதேபோல அழுதனர்.

அடிகளை நோக்கி

"அழகிய குலிகச்சேற்றிலே முளைத்துக், குங்குமங் கலந்த பனிநீரிலே வளர்ந்து, வண்டு 'பொலிக!' எனப் பாட மலர்ந்த தாமரைமலர்கள்போலுந் திருவடிகளே! யாங்கள் நுமக்கிழைத்த பிழையாது? அதனை உரைமின்!" என்றுரைத்துப் புலியினிடம் அகப்பட்ட மானின் உயிர் போலப் போதற்குத் துணிந்த உயிராகி நின்றார்.

**துடைகளை நோக்கி**

'முன்னர் எமக்கு இருக்கையாகி எம்மைச் சுமந்து களைப்பைப் போக்கிய ஆண்மைமிகும் பெருந்தகவுடைய துடைகளே! நீவிர் அளிக்கத்தக்க பெண்ணுயிர் அளியாக் கால் வருந்துமே என்றும் இவ் வருத்தமோடன்றி இவ் வுயிர் வாடுமே என்றும் நினையீராய் விருந்தினரைப்போல் நின்றீர்! இனி வெற்றுடலையே காண்பீர்!' என்றழுதனர்.

**கைவிரல்களை நோக்கி**

'கோதையையும் ஆடையையும் ஏந்தியும், குங்குமம் எழுதியும், கொய்த பூந்தாதுகளை அளகத்திலே அப்பியும், தடமுலைகளைத் தடவியும் சேர்ந்து காதல் கொண்டிருந்த அழகிய கைவிரல்களே! எமக்கு அளிசெயும் நீரும் அயலாராகி, அரசன் எண்ணியதையே எண்ணினீர்! இது தகுமோ?' என்றனர்.

**தோள்களை நோக்கி**

'மாணிக்கப்பூண் அணிந்த தோள்களே! செம்பஞ்சி கொண்டு எழுதி அழகுநிறைந்த அடி ஊடலின்போது உடம்பிற் பட்டால் நொந்து நடுங்கும் என்று அஞ்சித் தலைமீது ஏற்ற கோமகன் இனி நுகரேன் என்று உமிழ்ந்த எம்மை நீர் அணைத்துத் தழுவிக்கொள்ளீர்! நீரும் நெஞ்சு வலியீராகி நிற்பீரோ? அங்ஙனம் நின்றால் நும்முடைய கை எங்களைப்பற்றித் தெளிவிக்குங் காலத்து அதற்குத் துணையாய் நின்ற நீரும் உண்மையை இப்போது கூறாமல் வஞ்சித்தீ ராவீர்!' என்றனர்.

**மார்பை நோக்கி**

'ஒன்றோடொன்று கூடி அரக்கு வட்டனையவாய்த் திரண்டு பருத்த முத்துக் கிடந்து மின்ன எம் மார்பினிடத்துக் கோதை நின்னிடங் கிடந்த மாலையின் மதுவுடனே மயங்கி, நாடோறும் ஒன்றுபட்டு உறையும்படி எங்கட்கு அணையாயிருந்த மார்பமே! நீ எம்மோடு கொண்ட நட்புக் கைவிட்டு நீங்கின், நற்பண்பென்பது யாரிடத்தே யிருக்கும்?' என்றனர்.

**கழுநீர்த் தாரை நோக்கி**

'எம்முடைய பேரழகு வளரத் தீண்டி, மாணிக்க ஒளியை உமிழ்ந்து, மதுவைத் தேனினத்துடன் ஏந்தி, மற்றுமுள்ள மலர்களின் அழகும் நிறைந்த கழுநீர்த்தாரே! நீ எம் முலைகளுடன் பொருது நெருக்கினாய்! அத்தகைய நீயும் உலக மன்னவனைப் போல எம்மை நீக்கிக் காவாமல், கைவிட்டு நின்றனையோ?' என்றனர்.

**நாவை நோக்கி**

நங்கையர் அன்னமும் தோகையும் யாழும் அமுதமும் தேனும் போன்ற தன்மையர் என்று புகழ்ந்து கூறிய பவளமாகிய சிவந்த நாவே! வாழி! நீயும் மன்னனைப்போல அருளின்றி எம்மை அழித்துக் கூறத் துணிந்தனை. இவ்வாறு கூற நீ எம்மிடங் கண்ட குற்றம் யாது? அதனைக் கூறுயேல் நீ இரண்டு நாவாக ஆயினை,' என்றனர்.

**கண்களை நோக்கி**

'இவை பூணுடன் நெருங்குதலால், வெம்பி நொந்து புடை கொண்டன என்று அரசன் கருதித் தான் அணிந்த பொன் நாணினால் மேலும் அம்முலைகட்குப் பிறந்த வருத்தத்தை நீக்குதற்கு நீர் அம்முலைக் கண்களைப்பேணி நும் மணிகளாலே எழுதிப் பாதுகாத்துப் பேரின்பத்தை நீருங் கொண்டு எமக்குந் தந்தீர்! கண்களே! இங்ஙனம் இன்பத்தைத் தந்த நீர் இன்று அருளிலீர் ஆயினீர்! எம் வண்ணங் கெட்ட தன்மையை இனிக் காண்பீர்!' என்றனர்.

**மயிர்முடியை நோக்கி**

வண்டுகள் பொருந்தும் மாலையினையுடைய நீலமணி போலும் மயிர் முடியே! வெறு நிலத்திலே முத்தாரம் ஒளி வீசிச் சிந்த மன்னன் வீழ்ந்து வணங்கவும் அவன் முடிமேலே திருவில் வீச மிதித்த சீறடியிலே நீ உறைந்து எம் முகிழ்நகை கிடைக்குமோ என்று முன்னர் நோக்கினை. இன்று எமதாவி வருந்துதலையும் பார்த்தனை! நின் வழிபாடு பொய்ப்பட்டது!' என்றனர்.

**தேவர்களை நோக்கி**

'தேவிர்காள்! மன்னன் தன் தன்மை மாறியதால், இனிப் பாற்கடலும் நஞ்சாய் விளைந்தது. பரவிய கதிர்களையுடைய வெய்யோன் தன்னிடம் இல்லாத இருளை ஈன்றதால் அவ்விருள் பாரை மறைத்து விட்டது. இனிய தண்கதிர்களையுடைய திங்கள் திசையெலாஞ் செந்தீயைக் கான்றது! யாம் எம் ஆவியைச் சுமக்க, ஆற்றலிலோம்! அதனைத் தாங்குமாறு எங்ஙனம்?' என்றனர்.

**அரசனை நோக்கி ஒருவரை யொருவர் சுட்டிக் கூறுதல்**

"உலகம் என்னுந் தன்மையாலுண்டாகிய அழகையுடைய தத்தையின் வாள்போலுங் கண் அறிவைக் கவர்ந்து கொண்டதனால் இவளை நோக்கிய நீர் 'விண்ணவர் மகளோ? விஞ்சையர் மகளோ?' என்று மயங்கி நின்று பிறகு, விஞ்சை மகளேயெனத் துணிந்து, யாழால் வென்று உறவு கொண்டீர். இனி, நீர் கைவிட்டதனால் என்ன உறவு கொண்டீராயினீர்?"

"களிற்றினால் அன்று துன்பமுற்ற—கொல்லும் வேலினைய நீண்ட கண்களையுடைய—குணமாலையை, அன்று களிற்றை வென்று, தழுவி வாழ்ந்தீர். அங்ஙனம் வாழ்ந்த தமக்கு இன்று இவள் வெளியாக இன்னாதவள் ஆயினளோ?"

"துளையையுடைய வெள்ளிய எயிற்றினையும் புள்ளியினையும் நஞ்சினையும் உடைய பாம்பின் நஞ்சு உடையப் பார்த்துப் பதுமையின் பவளவாயினை இனிய அமுதமாகக் கொண்டு கூடிய நமக்கு, இனி அந்நஞ்சு அப்போது நீங்காமல் ஒருபுறத்தே அடங்கியிருந்து இன்று ஊறியதாகாதோ?"

"முலையின்மேல் முத்தாரம் தாழ்ந்து உலவி ஒளியைக் குறுக்கிடும் படியாகக் கண்ணினாலே நம் நெஞ்சைப் பிளக்க எய்த அம்பைப் பெற்றுப் போகமாட்டாமல் நின்று 'வானவர் கொண்டு போகின்ற அமுதம் தாழ்ந்து வீழ்ந்தது. தக்க நாட்டிலே இது கிடைக்காது,' என்று கருதி

இக் கேமசரியை விரும்பினீர். அவ்விருப்பமும் இன்று விட்டீரோ ?"

"கனகமாலையாகிய இவள் பொருட்டுச் சிலைத் தொழிலையும் அரசனுக்குக் காட்டி, இவளை மணந்த பின்னர், 'இவள் பெண்ணோ! அமுதமோ! முகத்தில் இருக்கும் இவை கண்ணோ! கயலோ! கழுநீரோ! காவியோ! பிணையோ!' என்று புனைந்துரைத்து முன்பு இன்புற்றீர். இன்று புண்ணிடத்துக் கிடந்த துணிபோல எடுத்தெறிதல் அறமாமோ ?"

"இராசமாபுரத்தின் அழகிய தெருவழியே சென்றநீர், நீர்பொழியும் முகிலிடை மின்போல இடைநடங்க நின்ற விமலையினுடைய கண்கள் இராசமாபுர மெல்லாம் சூழ்ந்து நம்மை வளைக்க அவ்வலையிலே அகப்பட்டீர்! அவ் வலைப்பட்ட உமக்கு அக்கண்கள் இவ்வாறு தீயவாய் ஒளிகெட்டுக் குறைந்தனவோ ?"

"சிவந்த கச்சணிந்த இளமுலையாரும் கறைபடிந்த பற்களையுடைய முதிய மகளிரும் ஆகிய மங்கையர்கள் காப்ப மகிழ்ந்திருந்த சுரமஞ்சரியை நீரும் மகிழ்வுடன் விரும்பிப் பார்ப்பானாகச் சென்று இசையினால் அணைத்துக் கூடினீர்! கோவே! இங்ஙனம் இப்போது துறத்தல் தகுதியோ ?"

"பகைவர் உயிரை வாட்டிய அழகிய திண்ணிய தோளரே! மல்லினால் அகன்ற மார்பரே மதுவை ஏந்தி வாயில் ஊற்றி யாரும் அறிய இலக்கணையோடு கூடினீர்! இன்று அவள் வருந்தி நடுங்க அன்பினின்றும் அகலுதிரோ ?"

## உச. கோயில் அழுகை

சீவகன் தேவியார் இங்ஙனங் கல்லும் மரமும் இரங்கக் கூறி மலர்களை எடுத்தெறிவார்; பொன்னணிகளைப் பிய்த்தெறிவார்; 'நீங்குமின்' என்று பொன் வளையல்களைப் புடைப்பார்; நீண்டமாலைகளைச் சிதறுவார்; அம்பேறுண்ட

பிணைமான்போல் ஏங்குவார்; 'காவலனார் இன்னுயிரைக் காப்பவரானால் இன்று காவாரோ?' என்பார். வளவிய பல நிற மணிக்கொடிகள் கருமைசேர்ந்த கொம்பாக அலறி அழும் தன்மையவாய்க் கலங்குவனபோல் ஆயினர். அது கண்டு எல்லாத் திசைகளினும் நின்ற மகளிரும் கூட்டமாகிய இளமயில்போற் கூடி, உரைக்கவியலாத துயரடைவார்; தொழுவார்; அழுவார். இங்ஙனம் யாவரும் கலங்குகையினாலே அரண்மனையில் கடலொலிபோல் ஒலி யுண்டாயிற்று.

மற்றும், அங்கே பெரிய முழவமும் பண்ணார் யாழும் ஒலியவிந்தன. துளையுடைய குழல்கள் ஊதாவாயின. தாளங்கள் ஒலித்தில. அழகிய பூப்போலுங் கண்ணுருடைய கிண்கிணியும் சிலம்பும் மேகலையும் ஒலியடங்கின. அரக்கிட்டாடின வலம்புரிகளின் வாயும் மடிந்தன. இவ்வாறு, அரண்மனையிலே மகிழ்ச்சிக்குரிய ஆரவாரம் அடங்கியது.

அழகிய மணியையும் அரக்கு வட்டழுத்தி வைத்தனைய கண்களையும் பெரிய தாளினையும் பெருந் துருத்தியனைய பெரிய கவுளினையும் பிறையனைய கோட்டினையும் கமழும் மதத்தினையும் உடைய பெருமை மிக்க பட்டத்துக் களிறுகளும் ஒப்பற்ற பண்ணுதல் நிறைந்த குதிரைகளும் தீனி தின்னாமல் அழுது வருந்தின.

கழிக்கப் பெற்ற கடிப்பிணை யென்னுங் காதணியும் கைவளையும் மாலையும் நறுஞ் சந்தனமும் சுண்ணமும் பல மணிகளும் அணிகலன்களும் சிதறிக் கிடந்த பேரரண்மனை ஒளிவிட்டுப் பல மீன்கள் பரவியிமைக்கும் குளிர்ந்த வானத்தைப் பழித்து வானுலகு குடிபோன தன்மையை ஒத்தது.

இங்ஙனம் நஞ்சுபொருந்திய துளையெயிற்றையுடைய கொடிய சினமிகும் ஐந்தலை நாகத்தின் தலையிலே சுமந்த மணியும் பொன்னும் மேலே வேய்ந்து ஒளிவீசும்-பின்னர்

வானவர் வணங்கும் கழலையுடைய சீவகனின்—நகரம் அமுது கடையும் பாற்கடல் போலக் கலங்கியது.

## உரு. நகர அழுகை

நகரெங்கும் உள்ள சமையலறைகளிலும் கோயில்களிலும் அறச்சாலைகளிலும் நீர் நிறைந்த குளத்திலே மழை பெய்ததென்னுமாறு துள்ளும் நறுநெய்யாற் பொரித்த பொரிக்கறிகளும், தாளிக்குங் கறிகளும், துவட்டற் கறிகளும் வளர்ந்த மணம் ஊர் நிறைந்து தோன்றுதலில்லாமல் அவ் விடங்கள் உயிர் நீங்கினாற் போன்றன.

முன்னர், முல்லை யரும்பாற் செய்த பந்து போன்று திரட்டுதல் கொண்ட—ஒவ்வோர் அவிழ் கொக்கின் நகம் போன்று நீட்சியையுடைய—சோறும், ஆற்றல் மிகும் புலியின் கண் போன்ற கொழுவிய சுவையுடைய கருனைக் கிழங்கும், ஊட்டுதற் கிசைந்த கறியும் தேமாவிற்கொண்ட கனியும், சுவை மிகு தயிரும் ஆகியவற்றை ஏந்தி விரும்பினார்க்கு விரும்பிய வண்ணம் கொடுக்குந் தெருக்கள் அரசன் துறவால் விரும்புவாரின்றி வெறுநிலமாய்க் கிடந்தன.

முன்னர் மைந்தர்தம் வளமிகு கையினால் மகளிர்க்கு அழகிய கிண்ணத் தெடுத்த தேறலை இன்று எடுக்க விழையாராயினர். முன்னர் மகளிர் எடுத்த பசிய இழையையும் மாலையையும் சந்தனக் குழம்பையும் ஆரத்தையும் இன்று சிந்தியவராய் இருந்தனர். இவர்கள் உண்மைப் பொருளின் கட் செல்லாத துறவோர் சொல்லுஞ் சொல் பற்றுவிடா திருக்கவும் பற்றற்றனபோன் றிருக்குமாறு போலத் தமக்குப் பற்றிருப்பினும் அரசன் துறக்கின்ற வருத்தத்தால் இவற்றின் பற்றிலார் போல விழையாது விட்டனர். ஆகவே, அப் பொருள்கள் அழகிழந்தன. தாழியின் வாயை மறைக்கும் தண்ணெனுங் குவளைமலர்போலும் கண்ணார் முல்லைமாலை மார்பிலசைய முழவு ஒலிக்க அசைந்

தாடும் ஆட்டலும் ஒழிந்தது; யாழின் வாய் இசைக்கேற்ப முறையாகப் பாடும் பாடலும் ஒழிந்தது. நகரின் கடைத் தெருக்களெல்லாம் அரிய கலன் நிறைந்த அழகிய பவளக் கால் விளங்குஞ் சட்டங்களாகிய இமை பொருந்தி உறங் குவ தொத்தன; மற்றும் ஒலியவிந்து கிடத்தலால் ஒல் லென்னுங் கருங்கடல் தன் ஒலியை மறைத்தது போன்றும் இருந்தன மலர் மாலையும் முத்தும் உரிஞ்சி மின்னுமாறு சிலை குலவி நிமிர்ந்த மார்பனை சீவகனுடைய நகர் பொலி வழிந்து, இராசமாபுரமென்று தெளிய வியலாததாய் உலகின் இயலை நிலையற்றதா யிருக்குமென்று தெளிவாக எடுத்துக் காட்டியது. கூந்தலுக்கிடும் அகிற்புகையும், வேள்வியில் எழுங் கொழுவிய புகையும், துகிலுக்கு ஏந்தும் புகையும், மாலைக்கு இடும் புகையும் சிறந்த பொருளை ஒரு வர்க்கீயாத பெரிய உலோபிகளின் புகழ்போலத் தோன்று மலே மறைந்தன. புல்லுண்ணும் புரவி வருந்திச் சோம்பு போக்குங்கால் எழும் ஒலிபோலச் சங்கறுக்கும் ஒலியும் நாரையின் நரலுங் குரல் போலக் கல்லா இளைஞர் கலங் காமற் சிரிக்கும் ஒலியும் கொல்லும் யானை பொலியும் சங்கின் ஒலியும் அங்கே கூடிய அழகு மிகு மலர்மாலையும் சாந்தமும் கலன்களும் தேனும் கற்புடைய மங்கையரைப் போலக் காவலிழந்தவைகளாய் அறிவில்லார் சொற் பொருள் சோர்ந்து விரும்பப்படாதவாறு போல விரும்பப் படாதனவாய் ஒழிந்தன. கிளிகள் இனிய பாலை மறந்த லானும் வானவர் தமக்குக் கொடுக்கப்படும் அவிமடங்குத லானும் துளை நெடுங்கையை யுடைய களிறுகள் இனிய கரும்பைத்தின்றுதனவாய் நிற்றலானும், எல்லோரும் உற விலார் போலப் பிறர் பிறராய் நிற்றலானும் அவர்க்கு நகரம் காடாயிற்று. நீரினையுடைய முழங்கும் மேகம் போலும் யானையும் தேரும் முழங்கும் தானையும் உடைய அரசனுக்கு முன்னுகைத் துறத்தற்கு ஊரிலுள்ளாரும் நாட் டிலுள்ளாரும் ஒலிக்குங் கடல்போலுஞ் செல்வத்தைத் தம் மக்களுக்களித்து அறிவுடையோன் மலரடியைச் சேர்ந் தனர்.

## உசு. துறவு வலியுறுத்தல்

அப்பொழுது, கொல்லன் உலையிலே பொங்கும் அழலிற் கிடந்த கூரிய இலைமுகத்தையுடைய இரண்டு வேல்களை ஒரு திங்களிலே வைத்தாற் போலும் முகத்திலே கிடந்து, செவியுற நீண்டு அகன்ற சிவந்த கண்ணினராக அழும் மங்கையரை நோக்கி மன்னன் கூறுகிறான்:

"நாம் நல்ல தவத்தையும் ஞாலத்தையும் நிறுத்துப் பார்த்தால் தவத்திற்கு ஞாலம் வெண்சிறு கடுகளவும் நிறை ஒவ்வாது. அந் நிறையை இத் தன்மைத்தென உணர்ந்து தவத்தே நிற்பின் திருமகள் என்றும் நம்மை நீங்காள். அங்ஙனமின்றி உலகப் பற்றோடே நிற்பின் திருமகளும் நம்மைப் பற்றுதல் கொள்ளாள். ஆகவே, பற்றினை விட்டுத் தவஞ் செய்ம்மின்!

"யான் சுடுகாட்டிலே பாடைமேலே கிடந்து புலைமகன் ஒரு கையாலே புழுக்கலாகிய பலியை யிட்டு நீரைச் சொரிய அவற்றை உண்டு கவிழவும், நீங்கள் மைதீட்டிய நுங்கள் கண்ணீரால் மனையை மெழுகி வாழவும் இப் பயனில்லாத பொருளை விரும்புகின்றீர். அதனை விட்டு யான் கூறும் இப் பயனுடைய பொருளைக் கேண்மின்!

"கொல்லும் சீற்றமுடைய யானையைப் பார்க்கும் கூரிய உகிருடைய அஞ்சாமை மிக்க ஆளி வீட்டெலியைப்பார்த்து இறப்பின் கீழ் நிற்பதுண்டோ? பல வினைகளாகிய வெள்ளத்தைக் கடந்து பேரின்பத்தைப் பருகினாலன்றி நல்வினையாலாகிய விளைவாம் செல்வம் என்னும் நஞ்சிலே முழுகுதல் உண்டோ? ஆகவே, மக்கள் தாம் தேடிவைத்த தவம் சிறிதும் இலராயின், அவர்களாற் பேணி வைக்கப் பட்ட பிற பொருள்களாகிய மணியும் பொன்னும் பின் செல்லா. மற்றும் விழுமிய பொருள்களும் உலகமும் அவரை வேற்றுவர் என்று எண்ணி அவர் சார்பில் நில்லாமல், தவம் புரிவார்க்குரியவாய் நிற்கும். ஆகையால் அத் தன்மை நோக்கி நீவிரும் நோற்பீராக!"

இங்ஙனம் அம்மாதராரின் காதலனாகிய சீவகன், அம் மாதர்கள் பல பிறப்பினும் தனக்கு மனைவியராய் வந்ததை யுன்னி, அவர்களுடைய பிறப்பற வேண்டும் என்னுங் காத லால், காதலாகிய சேற்றுட் பாய்ந்த அறிவு என்னுங் கலங்கல் நீரைக் காதலாகிய பிணிப்பினால் உரிஞ்சித் தெளி விக்க, மாதரார் நெஞ்சம் உவர்ப்புற்றுத் தேறி, 'மாதவம் புரிகின்றோம்,' என்றனர்.

அதனைக்கேட்ட, காமத்தைச் சாய்த்து வெற்றி கொண்ட பொன்மலை யொப்பான், 'நறுமணப்புகை கமழுங் கோதையீரே! அச்சந்தரும் நாற்கதியினின்றும் நீங்கி, இருவினைக்கடலை நீந்தித் துறக்க வின்பத்திற்கு மேலான வீட்டின்பத்தை விரும்புவீராயின் இன்று என்னொடுந் துறவு பூண்பீராக,' என்றான்.

அரசியர், *"கோடகம் என்னும் முடியினாய்! யாங்கள் நாடகத்தை நயந்து காண்பாருடைய அழகிய கண்களைத் தோண்டியும், பொற்கலத்திலே ஆவின்பாலை விரும்பியுண் பாரை உண்ணாமல் தடுத்தும், மிக்க அன்பினாற் புணர்கின் றாரை நெடுங்காலம் நெஞ்சினால் வெகுண்டும், நறிய நாற்றங் களை நுகர்வாரை நுகராமற் கையினாற் பிடித்துத் தடுத் தும் இங்ஙனம் முற்பிறப்புக்கள் ஒன்றிலே பிறரைத் தடுத் தோம். ஆகையினாலே இனி எமக்கு நுகர்ச்சியின்று. எனவே, துறவு பூண்கின்றேம்," என்றனர்.

மேலும் அவர்கள், "யாம் அணிந்த சாந்தம் கலையத் தழுவி, எமக்குக் கூட்டத்தால் வருத்தமின்றாகவும் வருத்த முற்றேமெனக் கருதிக் கூந்தலில் மலரணிந்து வழிபட்ட கோவே! நீ செல்லும் வீட்டுலகின்கண் அடியேமும் வாய்த்துவந்து நின்னை, வழிபடும்நாளில் இன்று முனிந்தது போல் முனிந்தருளாதே," என்று தொழுதனர்.

---

* தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி என்னும் ஐவகையிற் சிகரமாய்ச் செய்தமுடி (நச்சினார்க்கினியர்)

## உஎ. அரசியர் துறவு

தெளிந்த அலைகளையுடைய கடலைநீந்திக் கதிரைச் சுமந்து விண்ணிலே படருந் திங்களைப்போன்ற குடையை யுடைய வேந்தர் வேந்தன் அரசியரை உலகுவியக்குங் கேள்வியையுடைய விசையையிடத்தில் ஒப்படைத்தான். அம் மங்கையர் தாமே தம் அணிகலன்களை நீக்குகின்றவர் சிறந்த மலர் தேன்நிறைந்து மலர்ந்த கற்பகப் பூங்கொம் பும் அழகிய விருப்பந் தங்கிய மலர் மலர்ந்த காமவல்லியும் தம்மிடமுள்ள மலரைத் தாமே கொய்துகொண்டு சிந்து கிற தன்மையைப் போன்றனர். தழுவலாம்போன்ற பரு மையையுடைய மாலைகள் தூக்கப்பெற்றுச் சந்தனம் மணந்து அகிற்புகை விம்மும் வளம்பெற்ற மணிநிலத்திலே செம்பொன் பரப்பி முத்துப்பதித்த மேற்கட்டியின் நீழ லிலே அம் மங்கையரை யிருத்திய பணிமகளிர் காமன் கண்புடைத்து இரங்கத் துகிலான் முலைநெற்றியைச் சூழ்ந் தனர். கற்பகப் பூங்கொம்பு நீலக் கதிர்த்திரளைக் கழிப் பவைபோல—நாவியினது மணமிகுங் குழம்புடன் நறும் புகையையும் கருப்பூரப்பொடியையும் ஆய்ந்து தொடுத்த மாலையையும் அணிந்த—கூந்தலை மனோவாக்குக் காயங் களால் அடங்கியிருந்து உகுத்து, நற்பண்புடைய செம் பொற்கொடியாயினர்.

## உஅ. பெரிய பயணம்

'யாம் மிகவும் வறியோம்,' என்று இரந்தவர்கட்குக் காவலன் தெளிந்த அறிவுடன் அணிகலஞ் சொரியுங் கையி ணைகள் உயர்ந்தனவாகிய நிறமிகும் இரண்டு சங்கநிதிகள் பொன்னையும் மணியையும் ஒருங்கே சொரிகின்றபோன் றன. இரப்போர்மேல் அன்பற்று அவர்கட்கு இடமாட் டாத உலகங்கள் நிறையப்பெறுக என்று, என்பு உருகி வெண்மையான முத்துக்கலங்களை வீசும்கைகள் பதுமநிதி யைப்போன்றன. பூந்துகிலும் அணிகலனும் மாலையும் மெய்யிற்பூசும் சாந்தமும் உலகுபெற ஆராய்ந்து மகிழ்

வுடன் கொடுத்தலினால் அரசன் *கற்பகப்பொழில் ஆயி னான்.

இவ்வாறு கொடுத்த பிறகு, முருகனைப்போன்ற சீவ கன் பிறையனைய நுதலையும் குவளை அஞ்சிக் குவியும் வாளனைய கண்களையும் வேயைவென்ற தோளினையும் தன் ஒழுக்கத்தால் அழித்த விசையையைத் தொழுது வாழ்த்தி நிறமிகும் சிவிகையில் ஏறினான். அதனை வானவர்கள் சுமந்துசென்றனர்.

## உகூ. சமவ சரண வருணனை

அப்போது, யாழின் நரம்புகள் மிக்கிரங்கின. குழல் கள் பரவிப் பண்களை உயிர்த்தன. முழவங்கள் புதுமை பெற்று முழங்கின. ஒளிவிடும் வெண்கலத் தாளங்கள் அலறின. மற்றும் அகிற்புகை மணத்தொடு பரவி இரு ளாகி, மாலைகள் பொலிந்தும் அழகிய சுண்ணம் தங்கியும் நிலமும் வானும் திருமணி (சமவ சரணம்) இருக்கும் செப் புப்போன்றன.

யாவரும் மேன்மைமிகு முக்குடைச் செல்வனின் திருக்கோயிலைக் கண்டனர். அதனைக்கண்ட வானவரும் மக்களும் வாழ்த்தினர்; பாடினர்; ஆடினர். பின்னர், அவர்களுடைய பல்வகை இயங்களும் ஒருங்கே குழமிக் கடல்கள்கூடி ஒலிப்பனபோல ஒலித்தன. மணம் நிறைந்த மலர்க்காவும் பூம்பொய்கைகளும் வண்டுகள் முரலும்தகுதி பெற்றுச் சூழ்ந்த செம்பொன் மதில்மேல் வெண்கொடிகள் நிரைபெற்றன. அழகு முதிர்ந்த நீண்ட முடியையுடை தூபிகளும் இடிதாங்கியையுடைய கோபுரங்களும் உலகெங்

* கற்பகம் பத்து வகைப்படும். அவை: மத்தியாங்கம், தூரி யாங்கம், பூஷணங்கம், மாலியாங்கம், தீபாங்கம், கிருகாங்கம், சோதி ராங்கம், போசனங்கம், பாசனங்கம், வஸ்திராங்கம். இவை முறையே பல்வகைக் குடிவகை, பல்வகை இயங்கள், பல்வகை அணிகலன்கள், பல்வகை மாலைகள், பல்வகை மணிவிளக்குகள், பல்வகை உணவு நிலயங்கள், சிறந்த ஒளி, நால்வகை யுணவுகள், பல்வகைக் கலன் கள், அழகிய உடைவகைகள் தருபனவ எனக் கொள்க.

கும் உள்ள பொன்மலைகள் தம்மிற் கூடுவதொருகாலம் மிகவும் உண்டாகிச் சேர்ந்தனபோன்றன. வாயிலில் உள்ள தோரணங்கள் கற்பகமாலைகள் தூக்கப்பெற்று மணமிகும் அகிலின்புகை பொருந்தின. மதிலைச் சூழ விருந்த பொழில்களில் இருந்த வெள்ளையன்னங்கள் அரசன் தன் சுற்றத்துடன் வரும் ஆரவாரத்தினால் வெருவிப் பொய்கைகளில் தண்ணிய செந்தாமரை மலர்களை அடைந்தன. அத்தோற்றம் செந்தாமரை மலரில் வெண்டாமரை மலர்கள் மலர்ந்தாற் போலிருந்தது.

வளமிகு பெருங் கடல்போன்ற அகழி சூழ்ந்து, ஒல்லெனும் பேரரவத்துடன் பறவைகள் ஒலிக்கப்பெற்று, ஓங்கிய அருகப் பெருமானின் திருக்கோயில் இவ்வுலகில் இல்லையேல், துறக்கம் நல்லதாம்; இவ்வுலகில் அக்கோயில் உண்மையால் துறக்கம் தீதாயிற்று.

இனி, வானவரின் விமானத்திலே வான்வழிவந்த மணிவண்ணனாகிய சீவகன் மானத்தை ஊடறுத்து இறங்கி, இறைவன் கோயிலைத் தொழுதவாறு அணமினான். அப்போது, வளமிகு மணிவரையின் நெற்றியினின்றும்—பாற்கடலிடை இளங்கதிர்ப் பருதிபோல—அருகப்பெருமான் தோன்றினார். வினையை உதிர்த்தவரின் வடிவம் இன்னதென்று கூறும்படியாக ஒளிவிடுந் தடக்கையுடன் தோன்றிய அருகன்முகம், அருக்கனாகவும் வானவர்களின் முகங்கள் தாமரை மலர்களாவும் காணப்பெற்றன.

அப்போது, இறைவன்மேற் சென்ற காதலால் மன்னனுடைய இருவினைகளுங் கெட்டன; மெய்ம்மயிர்கள் சிலிர்த்தன; கண்கள் மகிழ்ச்சியினால் நீரைப் பெய்தன; அழகிய மிடறு வாழ்த்தியது. அரசனும் வலமுறையாகத் திரிந்தனன். சுற்றுக்கோயிலில் ஒளிசெயும் முத்துமாலையும், மாணிக்கமாலையும், பொன்மாலையும், பவழமாலையும் கொத்தாகத் தொடுக்கப்பெற்ற மலர்மாலையும் மிக்கு நிரைத்திருந்தன. அப்பொழுது, மாணிக்கமலையைத் திரைகள் சூழ்ந்தாற்போல, வானவர் அணிமயிர்க் கவரியை

ஏந்தி இறைவனைச் சூழ்ந்துநின்று வீசினர். மாணிக்கக் குடை மூன்றும் சொரிந்த இனிய கதிர் நீலமணிகளின் இருளைப் பருகின.

வீரனின் பிண்டி முழுவெனத் திரண்ட தாமம் தூக்கப்பெற்று, மேலே வாடாத் திருமலர்கள் மலர்ந்து, வண்டினம் தம் குழாத்தொடு தங்குதலாற், சுமை மிகுந்து வளைந்து, குயில்கள் கூவுமாறு பரவியிருந்தது. அப் பிண்டியின் கொழுவிய நிழலிலே பிறவிநோய் கெட இறைவன் தோன்றினான். 'இனி இங்கே அறமாகிய அமிர்தம் உண்டு. அதனை உண்பீராக!' என்று கோயிலில் திருமுற்றத்தில் ஆரவார முண்டாயிற்று.

அப்போது, வானவர் மலர்மழை பெய்தனர். அரசன் ஊன் பொருந்திய பிறவியை ஒழிக்குந் தூயவனுடைய தாமரை திளைக்குஞ் சேவடியை ஏத்துதற்குக் குறுகினன். அரசனைச் சார்ந்தோர் ஸ்ரீவர்த்தமானரை நோக்கி, 'அடிகளே! எங்கள் அரசனாகிய இவன் குருகுலத்தவன். சீவகன் என்னும் பெயரினன். குறைவற்ற காசிபன்மரபு இவன் மரபு,' என்று வணங்கிக் கூறினர். அரசனும் யாழ் வருந்துமாறு போற்றிசைத்து நிலமுற வணங்கினன்; 'யான் துறப்பேன்' என்றனன்.

ஸ்ரீ வர்த்தமானர் செவியேற்றுப் பொன்வரை வாய் திறந்தாலென வாய் திறந்து, 'நின் உள்ளம் துறவில் வீழ்ந்தது. இனி நீ துறத்தலே மாண்புடையது,' என்று வில்லுமிழும் முறுவல் விளங்கக் கூறிய இன்னுரை மழை மின்னி முழங்கிய இயல்பை யொத்தது.

## ௩௦. சீவகன் துறவு

“அறிஞர் கோவே! சினமிகுங் களிற்றின் மருப்பிடையே வைத்த கவளம் நுகர்ந்து கெடுமாறு போல, எமன் கைப்பட்டு அவன் நுகர்ந்து கெடுகின்ற கதிகளிலே பிறந்து, ஆராய்ந்த கரிப்பினையுடைய தீவினையாலே வருத்தம் உற்று இப்பிறவியை அஞ்சினேன். இனி இப்பிறவி

யால் வருந்தாதவர் தாமரைப் போதிலே அது ஒளிபெற நடந்த நின் திருவடிகளை வலம் வந்தாரே ஆவர்.

"பெருமை நிறைந்த பொன்னுடனே திருமணியும் வைரத்தொத்தும் அணிந்து வாடாமாலையும் தளிரும்பெற்று உலகோம்பும் பிண்டியின் கீழிருந்த வாமனே! நின் பண்பை நாளும் பாடாதாரை இறைவனென்று உலகம் பாடாது. நின் அடிமலரைத் தம்முடியிற் சூடார் அடிகளை வானவர் தம்முடிகளிற் பொருத்தார்.

"உலகம் மூன்றும் ஒருங்கே நின்று போற்றப் பிறை போலும் எயிற்றையுடைய அரிசுமந்த அணைமேல் அமர்ந்தவனே! நின்னை நெஞ்சால் அடையாதார் வெய்ய நோயைத் தரும் வினை தள்ளத் துன்பக் கடலிலே வீழ்ந்து அழுந்தி வெந்நோய் நிரம்பப் பெற்று, நெய்தல் தொழிலையுடையார் கிடக்கும் நாடாப்போல மறுகுவர்.

"தொகுதியாகிய பன்மீன்குழுச் சூழ அசைவின்றி யிருந்த திங்கள்போல் வையமெல்லாம் ஒருங்கே ஏத்த முற்றிய உண்மையால் வெற்றி பெற்றனையாக இருந்து, இருவினைகளும் அழுது வருந்த அறத்தைக் கூறிய பெருமானே! நின் மொழியை உலகிடைப் பரப்பினவர்கள் நெய்க்கடலில் இட்ட விளக்குப் போலப் பல்லாண்டு பல்லாண்டுகள் கெடாமல் இருப்பர்.

"செவ்விய பொன்னால் வேய்ந்து, மணிகளைப் பதித்து, வைரங்களை நிரைத்து, அதனுட் கொழுந்தும் மலரும் உருக்கொளுமாறு கொடியை எழுதிச் செய்த அரியணை மேல் இளஞாயிறு இருந்தாற்போல இருந்த எந்தையாகிய பெருமானே! அடியேன் பிறவிக்கடலில் அழுந்தாமல் வந்து நின் அடியைப் புகலடைந்தேன்! பிறப்பற்றுப் போதல் நின் அருளுக் கழகாகும்."

இவ்வாறு கூறிய சீவகன் குண்டலமும் பொன் தோடும் புதிய தாரும் குளிர்ந்த முத்தும் வண்டுகள் முரலும் முடிமாலையும் அம் முடிமாலையிலே மணிக் கொத்தும் நிலத்திலே

கிடந்து அசைய, மணந்ததும்ப விரிந்தலர்ந்த தாமரை மலரின்மேல் நடந்த—வண்டுகள் மொய்க்க அலர்ந்த மலர்களை யுடைய—திருவடிகளை மணிமுடியால் வணங்கினன்.

ஒளியினால் நிலவை விலக்கிப், பல்லுயிரையும் காப்பாற்றி, மேல் நோக்கி விளங்கி, உலகிற் பசியும் பகையும் நோயும் அறியாமையும் நீங்க ஒளிவீசும் அறவாழியை யுடைய எல்லையிலாப் பண்புக்கடலை—ஞானத்திற்கு வரம் பாந் தன்மையனை—விண் வியக்குமாறு மணிமுடியால் வணங்கினன்.

தூய்மையாகத் திரண்ட மணிமாலை ஒளியுமிழ்ந்து நிலத்தில் அசையப்—பொலிவுடன் திரண்ட மணிமாலை யுடைய போர்ச்சிங்கமாகிய சீவகன்—போதகம் போல—வீட்டின்பத்திற்கு வரம்பாகிய அருகப் பெருமானை வாழ்த்துப் பலவும் இசைத்து—வணங்கி, 'இனி யான் துறப்பேன்' என்று கூறிச் *சுதன்மர் என்னும் கணதரர் இருக்குங் கோட்டத்திற்குப் போந்தான்.

அப்போது முடியணிந்த வானவரும் அரம்பையரும் வணங்கியிருந்த அந்த அறிஞன் கோயில் மணமலர்க் கற்பகமும் காம வல்லியும் கலந்து மலர்ந்திருந்த தன்மையைப் போன்றது.

அத்தகைய வித்தகனது—ஒலிகளெலாம் ஒத்து மிக்க—கோயிலைச் செல்வன் வலம் வந்து, சிறந்த பொன்னிலத்தைக் கடந்து சென்று, பேணிவளர்த்த—கைவினை மிக்க—சித்திரம் போன்ற காவினை யடைந்தான்.

உலகினையும் தவத்தினையும் நிறுத்துப் பார்த்ததில் உலகம் ஓர் இம்மியளவு நிறையுடைத்தா மென்ப துணர்ந்து அதனை நீக்கித் துறவு பூண்ட அச்சந்தரும் வேலேந்திய மன்னன் அணிகலன்களையும் நறுமணப்புகை கெழுமிய

---

*கௌதமர், வாயுபூதி, அக்கினி பூதி, சுதன்மர், மௌனியர், மந்தரர், புத்திரர், மைத்திரேயர், அகம்பனர், அசேலகர், பிரபாலர்—எனக் கணதரர் பதினொருவர்.

மாலையையும் கழிக்குந்தன்மை காமனுர் கலங்கழிக்கும் இயல்போன் றிருந்தது. மணியை மறைத்த உறையைக் கழிப்பது போல, அழகிய—குற்றமற்ற—பைந்துகிலைத் தன் மெய்யினின்றுங் கழித்தான். அப்போது, அவன் மெய்யொளியாலே பாற்கடலிலே தோன்றிய ஞாயிறு நிலத்திலே இயல்வதுபோல ஒரு திலக மாயினன். மற்றும், தன்மேற் கிடந்தவற்றை நீக்கியிருந்த அரசன், 'யான் மலிவுற்ற அழகிய மாலைகளையும் அழகிய பூந்துகில்களையும் ஒளிவிடும் மணிக் கலன்களையும் பொன்னிழைகளையுஞ் சுமந்து மெலிந்தேன்,' என்று அவற்றை நீங்கி மேனிலையிற் பொலிந்த கற்பக முண்டேல் அது போலத் தோன்றினன்.

ஒளி மிகுந்து தோன்றும் இளஞாயிறு போல இலங்கும் மார்பினுன் திருந்திய கீழ்த்திசையினை நோக்கி மயிர் களைந்து கொள்ள வீற்றிருந்த பொழுது, இடிக்குரற் சிங்கமொன்று தன் பிடரியிற் பொங்கிச் சுரிந்த தன் மயிரைத் துறத்தற்கிருந்த தன்மையை நிகர்த்தனன். சீவகன் தன் தாமரை மலர்போலுங் கையினுல் நீலமணிபோலுஞ் சிகையினை வாங்கி வெள்ளித் தட்டிலே யிடுந்தன்மை, செஞ்ஞாயிற்றினிடத்தே யுள்ள கருங்கதிர்க் கற்றையை அஞ்ஞாயிறு நீக்கித், தெளிந்த வியல்பினையுடைய வெண்மதியினிடத்தே யிடுமியல்பைத் தெரிவித்தது. தன்னுடைய நீலமணிபோலும் இலைகளை முறைமைப்படி யுதிர்க்குங் காலத்திலே உதிர்க்குங் கற்பக மரம்போல, அரசன் மண மிகு மாலையில் அகிற்புகை கமழும் தன் சிகையை உரிய காலத்தே களைதலாற் சுரும்பினந் தொழுது சில மொழி கூறின:

"யாங்கள் நும் இடத்தை நோக்கி வாழும் உயிர் வாழ்க்கையேம். நீயோ இப்பொழுது தமக்கிணையிலாத சிகையினையும் மணமிகு மாலையினையும் வாங்கிப் போக்கினை. இனி, எம் போல்வார் எங்கே செல்வர்?"

இவ்வாறு கூறிய வண்டினமுந் தேனினமும் செல்ச்னுடைய கிடைத்தற்கரிய பொற்சிகையினை வழிவிடுதவற்கு

சென்றவை, மணத்தினைப் பருகி, 'இன்றோடு நட்பினைக் கைவிட்ட நும்மைத்தொழுதேம். இப் பிரிவு முற்பிறப் பிற் செய்த வினைப்பயன்,' என்று கூறிச் சென்றன. மற்றைய மிஞிறுகளோ வலங்கொண்டு சென்றன.

அப்பொழுது, சீவகன் தன் சிகையை உதிர்த்த வெள்ளித் தட்டைச் சுதஞ்சணன் கற்பகமாலையாலே வேய்ந்து எடுத்துச் சென்று, நாற் கடலையுங் கடந்து பாற் கடலிலே, 'நமோ!' என்று போகட, அக் கடலிலே அத் தட்டு மதிபோல வீழ்ந்தது.

பின்னர், ஆண்டுத் துறந்த மகிழ்ச்சியால் இறைவனை வாழ்த்தியிருந்த சீவக சாமியை நோக்கிய சுதஞ்சணன், "அடிகளுடைய பரவிய புலமை பெற்ற மொழிகள் துளை யிடாத மணியைக் குற்றம் நீக்கிக் கொண்டாற் போன் றவை. இவற்றைப் பயனின்றி வறிதே சாகின்றவர்கள் மனங்கொண்டு கேட்பராயின் அப்பொழுதே மூவாத வான வராய் முத்தணிந்து தோன்றுவர்," என்று தன் அருகில் நின்றார்க்குக் கூறித், துளையிடா மணிகளைக் குவித்தாற் போல விளங்குந் தன் தொல்குலத்தவர்க்கு ஒரு சூளா மணி போல ஒளி பெற இருந்த சீவகனை—வைரத்தின் ஒளியிலே திளைத்து மலர் என்று வண்டுகள் அரற்றும் அடிகளை—மனமார வாழ்த்தினான். பின்னர் பொற்று மரையில் உள்ள பல திருமகளிர் ஒருங்கே கூடி யிருந்தாற் போலுந் தன் காதலியருடனே சீவகசாமியின் நற்பண்பு களைப் பாடி யாடியவனாகச் சுதஞ்சணன் தன் கோயிலை அடைந்தான்.

சுதஞ்சணன் சென்ற பிறகு, சீவகசாமிக்குத் தீம்பால் திரண்ட கடல்போலச் 'சுருதஞானங்கள்' நிறைந்தன.

பிறகு, பெற்றதன் மேல் நிகழும் ஆசையாகிய பற்றும் பெறாத தன்மேல் நிகழும் ஆசையாகிய ஆர்வமும், செற்ற மும் ஏனையவைகளும் பாம்பு தோலுரிக்குந் தன்மைபோல நந்தட்டனும் தோழர்களும் துறந்து முனிவர்களாய் எல்லா உயிர்களுக்கும் தீம்பாலனைய அருளைச் சுரந்து பொழிந்து

காப்பாற்றி, நெஞ்சிலே இருள் சேரா மணிவிளக்காகிய 'சுருதஞானத்'தை வைத்தனர்.

பேரரசனடியைச் சாரக் களிற்றுத்திரள் செல்வன போல, ஆங்குத் திருக்கோயிலில் எழுந்தருளிய ஸ்ரீவர்த்தமான சுவாமிகளின் அடிகளைச் சிவகசாமியும் திரளும் சேர்ந்து வாழ்த்திச் சீலக் கடலிலே ஆடிச் சங்கினத்திலே வலம்புரிதோன்றினாற்போல முனிக்குழாத்தின் நடுவே புகுந்தனர்.

### ௩௧. சேணிகன் வரவு

வீங்கிய இருளைக் கெடுத்து விளங்கும் ஞாயிறு போலே வாமனருடைய திருவடிகள் இருவினையைக் கெடுத்துத் தண்ணருள் பொழியுமாறு செல்லும் நாட்களிலே நிகழ்ந்த தொன்றை இனிக் கூறுவோம்.

கயலினம் எழுந்து பாய்வதால், அயலில் முல்லைப் புதரில் இருந்த—நீர் மொக்குள் போலுங் கண்களையுடைய குறிய முயல் வெருவித் தன் இனத்தை நீங்கி, அயலில் உள்ள ஆமான் கன்றுகளுடன் ஓடிச் செந்நெல் வயல்களிற் பாயும் மகதம் என்று ஒரு நாடுண்டு.

பெரிய பிடிகளைத் தழுவிய களிறுகளின் மதங்கலந்து சேறாகிச் சுரும்பும் வண்டும் ஆரவாரிக்கும்—கொடிகளையுடைய மாடங்கள் நிறைந்த—தெருவையுடைய அந்நாட்டின் தலைநகர் இராச கிருகம் எனப்படும். அது இந்திரன் நகரான அமராவதியை ஒப்பதொன்றாகும். அந்நகரில்இருந் தரசுசெய்வோன் எரியாற் புனைந்தனைய பொன் மாலையும் மணிகள் அழகிய ஒளிவீசும் திருமுடியும் ஆரமணிந்த மார்பும் உடைய சேணிகன் எனப்படுவான். அவன் அரசர் சூழ இருந்து ஆராய்ந்து, பிண்டியின் நீழல் வேந்தன் திருவடிக்குப் பூசனை செய்ய விரும்பி முரசறைவித்தான். பின்னர், நூல்களில் ஆராய்ந்த மெல்லிய கோல்களைக்கொண்டு பற்களை விளக்கிப், பொன்னாலான நாவழியால் நாவை வழித்து, முன்னோர் வகுத்தவாறு நறுமணங் கலந்த வெந்நீரைக்கொண்டு வாய் கொப்புளித் துமிழ்ந்

தான். பிறகு, தீம்பாலின் நுரைபோன்ற வெண்பட்டை யுடுத்து, வண்டுகள் முரலும் மணமிகு சந்தனத்தை மெய் மெழுகினான், பல வகை அணிகலன்களும் மலர்மாலைகளுந் தாங்கினான், வெண்தாமரை மலர்ந்த குன்றமே போன்ற ஐராவணம் என்னும் யானைமீதேறிப் புறத்தே போந்தான்.

அப்போது வாமனுக்கு வழிபாடு செய்தற்கு மை தீட்டிய குவளையனைய வாட்கண் மங்கையரும், அன்பு பொதிந்த நெஞ்சினரான மன்னர் சூழ்ந்தனர். வானத்துப் பன்மீனென எண்ணிலடங்காத மாலை பொதிந்த மணிச் செப்பு வெள்ளமும், பொறிவண்டுகள் பாடும் பூஞ் சுண்ணம் நிறைந்த பொற் செப்பும், மலயச் செஞ்சந்தனம் ஆர்ந்த சந்தனச் செப்பும், சாந்தம் இட்ட பவழச் செப்பும், சிந்துரம் இட்ட யானை மருப்பால் இயன்ற செப்பும் ஆகிய விரைப்பலிகளைக் கொய்சுவற் புரவிகளும் தேரும் மணி யோடையுடைய யானைகளும் சுமந்தன.

அப்போது கொடிக்குழாமும், குஞ்சிக் குழாமும், பிச்சக் குழாமும் முடிக்குழாமும் வானம் பாலைப்பெய்வது போன்ற வெண்குடைக் குழாமும், இவற்றின் அருகே குளித்ததாகிய சங்கொலிக்கும் படைக்குழாமும் தம்மிற் கூடிப் பசிய நிறம் கலந்து பாரிடை நடப்பதொரு பாற் கடலுண்டேல் அதனைப் பழித்தன.

அம் மன்னர்கள் கூடி இருவினையை நீக்கி, இன்ப மாகிய வெள்ளத்தை விரும்பிய வேட்கையினாலே பிண்டிப் பெருமானுடைய நல்லறத்தை யாவரும் முகக்குமாறு பறை யறைவித்து மதிலின்புறத்தே தங்கினார்கள். அத் தோற்றம் கடலை முகக்கச் செல்லும் முகிலின் திரள் போன்றிருந்தது. அப்போது, சேணிகன், வண்டுகள் சூழும் மலர்ப்பலியைச் சுமந்து வலம்வந்து, இறைவன் அடியை ஏழுமுறை வணங்கி, எட்டுத் திக்கிலிருப்போரும் மயங்க வாழ்த்தினான். அந் நிலையிற் பவளம் போலுஞ் செந்தீ பகற்போதில் இறைவனுடைய இணையடிகளின் ஒளியினால் தேவரொளி தோன்றாமல் மழுங்கியிருந்த

அளவில், முகிலைக் கிழித்து விளங்கும் மதிபோலும் முனிவர் குழாத்தினைக் கண்டான்.

அம் முனிவர் குழுவின் நடுவே யிருந்த கடிய தவ முடைய முனிவனொருவனைக் கண் வெறிகொள்ள நோக்கி வியந்து, 'நம் இறைவனொளி தன் ஒள்ளிய நெறியைத் தப் பிப் போந்ததோ? அன்றி இவன் விண்ணெறி வழுவி வீழ்ந்த விண்ணவனேயோ?' என்று எண்ணும் நெறி யொன்றுந் தோன்றாமல் மயங்கினன்.

"விண்ணவன் ஒருவன் விளங்கும் ஒளியை யுடைய விசும்பை விட்டுக் கீழிறங்கி இளஞாயிறு போலத் துறவு பூண்டிருப்பக் கண்டோம். வளமுறு முக்குடையாகிய ஆக மத்தைத் தப்பினன்!" என்று சுதன்மரெனும் கணதர ரைக் கைகூப்பி வணங்கியவாறு கூறினன்.

அதுகேட்ட சுதன்மர், "மன்னவ! வானவரும் போக பூமியோரும் சிறிதும் துறவார். இறைவன் ஆகமத்திற் கூறியவாறன்றி எப்பொருள்களுந் தோன்றா," என்றார்.

சேணிகன், "அடிகளுக்கு இடமருங்கிலே இருக்கும் மணமிகு தாமரைக் கண்ணினாகிய இவனுடைய அஞ்சத் தக்க கெடாத பேரொளியையுடைய வடிவமே வானவ னென்று வாய்விட்டுக்கூறும். ஆதலால், யான் அவ்வாறு கூறினேன்," என்றான்.

சுதன்மர், "இவன் திருமகள் கலந்த அகன்ற மார்பினை யுடைய சீவகசாமி என்பவன். இவனுடைய உருவுக்கும் புகழுக்கும் ஒப்பில்லை. இவனை மருவினாரும் ஒருமுறை யிமைத்து நோக்கின், அவனல்லனெனவே மனம் வேறாகி விடுவர். இவன் அழகும் ஒளியும் அத்தன்மைய. ஆகவே, இவனை நோக்கி அறிதல் அரிது," என்றார்.

## ௩௨. சேணிகன் வினா

சேணிகன், 'அங்ஙனமேல், மாதவனாகிய சீவகசாமி முற்பிறப்புக்களிற் செய்த தவங்களையும், ஈண்டுப் பற்றற் றுத் துறந்த செய்திகளையும் குற்றமின்றி அடிகள் இயம்பு

தல் வேண்டும்,' என்று இறைஞ்சி யேத்தினன். ஆங்கிருந்த முனிவர் குழுவும் இவற்றைக்கேட்க வேண்டும் காதலாலே கைதொழுது வேண்டியது.

ஆகவே, புகழ்தற்கரிய 'கேவலஞானம்' என்னும் கடலிற் கூட்டத்தையுடைய பெறுதற்கரிய திரையை முனியாகிய முகில் முகந்துகொண்டுவந்து அறமாகிய அமிர்தத்தைப் பெய்தது. அதனை உலகம் உண்டது. சீவகன் வரலாற்றைக் கேட்ட சேணிகனும் முனிவர் குழாமும், 'யாங்களும் சீவகன் பெற்ற இத்திருவைப் பெறல்வேண்டும்,' என்று நாத்தழும்புற ஏத்தித் தொழும்படி இவன் வரலாறு சுதன்மர் என்னும் கணதரராலே இவ்வாறு இயம்பப்பெற்றது.

## ௬௬. கேவலோற்பத்தி

இனி, சீவகசாமி முல்லைபடர்ந்த வேலியையுடைய கொல்லைசூழ்ந்த மலையுச்சியிலே நின்று தவம்புரிந்து வீடு பெற்றதையும், தேவியரும் நந்தட்டனும் தோழன்மாரும் துறக்கத்துச் சென்றதையும் கூறுபடுத்துக் கூறுவேன்.

பழுதற்ற வாய்மொழியையுடைய பண்ணவனாகிய சீவகசாமி முற்றும் முந்திரிகைப் பழமிகு சோலையிலே தேனொழுகி நிற்கையாலே அசும்பும் குன்றிலே, அவன் பிரிவிற்கு மற்றோர் வருந்துமாறு சென்றான். எண்வினையினுடைய குற்றங்களை அண்மையிலே நிறுத்தி, அவற்றை அற்றுப்போமாறு அறுத்திடுந் தூய சிந்தையை யுடையவனாக அக் குன்றின்மேல் ஏறி நின்றபொழுது, நீலமணியின் மேல் மாணிக்கத்தை அழுத்தியவாறுபோல அம்மலைக்கு ஓர் அணியுமாய் இளஞாயிறுமாய்த் தோன்றினான்.

அக்குன்றின் உச்சியில் நின்று எல்லாப் பக்கத்தினும் அணைந்துசென்று வீழும் அருவியின் குரல், 'இறை வந்து நின்றான். நீவிர் அறங்கேட்க வம்மின்,' என ஒரு பக்கமெல்லாம் அதிரும். மற்றொரு பாங்கரிலே பொற்கம்பியைப் பின்னியதுபோன்று முற்றிய கதிரையுடைய தினைக்

குக் காவலராய் நின்று, வெம்பும் மும்மத வேழத்தினை ஓட்டுகின்றவர்கள் தங்கள் புனத்திலிருந் தெறிந்த மணிகள் சந்தன மரங்களினூடே சென்று வான்மீனெனத் தோன்றும். மற்றொரு திசையிலே யானை குங்குமக்கொடியிலே கிடந்து ஆடிப், பிறகு, அருவரையிலுள்ள தேனும் நெய்யும் வடியும் சுனையிலே நீரை நன்றாகப்பருகிக் களித்துக் கானிற்பிடியொடுங் கன்றொடும் சுழன்று நாடகமாடித் திரியும். மற்றொரு சார்பிலே கிடைத்தற்கரிய இன்னிசையைக் கின்னரர்கள் பாடுதலாலே, அவ்விசையில் ஈடுபட்ட வரிகளையுடைய பாம்புகளின் மாணிக்க ஒளியிலே தம் வடிவு தோன்றுமாறு புலிகளும் யானைக்கன்றுகளும் மயங்கிக் கிடந்துறங்கும். மற்றொரு மருங்கிலே மந்திகள் கீழே வீழ்ந்துகிடக்கும் பழுத்த இனிய பலவின் கனிகளையும் விழுமிய குலைகளிலுள்ள வாழைக்கனிகளையும் மாங்கனிகளையும் தின்றுவிட் டாரவாரித்துத் துணங்கையென்னுங் கூத்தையாடிப், பிறகு, தேன்வெள்ளஞ் சென்று அழிக்குஞ் சுனையிலே ஆடும்.

இத்தகைய அழகுசெறிந்த சிலம்பின் உச்சியிலே, ஞானவேழத்தின்மீதமர்ந்து, நாட்டப்பட்ட பொற்றூண் போல, ஞாயிற்றினது வட்டம் தெளிநீர்க்கடலையும் வற்றப் பண்ணும் இயல்புடன்கூடித் தீயைச் சொரியும் இளவேனிலும் முதுவேனிலுமாகிய நான்கு திங்களும் நின்றான். பின்னர் வானிலுள்ள முகில் பாரிடத்துக் கடலைப்பருகிப் பாம்புத்திரள் துடிக்குமாறு மின்னி, வாராற் பிணித்த முரசேபோன்று ஆர்த்து, மண்பிளக்க இடித்து, நீர்த்திரளைப் பளிக்குக்கோல் கிடக்குந்தூணி அக்கோலைச் சொரிவதுபோலச் சொரியும் கார் கூதிர் என்னும் பருவங்களையுடைய அந்த நான்கு திங்களும் விலகாமல் இருந்து கழித்தான். பின்னர் முன்பனியும் பின்பனியும் வந்தன. அப்போது பனிமலையை உருவி வீசும் வான்சூழ் வாடைக்குச் சிறிதும் தளராமல் வெளியிடத்திலே அந்நான்கு திங்களையும் உணவின்றிக் கழித்தனன். இங்ஙனம் ஆறு காலங்களையும் வென்றனன்.

அப்போது நந்தட்டனும் தேவியரும் தோழர்களும் சீவகசாமி உணவுகொள்ள வரும் வரவினைநோக்கி அவ் வரைமீதேறினர். அவனை உணவு கொள்ளுமாறு வேண்டினர். அவன் ஓராண்டாக உணவொழிந்திருந்த இன்னுயிரை ஓம்புதற்காக அரிதிற் சிறிதளவேகொண்டு பிறகு மறுத்துவிட்டான். அங்ஙனம் தவக்கடலை நீந்தி வீடு பெறுதற்குக் காரணமான அத்தவத்தை முடித்தான்.

அவன் தவத்தை முடித்தவாறு :

*மெய்யறிவே விளங்குந் தேராக, இனிய உயிரைக் காப்பதே குதிரையாக, நல்ல சிந்தையே களிறாக, அருளே காலாளாக, ஒழுக்கமே மெய்க்கவசமாக, மெய்ப்பொருள்களே வாளுங் கேடகமுமாகக் கொண்டு ஆரவாரத்தைச் செய்யும் இருவினைகளாகிய பகைவரின் பெரியமதிலை முற்றுகையிட்டான்.

† அப்போது அவ் விருவினைப் பகைவருடைய கடலனைய தானை உறக்கமென்னும் யானையினையும், உணவென்னும் அஞ்சத்தக்க தேரினையும், மறவியென்னும் புரவி வெள்ளத்தினையும், வளியும் பித்தும் ஐயும் வந்தடையும் பிணிகளாகிய காலாட்களையும் திறம்பட அணிவகுத்து பொல்லாச் சிந்தனையென்னும் வாயில்வழியே வெளிவந்து நடுங்குமாறு போர்செய்தது.

அப் போர்க்களத்திலே, அப்பகைவரின் படையிலே மித்தியாத்துவம், சம்மியக்மித்தியாத்துவம், சம்மியத்துவப் பிரகிருதி, அகந்தானுபந்திக் குரோதம், அநந்தானுபந்தி மானம், அநந்தானுபந்தி மாயை, அநந்தானுபந்தி லோபம்

---

*"ஒளிறுதேர் ஞானம் பாய்மா இன்னுயிரோம்ப லோடைக்
களிறுநற் சிந்தை காலாள் கருணையாங் கவசஞ் சீலம்
வெளிறில்வாள் விலங்கு செம்பொன் வட்டமெய்ப் பொருள்களாகப்
பிளிறுசெய் கருமத் தெவ்வர் பெருமதில் முற்றி னானே."

†"உறக்கெனும் ஓடை யானை ஊனெனும் உருவத் திண்டேர்
மறப்பெனும் புரவி வெள்ளம் வந்தடை பிணிசெய் காலாள்
திறப்படப் பண்ணிப் பொல்லாச் சிந்தனை வாயில்போந்து
சுறக்கட லனைய தானை துளங்கப்போர் செய்த தன்றே"

என்னும் எழுவருங் கலங்கிப்பட்டார். நரககதி விலங்குகதி என்னும் இரு கதிகளும், ஏகேந்திரியம், துவீந்திரியம், திரீந்திரியம், சதுரீந்திரியம் என்னும் நான்குசாதி நாம காமங்களும், நரகத்தியாநுபூர்வி திரியக்கத்தியாநுபூர்வி என்னும் இரண்டநுபூர்விகளும், வெயிலும், விளக்கும், நிற்றலும், நுணுகலும், பொதுவுடம்பும், உறக்கத்தின்மேலுறக்கம் துளக்கத்தின்மேல் துளக்கம் கனவிற் செய்ததை நனவில் அறியாமையென்னும் மூன்றும் என்னும் பதினறுவரும் பொருது விழுந்தனர். நன்னெறி மதி என்னும் களிறு காலால் உதைத்ததால் அப்பிரத்தியாக்யானக் குரோதம், அப்பிரத்தியாக்கியான மானம், அப்பிரத்தியாக்கியான மாயை, அப்பிரத்தியாக் கியானலோபம், பிரத்தியாக்கியானக் குரோதம், பிரத்தியாக்கியான மானம், பிரத்தியாக்கியான மாயை, பிரத்தியாக்கியான லோபம் என்னும் எண்மருங் கவிழ்ந்தனர். அப்போது கூவியவாறு வீழ்கின்ற பேடியென்னும் நபுஞ்சக வேதமும், பெண்ணேய் என்கின்ற ஸ்திரீ வேதமும், *சிரித்தல், வேண்டுதல், வேண்டாமை, அசைவு, அச்சம், அருவருப்பு என்னும் அறுவகைத் துவர்ப்பும் தண்ணளியையுடைய சிந்தனை யென்னும் சக்கரத்தின் வாயிலே பட்டன.

இவ்வாறு மயக்கப்போர் மன்னனுடைய மக்களும் மந்திரிகளும் பட்டு வீழ்ந்தனர். அதனைக்கண்ட மன்னன் புருடவேதம் என்னும் வில்லின் வாயிலே தாகமோகம் என்னும் அம்புகளைத் தொடுத்தெய்தனன். அந்த அம்பு மாரியைக் கலக்கமில்லாத அசுபம் என்னுங் குந்தத்தாலே விலக்கி, உடம்பு வெறுத்தலாகிய வாளால் விரைந்து அம் மயக்க மன்னனுடைய உயிரை உண்டான்.

பின்னர், ஐம்பொறியாகிய பகைவரைக் கரும்பெறி கடிக்கை போலத் துணித்தும் வாழைத்தண்டுகள் போல ஈர்ந்தும் நிலைபெற்றிருந்து கொன்றான். மற்றும், மருந்தினை எறியும் நோயைக் கொல்லும் மருத்துவனைப் போல ஐயும் பித்தும் வளியுமாகிய மூவர் மேலே படையை ஏவி

* ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், சுருச்சை.

வென்றான். அவ்வாறு வென்றவன் உடம்பிலே செறிந்து கோத்திருக்கும் இரத்தம் உயிர் நீங்குங் காலத்து ஒரே நொடியிற் கரந்து போமாறு போல இருவினையுந் தன்னிடத்தினின்றுங் கரந்து போம்படியாக, வளமிகு குவளைக் கண்ணியையுடைய கூற்றுவன் உயிர்களை யுண்டாற்போல அவ்வினைத் தெவ்வரின் உயிர்கெட உண்டனன்.

பின்னர், குரோதன் மானன் மாயன் உலோபன் என்னும் நால்வரும் மாறுபட்டு விரலாலே சுட்டிக் காட்டிப் போர் செய்தனர். அவர்களை வீரன் நிரோதனை என்னும் அம்பாலே கொன்றான். பிறகு, நித்திரை பிரசலை என்னும் பெயரினர் தாக்கினர். அவரை விராகம் என்னும் வேலாலே பொருதான். அவர்களும் வீழ்ந்தனர்.

பின்னர், உணர்வு காட்சி பேறு என்னும் மாற்றுப் படை அரசர் புகைந்து பொங்கிக் கடலனைய சிறு புன் கேள்விகளாகிய படையொடு வந்து பொருதனர். அவர்கள் கிளைத்தலையுடைய நெருப்பின் முழக்கம் போன்ற சுக்கிலத்தியானம் என்னும் அம்பு தாக்குதலாலே வீழ்ந்து, பரிகேந்திரியம் நயனேந்திரியம் முதலிய காலாட்படை சூழ்ந்து கிடக்கப்பட்டனர்.

அங்ஙனம் போர் செய்யும் உபாதியாகிய மன்னர் பட்டுவீழக் கணையாகிய நெருப்பைத் தூவிக் கொன்று, பின்னர் அருகணுகமத்திலே கூறியவாறு பொருந்தி, வெய்யோன் உலகின் உச்சியிலே முளைத்த தன்மைபோலப் பரவிப் போய், உலகம் மூன்றையும் விழுங்கி அலோகத்தையும் விழுங்கிப் பின்னர்த் தோற்றமும் முடிவும் இல்லாத அநந்த ஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம் என்னும் நான்கு கூறாகிய வெற்றிக் கொடியை எடுத்து இறைமை பெற்றான்.

அந் நிலையில், பைம்பொன் உலகினரான வானவர்கள் களிறு தேர் மணிப்புரவி வேங்கை சிங்கம் ஆளி மயில் அன்னம் நாகம் முதலாகத் தாம் விரும்பிய ஊர்திகளில் ஏறிச் சங்கும் முரசமும் ஒலிக்க வந்து, சீவகசாமியின்

தாளைக் கோயிலாகக் கொண்டார்கள். விஞ்சை வேந்தர்கள் கற்பகமாலையை ஏந்தி அன்னம் பறப்பனபோலப் பறந்து வந்து குழுமித்தாளைச் சேர்ந்தனர். பெருநிலை மன்னர்கள் நறுமலர் மாலையை ஏந்திக் கார்முகில் பெருந்துளியுடன் கூடிய நீரைச் சொரியுமாறு போலச் சந்தனங் கலந்த பனி நீரைச் சொரியும்படி நிறைகடல்போல வந்து தாளைச் சேர்ந்தனர்.

ஞாயிறு விரும்பி மருள, விண்ணில் இயங்கும் மீன்கள் நிலத்தே குவிந்தாற் போல மண்ணிலுள்ளார் குவிந்து மலர்மழை சொரிந்து மருள, இந்திரர்கள் பொன் மாரி சொரிந்து வாழ்த்தி மகிழ்ச்சியாற் கூத்து முதலிய எண்ணிலாத் தொழில்கள் தோற்றி மருளச், சுதஞ்சணன் மெய்ம்முழுதுங் கண்ணாகக் கொண்டு கண்டு ஆடிக் களித் தான்.

அப்போது காற்று ஒன்றுடன் ஒன்று மோதுமாறு அசையும் கவரிகள் திங்களின் கதிர்போலப் பொங்க, ஒளி விடும் செம்பொன் ஆசனம் சேர்ந்தது. அவ்வளவிலே எரியும் மாணிக்க மாலையாலே தம்மொளி குறைந்து பின் னரும் எழும் வயிரத்தையும் முத்துக் கொத்தையுங் கொண்டு உலகை அளித்தோம்பும் குடை வந்துகவித்தது.

**மணி யரும் பதம்**

அரசுவாவை அதன் மதமே சாற்றும். அதுபோல இரு வினையையும் எறிந்தவனுக்கு இயல்பான நாற்றமாகிய அதனைச் சிகையே புகையுங் கற்பகமும் கெட்டுப்போம்படி கமழ்ந்து கூறும். ஆதலால், நாமும் அதன் இயலறிந்து கூறலாம். மேருவிலே வளரும் நாவியை அதனிடம் வழங்கும் மணமே நாவியென்று கூறுதோ? அதுபோல இரக்கத்துடன் சூழ்ந்த வினையை வெறுத்துக் கெடுத்த வற்கு இயல்பாகவுளதாம் நறுமணத்தை முத்துப்போலும் முறுவலையுடைய, முறுக்கிதழையும் பவழத்தையும் போன்ற ஒலிக்கும் குரலையுடைய வாயே முறுக்கவிழ்ந்த

மந்தாரம் கெட மணங்கமழ்ந்து கூறும். ஆதலால் நமக்கும் அதன் தன்மை அறிந்து கூறவியலும்.

இருவினையை வெறுத்து உதிர்த்தவற்கு இயல்பாக வுளதாம் நிறத்தை, உறுப்பெல்லாம் ஒளியைச் சொரிந்து எரியின் வாங்கக் கிடந்து தன் கருமை நீங்கிய இரும்பே சான்றாகக் குன்று போன்று விளங்கிக் கூறும். ஆதலால் நமக்கும் அதன் தன்மை கூற வியலும்.

எனவே, சீவகசாமி பெற்ற உயர் நிலையைக் கூறு கிறோம்:

வானோர் ஏந்தும் மலர்மாரியும் வண்ணமிகு சாந்தமும் அழகிய சுண்ணமும் பிண்டித்தாமமும் கருமுகிலின் நிறத்தைக் காட்டும் புகைகளும் ஆகிய இவைகளெல்லாங் கெடத் திசைகளெங்கும் தோன்றி அமையாமல் மணங்கமழும் சீவகசாமியின் திருவடிமலரை வானவர்கள் தம் முடியின் மேலே அணிந்தனர்.

விஞ்சையர் வேறொரு சிந்தையும் இலராகி, நறுஞ் சாந்தால் நிலத்தை மெழுகித் தேன் நிறைந்த மலரை வேய்ந்து, 'மீனக்கொடியையுடைய காமனையும் காலனையும் வென்றவனே! எம் பிறவி அறுவதாக!' என்று கூறித் துறவுநெறிக் கடவுளாகிய அவனடியைத் தூபமிட்டுத் தொழுதனர்.

வானவர், "பாலனைய சிந்தை சுடர் விடுதலாலே துன்பம் புரியும் காதி நான்கையும் அரிந்து அநந்த ஞானம் அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம் என்னும் நான்மைக்கும் வரம்பாகி மூன்றுகாலத்தையும் உணர்ந்த கடவுளே! யாம் நின் அழகிய மலர்ச் சேவடிகளை உளங் கொண்டு தொழுவோம்! முழங்குங் கடலின் நெற்றியில் முளைத்தெழும் இளஞாயிறேபோல், அழுங்கலாகிய வினை அலற நிமிர்ந் தோடுகையினால் ஆங்கு உலக மூன்றினையும் உணர்ந்து பின்னர் அந் நிலை நீங்காமற் குணத்தை வித்தி இருந்த நின் குற்றமற்ற சேவடிகளை யாம் போற்றித் தொழு

வோம்!" என்று போற்றுதற்கரிய பலகுணங்கட்குப் பேரெல்லையாகிப் பெருகிய அருளையுடைய முனிவர் தலைவனை வணங்கி ஏத்துகையால், தவநங்கையராகிய தேவி யரும் நண்ணிப் போற்றிசைத்துத் துகளாகிய அழுக்கைத் துணிக்கத் தொடங்கினர்.

"மெய்ப் பொருளை உலகிற்கு விளம்பிய வேந்தே! நலந்தருவோனே! வினையைச் செய்தவனே சிறிதும் ஐயமின்றி எண் வினையையுடையவன். ஒரு கூற்றிலே தீயனவாகிய பொருள்களை நல்ல பொருள்களென்றாராய்ந்து சாற்றும் புல்லறிவினையுடைய பரசாமிகள் பல்வினைகளையும் வளர்த்தற்குச் செவிலியை உண்டாக்கிவிட்டனர். அதனைக் கேட்டற்கு யாம் நின் அடியை வணங்குகின்றோம். அவர் கூறுவனவற்றை நீ உரைப்பாயாக!" என்று மதி ஞானத் தினால் அறிய வொண்ணாக் குணத்தோன் அடியை வாழ்த் திய நிதியறைபோற் கேள்வியாற் பரமாகமங்கள் நிறைந்த அரசியராகிய தவமங்கையர் ஒப்பிலாத வாழ்த்துக்களைக் கூறி, மலர் தூவி, இருவினையைத் தாங்கள் அறிய வேண்டித் தொழுதனர்.

பின்னர், அவன் தீவினையின் தன்மை கூறக்கேட்ட தவ மங்கையர், "தீவினையாகிய குழவி செற்றமென்னுஞ் செவியினிடமிருந்து காமமாகிய முலையையுண்டு கெடாமல் வீங்கி வளர்ந்து தாவிப்போம் வினையின்றிக் கொடிய நோய்க் கதிகளிலே தவழும் என்ற இக்கோவினை அன்றிப் பயனில் பொருள் கூறியவர்களை எம் நாவானது கொண்டாடாது என்று புகழ்ந்தனர்.

பின்னர் அவன் நல்வினையின் தன்மை கூறக்கேட்ட தவமங்கையர், "தாமரையின் அகவிதழில் நடந்த கோவே! நல்வினையாகிய குழவி நல்ல நீர்மையையுடைய அருளென் னும் செவிலி எப்போதும் தழுவிக் கொண்டெடுப்ப அவ ளுடைய பருத்த முலைகளையுண்டு வீங்கி வானவர் கோவாய்ச் செல்லும் என்று கூறிய இருள் நீங்கிய சொல்லாலே அச் சத்தினின்றும் நீங்கினோம்," என்றனர்.

பின்னரும் அத் தவமங்கையர், "செல்வனே! நின் சேவடிகள் மணிக்கு ஒளியை நல்கின! எம்முடைய மன மலருக்கு மணத்தை நல்கின! அன்றியும் திணிந்த இமிலே யுடைய ஏறுகிய அறத்திற்கு இருப்பிடத்தை நல்கின!" என்று புகழ்ந்தனர்.

**வீடு பேறு (பரி நிர்வாணம்)**

மற்றும் அவர்கள், 'தன்னொடு மாறுபடுகின்ற இருளாகிய பெரிய உருவம் தமியும்படி ஒளியைச் சுமந்து' கடலிலே தோன்றும் ஞாயிற்றைப் போன்றனவாய்த் தாமரை மலர் போன்ற நின்னடிகள் தொகுதியாகிய அரிய தீவினையை அறுக்கும் வாள்' என்று புகழ்ந்தனர்.

இங்ஙனம் மின் திரளுக்குள்ளே கிடந்தசையுந் திங்கள் போலும் முகத்தையுங் கண்களையுமுடைய அம் மெல்லியலார் தம் இனிய நாவின் மொழியாலே வானினுள்ளாரும் அசையும் வாமன் குணத்தைப்பாட, அவர் தீவினைகள் அசைந்து நில்லாமல், காட்டின் கண்ணே ஓடின.

அவ்வாறு தீவினைகள் கெடுதலின் ஒப்பில்லா அத் தவ மகளிர் தீவினையால் நடுங்கு முள்ளமாகிய நிலை நீங்கிய வராய், அவன் கூற்றினைக் கேட்டுக் களித்தனர். பிறகு, திங்கள் பொழியும் இனிய கதிர்களைப்பருகி மலர்ந்த ஆம்பல் மிகவிரிந்து தேனைத் துளிப்பதுபோல, அறிவன் குணங்களை ஏத்தி வாழ்த்துக்களோடே அவனைத் தொழுதார்கள்.

அங்ஙனம் அவன் தாமரையனைய அடிகளை யேத்தி, யாவருங் கூடிப் போற்றிசைத்து வணங்கி, 'நெடுங்காலமாய்ச் செறிந்த இருளை அறுக்குஞ்சுடரை எமக்கருளிச் செய்க,' என்றனர். அவனும் ஆராய்ந்து அமிழ்த மழையே போல அருளிச் செய்தனன்.

"இன்பமாகிய பெரிய பசு, நான்கு கதியாகிய தொழுவிலே தோன்றிப் புற்கற்றைத் தீனியாக இடப்பட்டுத் துன்பமாகிய பாலைச் சுரக்கும். அதனிடத் துண்டாகிய பற்றையும் ஆர்வத்தையும் நீக்கித் தூயவன் திருவடிகளை அறிவுடையோர் சேர்வராயின், அன்பைக் கொடுத்து, அத்

திருவடிகளை அகத்திருத்தி வழிபட்டுச் சென்று வீட்டுலகை அடைவார்கள். நீர் ஆசையை மிகுத்து விதைத்து, வாளைக் கையிலேயுடைய அழகிய மைந்தராயும் அழகிய மார்பினை யுடைய மகளிராயும் வரும் பிறவிநோயை விளைத்து இறந்து போகாமல், தேளைக் கையிலே கொண்டதைப் போன்ற—அழிவற்ற நோயும் செற்றமுமுடைய—புன்தோலாகிய சுமையை வெறுப்பீராயின், வாமன் பொன்னடிகளைத் தொழுவீராக!"

"ஒருவன் தன்னுயிரைத் தான் பரிவுடன் காக்குமாறு போல மன்னுயிரை நாடோறும் காத்து வாழ்வானேல், உயிர்களுக் கிறைவனாகி இன்பவடிவினனாகிப் பொன்னுயி ராய்ப் பொன்னுலகிலே இயங்கி வீடுறுவான். அங்ஙன மின்றி உயிர்கட்கு வெம்மையுண்டாக்கி நோய் செய்யின் வெம்மையை உயிர்க்கும் அப் பெரிய தீவினை நோயி னிடத்தே வீழ்த்துதலால், அந்நோய் கட்டுமேற் கட்டாகப் பிணித்துக் கொண்டுபோய்ச் சுடவீழ்ந்த பிறகு தீவினை தோய்ந்த உயிராகி எரிவாய் நரகில் வெந்து விழுவான். அங்ஙனம் வீழாமல் நீவிர் ஈண்டு பிண்டிப்பெருமான் அறம் பெற இச் சந்தனப் பொதும்பரை யடைந்த வியல்பு இடிக் குரலையுடைய மழை பெய்கின்ற பெருங்கடலிலே வீழ்ந்த மணியைப் பெற்றது போன்ற அருமையையுடையது. மற்றும், நிறைந்த கற்பக மரத்தின் நீழலிலே தங்குவான் வேறொரு கொடையாளியை நாடான். அங்ஙனமே, தேன் பிலிற்றும் பூம்பிண்டியான் அறங் கேட்டோர் சிந்தை பிறர் செல்வத்தைக் கண்டு அதனைப் பெற விரும்பாது. யான் இப்போது வீடு பெற்ற உயிராகிய மணியுயிர், வானவ ருயிராகிய பொன்னுயிர், மக்களுயிராகிய வெள்ளியுயிர் மக்களிற் கீழானோருயிராகிய செம்புயிர், நரக ருயிராகிய இரும்பு போன்ற பிணியுயிர் ஆகிய இவற்றைத் தெளிவா கக் கூறினேன். இனி நீவிர் நுமக்கியன்றதைத் துணிமின்."

இவ்வாறு அத்தலைவன் கூற அவர்கள் அவனை இறைஞ் சித் தொழுதனர். அங்ஙனம் அத்தலைவன் அருளிற் சிறந்து உலவி உலகுயிரை அளித்த தன்மை வானிலிருந்து மலர்

மழை பொழிய, வீங்கிய பால் போன்ற நிலவைத் திங்கள் பெய்ய, மணமிகுமலர் பரப்பிய நிலத்திலே இளஞாயிறு திரிந்து இருளைக் கெடுத்தார் போன்றது.

சாமி, பலவகையான அமிர்தம் போன்று பருகலாம் பயனுடையதாய் அறியும் அறத்தை வானிடை முழக்கென யாவரும் அறியக் கூறி, ஊட்டி, மணமிகு மலரைத் தூவத் திசையெலாம் வணங்கச் சென்ற பிற்காலத்தே வீட்டுலகத்தை அவன் கொள்ளும் படியான நாள் வந்தது.

உழவுத் தொழிலைப் பரப்பி அதன் பயனைக் கொள்ள வல்லார் கொண்டு பிறவியைத் தப்பிப் போதல் வேண்டிச் சமவசரணத்தே அறத்தை வித்திவைத்து வைகாசிப் பிறைமதி போன்ற இருக்கையிலே அமர்ந்து விளங்கி விழவுக்குக் காரணமாய் வேதநீபம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம் என்னும் நால் வினையையும் வென்று வீடுபெற்றான் சீவகசாமி.

அப்பொழுது, வானவர் ஈண்டித் துந்துபி ஒலிக்க ஆரவாரித்துத் துகிற் கொடிகளை நுடங்குமாறு ஏந்தி, வானமெங்கும் விளங்க ஊர்திகளின் மீது வந்து பொன்மழை சிந்தி, மலர்மாரி சொரிந்து சாந்தையும் அகிற் புகையையும் சேர்த்து வணங்கினர்.

மூளைத்தெழும் இளஞாயிறு மொய்க்கும் மிகு நெருப்பிலே குளிப்பதைப் போலச் செந்தீக் கொடிகள் திருமணி உடம்பை விழுங்குமாறு செய்த பிறகு, விண்ணவரும் மண்ணவரும் வீடுபேறு என்னும் மங்கலத்தை முறைப்படி இயற்றின பிறகு, சங்கிற் பொலிந்த கடல்போல ஆரவாரித்து வலங்கொண்டு போயினார்கள்.

நிறமிகும் நெடிய வாளனைய கண்ணையும் மணமிகு முல்லைக் கண்ணியையும் உடைய கேவல ஞானம் என்னும் திருமடந்தை, ஒரு பாகமாகக் காவலன் தானொரு பாகமாகக் கண்ணிமைபால் தழுவி மூவுலகினுக்கும் உச்சியிலே இன்பக் கடலில் அழுந்தினான். விண்ணோர் அணிகிளர் மாடங்களிலே இனிய தேனைச் சொரியும் மாலையையும்

சந்தனத்தையும் குங்குமத்தையும் சுண்ணப் பொடியையும் மணம்விரி புகையையும் விளக்கையும் ஏந்தப் பிரிதலும் பிணியும் மூப்பும் இறத்தலும் பிறத்தலும் இல்லாத அக் கேவல மடந்தையைத் தழுவி வாழ்வானாயினன்.

**அரசியர் நோற்றுயர்வு**

இனி, முல்லைக் கண்ணியை அணிந்தாலும் முரிந்து போம் இடையினையுடைய அரசியர், வல்லானொருவன் கூர் செய்த வேலைப்போல் மலர்ந்து நீண்டு அகன்ற ஒளி பொருந்திய கண்களால் எறும்பிற்கும் ஓரிடையூறு வாரா மல் ஓம்பி நடந்தும் இருந்தும் நின்றும் மலையை எடுத்தாற் போன்ற மாதவத்தை முடித்தனர். மானனைய நோக்கிய ரான அவர்கள் நன்றெனச் சூழ்ந்த பொற் பாவையைச் சூழ்ந்து தழுவிய கருஞ்சேற்றையுடைய தோல் போன்று முன்னர் தம் கண்தெறும் மேனியெல்லாம் மாசுகொள்ளப் பெண்பிறப்புக் கெடுமாறு சிந்தித்தனர். ஆசையும் பற்றும் ஐயமும் இன்றிச் சென்று புகழையுடைய வானவருலகி லுள்ளவற்றை நுகருமாறு நோற்ற பிறகு பொல்லாதென்று பழிக்கும் பெண்பிறப்பைக் கைவிட்டு, இந்திரர்களாய் ஞானம் பெற்றுத் துறக்கத்தை யடைந்தனர். அங்கே அவர்கள் காமவல்லிகள் தழுவிய மலர்நிறை கற்பகம் போன்று நீண்ட மலர்க் கூந்தலையுடைய அரம்பையரின் முயக்கத்தைப் பெற்று இன்பமடைந்தனர். கலவியாகிய காமத்தின் பயன் புலவியேயாதலால், அப் புலவியை விளைக்க அப் பொற்கொடிகள் ஊடிய நோக்கம் இவர்க ளுடைய நெஞ்சினை வருத்தியது. அப்பொழுது அவர்கள், 'நும் உள்ளத்தே திருமகள் இருந்தாள். நாவிலே நாமகளை யும் கூறினீர்,' என்று புலவியை உண்டாக்கிக் காவியனைய கண்கள் அருகி நோக்குதலாலே அவர்கள் சிலம்பிலே இவர்கள் முடிகள் சேர்ந்தன. அவ்வாறு சேர்த்தியவர்கள், ஒவ்வொருவரும் தம்மிடமுள்ள மடந்தையை நோக்கிப், 'பாவாய்! அழகிய நுதலினாய்! நின் அடிமார்பிலே பட் டாற் பூணாலே அவை வருந்தும் என்று முடியிலேற்றேம். அத்தன்மையைக் குறிக்கொள்வாய்,' என்று கூறிப் பின்

னும், 'தவறு பிறக்குமென அஞ்சினர்க்குத் தவறு பிறத்தலும் வழக்கமாயிற்றே,' என்று இரந்துகூறி அவர்கள் புலவியைத் தீர்த்தனர்.

இங்ஙனம் அவர்கள் புலவியைத் தீர்த்துத் தவளை வாயையுடைய சதங்கைமாலையைச் சேர்த்தியும், தேன் மலர்க்கண்ணி அசைய அணிவித்தும், 'இவளைக் கண்டகண் இமைக்குமோ!' என வாழ்த்தியும், பன்மணிகளால் ஆகிய ஒளிவிடும் மேகலையை அணிந்து திருத்தியும் விருப்பத்தை யூட்டும் கொங்கைகளிலே பொன்னையும் சுண்ணத்தையும் அணிந்தும் தடவிக்கொடுக்க, முற்பிறப்பிற் செய்த வினையை அவ்வினைசெய்தார் மறுபிறப்பில் எய்தி உணர்வர் என்பனபோல (முற்பிறப்பிற் சீவகனிடம் ஊடியவர்கள் இப்பிறப்பில் ஊடப்பட்டார்களாகையால்) அவர்களின் செயலைக்கண்ட மடந்தையரின் குண்டலங்கள் நக்கன.

இச்செயல்களாற் புலவிதீர்ந்த அரம்பையரை அவர்கள் மெய்ந்நடுங்கும்படி தழுவி ஆராத இன்பத்தை நுகர்ந்தனர். பிறகு, அவர்களேந்திய அமுதத்தைப் பருகி மகிழ்ந்தனர். இங்ஙனம் அரசியர் இந்திரராய்த் துறக்கத்தே மகிழ்ந்தனர்.

**நந்தட்டனும் தோழர்களும் நோற்றுயர்வு**

இனி, நந்தட்டனும் தோழர்களும் வைகலுந் தன்னிடத்தே கலைகள் கூடிவரும் ஒளிமிகு வெண்மதிபோல, நாடொறும் நாடொறும் கண்டார் நடுங்கும் முயற்சியாலே நற்றவத்தை ஈட்டினர். ஈட்டியதனால் ஐம்பொறியையும் தம் வசமாக்கினர். அவர்கள் பட்டினிகளுடன் *பதினாறு பாவனைகளையும் மருவி எழுந்து, தீவினைகளைக் கழுவுந் தீர்த்தனை வணங்கிப் பின்னர், உயிரைக்காத்துத் தவஞ் செய்யக் கருதிய உளக்கோட்பாட்டாலே பூவையுண்ணும் வண்டைப்போன்று சிறிது சிறிதாக நாவினாற்கொண்ட உணவையும் பின்னர் நஞ்சுபோல அஞ்சி நீக்கினர். பிறகு,

* பதினாறு பாவனைகளை ஸ்ரீபுராணத்திற் காண்க.

அருவியையுடைய குன்றிலே நின்று, ஏனைத்தவங்களையும் முடித்திட்டுக், கருவிலே எழுதிய காலம் முடிந்ததாலே, தீவினைநீங்கி நல்வினை வந்தால் திருமகள் நினைவின்றியே தோன்றுமாறுபோல உடம்பைவிட்டு வானவராயினர்.

வானவரானபிறகு, முன்னர்த் தாம் தவஞ்செய்யும் போது காமனைக் கனன்று நோக்கிய அவர்கள் மனங் கவர்ந்திடும் பொற்கொடியன்னார் ஆகிய தெய்வமகளிரைப் பிடியினந் தழுவுங் களிறுகளைப்போலத் தழுவி மெய்யின் பத்தைச் சாலவும் நுகர்ந்தனர். அவர்கள் அத் தெய்வ மங்கையரின் கிண்கிணியும் சிலம்பும் மேகலையும் ஆரவாரிக்கத் தழுவுதலாலே, ஒருபால் தோடும் ஒருபால் குழையும் ஒளிவிடவும் தாமங்கள் சோரவும், உவகைக் கண்ணீர் பெருகவும், புருவம் நெற்றியிலேறி முரியவும் கணவர் மார் பிலே அத்தெய்வ மகளிர் கலவிப்போர் செய்தனர்.

மற்றும், அவர்கள் மண்ணுதல் கனிந்த பொன்முழவம் மழைபோல முழங்க, யாழும் இனிய குழலும் தாளமும் இசைக்க, பாவையர் பண் கனியப்பாடித் தோடுங் குண்டலமும் அசையக் கண் விருந்தூட்டிக் கிண்கிணியும் சிலம்பும் ஆர்ப்ப ஆடும் நாடகத்தைக் கண்ணுருகக் கண்டனர்.

இங்ஙனம் நந்தட்டனும் தோழர்களும் வானவராகித் துறக்கத்திலே ஐம்புல இன்பத்தையும் ஆரத்துய்த்து மகிழ்ந்திருந்தனர்.

### இறை வணக்கம்

“முகடு மணியழுத்தி முள்வைர முள்வேய்ந்து
முத்தம் வாய்ச் சூழ்ந்(து)
அகடு பசுமணியார்ந் தங்காந் திருள்பருகி
அடுபால் விம்மிப்
பகடுபட அடுக்கிப் பண்ணவனூர் தம்மொளிமேல்
நின்றாற் போலும்
தகடு படுசெம்பொன் முக்குடையான் தாளிணையென்
தலைவைத் தேனே.”

(திருத்தக்கதேவரின் ஆசிரியர் கூறியது.)

**ஓம்படை**

"மூந்நீர் வலம்புரி சோர்ந்தசைந்து வாய்முரன்று முழங்கி யீன்ற
மெய்ந்நீர்த் திருமுத் திருபத்தேழ் கோத்துமிழ்ந்து திருவில்வீசும்
செந்நீர்த் திரள் வடம்போற் சிந்தாமணி யோதி உணர்ந்தார்
[கேட்டார்
இந்நீர ராயுர்வர் எந்துபூந் தாமரையாள் காப்ப தாமே."

(நச்சினார்க்கினியர் உரை) சோழகுலமாகிய கடலிலே பிறந்து வலம்புரி, பிறர் குற்றங் கூறுகிறாரென்று தளர்ந்து அஞ்சி முரன்று முழங்கி ஈன்ற இருபத்தேழாகிய முத்தை யும் மாணிக்கத்தையும் வடம்போலக் கோக்கப்பட்டுத் திருவில் உமிழ்ந்துவீசும் சிந்தாமணி என்னும் இச்செய் யுளை ஓதியுணர்ந்தாரும் அவர்கூறக் கேட்டாரும் இந்திர ராய்ப் பின்பு வீடுபெறுவர். அவரை இப்பிறப்பிலே திரு மகள் காப்பாள்.

இச் செய்யுளின் விளக்கவுரையில் இச் செய்யுளைத் திருத்தக்க தேவரின் ஆசிரியர் 'கூறினாரென்றும், இருபத் தேழென்றதனால் திருத்தக்கதேவர் கூறிய செய்யுட்கள் இரண்டாயிரத் தெழுநூறே என்றும் எளிதிற் பொருள் கொள்ளுஞ் செய்யுட்களும் அரிதிற் பொருள் கொள்ளுஞ் செய்யுட்களும் கலந்திருப்பதனால் முத்தும் மணியுங் கோத் தாற்போல அமைந்தன என்றும் நச்சினார்க்கினியர் கூறு கிறார்.

**திருத்தக்கதேவர் கூறியது**

"செந்தா மரைக்குச் செழுநாற்றங் கொடுத்த தேங்கொள்
அந்தா மரையான் அகலத்தவன் பாதம் வத்திச்
சிந்தா மணியின் சரிதம்சிதர்ந் தேன்தெ ருண்டார்
நந்தா விளக்குச் சுடர் நன்மணி காட்டப் பெற்றே."

**திருத்தக்கதேவர் ஆசிரியரை நோக்கிக் கூறியது**

"செய்வினை யென்னு முந்நீர்த் திரையிடை மூழ்த்துத் தேங்கொள்
மைவினை மறுவி லாத மதியெனுந் திங்கள் மாதோ
மொய்வினை இருள்கண் போழும் முக்குடை மூர்த்தி பாதம்
கைவினை செய்த சொற்பூக் கைதொழு தேத்தி னேனே."



# செய்யுள் முதற்குறிப்பு


| | பக்கம் |
|---|---|
| அடல்வண்ண ஐம்பொறி | 233 |
| அடியுலக மேத்தி | 198 |
| அரும்பேர் வனமுலை | 117 |
| அருள்வலி ஆண்மை | 185 |
| அவிழ்ந்தேந்து | 329 |
| ஆதி வேதம் | 198 |
| ஆம்பொருள்க ளாகு | 137 |
| இலையா ரெரி | 117 |
| இளமையங் கழனிச் | 418 |
| இறுமருங்குல் போதணி | 272 |
| இன்னாப் பிறவி | 198 |
| உண்டே தனதியல்பின் | 225 |
| உலக மூன்றும் | 198 |
| உலகுணர் கடவுளை | 413 |
| உறக்கெனும் ஓடை | 508 |
| ஐதேந் தகலல்குல் | 329 |
| ஒல்லைநீ ருலக | 377 |
| ஒளிறுதேர் ஞானம் | 508 |
| ஒன்றாய வூக்க | 153 |
| கடிமலர்ப் பிண்டிக் | 446 |
| கண்ணிமையா கண்டந் | 103 |
| கருமக் கடல்கடந்த | 447 |
| கருவி வானம் | 116 |
| களிசேர் கணையுடைய | 257 |
| கன்னி நாகம் | 116 |
| காதலால் எண்வினையுங் | 225 |
| குறுத்தாட் குயிற்சேவல் | 101 |
| கொல்லை அகடணைந்து | 195 |
| செந்தா மரைக்குச் | 520 |

| | பக்கம் |
|---|---|
| செந்தார்ப் பசுங்கிளி | 164 |
| செய்தான் இருவினை | 225 |
| செய்வினை யென்னு | 520 |
| செல்வர் மனத்தின் | 224 |
| தண்காஞ்சித் தாதாடித் | 101 |
| தன்பால் மனையாள் | 73 |
| திண்பொருள் எய்த | 282 |
| திருமறு மார்பினை | 412 |
| தீரா வினைதீர்த்துத் | 198 |
| தேமலர் அங்கண் | 341 |
| தொடித்தோள் வளை | 329 |
| தொழுததங் கையி | 304 |
| தோடேந்து பூங்கோதை | 195 |
| நஞ்சுகுடித் | 411 |
| நல்லவை புரியும் | 132 |
| நற்ற வஞ்செய் | 11 |
| நற்றானம் சீலம் | 245 |
| படநாகந் தோலுரித் | 245 |
| பிறையார் திருநுத | 117 |
| புன்காஞ்சித் தாதுதன் | 101 |
| பூத்தொழியாப் | 233 |
| பூமாலை சூடிற் | 273 |
| பெருமுழங்கு | 411 |
| பேதைமை யென்னும் | 219 |
| பொய்கை போர்க்களம் | 374 |
| பொய்கையுட் கமலத் | 222 |
| பொருந்தலாற் பல்லி | 305 |
| மங்கை நல்லவர் | 143 |
| மலரேந்து சேவடிய | 257 |

| | பக்கம் |
|---|---|
| மறுவற வுணர்ந்தனை | 413 |
| மாசித் திங்கள் | 482 |
| மிக்கார்தம் கேட்டின் | 194 |
| மின்னேய் வரை | 341 |
| முகடு மணியழுத்தி | 519 |
| முத்தணிந்த முக்குடை | 446 |
| முந்நீர் வலம்புரி | 520 |
| முரணவிய வென்றுலக | 198 |
| முனிமை முகடாய | 257 |
| மூவா முதலா | 1 |
| மெய்வகை தெரிதல் | 228 |
| வண்டேத அம்மருங் | 273 |
| வாளுழலை பாய்ந்திளைய | 194 |
| வான மீனின் | 116 |
| வானிடை யொருவன் | 356 |
| வீங்கோத வண்ணன் | 232 |
| வீறின்மையின் விலங்கா | 365 |

## பிழை திருத்தம்

| பக்கம் வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 6 — 16 | வேலற்கரியதான | வெலற்கரியதான |
| 8 — | 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின்' என்ற பாட்டு. நீக்குக. | |
| 15 — | 'பட்டவர்த்தப்பலிற் பரவை' என்ற பாட்டு. நீக்குக. | |
| 29 — 17 | தாம | காம |
| ,, — 18 | யுக்க | தக்க |
| ,, — 19 | கம் | யும் |
| 34 — | 'அளந்து' என்ற பாட்டு. நீக்குக. | |
| 61 — | 'கூற்றுவன்' என்ற பாட்டு. நீக்குக. | |
| 66 — 11 | நெய்யும் | நெய்யையும் |

97, 99, 101, 103, 105, 107, 109, 111, 113, 115, 117, 119, 121, 123, 125, 127-ஆம் பக்கங்களில் உள்ள பக்கத்தலைப்பு கோவிந்தை திருமணம்' என்பதைக் 'காந்தருவதத்தை திருமணம்' எனத் திருத்துக.

| பக்கம் வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 117 — 17 | இலையாரெனி | இலையாரெரி |
| 128 — 8 | கயற்றை | கயிற்றை |
| ,, — 23 | ஞாயிறெுளி | ஞாயிற்றொளி |
| 142 — 27 | தீதென்று | தீயவென்று |
| 145 — 24 | தன்மன எல் | தன் எல் |
| 146 — 28 | மாக்கடல் | மாக்கடன் |
| 154 — 32 | இனங்களின் | இயங்களின் |
| 159 — 7 | விற்கலையிலும் | விற்கலை பயிலும் |
| 169 — 15 | விரும்பினன் | விரும்பினள் |
| 178 — 7 | கொடியிடையாளொடு | கொடியிடையாளொரு |
| 181 — 29 | காவலனை | காவலினை |
| 185 — 29 | பெரிதும்! அரிது! | பெரிதும் அரிது! |
| 223 — 30 | திரும்பி | திருப்பி |
| 225 — 18 | கழிய | கழிப |
| 263 — 12 | வில்வல்லாற் | வில் வல்லாரிற் |
| 289 — 25 | பூமான் | பூமாண் |
| 354 — 19 | அனங்கமால் | அனங்கமாலை |
| 355 — 13 | நின்றுலன்றி | நின்றுற் பன்றி |
| 372 — 10 | மயிர் பீலி | மயிற்பீலி |
| 379 — 24 | வேறு | வெறு |
| ,, — 30 | சூளுடை | சூலுடை |
| 391 — 7 | மனை | மணை |